# இனாம்! விரிவான தமிழ்நூல்களின் விலைப்பட்டி இனாம்!

*இப்புத்தகங்கள் துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப் பெற்றவை.*

---

**நீதிநெறிவிளக்கம்** மூலமும், பதவுரை, தொகுத்துரை, விருத்தி யுரை, ஆங்கில மொழிப் பெயர்ப்பு, இந்நூல் திருக்குறளின் சாரமாயிருப்பது கருதி ஒவ்வொரு செய்யுளுக்கும் அதன் கருத்தமைந்த திருக்குறள் மூலமும், பரிமேலழகர் உரையுடன் ஒவ்வொரு செய்யுளுக்கும் புதிதாக எழுதப் பெற்ற விஷயத்தலைப்புகள் வினையுருபுகள் வெண்பா என்கிற இருவிஷயங்கள் நூலாசிரியர் சரித்திரம் நூலின் பெயரிலக்கணம், (புதிய பதிப்பு)விலை ரூபா 1 8 0 (தபால்கூலி வேறு.) பேதர் வெயிட் காகிதத்தில் அச்சிட்டது ரூ 2 8

**நீதிநெறிவிளக்கம்** மூலமும், சோடசாவதானம், தி. சுப்பராய செட்டியார் அவர்கள் இயற்றிய விருத்தியுரையும் விலை அணா 8.

**திரிகடுகம்** மூலமும், ஷை செட்டியார் அவர்கள் இயற்றிய விருத்தி யுரையும் விலை அணா 6

**முதுமொழிக் காஞ்சி** மூலமும், சதாவதானம் தெ. கிருஷ்ணசாமி பாவலர் இயற்றிய விருத்தியுரையும் அணா 6

**ஒரு பெண்ணரசியின்பிரஹ்ம ஞானோபதேசம் வசனம்** சென்னை, ஹிந்து தியலாஜிகல் உயர்தர கலா சாலைத் தலைமைத்தமிழ்ப் புலவர் ஆசிரியர் கோ. வடிவேலு செட்டியார் அவர்கள் எழுதியது விலை அணா. 8

**மநுநீதி சதகம்** செய்யுள் விலை அணா 8 (தபால்கூலி வேறு.)

# பாயிரம்

நூற்பெயர் நளவெண்பா என்பதைச் சிலர் நளனது வெண்டொழுங்கு பாவாலாகிய கதையை உணர்த்து நூலெனப் பொருள் கொண்டு அன்மொழித்தொகை யென்பர். வெண்பா நளன் பாடியதாலல் அது பொருந்தும். நளவெண்பா என்பதற்கு வெண்பாவாலாகிய நளனது கதையை உணர்த்து நூலெனப் பொருள்கோடலே மரபாம் என்பதனால் இருபெயரொட்டுக் கருவியாகுபெயரென்பதே ஏற்றமாமென்க. நளனென்னும் அடைமொழி வெண்பாவின் பொருளைச் சிறப்பியாமல் வெண்பாவின் உதவியால் உணர்த்தும் கதையின் பொருளையே சிறப்பித்தலால், நளவெண்பா வென்பதை அன்மொழித் தொகையென் றுரைவதினும் ஆகுபெயரெனலே ஏற்றமாமென்க. இருபெயரொட் டன்மொழித்தொகையில் முதன்மொழி யிரண்டா மொழியையே பொற்றொடி யென்புழிப் போலச் சிறப்பிக்குமன்றி அல்லாத மொழிகளைச் சிறப்பியா தென வறிக. நளவெண்பா வென்பதில் நளனுக்கும் வெண்பாவுக்கும் யாதொரு தொடர்பு மின்றி அதனாலாகிய கதைக்கே தொடர்புண்மையால் அதை இருபெயரொட் டாகுபெயரெனலே ஏற்றமாமென்க. சிலேடை வெண்பா, பஃறொடை வெண்பா முதலியவைகளைப் போன்ற நூற்கே வழங்கும் தொடர்மொழிகளே அன்மொழித்தொகைகளா மென்பதற்கு யாரைக் கேட்கவேண்டும்? இவைகளின் முறையே சிலேடை யென்பதூஉம் பஃறொடை யென்பதூஉம் இரண்டா மொழியாகிய வெண்பாவையே சிறப்பித்த லறிக. இங்ஙனமின்மையால் இதுகாறும் நளவெண்பா வென்பதை அன்மொழித் தொகையென் றுரைத்தார் கூற்று மாற்றமாயினமை காண்க. இனி நளவெண்பா வென்பதை இருபெயரொட் டாகுபெயரெனலே ஏற்றமா மென் றுணர்க.

நூலாசிரியர் வரலாறு இவர் பெயர் புகழேந்தியா ரென்பது காரண இடுகுறி வழக்கா மென்பது சொல்லாமலே விளங்கும். இவர் இயற்பெயர் இன்னதென் றிசைப்பதற் கியலவில்லை. இவர் காலம் இன்றைக்கு எண்ணூறாண்டுகளுக்கு முந்தி யிருக்கலா மென்று சிலரும், ஆயிரம் ஆண்டுகளுக்கு அப்பாலா யிருக்கலாமென்று பலரும் பகர்கின்றனர். விக்கிரமன், குலோத்துங்கன், இராஜராஜன் என்னும் மும்மைச் சோழர் காலமே இவர் கால மென்பதனுல், கி. பி. **1118** முதல் **1200** வரையில் உள்ள எண்பத்திரண் டாண்டுகளில் இவர் வாழ்ந்திருந்தாராக வேண்டும். கம்பர், ஒட்டக்கூத்தர், ஔவையார் முதலிய மும்மைப் பெரும் புலமையரோடு இவரும் இருந்தன ரென்பதனுல், சாலிவாகன சகம் **807**-ல் (அதாவது) சுமார் ஓராயிரத்தொரு நாற்பதாண்டுகளுக்கு முன்னர் இவர் பிழைத்திருந்தாராக வேண்டும்.

ஆதியி லிவர் பாண்டி மன்னனிடத்திற் பாவலரா யிருந்தன ரென்பர் பலர். அப்பாண்டியன் யாரெனின் சண்பக மாற னென்பர். இதுவும் கால வரையறை மாறுபாட்டான் மயக்கத்திற் கிடனு மென்க. இவரது செய்யுணடையை நோக்குங்கால், இவருக்குச் சங்கத்தமிழ் மூன்றினும் பெரும் புலமை நிரம்பியிருந்தமை நன்கு புலனுகின்றது. இவருக்கு முந்தியே பெருந்தேவனு ரென்னும் சங்கப்புலவர் பாரதக் கதையைப் பைந்தமிழ் வெண்பாவிற் பாடியிருந்தாராயினும், வெண்பாவிற் பெருந்தேவனுரென்ற புகழ்ச்சியைப் பெற்றாரில்லை. நள கதையை வெண்பாவாற் பிறகு பாடிய இவரே, 'முன்னே முளைத்த காதைப் பார்க்கிலும், பின்னே முளைத்த கொம்பு உறுதி' என்றபடி வெண்பாவிற் புகழேந்தி யென்ற வியன்புகழைப் பெற்றார். தெலுங்கிலும் வெண்பாவைப் போன்ற கந்தபத்தியம் பாடுவதென்றால் புலமை நிரம்பாதவர்க் கரிதாம். சிறு காப்பிய மானு

லும் நள கதையைப் போர்ச் சிறப்புத் தவிர பொழில் விளையாட்டு, திருமணம், புனல் விளையாட்டு முதலிய பற்பல பெருங்காப்பிய ஒழுங்குகளை யமைத்து விருத் தப் பாவாலாக்குவதே வருத்தப்பாடாமானால் திருத்தப்பாடாக வெண்பாவிற் றீட்டுவதற்குக் கேட்பானேன்? இந்தச் சிறு காப்பியத்தையே போர்ச் சிறப்பு முதலியவைகளைக் கூட்டிப் பெருங் காப்பிய மாக்கினார் அதிவீரராம பாண்டியர். பெருங் காப்பியத்திற்கு வீட்டு நெறி காட்டு மேட்டிமை யமைந்திருக்கவேண்டு மென்பர் அறியாதார். அங்ஙனமாயின் இராமாயணமும் சிலப்பதிகாரமும் சிந்தாமணியும் எந்த வீட்டு நெறியை, யார்க்குக் காட்டின, காட்டுகின்றன, காட்டுமென்றுதான் கேட்கின்றோம். 'அற்றது பற்றெனில் உற்றது வீடு' என்பதே வீட்டு நெறியாம்; இந்த வீட்டு நெறியை அந்தமாகப் புகழேந்தியார், தம் பாட்டுடையானாகிய நளன் மூலமாய் நன்கு விளக்குகின்றார். அவன் தன் பெண்டுபிள்ளை பண்டபதார்த்தங்களைத் துச்சங்களென வொதுக்கிக் காட்டிற் றன்னந்தனியனாய் மாசற்ற மனமுடையவனாய்த் திரிதற்கு மனமொப்பியதே மேட்டிமையான வீட்டு நெறியாம். ஆகையால், 'அறம் பொரு ளின்பம் வீ டடைதல் நூற்பயனே' என்றபடி, நாம் பெறும் பயனிற் பெரும் பயனை அளிக்கவல்ல நள கதையை, இத்தனை அருமையாய், 'ஆவிற் காரா, பாவில் வெண்பா' என்றபடி, வெண்பாவாற் பாடி, வெண்பாவிற் புகழேந்தி யெனப் புகழேந்திய புலவரினும் புகழேந்தினார் யாவர்? சோழன் சிறைக்கோட்டத்திருந்து மீண்ட இவர், முரணைநகர்ச் சந்திரன் சுவர்க்கி யென்னுஞ் சிற்றரச னாதரவிருந்தபோதே இந் நள வெண்பாவை இயற்றினா ரென்ப நூல் வரலாறு.

இவரும் சிற்சில் லிடங்களின் மோணைக்காகச் சொற்களைத் திரித்து வைக்கிறார்.

நூலகத்திருப்பு 'தாமம் புனைவான் சயம்வரத்து' என்கிறார். சயம்வர மென்றே மொழிக்கூட்டின்று. சுயம்வர மென்பதே வடமொழி யாட்சியாம். வடமொழிக் கவியின் உயர்வு நவிற்சிகளை இவரும் ஆங்காங்கு விடாமற் பின்பற்றுகிறார்.

கார்க்கோடகனுக்குச் சுட்ட நெருப்பு நளனுக்குச் சுடாதிருந்தது, நெருப்புக் கடவுள் அவனுக்கு அளித்திருந்த வரவலியா லென்கிறார். கார்க்கோடகன் தந்த ஈராடைகளும் நளன் கரந்துறைதற் குதவியாயிருந்தன வென்று எண்பிக்கிறார். தமயந்தி தன் சிற்றன்னை யரண்மனையில் தன்னை யின்னாளெனத் தெரிவித்துக் கொள்ளாமலே சிலகால மிருந்தாளென்று கதைப் போக்குக் காட்டுகிறார். நளனும் அப்படியே தன்னை இன்னானென் றறிவித்துக்கொள்ளாமலே அயோத்தியரச னரண்மனை ஆளாக அமர்ந்திருந்தா னென்கிறார் இப்படியெல்லாம் இக்காவியத்தைக் கூர்ந்தாய்ந்து பார்த்தால், தற்கால வொழுங்குக் கொவ்வாக் கருத்துக்கள் பற்பல வெளியாகும். இவைகளைக் கவி நயங்க ளென்றுங் காவிய நயங்க ளென்றுங் கொண்டு விடுவதே நங் கடமையாம். ஆயினும் உள்ளதை உள்ளபடி, புனைந்துரையாமல் அமைத்துச் செய்வதே சரித்திரப் பற்றுள்ள காவியமாம். நந் தமிழகத்தில் இதுகாறும் அத்தகைய காவியமே இலதாகலான், நம் புகழேந்தியாரியற்றிய இச் சிறு பெருங்காப்பிய மென்னும் நளவெண்பாவை, இவர் வாக்கு நய நோக்கிப் பொன்னேபோற் போற்றிக்கொளல் வேண்டும்.

இன்னும் இவர்பால் ஒட்டக்கூத்தர் கொண்டிருந்த அழுக்காறு காரணமாக இவர் சிறையிற் கிடந்ததும், அங்கிருந்தபடியே இவர் தம் மாணவர் மூலமாய் ஒட்டக்கூத்தரை வென்றதும், நள வெண்பாவைச் சோழ னவையிற் பொருளுரைத்

தேற்றியதும் முதலிய வரலாறுகள் எல்லார்க்குந் தெரிந்தன எங்குங் காண்பன ஆகையால் இங்கு விரிவஞ்சி விடுத்தாம்.

நூலாசிரியர் 'மாலார் களந்தைப் புகழேந்தியுந் தொண் டை மண்டலமே' என்னும் இவ்வோராட்சியைக் கொண்டே இவர் பிறந்த இடம் செங்கற்பட்டுக் கடுத்த பொன் விளைந்த களத்தூரென்ப. இவர், குலோத்துங்க சோழன காலத்தவனாகிய வரகுண பாண்டியனிடத்திற் பாவாணரா யிருந்தன ரென பகர்வாரு முளர். குலோத்துங்கனுக்குப் பெண் கொள்ளவே ஒட்டக்கூத்தர் வரகுணனிடத்திற்குச் சென்றார். அப்போது, அங்கிருந்த இவர், ஒட்டக்கூத்தர்க் கஞ்சாது, அவர் பாடலை வெட்டிப் பாடிச் சோழனைப் பாண்டியற்கு ஒவ்வானென்று சுட்டிக் காட்டினார். இதுவே காரணமாகத்தான் ஒட்டக்கூத்தர்க்கும் இவர்க்கும் பெரும் பகை முதிர்ந்தது. இவரைச் சைவ ரென்பர் சைவர்; வைணவ ரென்பர் வைணவர். இவர் மதம் எதுவேனும் சம்மதமே. இவருடைய சொன்னேக்கு நடைநோக்கு மற்றெந்நோக்கு நன்னேக்காய்ச் சுருங்கச் சொல்லி விளங்கவைத்தன் முதலிய பத்தழகுகளோடு பொருந்தி யிருத்தலால், தமிழுலகம் இவரை வாழ்த்தி வணங்கக் கடமையுற்றுளது.

இவ்வகல இத்தகைய நூற்கு எத்தனையோ வுரைகள் வுரை யமைப்பு இதுகாறும் வெளியாயுள்ளன. எனினும் இவ்வுரை மாணவர்க்கும் மற்றவர்க்குந் தெற்றென விளங்கிக் குறையகல மிகவும் அகலமாய்ப் புதுவது புகுதலாக வெளிவந்திருக்கின்றது. ஒவ்வொரு செய்யுட்கும், (சகஙு-ஞ் செய்யுள்) "நல்லரசனாகிய நளனை நோக்கிப் புல்லரசனாகிய புட்கரன் 'சேமந்தானே?' என்று வினவினனெனல்" என்பது போன்ற தலைப்புக்கள் வெகு அழகாய் அமைந்துள்ளன. தலைப்புக்களாலேயே செய்யுட்களின் கருத்துக்கள் தெற்றென விளங்குமெனினும் ஒவ்வொரு

செய்யுளுக்குங் கருத்துரையும் வேறு அமைத்திருக்கின்றோம். உரை, பதப் பதயாவுரையின்றிப் பதத் தொடருரையாய்க் கருத்துக்குகந்தபடி பொருந்தி யிருக்கின்றது. புது முறையாய்ப் பதப் பிரிவு செய்து விளக்கினபடியே ஒவ்வொரு தொடரையும் உரைநடை ஒழுங்கில் அமைத்திருக்கின்றோம். ஒவ்வொரு செய்யுளுக்கும் விரிவுரையாக அதனடியில் அதனதன் சூத்திரத்தையும் சர்த்திரத்தையும் மிகுதியாகவும், தமிழ்மொழி பொழுங்கென்னும் இலக்கணக் குறிப்பைக் கூறியது கூறலின்றித் தகுதியாகவும் காட்டியிருக்கின்றோம். சில இலக்கண வெறியர்களைப் போல வீணை எழுத்திலக்கணங்களையுஞ் சொல்லிலக்கணங்களையுமே கூறியது கூற லென்னுங் குற்றத்துக் குட்படுக் குறித்து வைத்துப் பொத்தகத்தைப் பருக்கவைத்தோ மில்லை. தமிழ் மொழி நடைப் பயிற்சியால் தமிழ் மொழி பொழுங்கை அவரவரும் எள்ளினின் றெடுபடும் எண்ணெயைப்போலத் தாந் தாமே கண்டு தெளிவதன்றிப் பிறர்பாற்கொண்டு மிளிர்வது கூடாதோக்கமாம். மாணவர்க்கும் மற்றவர்க்கும் உதவியாக உரை யமைந்திருக்கவேண்டுமன்றி, உரை யெழுதினோர் தம் புலமையி னில்லைமையைக் காட்டி மயக்க வுரை யமைப்பது கூடா வொழுக்கமாம். பதிப்பாசிரியர் நோக்கமும் இதுவேயாகலான் இந்நன்னோக்கத்தோ டெழுந்த இவ்வகல வுரை, எல்லார்க்கும் எய்ப்பினில் வைப்பா யின்ப நலந் தருமென்பதற் கெட்டுணையும் ஐயமின்று.

**பாட்டுடைத் தலைவன் வரலாறு** இப் பாட்டுடையானாகிய நளன் வரலாற்றை அறியாதார் அறியாதாரே யாவர். இவன் நீதி நெறிக்கும், இவன் இல்லாளாந் தமயந்தி யென்பாள் கற்பு நெறிக்கும் பொற்புடையாரா யிருந்தமையால் இவ்விருவர் கதையையும் இந் நாவலந் தீவினன்றிப் பிற விடங்களினும் போற்றுதா ரிலர். நளோபாக்கி

யானமென்று தெலுங்கிலும் வடமொழியிலும் ஆங்கில முதலிய பிறமொழிகளிலும் செய்யுணடையாகவும் உரைநடையாகவும் இவர்கள் வரலாற்றை விளக்கிப் புகழாதார் இலர். நாடக மேடைகளிலும் பிற விடங்களிலும் இவர்கள் இசையை எல்லோர்க்கும் இசைய நடித்துக் காட்டி நன்னெறிப்படுத்த வேண்டுமென்பதே நவரசமோர்ந்த நாகரிகர் கொள்கையாம்.

நளனாண்ட காலம் பாரத காலத்துக்கும் அப்பாலதென்பதே நளவெண்பா வாசிரியருடைய கருத்து. இக்கருத்து இவருக் குரிமையானதன்று. வடமொழியில் நளகதை வகுத்த ஸ்ரீ ஹர்ஷகவியை இவர் பின்பற்றினராகையால் அவர் கருத்தையே இவர் பொருத்தமாய்க் கொண்டாரென்ப. வியாசமுனிவர், தருமராசனுக்கு வனத்தில் வந்து இக்கதையை வழுத்தினரென்றிருப்பதால், பாண்டவர்க்கு முந்தியே நளனாண்டிருந்தானாக வேண்டும். ஆகையால் இவன் காலம் இற்றைக்கு ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முந்தியதா யிருக்கவேண்டும். இவனிருந்தரசாண்ட நகரம் மாவிந்தமென்பதூஉம், அது நிஷத நாட்டுத் தலைநகரென்பதூஉம் நளவெண்பாவா னறியுமுண்மையாம். இந்நாடு நடு நாவலந் தீவின் தென்கிழக்கி லிருந்ததாம். நளன் தேரோட்டுவதிலும் சமைப்பதிலும் வல்லவனென்பது உலகோர் கொள்கை. இக்காலத்துப் போலியொழுக்க மாக்கள் இவ்விரு தொழில்களையும் இழிந்தனவெனக் கருதித் தாம் தாழ்ந்தவரெனக் கருதுஞ் சிலர்க்கே இவைகள் உரியனவாமென்று விட்டிருக்கின்றனர். நளன் சக்கரவர்த்தியேனும் கைத்தொழில்களிற் சிறந்திருந்தமை வியக்கற்பாற்று. இவன் காலத்திலேயே விதர்ப்ப (Berar) நாட்டரசனாகிய வீமனென்பான் குண்டினபுரியிலிருந் தரசாண்டானென்பது நைடதக் கொள்கை. இவன் மகளே தமயந்தியென்பாள். இவள் பருவமடைந்தமங்கையேனு மணமின்றி நங்கையாகவே வரிக்கு நாளை எதிர்

நோக்கி யிருந்தாள். இக்காலத்துச் சில போலி உயர் குலத்தார் தம் பெண்மக்களுக்குப் பத்திலும் எட்டிலும் மண முடித்து மகிழ்வது சால வருந்தற்பாற்று.

நளன் சீரும் சிறப்பும் பேரும் புகழும் ஊரும் உயர்வும் தேரும் திருவும் யாரும் உணர்ந்திருந்தபடி தமயந்தியும் உணர்ந்திருந்தா ளாகையால் அவனையே மணக்கவேண்டு மென்று விரும்பியிருந்தாள்; அவன்மீது உண்மைக் காதல் கொண்டிருந்தாள். இவளுடைய இருப்பும் இயல்பும் வனப்பும் வடிவும் நளனுக்குத் தெரிந்திருந்தன. ஆயினும் கூடுங் காலங் கருதி, யிவள்பால் தனக்கிருந்த காதலை யவன் வெளிப்படுத்தினா னில்லை.

ஒரு நா ளிவன் தன் பூங்காவில் அன்னமொன்றைப் பற்றி, அதனால் தமயந்தியின் பொற்பையுங் கற்பையுங் கேட்டுத் தன் காதலை யதனிடத்தில் வெளியிட்டு அதையே அவளிடத்தில் தூதனுப்பினான். இப்படிப் பறவையும் பாம்பும் பேசினவென்றும் அவைகளாற் மாந்தர்க் காவன ஆயின வென்றும் கதைகளில் நுழைத்தெழுதிச் சரித்திர சம்பந்தமானவைகளைத் தரித்திர சம்பந்தமாக்கி வைப்பது நந்நாட்டார்க் கியற்கையா யிருந்தது. இன்னும் அவைகளை நம்பியே நாணயந் தப்பி வாழவேண்டு மென்பதும் நம்மவர் கொள்கையாம்.

தமயந்திபாற் றூது சென்ற அன்னம் அவளிடத்தில் நளன் காதலை யறிவித் ததற் கவளொப்பியதைத் திரும்பிவந்து தெரிவித்துச் சென்றது. தன் மகள் கொண்ட காதல் நோயை யுணர்ந்த வீம னென்னும் விதர்ப்ப மன்னன், அக்காலத்திய மன்னர் வழக்கம்போற் சுயம்வரம் வகுக்கின்றான். அதற்கு மன்னர் பலரும் வருகின்றனர், நளனும் செல்கின்றான். தேவர்களும் அழையாமலே வந்தார்களாம்; தமயந்தியின் அழகி லவர்கள் மயங்கித் தியங்கினார்களாம். தேவர்கள் நள

னையே தூதுவனாகச் செலுத்தித் தமயந்தியைத் தம்வசப் படுத்த முயன்றார்களாம். முடியாமையால், அவர்கள் அவனுக்கு வரமளித்து வாழ்த்தினார்களாம். பிறகு நளனுக்கே தமயந்தி மாலையிடுகிறாள். அதற்குள், தமயந்தியை விரும்பிக் கலிபுருடன் அங்கு வந்து, காரியம் மிஞ்சிப்போனதற்காக அவள்மேற் கடுஞ்சினங்கொண்டு, அவளையும் அவள் கணவனாகிய நளனையும் வருத்துவதாக வஞ்சின முரைத்தானாம்.

அப்படியே அவன் சிற்றரசனாகிய புட்கரனுக்கு எருதாய்ச் சுமந்துகொண்டுவந்தவனை நளனகரத்தில் விட்டானாம். கலியின் மாயவலியாற் புட்கரன் நளனைச் சூதாட்டத்தினால் வென்றுவிட நாட்டைக் கைப்பற்றிக்கொண்டு நளதமயந்தியரைக் காட்டுக் கோட்டிவிடுகிறான். காட்டிலவர்கள் படாத பாடில்லை: இருவரும் ஒரு புடைவையைப் பொதுவி லுடுத்திக்கொள்ளுகிறார்கள். கலியின் வஞ்சனையால் நளன் தமயந்தியை வனத்தில் தனியே தவிக்கவிட்டுப் பிரிந்துபோகிறான். பிறகவள் தன் சிற்றன்னை வாழும் நாட்டிற் சேர்கிறாள். நளனும் வனத்திற் கார்க்கோடகனிடத்தில் வரம்பெற் றுருமாறித் தேர்ப்பாகனாக அயோத்தி யரசனிடத்தி லமர்ந்திருக்கிறான்.

வேதியன் தூதால் தமயந்தி தன் தந்தை யகத்தைச் சேர்ந்து நளனை யெதிர்நோக்கி யிருக்கிறாள். அவளை அவ் வேதியனைத் தூதுபோக்கி அயோத்தியில் நளனிருப்பை ஒருவா றறிந்துகொண்டு தனக்கு இரண்டாம் சுயம்வர மென்று அயோத்தி யரசர்க்குப் போய்ச் சேதியனுப்புகிறாள். அதை உண்மை யென்று நம்பின இவ்வரசன் நளனையே தனக்குத் தேர்ப்பாகனாகக் கொண்டு விதர்ப்ப னகரத்துக்கு வருகிறான். அங்கத் தேர்ப்பாகனே நளனென்று சில குறிகளால் தமயந்தி தெரிந்துகொள்ளுகிறாள். பிறகு நள தமயந்தியர் ஒன்று கூடித் தந்நாட்டை மறு சூதில் வென்று தம் மக்களோ டெப் போதும்போ லரசாள்கின்றனர்.

ம. மாணிக்கவாசகன்.

ஓம்

# நளவெண்பா மூலம்,

# ஆக்கல உரையின்

## செய்யுள் முதற் குறிப்பு அகராதி

ஸ்ரீ ஆதிமூலம் பிரஸ் சென்னை—1930



ஓம்

புகழேந்திப் புலவர் இயற்றியருளிய

# நளவெண்பா மூலமும்,

## அகல உரையும்

---

### நூற் சிறப்புப் பாயிரம்

[ஏற்புடைக் கடவுள் வணக்கம்]

விநாயகர்

நேரிசை வெண்பா

*நேசரிதங் கூற நிலவலயந் தாங்குநளன்*
*மாசரிதங் கூற வருந்துணையா—ஈசன்*
*கரியா னனத்தான் கருதுபுகழ் பூண்ட*
*கரியா னனத்தான் கழல்.*

(பதவுரை) நிலம் வலயம் - பூமியுருண்டையை, நேசர் இதம் கூற - உற்றார்க்கு நன்மை வளரும்படி, தாங்கும் நளன் மா சரிதம் கூற - ஆண்ட நளசக்கரவர்த்தியினுடைய சிறந்த கதையை (வெண்பாவில் அமைத்துச்) சொல்லுதற்கு, ஈசன் - சிவனும், கரியான் - திருமாலும், அன்னத்தான் - பிரமனும், கருது புகழ் பூண்ட - (உயர்வாக) மதிக்கின்றபுகழைத் தாங்கிய, கரி ஆனனத்தான் - ஆனைமுகக் (கடவு

ளாகிய விநாயக) ருடைய, கழல் - திருவடிகள், துணை ஆக வரும்- உதவியாக வரும்.

(கருத்துரை) நளசரித்திரங்கூற, விநாயகர் காப்பாவார்.

(விரிவுரை) 'நேசர்' என்றதனானே உற்றார் என்பது பெற்றாம்; "பெற்றார், பிறந்தார், பெருநாட்டார், உற்றார், உகந்தார்" என்றதனால், நேசர் என்றதற்கு இவ்வெல்லாரையுங் கூட்டிக்கொள்க. உற்றார்க்கு இதம் வளரும் என்றதனன், மற்றார்க்கு அகிதம் வளரும் என்பதன்று; அவர்கள் இவன் குடைக்கீழ்த் தங்கியிராமையால் இவன் ஆட்சியின் நன்மையைப் பெற வாயார் என்று அருத்தாபத்தியாற் கொள்க. நிலம் + வலயம் என்பது நிலவலயம் என்று நிலைமொழியின் ஈறு தொக்கது. 'வலயம்', 'வட்டம்', 'மண்டலம்' என்பன ஒருதொடர். பற்பல வட்டங்கள் கொண்டதே உருண்டையாகையால், நிலவலயம் என்றதற்குப், 'பூமியுருண்டை' என்று பொருள் விரித்தாம். இதனாலேயே சக்கரவர்த்திகளின் படங்களில், ஒரு கையில் பூமியுருண்டையும், மற்றொரு கையில் செங்கோலுந் தாங்கி யிருக்கக் காண்கிறோம். 'தாங்கு நளன்' என்றதனால், 'பூபாரத்தைத் தாங்கிய நளன் என்பதூஉம் ஒன்று. மற்றெல்லாப் பாரங்களிலும் பூபாரமே பெரும் பாரம்; அதை முதுகின்மேல் தாங்குவதென்றாலும், எளிதில் ஆம். ஆனால், அதில் மன்னுயிரைத் தன்னுயிர்போல மதித்துத்தண்ணளியோடு அவைகளுக்கு இதங் கூற ஆளும் பாரம் பெரும் பாரமாகும் என்று தெளிக. மா + சரிதம் = மாசரிதம் என்று வல்லொற்று மிகாததற்குநிலைமொழி உரிச்சொல்லாயிருப்பதே காரணமாம். "இடையுரி வடசொலின்" என்னும் நன்னூற் சூத்திரத்தையுங் காண்க. கூற என்னும் செயவெனெச்சம் 'துணையாவரும்' என்ற வினைகொண்டு முடிந்தது. 'ஈசன்' என்பது இறைவனுக்குப் பொதுப்பெயராயினும், இங்குச்சிவாதிக்ய மூர்த்தியாகிய உருத்திரனையே குறிக்கும். கார்மேகவண்ணனென்பது தோன்ற திருமாலைக் கரியானென்றார். அன்னவாகனமுடையானை அன்னத்தான் என்றது காரணக்குறியாம். மும்மூர்த்திகளும் விநாயகனார் புகழை மதித்துப் போற்றினமையைக் கணபதி புராணத்திற் பாக்கக் காண்க. திருக்கயிலையிற் பளிங்கு மேடையிலமர்ந்து, சித்திரங்களைப் பார்த்துக்கொ

ண்டிருந்த பார்வதி தேவியும் பரமசிவனும், அவைகளில் ஒன்றிற் பிரணவ வடிவத்தை யானைகளின் உருவத்திற் கண்டு, அதைக் கூர்ந்து நோக்கினதனால் அவதரித்தவர் விநாயகனு ராகையால் கரியான் என்றார். 'கரியான்' என்பதூஉம் காரணப்பொருட் பகுபதம். ஈசன் கரியான் அனத்தான் என்பதை, ஈசனும் கரியானும் அன்னத்தானும் என்று செவ்வெண்ணாக விரித்துக் கொள்க. கழல் - எழுவாய் வரும்- பயனிலை. (க)

## சடகோபர்

வளன்கூர் வயல்சூழு மாநிடத மன்னன்
நளன்சீர் நவிலுநல நல்கும்—உளஞ்சேர்
மாமகிழ்மா றன்புகழாம் வண்டமிழ்வே தம்விரித்த
மாமகிழ்மா றன்றாண் மலர்.

(பதவுரை) உள்ளம் மகிழ் மா சேர் மால்தன் புகழ் ஆம்-திருவுளங் களிக்கின்ற திருமகள் வாழும் (மார்பையுடைய) திருமாலின் திருப்புகழாகிய, வண்மை தமிழ் வேதம் விரித்த-பொருள்வள மிகுந்த தமிழ் வேதத்தைப் பாடியருளிய, மா மகிழ் மாறன் தாள் மலர்-சிறந்த மகிழம்பூமாலை பூண்ட சடகோபாழ்வாருடைய திருவடித் தாமரைமலர்கள், வளன் கூர் வயல் சூழும் மா நிடத மன்னன் நளன் சீர்-நீர்வள மிக்க வயல்கள்சூழ்ந்ததனாற் பெருமைபொருந்திய நிடதநாட்டரசனாகிய நளசக்கரவர்த்தியின் கதையை, நவிலும் நலம் நல்கும்-(அடியேற்கு வெண்பாவாற்)பாடும் நல்லறிவைத்தந்தருளும்.

(கருத்துரை) சடகோபர் திருவடிகள், அடியேற்கு நளசரித்திரம் பாடும் நல்லறிவைத் தந்தருளும்.

(வி—ரை) வளன்: வளம் என்பதன் போலி; இங்கே 'வளன் கூர்வயல்' என்றதனால், நீர்வளம் நிலவள மிரண்டையுங் குறிக்கும். வடநாட்டிற் புகழ்பூண்ட நாடென்பது தோன்ற 'மாநிடதம்'என்றார். 'நிடதம்' என்பது ஆதிகாலத்து ஐம்பத்தாறு தேசங்களி லொன்று; தற்போதுள்ள ஒரிசா நாட்டுக்கு அருகி லிருந்தது. 'மன்னன் நளன்'

என்பதை நளமன்ன னென்று சிறப்பும் பொதுவுமாகவுங் கொள்ள லாம்; கொளின், ஆயன்சாத்தன், சேணியன்சுப்பன் என்புழிப் போல, சிறப்பும் பொதுவுமாக வந்த இருபெயரொட்டு உயர்திணைப் பெயராகக் கொள்க. 'நளன்சீர் நவிலுநல நூல்கும்' என்பதில் நகர முற்று மோனையாய் வந்திருப்பதைக் கவனிக்க. அங்கிலமுடையார் இதை அலீட்ரேஷன் என்பர். நலம் என்றது இங்கே ஆகுபெயராய் அறிவைக் குறிக்கிறது. உள்ளம் என்பது இடைக்குறையாய்'உளம்' என்று வந்தது; "திருவுளச் சம்மதமோ!" என்றார் பிறரும். உள்ளம் மகிழ் மா சேர் மால்'-என்று மொழிமாற்றிப் பொருள் விரித்திருப் பதுகாண்க.'சேர்மால்'வினைத்தொகை.'மாமகிழ்சேர் உள்ளம் மால்' என்பதூஉம் மற்றொரு மொழிமாற்று; இதற்குத் 'திருமகள் களித் திருக்கின்ற இதயம் (மார்பு) உடைய திருமால் என்று பொருள் விரித்துக்கொள்க.மால் + தன்புகழ்-மாறன்புகழ்; சந்தியால் தகரம் றகரமாய்,லகரம் கெட்டது. வண்மை + தமிழ்வண்டமிழ், "ஈறுபோ தல்"என்னும் சூத்திரவிதிபெற்றது. ஆரியவேதத்தினின்றும்வேறு பிரித்துக் காட்டத் தமிழ்வேதம் என்றார். இங்கிது"சாரைப்பாம்பு" என்புழிப்போலச் சிறப்பும் பொதுவுமாகவந்த இருபெயரொட்டு; இதுவே வேதத்தமிழ் என்றும் வரும். இங்குத்தமிழ் வேதம் என்றது நம்மாழ்வா ரருளிய திருவாய்மொழியை. இதுகுறித்தே ஐயங்கார் தும் தமது மாலையில்,

'— — — — —

— — —கண்பாராய் !

நாராய ணனடியே னடுந் தமிழ்வேத

யாராய ணசடகோ பா' என்றார்.

வண்மை என்றது பத்தழகோடு கூடிய இனிமையை. 'மாறன்' என்பது சடகோபர்க்கு இயற்பெயர்-மகிழமாலை-குலவிருது-மலர்த் தாள் என்பது மொழிமாற்றாகத் 'தாண் மலர்' என்று வந்தது. தாள் மலர் - எழுவாய், நல்கும் - பயனிலை. (உ)

## திருமால்

ஆதித் தனிக்கோல மானா னடியவற்காச்
சோதித் திருத்தூணிற் றோன்றினான்—வேதத்தின்
முன்னின்றான் வேழ முதலே யெனவழைப்ப
என்னென்று னெங்கட் கிறை.

(ப - ரை) ஆதி தனி கோலம் ஆனான் - ஆதிகாலத்தில் தன்னொப்பில்லாத வராகாவதாரமானவனும், அடியவன் கு ஆக - தன்னடியவனாகிய பிரகலாதாழ்வானுக்காக,சோதி திரு தூணில் தோன்றினான்-சோதிமயமாகிச் சிறந்த தூணினிடத்தில் அவதரித்தவனும், வேதத்தின் முன் நின்றான்-வேதத்தில் முதலிடமாகிய (பிரணவப் பொருளாக) நின்றவனும், வேழம் முதலே என அழைப்ப - யானையானது ஆதிமூலமே என்றழைத்தபோது, என் என்றான் எங்கள் கு இறை-ஏன் என்று (ஓடிவந்தவனு) மாகிய (திருமால்) எங்களுக்குக் கடவுளாவன்.

(க - ரை) திருநெடுமால் எம்மைக் காக்குங் கடவுளாவார்.

(வி - ரை) ஆதித் தனிக்கோலம் என்றதனாலே ஆதிவராகாவதார மூர்த்தியைக் குறிக்கிறது; இது, "மச்சா, கூர்மா, கோலா" என்னும் காளமேகப்புலவர் வாக்கின்படி திருமாலின் மூன்றாமவதாரமாகும். பிரளயகாலத்தில் பூமி அழியாவண்ணம் அதை, வராகாவதார மூர்த்திதமது மருப்பில் தாங்கினா ரென்பது புராண கதை. அடியவனாகிய பிரகலாதற்குச் சோதித் திருத்தூணில் தோன்றியது நரசிம்மாவதாரகாலத்தில். இவ் வவதாரம் முரணியனாகிய இரணியனைக் கொல்வதற்கேயா மென்பது உலகப் பிரசித்தம். இதைப் பற்றிக் கம்பராமாயணத்திற் பரக்கக் காணலாம். இப்படியே வராகாவதாரகாலத்திலும் திருமால் இரணியாக்கனைக் கொன்றா ரென்பதும் எல்லார்க்குந் தெரியும். 'வேதத்தின்முன்' என்பது அன்மொழித் தொகையாய், வேதத்தின் அக்கிரத்தானமாகிய பிரணவம் என்று பொருள் தருவது காண்க. 'வேழமுதலே யெனவழைப்ப என்னென்றா னெங்கட்கிறை' என்றதை

" மூலமே யென்றகரி முன்வந் திடர்தொலைத்து
நீலமேகம் போல நின்றானை " என்னும்

ஐயங்கார் வாக்கு எண்பிக்கின்றது. தன் முன்காலை முதலை பற்றி யீர்க்கையில், விடுவித்துக்கொள்ள வகையின்றி, 'இனி எல்லாம் அவன் செயல்' என்று தற்போதமற்று, "ஆதிமூலமே! நீயே கதி" என்றழைத்த கஜேந்திரன் என்னும் யானைமுன் "இதோ வந்தேன்" என்று விரைந்துசென்று காத்தவர் திருமாலேயாமென்பது தோன்றவே 'என்னென்றான் எங்கட் கிறை' என்றார் திருமாலுக்குக் காத்தற்றொழிலே உகந்த தொழிலாகையால், யானைமுன், அவர் தோன்றினா ரென்று கண்டுகொள்க. இந்நூலாசிரியரும், உலக வழக்கம்போல விநாயகரை அக்கிரத்தில் விக்கினம் வாராமற் காக்க வணங்கிப் பிறகு காத்தற்கடவுளாகிய திருமாலை வணங்குமுன், "தொண்டர்தம் பெருமையைச் சொல்லவும் பெரிதே" என்றபடி அவர்தம் தொண்டராகிய நம்மாழ்வாரை வணங்கினார். 'கோலமானான்,' 'தோன்றினான்,' 'முன்னின்றான்,' 'என்னென்றான்' எழுவாய்கள், 'இறை' - பெயர்ப் பயனிலை. (ந)

## சிவபெருமான்

கலாப மயிலிருந்த பாகத்தார் கங்கை
உலாவு சடைமே லுறையு—நிலாவை
வழியவார்த் தாலன்ன மாநீற்றார் நாகங்
கழியவார்த் தார்நமக்கோர் காப்பு.

(ப - ரை.) கலாபம் மயில் இருந்த பாகத்தார்-தோகைமயில் போன்ற சாயலுள்ள பார்வதிதேவியார் அமர்ந்த இடதுபாகத்தை உடையவரும், கங்கை உலாவு சடைமேல் உறையும் நிலாவை - கங்கை பாயும் சடைமுடியின்மேல் வாழ்கின்ற நிலவி னொளியை, வழிய வார்த்தால் அன்ன மா நீற்றார்-(தம் திருமேனிமேல்) வழியும்படி ஊற்றினது போன்ற சிறந்த திருவெண்ணீறணிந்தவரும், நாகம் கழிய ஆர்த்தார் நமக்கு ஓர் காப்பு - பாம்புகளை ஆபரணங்களாக மிகுதியுங் கட்டினவருமாகிய (சிவபெருமான்), நமக்கு ஒப்பற்ற காவற்கடவு ளாவார்.

(க - ரை) சிவபெருமான் நம்மைக் காக்கும் இறைவ ராவார்.

(வி - ரை) 'கலாபமயில்' என்றதனுன் ஆண்மயில் என்பது பெற்ரும்-கலாபமயில் என்பது தேன்மொழி யென்புழிப்போல உவமைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாகப் பார்வதிதேவியைக் குறிப்பது காண்க. சத்தியாகிய பார்வதிதேவியைச்சிவனுரின் வேறுபிரித்து வணங்கிய பிருங்கிமுனிவர்க்கு அபேதவுணர்ச்சி உண்டாக்கும் பொருட்டு, அத் தேவி சிவபிராளுேடுஅவிச்சின்னமாய் அவருடைய இடதுபாகத்தை உகந்தாரெனக்கொள்க. பகீரதன் கொணரச் சிவபிரான் தமது சடையை விரித் தேற்றுக் கொண்டபோது அதிவேகமாய்ப் பாய்ந்ததனுல், கங்கை உலாவும் என்றதற்குக் கங்கை பாயும் என்று பொருள் விரித்தாம். பஞ்சபூதவொடுக்க காலத்தில் நெருப்பில் நீர் ஒடுங்கும் என்னும் தத்துவந் தோன்ற, அழல் வண்ணராகிய சிவபிரான் சடையில் கங்கை நீர் ஒடுங்கிற்றென்று கொள்வது ஆன்ரோர் வழக்கு. சடையில் உறையும் நிலாவென்றதூஉம் இப்பெற்றி நோக்கியே யென்க. வெம்மையில் தண்மை ஒடுங்குகிறபடியே, அது ஆற ஆற அதி லிருந்தது உதிப்பதும் இயல்பென்பது இதனுற் பெற்ரும். சிவனுர் திருமேனி நீறு பூத்த நெருப்பென்பது தோன்றவே, 'நிலாவை, வழியவார்த் தாலன்ன மாநீற்ரூர்' என்ருர். அவர் அடியவர்க்கே நீறு பூசுங் கன்மம் கண்டமாய் வரையறை பெற்றிருக்கின்றதென்ருலும், அகண்டாகாரரான சிவனுர்க்கு அவ் வரையறை யில்லே. இதுபற்றியே தேவாரமுடையாரும்,

"மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான்"

என்று சிவபிரானேப் போற்றுகின்ருர். ஞானகாண்ட முடையார்க்குத் திருநீறு பூசுந் தத்துவந் தெரியுமாகையால், கன்மகாண்டத்தில் உழைத்துப் பிழைத்தேற வழி தோன்ருதாரைப் போலத் திருநீற்றைக் குழைத்துப் பிழைத்து உழலாரென்க. தாருகவனத்து முனிவர் யாகத்துப் பிறந்த பாம்புகளேயே சிவனுர் தரித்தாரென்பது புராண சித்தாந்தம். இதுவும் நீறுபூத்த நெருப்பு மயமாகிய சிவனுர்க்குப் பாம்பு நஞ்சின் வெம்மையுந் தண்மையா மென்பதற்

கடையாளமாம். இதைத் தத்துவார்த்தஞ் செய்யாமல் வேறு கொள்வார்க்கு உண்மை தோன்றாது. சிவனார் நஞ்சுண்டார் என்பதூஉம் இப்படியேயாமென் றுணர்க. மேலைப் பாட்டிற்போலவே இதிலும்'பாகத்தார்' 'மாறீற்றார்,' 'ஆர்த்தார்' என்னும் ஒருபொருட் பல எழுவாய்கள் நன்னூல் பொதுவியல் (௩௧) வது சூத்திரத்தின் படி, 'காப்பு' என்னும் ஒரு பெயர்ப்பயனிலை கொண்டன. (௬)

## [அவை யடக்கம்]

வெந்தறுகண் வேழத்தை வேரிக் கமலத்தின்
தந்துவினுற் கட்டச் சமைவதொக்கும்—பைந்தொடையில்
தேன்பாடுந் தார்நளன்றன் தெய்வத் திருக்கதையை
யான்பாட லுற்ற விது.

(ப - ரை) பசுமை தொடையில் தேன் பாடும் தார் நளன்தன் தெய்வம் திரு கதையை - அன்றலர்ந்த மலர்க்கொத்தில் வண்டுகள் ரீங்காரஞ் செய்கின்ற மாலையை அணிந்த நளச்சக்கரவர்த்தியினுடைய தெய்வீகமாகச் சிறந்தகதையை, யான் பாடல் உற்ற இது-நான் பாடத் தொடங்கிய இச் செய்கை, வெம்மை தறுகண் வேழத்தை வேரி கமலத்தின் தந்துவினுல் கட்ட சமைவது ஒக்கும்-கோபத்தினுல் அஞ்சா நெஞ்சமுடைய ஆண் யானையை மணமுள்ள தாமரை நூலினுற் கட்டுதற்கு முயல்வதை ஒத்திருக்கின்றது.

(க - ரை) நள சரித்திரத்தை நான் பாடுவது, தாமரை நூலினுல் ஆண் யானையைக் கட்டுதற்குச் சமான மாகும்.

(வி - ரை) வெம்மை + தறுகண் வெந்தறுகண் என்றானது "ஈறு போதல்" என்னும் சூத்திரத்தைச் சிறப்பிக்கின்றது. இது குறித்தே நாயனாரும் "சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி" என்றார். தறுகண் - அஞ்சாமை.

"தறுகண் யானை தான்பெரி தாயினும்
சிறுகண் மூங்கிற் கோற்கஞ் சும்மே."

என்றார் பிறரும். வேழம், களிறு, சிந்துரம் முதலிய பெயர்கள் ஆண்யானையையே குறிக்கும். கமலத்தின் தந்து-தாமரைத் தண்டின் நூல், இங்கே 'கமலம்' என்பது முதலாகுபெயராய் அதன் தண்டைக் குறிக்கின்றது. தந்துவினால் என்பதில் குற்றியலுகரம் கெடாமைக்கு "இடையுரி வடசொலின் இயம்பிய என்னும் சூத்திரமே ஆதாரமாம். சமைவது - ஒப்பி முயற்சி செய்வது. பசுமை + தொடை = பைந்தொடை யென்றானதற்கும் "ஈறுபோதல்" என்னுஞ் சூத்திரமே ஆட்சியாம். 'தேன் பாடும் பைந்தொடைத்தார் நளன்றன்' என்று மொழி மாற்றுவதே சரியாம்; 'வண்டுகள் (தேனை விரும்பி வந்து) ரீங்காரஞ் செய்கின்ற புதுப் பூங்கொத்துக்களாலாகிய மாலையை யணிந்த நளமகாராசனுடைய' என்பது இதன் பொருள். தொடுப்பாயிருப்பது 'தொடை'. இத் தொடை இயற்கையாகவேனும் செயற்கையாகவேனும் இருக்கலாம். இங்கே 'தொடை' என்பது காரியவாகுபெயராய் மலரைக் குறிக்கின்றது. 'பைந்தொடையில்' என்று ஏழாம் வேற்றுமை விரியாக விருக்கும் இதை, பைந்தொடை, தேன்பாடும் தார் என்று மூன்றும் வேற்றுமைத்தொகையாக மாற்றிப் படிப்பதும் பொருள் கொள்ளுவதுமே சரியாகும். நளச்சரித்திரத்தில் இந்திரன்முதலிய தேவரும், கலிபுருஷன்முதலியோரும், கார்க்கோடகனும் சம்பந்தப்பட்டிருப்பதால் 'தெய்வத் திருக்கதை' என்றார். சனி மகத்துவத்தால் துன்பப்பட்ட நளன் கதையைத் திருக்கதை யென்றது, "புடத்தின் மாற்றுயரும் பொன்னேபோல்" எத்தனைத் துன்பமுற்றும் அவன் தன் நன்னெறிபிறழா மாட்சி யுற்றதனா லென்க. நள கதையைக் கற்பாரும் கேட்பாரும் அவனைப்போலவே சனி தொடர்ச்சியால் வறுமையுற்று வாடுவாரென்பது வெறுமையான உலகக் கொள்கை. அப்படியானால், இராமகதை முதலியனவும் அங்ஙனமேயா மென்றுணர்க.

"சீரியர்கெட்டாலும் சீரியர் சீரியரே"

என்னும் ஒளவை வாக்கைச் செவ்வைபெறச் செய்வனவே இக்கதைகளாம். எத்தனைதான் வல்லவனேனும் தன்னைத்தான்

மதித் திறமாத்தல் தகாதென்பார் அவையடக்கங் கூறினார். இது-எழுவாய், ஒக்கும் - பயனிலை. (ரு)

[ஆசிரியன் பெயர்]

பாரார் நிடத பதிநளன்சீர் வெண்பாவாற்
பேரார் புகழேந்தி பேசினான்—தாரார்
செழியனையுஞ் சென்னியையுஞ் சேரத் திறைகொண்
மொழியின் சுவையே முதிர்ந்து.

(ப - ரை) தார் ஆர் செழியனையும் சென்னியையும் - வெற்றி மாலை சூடிய பாண்டியனையும் சோழனையும், சேர திறை கொள் - ஒன்றாய்த் தமக்கு அடக்க மாக்கிக்கொள்ளத் தகுந்த, மொழியின் சுவையே முதிர்ந்து-சொற்களின் இனிமையே மிகுந்திருக்கும்படி, வெண்பாவால்-நேரிசை வெண்பாக்களால், பாரார் நிடதபதி நளன் சீர் - பூவுலகிற் சிறந்த நிடதநாட்டரசனாகிய நளசக்கரவர்த்தியின் கதையை, பேர் ஆர் புகழேந்தி பேசினான் - (புலமையிற்) பேர் போன புகழேந்திப் புலவர் பாடினார்.

(க - ரை) நள சரித்திரத்தைப் புகழேந்திப்புலவர் நேரிசை வெண்பாக்களாற் பாடினார்.

(வி - ரை) 'பாரார் நிடதம்' என்றதனால், மற்றெந்நாடும் இந் நாட்டுக் கிணையாகா தென்பதை அருத்தாபத்தியாற் கொள்க. பதிநளன்-இருபெயரொட்டு. சீர்-ஆகுபெயராய்க் கதையைக் குறித்தது. 'வெண்பாவால்' என்றதனால் முதற்பாவாகிய நேரிசை வெண்பா என்று பொருள் படுவது காண்க. இதுபோலவே பெருந் தேவனார் பாடிய பாரத வெண்பாவுமா மென்றுணர்க. கம்பர் பாடிய இராமாயணம் பெருங் காப்பியமானாலும் விருத்தப்பாவா லானமையால் வருத்த மில்லை. இது சிறு காப்பியமானாலும் வெண்பாவாற் பாடியதாகையால் சால வருத்த முடையதாம். எனினும், இதன்சொற்சுவையும் பொருட்சுவையும் சோழ பாண்டிய மன்னரையுந் தம் வசப்படுத்தித் தமக்கவர்கள் சன்மானமாகிய இறை செலுத்தி வணங்கச் செய்தமையால், புகழேந்தியைப் புகழ்

ஏந்தியாக்கி, அவர் பெயரை யெங்கெங்கும் பரப்பின. ஆகையால், 'போரர் புகழேந்தி' என்றார். இப் பாயிரச் செய்யுளைச் செய்தார் ஒட்டக்கூத்த ரென்பார். சிலர், கம்பரெனவுங் கழறுவர். அவர் வம்பரென ஒதுக்குக. புகழேந்தி யென்பது இவ் வாசிரியர்க்கு இடு குறிப்பெயராயினும், மேற் குறித்தபடி காரணப்பெயராகக்கொள்வதே சால்புடைத்தாம். இவர்க்கு இயற்பெயர் இன்னொன்றிருந்திருக்க வேண்டும்.

"மயங்கும், தெளியும், மனநடுங்கும், வெய்துற்(று)
உயங்கும், வறிதே உலாவும்,—வயங்கிழைபோய்ச்
சோரும், துயிலும், துயிலாக் கருநெடுங்கண்
ணீரும் கடைசோர நின்று."

என்றிவர், தமயந்தி விரகதாபத்தால் வருந்துவதை, உண்மைக் குண்மையாய் நேரிற் கண்டு தெரிவிப்பது போலச் சிற்றளவாகிய வெண்பாவிற் றெரிவித்திருக்கின்றார். இன்னும் இப்படியே இவர் இச் சிறு காப்பியத்தை யொரு பெருங்காப்பியம் போல அதி யற்புதமாய்ப் பாடியிருக்கின்றார். ஆகையால், 'போரர் புகழேந்தி பேசினன்' என்றார். பாண்டி நாடு சோழநாடாகிய ஈரிடங்களினும் இவர் இசைபெற விளங்கியிருந்தாராகையால் 'செழியனையும் சென்னியையும் சேரத் திறைகொள் மொழியின் சுவையே முதிர்ந்து' என்றார். இன்னும் இவர் வெண்பாவின் திறத்தை 'வெண் பாவிற் புகழேந்தி' என்பதனாலும் உய்த்துணர்ந்துகொள்க. புக ழேந்தி-எழுவாய், பேசினன்-பயனிலை. (௬)

ஓம்

# (க) சுயம்வர காண்டம்

## நூல்

### [தருமராஜன் வனவாசஞ்செய்தல்.]

பாண்டவரின் முன்றோன்றல் பார்முழுதுந் தோற்றொருநாள்
ஆண்டகையே தூதுவனாய்ச் சென்றவனி — வேண்ட
மறுத்தா னிருந்தானை மண்ணொடும்போய் மாளப்
பொறுத்தா னிருந்தான் புலர்ந்து.

(ப - ரை) பாண்டவரின் முன் தோன்றல் - பாண்டு மக்கள் ஐவரில் முதல்வனாகிய தருமராஜன், பார் முழுதும் தோற்று - தன்னுடை முழுவதையும் (துரியோதனற்குச் சூதாட்டத்தில்) தோற்றதனால், ஆண்தகையே தூதுவனாய் சென்று அவனி வேண்ட - ஆண்மக்களிற் சிறந்தவனாகிய (கண்ணபிரானே) தூதனாய் (நேரிற்) போய் நாட்டைத் தரும்படி அவனைக் கேட்க, மறுத்தான் - கொடேனென்று தடுத்தவனாகிய அவன், இரு தானையொடும் மண்ணொடும் போய் மாள - பெரிய சேனையோடும் பூமியோடும் உரிமை நீங்கி நாசமாகும்படி, பொறுத்தான் - பொறுத்தவன், ஒருநாள் புலர்ந்து இருந்தான் - (அதற்கு முந்தி) ஒரு நாள் (வனத்தில் விசனத்தால்) வாடி (வாசஞ் செய்துகொண்)டிருந்தான்.

(க - ரை) தருமராஜன் விசனத்தோடு வனவாசஞ் செய்து கொண்டிருந்தான்.

(வி-ரை) பாண்டுமக்களைப் 'பாண்டவர்' என்பது தந்தித்தாந்த நாமமென்பர் வடநூலார். முன் தோன்றல்-முன்னே தோன்றினவன்; தமையன் எனினுமாம். தோன்றல்-விளங்கல்; இது தொழிற் பெயர்; இதுவே ஆகுபெயராய் அரசனைக் குறிக்குமென் றுணர்க. புதையல் என்புழிப்போல, பார் முழுதும் என்பதில், 'பார்' இடவாகுபெயராய்த் தருமனுண்ட நாட்டைக் குறித்தது. ஆண்டகையே தூதுவனாய்ச் சென்றவனி வேண்ட மறுத்தா னிருந்தானை மண்ணொடும்போய் மாளப் பொறுத்தான் (ஆகிய) பாண்டவரின்

முன்தோன்றல் பார் முழுதும் தோற்றொருநாள் (வனத்தில்) புலர்ந்திருந்தான்' என்பதே சரியான மொழிமாற்றும். ஆண்டகை யாகிய கண்ணபிரானே நேரிற் சென்று நாடு வேண்டியும் துரியோதனன் மறுத்தது பெரும்பிழையாகையால் அவன் தன் மனைவியை மானபங்கப் படுத்தியதைத் தருமன் பொறுத்ததைக் காட்டிலும் இதைப் பொறுத்ததே பெரும் பொறையென்பது தோன்றப் புகழேந்தியார் தங் காலத்துக்கு முன்னே நடந்த இவ்விரு விஷயங்களையும் முன்பின் பாராமல் அபேதமாய்க் கூறினார். கிருஷ்ணன் தூது வனவாசத்துக்குப் பிந்தியதென்று எல்லார்க்குந் தெரியும். பரமாத்மாவை மானபங்கப் படுத்தினவனை அப்போதே கொல்லலாமென்றிருந்தும் அங்ஙனம் செய்யாமற் பொறுத்திருந்து, அவன் விருப்பம்போல் அவனோடு பதினெட்டு நாள் பாரதயுத்தஞ் செய்து கொன்ற பெருந்தகையாகிய தருமராஜன், அதற்கு முந்திக் கேவலம் சீவாத்மாவாகிய தன் மனைவியை மானபங்கப் படுத்தித் தன்னை வனம் போக்கின அவன் செய்கையைப் பொறுத்து வனவாசஞ் செய்திருந்தமை அத்தனை வியப்பன் றென்பார், இவ்விரு விஷயங்களையும் ஒருங்கே இச் செய்யுளில் எடுத்துக் காட்டினார். மறுத்தான்-வினையாலணையும் பெயர். 'போய்' என்பதற்கு 'இருந்தானையோடும் சேனையோடும் அவனுக்கிருந்த உரிமை நீங்கி' என்று பொருள் கொள்வதே உகந்ததாம். 'மாள' என்பதற்கு 'மாளுமட்டும்' அல்லது 'மாளுமளவும்' என்று பொருள் கொள்வதே மாண்பாகும். (க)

[மன்னர் பலரும் வனத்தில் தருமராஜனைக் காணல்.]

நாட்டின்கண் வாழ்வைத் துறந்துபோய் நான்மறையோர்
ஈட்டங்கள் சூழ விருந்தானைக்—காட்டில்
பெருந்தகையைக் கண்டார்கள் பேரெழிற்றோள் வேந்தர்
வருந்தகைய ரெல்லாரும் வந்து.

(ப - ரை) நாட்டின்கண் வாழ்வை துறந்துபோய் - தன்னாட்டில் அனுபவித்துக்கொண்டிருந்த சுகவாழ்வை விட்டுப்போய், நால் மறையோர் ஈட்டங்கள் சூழ காட்டில் இருந்தானை - நான்கு

வேதங்களையு முணர்ந்த முனிவர் கூட்டங்கள் சூழ வனவாசஞ் செய்தவனை, பெருந்தகையை - பெருந்தன்மையை யுடைய தருமராஜனை, பேர் எழில் தோள் வேந்தர் வருந்தகையர் எல்லாரும் - அழகிற் சிறந்த தோள்களையுடைய அரசர்களில் வரத்தகுந்தவர் அனைவரும், வந்து கண்டார்கள் - (அங்கு) வந்து கண்டார்கள்.

(க - ரை) வரத்தகுந்த மன்னர் யாவரும் வனத்தில் தருமனை வந்து கண்டு கொண்டார்கள்.

(வி - ரை) 'நாட்டின்கண் வாழ்வு' என்றது இராஜசுக போகத்தை. இங்கே 'நாடு' என்றது இந்திரப்பிரத்தத்திலிருந்து தருமனாண்ட குருநாட்டைக் குறிக்கும். இங்கே 'நான்மறையோர்' என்றது முற்றத்துறந்த முனிவர் கணங்களை. 'ஈட்டங்கள்' என்று பன்மையில் வந்தமையால், பிரமசரியம், வானப்பிரத்தம், சந்நியாசமென்னும் மூவாசிரமத்தாரையுங் கொள்க. தருமன் நீதிநெறி திறம்பா நேர்மையுடையானாகையால், வனத்தில் அவனை முனிவர் பலரும் வந்து சூழ்ந்துகொண்டு தேற்றினார்கள் என்பது தோன்ற 'நான்மறையோர் ஈட்டங்கள் சூழ இருந்தானை' என்றார். 'இருந்தானைக் காட்டிற் பெருந்தகையை' என்பதை இருபெயரொட்டாக இருந்தவனாகிய பெருந்தகையை யென்றும், உம்மைத்தொகையாக இருந்தவனும் பெருந்தகையுமாகிய தருமனை யென்றும் பொருள் கொள்ளினும் அமையும். 'வருந்தகையர்' என்றதனால், தருமனுக்குச் சமமான தகைமையுடையார் என்று கொள்க. 'ஆண்டகை' என்பது போலப், 'பெருந்தகை' என்பதூஉம் அன்மொழித்தொகையாகக்கொளின் அமையு மென்க. எல்லாரும் - எழுவாய், கண்டார்கள் - பயனிலை. (உ)

[வனத்தில் தருமராஜனை வியாசர் வந்து காணுதல்.]

கொற்றவேற் றானைக் குருநாடன் பாலணைந்தான்
எற்றுநீர் ஞாலத் திருணீங்க—முற்றும்
வழிமுறையே வந்த மறையெல்லாந் தந்தான்
மொழிமுறையே கோத்த முனி.

(ப - ரை) எற்றும் நீர் ஞாலத்து இருள் நீங்க -எறியும் அலை கடல் சூழ்ந்த இவ் வுலகின் (அஞ்ஞான) இருள் நீங்கும் பொருட்டு, வழி முறையே முற்றும் வந்த மறை எல்லாம் தந்தான் - ஆசாரிய சீட பரம்பரையில் முழுதும் கேள்வி முறையாக வந்த நான்கு வேதங்களையும் (தன் மாணாக்கர்களுக்கு) உபதேசித்தவனும், மொழி முறையே கோத்த முனி - அவ் வேதப்பொருளைப் புராணமுறை யாகச் சுருக்கிக் கோவை செய்தவனுமாகிய வியாச முனிவன், கொற்றம் வேல் தானை குருநாடன்பால் அணைந்தான் - வெற்றிவே லேந்திய சேனைகளையுடைய குரு நாட்டரசனாகிய தருமராஜனிடத் திற்கு வந்தான்.

(க - ரை) வியாசமுனிவர், வனத்தில் தருமராஜனிடத்திற்கு வந்தார்.

(வி - ரை) கொற்றம் - கொல் என்னும் பகுதியடியாகப் பிறந்த அம்மீற்றுத் தொழிற்பெயர்; இடையிலுள்ளது சாரியை; உகரங் கெட்டுக் 'கொற்றம்' என்றானது சந்தி; 'கொலைக் கருவி யாய் வெற்றி தரும் வேல்' என்பது திரண்ட பொருள். 'நீங்க' என் னும் செயவெனெச்சம் 'தந்தான்' என்னும் வினைகொண்டு நிறைந் தது. வேதவியாச ரென்பது மரபாயினும், அதுகொண் டிவர் புரா ணங்களையும் கோத்தமையால் புராண வியாச ரென்பதும் தவ றாகாது. புராணங்களை இவர்: சிவபுராணம், விஷ்ணுபுராணம், பிரமபுராணம் என்று முறையே சாத்துவிகம், இராசதம், தாமதம் என்னுங் குணமுடையவைகளாகச் செய்தா ரென்பதனால், 'மொழி முறையே கொத்த முனி' என்றார். 'முற்றும், வழிமுறையே வந்த மறை யெல்லாந் தந்தும் மொழிமுறையே கோத்த முனி' என் றும் பாட மோதலாம். குருநாடு என்பது குருவென்பவன் ஆண்ட நாடு என விரியும்; இதனால் இவர்களுக்குக் குருகுலத்தார் என்றும் வழங்குகிறது. எற்று நீர் - வினைத்தொகை; இது எறியும் அலை நீர்க்கடல் என விரியுமாகையால் அன்மொழித்தொகையாகும். மொழி பொருளுக்காகையால், மொழி - ஆகுபெயர். முனி - எழு வாய், அணைந்தான், பயனிலை. (ஃ)

## [தருமராஜன் வியாசமுனிவரை வரவேற்றல்]

மறைமுதல்வ நீயிங்கே வந்தருளப் பெற்றேன்
பிறவிப் பெருந்துயர மெல்லாம்—அறவே
பிழைத்தேன்யா னென்றானப் பேராழி யானை
அழைத்தேவல் கொண்ட வரசு.

(ப - ரை) அப் பேர் ஆழியானை அழைத்து ஏவல் கொண்ட அரசு - அந்தப் பெரிய சக்கராயுத மேந்திய கண்ணபிரானை வரவழைத்து (த் தூதனாக) ஏவிய அரசனாகிய தருமராஜன், (வியாச முனிவரை நோக்கி) மறை முதல்வ! நீ இங்கே வந்தருள பெற்றேன் - ஓ வேத முணர்ந்த முனிவர் தலைவரே! தேவரீர் இங்கு எழுந்தருளும் (பாக்கியம்) பெற்றேன்; (ஆதலால்), பிறவி பெருமை துயரம் எல்லாம் அற பிழைத்தேன் என்றான் - என்னுடைய பிறவி நோயாகிய பெரிய துன்பமெல்லாம் நீங்கும்படி கடைத்தேறினேன் என்று சொன்னான்.

(க - ரை) வியாசரை நோக்கித் தருமன், "தேவரீர் இங்கெழுந்தருளியதனால் அடியேன் கடைத்தேறினேன்" என்றான்.

(வி - ரை) மறை முதல்வனென்றது பரமாத்மாவையே குறிக்கும்; ஆயினும், இங்கே வேதமோதிய முனி முதல்வனென்று வேத வியாசரையே குறிப்பது காண்க. நீ யென்று செய்யுள் நடையில் வந்ததாயினும் தேவரீர் என்று மரியாதைப்பான்மையாக் கொள்வதே பான்மையாம். 'பிழைத்தேன்,' 'உய்ந்தேன்,' 'கடைத்தேறினேன்' என்பன ஒரு தொடர். 'வந்து அருள பெற்றேன்' என்று மும்மொழியாக் கொண்டு 'எழுந்தருளி வந்து கிருபை செய்யப் பெற்றேன்' எனினும் பொருந்தும். வந்து அருளுதலைப் பெற்றேன் என்று அருள என்னும் செயவெனெச்சத்தை வினைப்பெயராக் கொள்ளலும் மற்றொன்று. 'என்றான்' என்பதற்கு என் பகுதியாக் கொண்டு, இவ்விதம் சொன்னானென்று பொருள் கொள்க. 'பிறவிப் பெருந்துயரம்' என்பதைப்பற்றி நாயனாரும்,

"பிறப்பென்னும் பேதைமை நீங்கச் சிறப்பென்னுஞ்
செம்பொருள் காண்பதறிவு."

என்னுங் குறளில் அறியாமையே ஆசைக்குக் காரணம்; ஆசை நோயின் துன்ப நுகர்ச்சியே பிறவிப் பெருந் துயரம் என்று கொண்டு பிறப்பென்னும் பேதைமை என்றருளினார். இப் பேதைமை நீங்கவேண்டின் சிறப்பென்னும் செம்பொருள் காண வேண்டு மென்பார் 'சிறப்பென்னும் செம்பொருள் காண்ப தறிவு' என்றார். வியாசரைக் கண்டமாத்திரையிலேயே சிறப்பென்னும் செம் பொருளைக் கண்டபடி அஞ்ஞான நீங்கினமையால், தருமராஜன் 'பிறவிப் பெருந்துயரமெல்லாம்-அறவே பிழைத்தேன்' என்றான். 'பேராழியானை' என்பதற்குப் பெரிய பாற்கடலிற் பள்ளிகொள்ளும் பரந்தாமனை யென்று பொருள் கொள்வது மற்றொன்று. சக்கராயுத மேந்திச் சாக்கிராவத்தையில் இருப்பவனை ஏவல் கொள்வதினும் பாற்கடலில் உறங்குபவனை எழுந்தருளச் செய்து ஏவல் கொள்வதே அன்பின் அருமைக்கும் நட்பின் உரிமைக்கும் அடையாளம் ஆம். அரசு - எழுவாய், என்றான் - பயனிலை. (ச)

[தருமன் மனவருத்த காரணத்தை வியாசர் வினவல்.]

மெய்த்திருவந் துற்றாலும் வெந்துயர்வந் துற்றாலும்
ஒத்திருக்கு முள்ளத் துரவோனே—சித்தம்
வருந்தியவா வென்னென்றான் மாமறையா லுள்ளம்
திருந்தியவா மெய்த்தவத்தோன் தேர்ந்து.

(ப - ரை) மா மறையால் உள்ளம் திருந்தி அவாம் மெய்மை தவத்தோன் தேர்ந்து - சிறந்த வேத ஞானத்தால் மனமாசற்று (அதனால்) இச்சிக்கின்ற உண்மைத் தவமுடையாராகிய வியாச முனிவர் ஆராய்ந்து, மெய்மை திருவந்து உற்றாலும்- (தருமராஜனை நோக்கி) உண்மையாகிய செல்வம் (இன்பம்) வந்து சேர்ந்தாலும், வெம்மை துயர் வந்து உற்றாலும் - கொடுமையாகிய (வறு

மைத்) துன்பம் வந்து சேர்ந்தாலும், ஒத்திருக்கும உளளதது உர வோனே! - (விருப்பு வெறுப்பற்று) ஒரு தன்மையாயிருக்கு மன முடைய அறிவாளியே!, சித்தம் வருந்திய ஆறு என் என்றான் - (நீ) மனம் வருந்திய விதம் என்னவென்று கேட்டான்.

(க - ரை) வியாசர் தருமனை நோக்கி "உன் மனவருததத கார ணம என்ன" என்று கேட்டார்.

(வ - ரை) 'மெய்த்திரு' என்றது உண்மையாகிய கல்வி ஞானச்செல்வத்தை; இதுவே பொருட் செல்வத்தைக் குறிக்குங் கால் வஞ்சனையின்றி உண்மையாகிய வழியில் தேடிய பொருள் என்று பொருள்படும். வறுமைத் துயரே கொடுமை யெவற்றினுங் கடுமையான தென்பது தோன்றவே

"கொடிது கொடிது வறுமை கொடிது."

என்றார் ஔவையார். தருமன் இருவினை ஒப்புடையானகை யால்விருப்புவெறுப்பற்றிருந்தான்.

"நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
அல்லற் படுவ தெவன்" என்றபடி,

நாட்டாட்சியில் மகிழ்ந்திருந்தபடியே காட்டாட்சியிலும் மகிழ்ந் திருக்க வேண்டியவன். ஆகையால் 'ஒத்திருக்கும் உள்ளத் துரவோ னே' என்றார். உள்ளத்துரவோனே என்பதில் இடையின ரகரம் இருப்பதால் உள்ளத்து + உரவோனே என்று பிரித்தாம். இது வே வல்லின றகரம் இருந்தால், உள்ளத்துறவோனே - மனத் துறவுடையவனே என்று மாண்புடன் பொருள்படும். தருமன் மனத்துறவுடையோன் என்பதற்கு யாரைக் கேட்கவேண்டும்? இப்படியும் சில பாடபேத முண்டு. 'வருந்தியவாறு என்பதில் றக ரம் கடைக்குறையாய் வருந்தியவா' என்றாயிற்று. 'திருந்தியவா மெய்த்தவத்தோன்' என்பதற்குத் திருந்திய ஆம் மெய்த்தவத் தோன் என்று பதச்சேதஞ் செய்து திருந்திய ஆகு மெய்த்தவத் தோ னென்று பொருள் கொள்வாரு முளர். மெய்த்தவத்தோன் - எழுவாய், என்னென்றான் - பயனிலை. (௫)

[தருமராஜன் மனம் வருந்திய காரணம் கூறுதல்.]

அம்பொற் கயிலைக்கே ஆகத் தரவணிவார்
தம்பொற் படைக்குத் தமியனு—எம்பியைமுன்
போக்கினே னென்றுரைத்தான் பூதலத்து மீதலத்து
வாக்கினே ரில்லாத மன்.

(ப - ரை) பூதலத்தும மீதலத்தும் வாக்கில் நேர் இல்லாத மன் மண்ணுலகத்திலும்விண்ணுலகத்திலும் வாய்மையில் (சத்தியத்தில்) தன்னொப்பா ரில்லாத தருமராஜன், அம் பொன் கயிலைக்கே - அழகான (வெண் பொன்னென்னும்) வெள்ளிமயமாகிய கயிலைமலைக்கு, ஆகத்து அரவு அணிவார்தம் பொன் படைக்கு - மார்பில் பாம்பை அணிந்த சிவபெருமானுடைய பொன்னொளி வீசும் பாசுபதாஸ்திரத்தைப் பெற்றுக்கொண்டு வரும்படி, தமியன் ஆக-தனியனாக, எம்பியை முன் போக்கினேன் என்று உரைத்தான் என் தம்பியாகிய (அருச்சுனனை நெடுநாளைக்கு) முன்பே அனுப்பினேனென்று சொன்னான்.

(க - ரை) பாசுபதாஸ்திரம் பெறுவதற்கு, அருச்சுனனை நான் கயிலைக்கனுப்பி அநேகநா ளாயிற்றென்று தருமன் கூறினான்.

(வி - ரை) 'பொற்கயிலை' என்றதில், பொன் என்பது வெண்பொன்னாகிய வெள்ளியையே குறிக்கும் என்பதற்கு,

"இருப்புக்கு வெண்பொன் பசும்பொன்
னகங்கொண்ட விறைவா எனைக்
கருப்புக்கு ழன்றெய்க்க வையா தருள்கூர்ந்து
காப்பாய் கொலோ"

என்னும் ஒருபெரும் புலவா வாக்கு, சான்று பகரும். ஏகாரம அசைநிலையாகக் கொள்க. அகம் நீட்டும் வழி நீண்டு 'ஆகம்' என்றாயிற்று; அது உள் என்று நெஞ்சத்துக்காகி, நெஞ்சத்திலிருந்

மார்புக்காகி, மார்பிலிருந்து உடம்புக்கே ஆகுபெயராய் வருவதுங் காண்க. 'அரவணிவார்' என்பதை அர+வ்+அணிவார் என்றும், அரவு+அணிவா ரென்றும் பிரிக்கலாம். முன்னையதில் வகரம் உடம்படு மெய்யாகும். பின்னையதில் "முற்று மற்றொரோவழி" என்பதனால் முற்றுகரங் கெட, வகரமெய் நின்றது. ஆக என்ப தின் ஈறுகெட்டு 'ஆ' என வந்தது. தமி தனி இரண்டும் ஒரு தொடர். எம்பி தம்பி இரண்டும் ஒன்று. யாம்+பி=எம்பி; முதல் குறுகிற்று. மன் - மன்னன். மன்-எழுவாய், உரைத்தான் பய னிலை. (அ)

[அர்ச்சுனன் அசாத்தியமான தோள்வலி யுடையா னெனல்.]

காண்டா வனந்தீக் கடவுளுணக் கைக்கணையால்
நீண்ட முகிறடுத்து நின்றாற்கு—மீண்டமரர்
தாளிரண்டு நோவத் தனித்தனியே யோடிய நாள்
தோளிரண்டு மன்றோ துணை.

(ப - ரை) காண்டாவனம் தீ கடவுள் உண்ண - காண்டவ வனத்தி லெழுந்த நெருப்பை அக்கினிபகவான் உண்ணும்படி, கை கணையால் நீண்ட முகில் தடுத்து நின்றான் கு-தன் கை யம்பி னால் பெரிய மேகங்களை (மழை பெய்ய வொட்டாமல்) தடுத்து (வெற்றிபெற்று) நின்ற அர்ச்சுனனுக்கு, அமரர் மீண்டு தாள் இரண்டு நோவ தனித்தனியே ஓடிய நாள் - தேவர்கள் முதுகு காட்டித் தத்தங் கால்க ளிரண்டும் நோவும்படி தனித்தனியே பிரிந்து ஓடிய காலத்தில், தோள் இரண்டும் அன்றோ துணை - இரண்டு தோள்களும் அல்லவோ துணையாயிருந்தன? (ஆம். ஆகை யால், நீ வருந்தவேண்டா என்றபடி).

(க - ரை) "காண்டவதகனஞ் செய்த காலத்தில் ஒன்றியாய்ச் சென்ற அர்ச்சுனற்கு அவன் தோள்கள்தாம் துணையாயிருந்தன" என்றார் வியாசர்.

(வி - ரை) காண்டவனென்னும் அசுரனிருந்தவனம் ஆகையால் காண்டாவனம்' என்று பெயர் பெற்றது. இதில் அரக்கரும் தக்ஷகன் முதலிய அரவங்களும் இருந்து துயர் விளைத்தமையால், இதை அக்கினிபகவான் அர்ச்சுனன் உதவியால் எரிக்கத் தொடங்கினன். அப்போது அதிலிருந்த தக்ஷகன், தனக்கு நேசனாகையால், அவனைக் காக்கும்பொருட்டுத் தேவேந்திரன் சேனைகளோடு வந்து அர்ச்சுனனை எதிர்த்துத் தோற்றுடி, காண்டவவனத்தில் மூண்ட தீயைப் பெருமழை பெய்வித்து அவிக்கத்தொடங்கினன். அதுகண்ட அர்ச்சுனன், தான் ஒன்றியாயிருந்தும் சிற்றேனும் அஞ்சாமல், தன் அப்புமாரியால் அப்புமாரியைத் தடுத்துத் தோள்வலியால் தேவர்களை முதுகுகாட்டி யோடச் சாடினன். இப் பாரதக் கதையே இங்குக் குறித்திருக்கிறது. அர்ச்சுனற்கு எப்போதும் அவன் தோள்களன்றி வேறு துணை வேண்டியதில்லை. அவன் சுத்தவீர னாகையால் அஞ்சாநெஞ்சு படைத்தவனென்பது இசையெச்சம், "தீக் கடவுள்" தீயாகிய கடவுள் என்று இருபெயரொட்டாக அல்வழியில் விரியும்; தீக்கு உகந்த கடவுள் என்று வேற்றுமையிலும் விரிக்கலாம். முகில் + தடுத்து என்பதில் தகரம் நகரமானபோது, "குறில்செறியாலள" என்னும் சூத்திரத்திலுள்ள 'உள பிற' என்பதனால் லகரம் கெட்டு, 'முகிறடுத்து' என்றாயிற்று. 'நின்றற்கு' என்னும் நான்காம் வேற்றுமை, தகுதிப்பொருளில் வந்தது. 'அன்றோ' என்பதிலுள்ள அன்று + ஓ என்பன எதிர்மறைகளாகையால் ஆம் என்னும் உடன்பாட்டுப் பொருள் தந்து நின்றன. (எ)

[தருமன் தன் வனவாச காரணத்தை வினவல்.]

பேரரசு மெங்கள் பெருந்திருவுங் கைவிட்டுச்
சேர்வரிய வெங்கானஞ் சேர்தற்குக்—காரணந்தான்
யாதோவப் பாவென்று னென்றுந்தன் வெண்குடைக்கீழ்த்
தீதோவப் பார்காத்த சேய்,

(ப - ரை) என்றும் தன் வெண்மை குடை கீழ் தீது ஓவ பார் காத்த சேய்-எப்போதும் தன்னுடைய வெண்கொற்றக் குடையின்

கீழ்த் துன்பம் தீரத் தன்னுட்டாரைப் பாதுகாத்து வந்த ஆண்மகனாகிய தருமராஜன், அப்பா! - அப்பனே!, எங்கள் பேர் அரசும் - எங்களுடைய பெரிய அரசாட்சியையும், பெருமை திருவும் கைவிட்டு - பெருஞ் செல்வத்தையும் இழந்து, சேர்வு அரிய வெம்மை கானம் சேர்தற்கு - (யாரும் வந்து) அடைவதற் கருமையான கடுங் காட்டில் நாங்கள் சேர்ந்திருப்பதற்கு, காரணம் யாது என்றான் - காரணம் என்ன என்று வினவினான்.

(க - ரை) தருமன் தன் சுற்றத்தாரோடு வனவாசஞ் செய்ய நேர்ந்த காரணம் என்னவென்று வியாசரைக் கேட்டான்.

(வி - ரை) பெருமை + அரசு = பேரரசு என்றானதற்குப் பண்புச் சூத்திரவிதியைக் காண்க. எங்கள் என்று பன்மையில் வந்ததனால் தருமராஜனோடு தம்பிமாரையும் மனைவியையுங் கூட்டிக் கொள்க. சேர்வு அரிய - சேர்தலை அருமையாகவுடைய என்றுங் கொள்ளலாம். 'அப்பா' என்றதனால் வியாசர், தருமற்குப் பிதாமகனார் என்பதுங் கொள்க. ஓவ - எதிர்கால வினையெச்சம்; ஓ - பகுதி, வ்-சந்தி, அ-வினையெச்ச விகுதி. 'சேய்' என்பது இளமையையும் ஆண்மையையும் அழகையும் உடையானைக் குறிக்குமாகையால் 'ஆண்மகன்' என்று பொருள் விரித்தாம். (அ)

[சூதாடல் அரசர்க்குச் சுபாவம் எனல்.]

கேடில் விழுச்செல்வங் கேடெய்து சூதாடல்
ஏடவிழ்தார் மன்னர்க் கியல்பேகாண் — வாடிக்
கலங்கலைநீ யென்றுரைத்தான் காமருவு நாடற்
கிலங்கலைநூன் மார்ப னெடுத்து.

(ப - ரை) காமருவு நாடற்கு - சோலைகள் சூழ்ந்த குருநாட்டரசனாகிய தருமராஜனுக்கு, இலங்கு அலை நூல் மார்பன் - விளக்கமாய் அசைகின்ற பூணூல் அணிந்த மார்புடையாராகிய வியாசர், கேடு இல் விழு செல்வம் கேடு எய்த சூது ஆடல் - என்றும் அழி

யாத பெருஞ் செல்வமும் அழிவடையும்படி சூதாடுவது, எடு அவிழ் தார் மன்னர்க்கு இயல்பே - இதழ் விரி மலர்மாலை யணிந்த அரச ரெல்லார்க்கும் இயற்கையே; (ஆகையால்), நீ வாடி கலங்கலை என்று எடுத்து உரைத்தான் - நீ உடல் மெலிந்து கலங்காதே என்று (உலகவமக்கை) எடுத்துச் சொன்னார்.

(க - ரை) "சூதாடுதல் அரசர்க்கு அடுத்ததே; ஆகையால், நீ வருந்தாதே!" என்று வியாசர் தருமனைத் தேற்றினார்.

(வி - ரை) என்றும் அழியாப் பெருஞ்செல்வத்தைக் 'கேடில் விழுச் செல்வம்' என்றார். ஏகாரம் தேற்றம். 'காண்' என்பதை அசையாகத் தள்ளுவதினும், 'நீ தெரிந்துகொள்!' என்னும் வற்புறுத் துப் பொருள் தருவதாகக் கொள்ளுவதே சாலச் சிறந்ததாம். 'கலங்கலை' என்பது முன்னிலை ஒருமை எதிர்மறைப்பொருள் தரு வது காண்க. கலங்கு + அல் + ஐ எனப் பிரித்து, கலங்கு-பகுதி, அல்-எதிர்மறை, ஐ-முன்னிலை ஒருமை விகுதி யெனக் கொள்க. அல் விகுதியே எதிர்மறை முன்னிலையைக் காட்டுவதால், ஐ-விகுதி யன்று, சாரியையென்று தள்ளுவாருமுளர். 'இலங்கு அலைநூல்' என்பது அடுக்கு வினைத்தொகை யாகையால் இலங்கி அலைகின்ற நூல் என்று பொருள் விரித்தாம். அரசர்க்குச்சூதாடல் இயற்கைக் குண மென்று வியாசர் இயம்பினாராயினும், தருமனைப் போலவும் நளனைப்போலவும் நாடு நகரோடு, ஆள் அடிமை மனைவிமக்கள் முத லியோரையும் இழக்கச் சூதாடல் இயற்கையன்று என்று கொள்வ தே நன்று. மார்பன்-எழுவாய், உரைத்தான்-பயனிலை (கூ)

[தன்னைப்போல வனவாசஞ்செய்தவருண்டோ வென்று]

[தருமன் வினவல்.]

கண்ணிழந்து மாயக் கவறுடிக் காவலர்தா
மண்ணிழந்து போந்து வனநண்ணி—விண்ணிழந்த
மின்போலு நூன்மார்பா! மேதினியில் வேறுண்டோ
என்போ லுழந்தா ரிடர்.

(ப - ரை) விண் இழந்த மின்போலும் நூல் மார்பா! - மேகத்தை விட்ட மின்னலைப் போன்ற பூணூலணிந்த மார்புடையானே! கண் இழந்து மாயம் கவறு ஆடி - அறிவு கெட்டு மோசச் சூதாடி மண் இழந்து போந்து வனம் நண்ணி - தந்நாட்டைத் தோற்றுப் போய்க் காட்டைச் சேர்ந்து, என்போல் இடர் உழந்தார் - என்னைப்போலத் துன்பம் அனுபவித்தவர், மேதினியில் காவலர் வேறு உண்டோ - பூமியில் அரசர் வேறெவரேனும் உண்டோ?

(க - ரை) என்னைப்போல அறிவு கெட்டுச் சூதாடி நாடிழந்து காடடைந்த அரசர் வேறெவரேனும் உண்டோ?

வி - ரை) 'கண்' ஆகுபெயராய் அறிவைக் குறிக்கிறது. 'மாயக் கவறு' என்றதனால் அறிவை மயக்குஞ் சூது என்பது பெற்றும். 'காவலர்தாம்' என்பதில் தாம் என்பதை அசையாகத் தள்ளுவதை விடத் தம் என்பதின் நீட்சியாக் கொள்வதே சால்புடைத்தாம். 'காவலர் தம் மண்ணிழந்து' என்றும் பாடபேத முண்டு. 'மண்' இடவாகுபெயராய் நாட்டைக் குறித்தது. 'போந்து' என்பதற்குப் புகுந்து என்றும் வந்து என்றும் பொருள் கொள்வது முண்டு. 'விண்ணிழந்த' என்பதற்கு விண்ணிழிந்த என்று பாடங் கொண்டு விண்ணினின்று நீங்கிய என்று ஐந்தாம் வேற்றுமை நீங்கற்பொருளாகவும் பொருள் கொள்ளலாம். வியாசர் கருநிறமுடையாராகையால் விண் என்பதற்கு மேகம் என்று பொருள் கொள்வதே சால்புடையதாகும். அவர் கருமேனியில் வெண்பூணூற்குக் கார்மேகத்தின் மின் உவமையாவது சால்புடைத்தாம் (க0)

[தருமனுக்கு வியாசர் நளசரித்திரங் கூறுதல்.]

சேமவேன் மன்னனுக்குச் செப்புவான் செந்தனிக்கோல
நாமவேற் காளை நளனென்பான்—யாமத்
தொலியாழி வைய மொருங்கிழப்பப் பண்டு
கலியால் விளைந்த கதை.

(ப - ரை) தனி செம்மை கோல் நாமம் வேல் காளை நளனென்பான் - தன்னெப்பில்லாச் செங்கோலையும் அச்ச மூட்டும் வேலாயுதத்தையும் உடைய இளங்காளை போன்ற நளமகாராஜனென்பவன், யாமத்து - அரையிரவில், ஒலி, ஆழி வையம் ஒருங்கு இழப்ப - இரைகின்ற கடல் சூழ்ந்த பூமியிலுள்ள தன்னுட்டை ஒருமிக்க இழக்கும்படி, பண்டு கலியால் விளைந்த கதை-முற்காலத்தில் சனிபகவானுல் உண்டாகிய கதையை, சேமம் வேல் மன்னனுக்கு செப்புவான் - குடிகளுக்குக் காவலான வேலாயுத மேந்திய அரசனுகிய தருமனுக்கு (வியாசமுனிவர்) சொல்லத் தொடங்கினுர்.

(க - ரை) வியாசர், தருமராஜனுக்கு நள சரித்திரங் கூறத் தொடங்கினுர்.

(வி - ரை) சேமம் காவல் என்பதனைச் 'சேமம்புகினும் சாமத் துறங்கு' என்பதனுலும் தெரிந்துகொள்க. 'காளை' என்பது உவமை யாகுபெயர். 'வையம்' ஆகுபெயராய் அதிலுள்ள நாட்டைக் குறித்தது. 'நாடு ஒருங்கிழப்ப' இரண்டன் தொகை. இழப்ப காரியப் பொருட்டு. ஒலியாழி வினைத்தொகை. ஆழி - எதுவும் ஆழ்ந்துபோகு மிடம். 'செப்புவான்' இறந்தகாலம் எதிர்காலமாயிற்று. 'போந்து' என்பதைப் புகுந்து என்று பொருள் கொள்வாருமுளர். (கக)

[நிடதநாட்டுச் சிறப்பு]

காமர் கயல்புரளக் காவி முகைநெகிழத்
தாமரையின் செந்தேன் தளையவிழப்—பூமடந்தை
தன்னுட்டம் போலுந் தகைமைத்தே சாகரஞ்சூழ்
நன்னுட்டின் முன்னுட்டு நாடு.

(ப - ரை) சாகரம் சூழ் நன்மை நாட்டின் முன் நாட்டும் நாடு-கடல் சூழ்ந்த நல்ல நாடுகளில் முதன்மையாகக் குறிக்கத் தகுந்த நிடதநாடென்பது, காமர் கயல் புரள - அழகான சேல்மீன்கள்

உருண்டுவருவதாலும், காவி மூகைநெகிழ-நீல அரும்புகள் மலர்வதாலும், தாமரையின் செந்தேன் தளை அவிழ - தாமரை மொட்டுகளின் செந்தேனானது கட்டவிழ்ந்து ஒழுகுவதனாலும், பூமடந்தை தன் நாட்டம் போலும் தகைமைத்து - திருமகளின் கண்களைப் போன்ற பெருமையை உடையது.

(க - ரை) நிடதநாடு திருமகளின் கண்களைப்போன்ற பெருமையையுடையது.

(வி - ரை.) திருமகளின் கண்களின் வெள்ளை விழிகளும், கயல் மீன்களைப்போல உருள்கின்றன. அவைகளின் கருவிழிகளும், நீல மூகைகள்போல நெகிழ்கின்றன. அவைகளின் *கண்ணீரும், தாமரைக் ‡கண்ணீர்போலச் சிந்துகின்றன. ஆகையால், நீர்வளமிக்க நிடதநாடு திருமகள் கண்களுக்கு உவமை யாயினமை காண்க. சிலர், தாமரையைத் திருமகளின் முகத்துக்குச் சமானமாகச் சொல்லி நயங்காட்டுவர்; அது பொருந்தாது. தன் + நாட்டம் என்பதைத் தன் + ஆட்டம் எனப்பிரித்து இருபொருள் காட்டுவர் இன்னுஞ்சிலர். திருமகள் ஆடும்போது கயல்போலக் கண்கள் புரள்வது சரிதான்; காவிபோல நீலவிழி நெகிழ்வது நிசந்தான். தாமரையின் செந்தேன்போலக் கண்களில் ஆனந்த நீர் ஒழுகுவது உண்மைதான்

இதைவிட்டு, முகத்தைத் தாமரையாக இங்கெடுத்து மொழிவது முற்று முரணாகும். பெண்களின் கண்களைத் தாமரையாகப் பேசுவதற்கு ஆதாரம் இப்புலவர் செய்த இரத்தினச்சுருக்கத்தைக் காண்க. அன்றியும்

"கமல மலர்வதனீ கட்கமல வல்லீ
கமல மலர்ப்பதத்துக் கன்னீ—கமலத்
துபய நனையுரஞ்சேர் உத்தமீ நானுன்
னபய மபயமப யம்."

---

* கண் + நீர் = கண்ணினின்று பாயும் ஆனந்த நீர்.
‡ கள் + நீர் = தேனாகிய நீர்.

என்னும் மனோஞ்சிதப் பாடலையும் பார்த்துத் தெளிக. பூ+ மடந்தை யென்பதைப் 'பூவிலமர்ந்தருள் வாழ்வே' என்றபடி மலர் மகளென்றும்' பூமாதேவி என்றபடி நிலமகளென்றும் இருபொருள் படும்படி இருப்பது காண்க. புரள, நெகிழ, அவிழ முதலியவைகள் காரணப் பொருளன - நோக்கம் என்புழிப் போல நாட்டம் என்பதூஉம் கருவிப்பொருட்டு பூவினுக்கருங்கலம் பொங்கு தாமரை. என்பதால்,'பூமடந்தை'என்பதற்குத் தாமரைப்பூமடந்தை யென்று பொருள் விரித்தாம். தகைமைத்து தகைத்து என்றும் வரும்; இது குறிப்பு வினைமுற்று. தகைமை-பண்புப்பெயர். ஏ - அசை நிலை. சகரர் தோண்டியது சாகரம்; தந்திதாந்த பதம். (கஉ)

[மாவிந்த நகரச் சிறப்பு.]

கோதை மடவார்தங் கொங்கை மிசைத்திமிர்ந்த
சீதக் களபச் செழுஞ்சேற்றால்—வீதிவாய்
மானக் கரிவழுக்கு மாவிந்த மென்பதோர்
ஞானக் கலைவாழ் நகர்.

(ப - ரை.) கோதை மடவார்தம் கொங்கைமிசை திமிர்ந்த - பூமாலை சூடிய பெண்களின் மார்புகளிற் பூசிய, சீத களபம் செழுமை சேற்றால் - குளிர்ந்த கலவைச்சாந்தென்னும் வளமுள்ள சேற்றால், வீதிவாய் மான கரி வழுக்கும் - வீதியின் வழியே செல்லும் பெரிய ஆனைகள் (கால்) சறுக்குகின்ற, மாவிந்தம் என்பது ஞானம் கலை வாழ் ஓர் நகர் - மாவிந்தம் என்னும் (பேருடைய)தாகிய ஞானநூலாராய்ச்சியிற் சிறந்த ஒரு நகரம் (அந்நாட்டில் உண்டு).

(க - ரை) நிடத நாட்டில் ஞானநூல் வல்லார் வாழும் மாவிந்த மென்னொரு நகரம் உண்டு.

(வி - ரை) 'கோதை மடவார்' என்பதற்குக் கோதைபோன்ற மடவா ரென்று பொருள் கொள்வதும் உண்டு. மடவார், மடமை யன்னும் பண்படியாகப் பிறந்த படர்க்கைப் பெயர். இதுவே

முன்னிலையாயின் மடவீர் என்று வரும். களபச் சாந்தென்பதே கலவைச சாந்தென்றும் வரும். சீதக்களபம் என்பதே வட மொழிச் சந்தியாசக்கரம் மிகாமல் இயல்பாகவும் வரும். செழுமை சேறு - செழுஞ்சேறு. 'ஈறு போதல்' என்பதனால் மைகெட்டது: கொழுமையாயிறுகிய சேறு; பெண்கள் குளிக்குநீரிற் கலந்து வந்து வீதியிற்பாய்ந்த கலவைச்சேறு. அக்காலத்தில் வீதிகளின் இரு பக்கங்களினும் இக்காலத்திற் போலக் கழிநீர்க் கால்வாய்கள் இல்லை. ஆகையால், குளிநீர் வீதியிலோடிச் சேறாயிருந்தது. அதன்மேல் ஆனைகள் அடிவைத்து நடக்கையில் வழுக்குவது இயல்புதான். ஆனாலும், அந்நகரின் செல்வவளத்தைக் குறிக்க இது உயர்வு நவிர்ச்சியாக வந்திருக்கின்றதென்று கொள்ள வேண்டும். ஞானக்கலைவாழ் மாவிந்தமென்பது ஓர் நகர் என் றும் மொழிமாற்றிப் பொருள்கூறலாம் நகர் எழுவாய், உண்டு பயனிலை, (கந)

[அந்நகர மாடங்களின் சிறப்பு.]

நின்றுபுயல் வானம் பொழிந்த நெடுந்தாரை
என்று மகில்கமழு மென்பரால்—தென்றல்
அலர்த்துங் கொடிமாடத் தாயிழையா ரைம்பால்
புலர்த்தும் புகைவான் புகுந்து.

(ப - ரை.) தென்றல் அலர்த்தும் கொடி மாடத்து ஆய்இழை யார் - தென்றற் காற்று விரித்தாட்டுகின்ற கொடிகள் நாட்டிய மாளிகைகளில் (தம் மனம்போல்) ஆய்ந்தணிந்த ஆபரணங்களை உடையபெண்கள் ஐம்பால் புலர்த்தும் புகைவான் புகுந்து - (ஈரக்) கூந்தலை ஆற்றுவதற்காக (எற்றும்) புகையானது ஆகாயத்திற் போ யிருப்பதனால், வானம் நின்ற புயல் பொழிந்த நெடுமை தாரை - ஆகாயத்தில் தங்கியிருந்து மேகங்கள் பெய்த நீண்ட மழைத் தாரைகளெல்லாம், என்றும் அகில் கமழும் என்பர்-எப்போதும் அகில் மணம் வீசிக்கொண்டே யிருக்கு மென்பார்கள்.

(கு - ரை) அங்கநர மாடங்களிற் கிளம்பும் புகையால் மழை நீர்த்தாரையும் அகில் மணம் வீசும்.

(வி - ரை) புகுந்து நின்று என்று கடையயு முதலையும் விற் பூட்டாகக்கொள்ளினும் அமையும். புகைவான்புகுந்து தங்குவதால் என்று பொருள் கொள்க. வானம் புயல் பொழிந்த நெடுந்தாரை யென்பதைச் சாதாரணமாய் பொருள் கொள்ளலாம். வானத்தி லிருந்து புயல் பொழிந்த என்று ஏழாம் வேற்றுமை உருபும்பய னும் உடன்தொக்க தொகையாவதுகாண்க. நெடுமை + தாரை நெடுந்தாரை; பண்புச் சூத்திரவிதி பெற்றது. அகில் என்பது அதன் வாசனைக்கு ஆகுபெயராய் வந்தது. ஆல் அசை அலர்த் தும் என்பதற்கு அலர்த்தி யாட்டுமென்று இலக்கணையாற் கொள்க. 'கொடிமாடம்' இரண்டாம் வேற்றுமை உருபும்பயனும் உடன் தொக்கத் தொகையாவது காண்க. ஆயிழை வினைத்தொகை. ஐம்பால்-ஐந்து விதமாக முடிப்பது. பெரியோர் - தோன்று எழு வாய், என்பர் - பயனிலை. (கஎ)

[அங்கநர மாந்தரின் சிறப்பு.]

வெஞ்சிலையே கோடுவன மென்குழலே சோருவன
அஞ்சிலம்பே வாய்விட் டரற்றுவன—கஞ்சங்
கலங்குவன மாளிகைமேற் காரிகையார் கண்ணே
விலங்குவன மெய்ந்நெறியை விட்டு.

(ப - ரை) கோடுவன - கோணலாயிருப்பன, வெம்மை சிலையே - (அங்கநரில் வேறெவையும் இல்லை ஆகையால்) கொலைக் கருவிகளாகிய விற்களே (வளைந்து கோணலாயிருப்பனவாகும்) சோருவன - தளர்ந்துபோவன, மென்மை குழலே - (அங்கநரில் வேறெவையுமில்லை ஆகையால், பெண்களின்) மெல்லிய கூந்தல் களே (பந்தாடுவதால் அடிக்கடிதளர்ந்து அவிழ்ந்து போவனவாம்;

வாய்விட்டு அரற்றுவன-வாய் திறந்து கதறுவன, அம் சிலம்பே-(அந் நகரில் வேறெவையு மில்லை; ஆகையால், பெண்களின் பாதங்களில் அணிந்த) அழகான தண்டைகளே (அவர்கள் நடக்கும்போது கணீர் கணீர் என்று ஒலிக்கின்றனவாம்); கலங்குவன - கலங்கிப் போவன, கஞ்சம்-(அந்நகரில்வேறெவையு மில்லை; ஆகையால்) தண்ணீரே (ஆடவரும் மகளிரும் குளிப்பதால் நிலைகுலைந்து கலங்குவன வாம்); மெய்ம்மை நெறியை விட்டு-உண்மை நெறி தப்பி, விலங்குவன-விலகிப்போவன, காரிகையார் கண்ணே-(அந் நகரில் வேறெவையுமில்லை யாகையால்) பெண்களின் கண்களே (உண்மை நெறி தப்பினார் கண்களைப்போலப் பிறழ்வனவாம்).

(க - ரை) அந்நகர மாந்தரில்: தவறுனவரும், தளர்பவரும், புலம்புவரும், கலங்குபவரும், நன்னெறியின் விலங்குபவரும் ஒருவரு மிலர்.

(வி-ரை) 'கஞ்சம்' என்பது தாளத்துக்குமாகும். கஞ்சம் 'கஞ்சு' என்று தெலுங்கில் வழங்குகிறது. கஞ்சு என்பது வெண்கலப் பெயர். வெண்கலத்திலேயே மிகுதியாகவுந் தகுதியாகவும் தாளங்களைச் செய்வது உலகவழக்காகையால் கஞ்சம் என்பதற்குத் தாளம் என்பதூஉம் அமையு மென்க. தாளங் கலங்குவது அடிபடும் பொழுது. 'கஞ்சம்' என்பதற்குத் தாமரை என்பாரு முளர். பெண்கள் குளங்களிற் குளிக்கையில் தாமரைகள் அசைவன அன்றித் தண்ணீர் போலக் கலங்குவன அல்ல ஆகையால், தாமரை யென்பது சரியாய்ப் பொருந்தாது. காரிகையார் கண்கள் மெய்ந் நெறியின் நீங்கினார் கண்களைப்போல மருண்ட பார்வையுடையன வென்று கொள்வதன்றி வேறு கூறுவது அவர்களுடைய கற்பு நெறிக்கும் பொற்பு நெறிக்கும் பங்க மாகும். அதனால் அந்நகரமாந்தர் செந்நெறியாள ரென்ற கூற்று வெறுங் கூற்றாகும். கம் + சங்கு + அலங்குவன என்று பிரித்து நீரிற் சங்கங்கள் அலைவன என்று பொருள் கூறலு மற்றொன்று. அந்நகரத்தா ரெவரும் மேற் குறித்த கோடுதல் முதலிய தீக்குணங்களுடையா ரல்லரென்பது திரண்ட பொருள். சிலையும், குழலும், சிலம்பும், கஞ்சமும்,

கண்களும் ஆகிய அஃறிணைப் பொருள்களே மேற்கூறியபடி மெய்ந் நெறியை விட்டுக் கோடுவன முதலியவாகத் தோன்றுமன்றி,உயர் திணைப்பொருளாகிய அந் நகரமாந்தர் ஒருகாலும் தந்நன்னெறியிற் பிறழாரென்பது குறிப்புப் பொருள். ஆகையால், இச் செய்யுள் அந் நகரச் சிறப்பை நன்கு நவின்றது. (௧௫)

[அந்நகர மாந்தரிற் கல்லாரும் இல்லாரும் இல்லை யெனல்.]

தெரிவன நூ லென்றுந் தெரியா தனவும்
வரிவளையார் தங்கண் மருங்கே—ஒருபொழுதும்
இல்லா தனவு மிரவே யிகழ்ந்தெவருங்
கல்லா தனவுங் கரவு.

(ப-ரை) என்றும்-எப்போதும், தெரிவன - (அந்நகர மாந்தர்) ஆராய்ந்தறிவன, நூல் - (அறிவை விளக்கும்) நூல்களேயாகும்; தெரியாதனவும் - (அவர்களுக்குத்) தெரியாதனவும், வரி வளையார் தங்கள் மருங்கே-சித்திரவரிகளமைந்த வளையல்களை யணிந்த பெண் களின் இடைகளேயாகும்; ஒருபொழுதும்-எப்பொழுதும், இல்லா தனவும்-இல்லாதவைகளும், இரவே-(பலவிதமாகப்) பிச்சையெடுக் குந் தொழில்களே யாகும்; எவரும்-எப்படிப்பட்டவரும், இகழ்ந்து- கேவலமாக மதித்து, கல்லாதனவும் - கற்றுக்கொள்ளாதவைகளும், கரவு - (பலவிதமாகப் பிறரை) வஞ்சிக்கும் தொழில்களே யாகும்.

(க-ரை) அந்நகர மாந்த ரனைவரும் நல்ல கல்வி யறிவுள்ளவர் கள்; இரப்பதும் கரப்பதும் இன்னவென்றே தெரியாதவர்கள்.

(வி-ரை) "வேத மாதவர் வேள்வியே தீயன" என்னும் ஆன் றோர் வாக்கையும் இதனோடு ஒட்டிக் காண்க (அந்நகரில் தீயன பொல்லாதவைகளே இல்லை) ஆனல், வேதமோதும் மாதவசிரேட்ட ருடைய யாகங்களே, தீயன-நெருப்பை வளர்ப்பனவாம்' என்ப திதன் பொருள். இதில் 'தீயன' என்பது இருபொருள் படுகிறபடியே மேலைப் பதினைந்தாம் பாடலும் இதுவும் இருபொருள்படும் சொற்க

ளைக்கொண்டு வந்தமையால் இவைகளிற் பிரித்துக் காட்டல் அல்லது ஒழித்துக்காட்டல் என்னும் அணியிலக்கணம் அமைந்திருப்பது காண்க. அவர்கள் கண்களுக்குத் தோன்றாதவை, பெண்களின் இடைகளே என்றதனால், அந்நகரமாதர் அனைவரும் பத்மினி வகுப்பிற் சேர்ந்த உத்தம வனப்புடையார்' என்பது குறிப்பில் விளங்குவது தெரிக. வனப்பில்லாதாரும் சிலர் இருப்பர். ஆயினும், வனப்புடையாரே பெரும்பாலாராயிருந்திருப்பாராகையால், சாதி வேற்றுமை யில்லாமலே எல்லார்க்கும் பொதுவாக, 'தெரியாதனவும், வரிவளையார் தங்கண் மருங்கே' என்றார். வேதிய மாதர் தாம் அழகு; சத்திரிய மாதர்தாம் ஒழுங்கு; வைசிய மாதர்தாம் வனப்பு; நாலாங்குலத்து நங்கைமார்தாம் சிறப்பு' என்று தரம் பிரியா தோதினமைசால்புடைத்தாம். 'தெரிவன நூல்'என்றதனால் 'ஆராய்ந்தறிவன கல்வி நூல்' என்றும். 'தெரியாதன - மருங்கே' என்றதனால், 'கண்களுக்குத் தோன்றாதன நங்கைமார் இடைகளே' என்றேனும். 'தெரிவன நூல்' என்று பொதுவாக வந்தமையால், இருபாலார்க்குங் கொள்க. இப்படியே இரவுங் கரவுமாகிய இரண்டையும் முறையே இல்லாதனவாகவும் கல்லாதனவாகவும் இருபாலார்க்குங் கொள்க. உம்மைகளாறில் முதலாவதும், மூன்றாவதும், ஐந்தாவதும் முற்றுப் பொருளன; இரண்டாவதும், நான்காவதும், ஆறாவதும் சிறப்புப் பொருளன. ஏகாரங்கள் பிரிநிலை. அந்நகரமாந்தரனைவரும் "வித்தை விரும்பு" என்றும், "நூற்பல கல்" என்றும் நீதிநூலிற் படித்தபடி நூல்களை விரும்பிக் கற்றும், "கேள்விமுயல்" என்றபடி நூல்களைக் கேட்டு ஆராய்ந்தும்காலம் போக்குவதால், "வீடுபெற நில்" 'என்றபடி இகபர சுகானுபவிகளாய், நெற்பயிர் விளைத்து நேர்பட ஒழுகுவார்களென்பது சொல்லாமலே விளங்கும். 'இல்லாதனவும் இரவே' என்பதற்கு, விளக்குகள் மிகுதியாகவுந் தகுதியாகவும் எரிந்து மாந்தர் நடமாட்டமாறாமல் இரவிலும் பகலிற்போலவே இயக்கங் குன்றாமலிருப்பதால், அங்கு இரவுகள் தோன்றுவன இல்லாதனவாம் என்றுங் கொள்ளலாம். (௧௩)

[அநங்கா, முரணைநகர்க் கிணையா மெனல்]

மாமனு நூல் வாழ வருசந்திரன் சுவர்க்கி
தாமரையாள் வைகுந் தடந்தோளான்—காமருபூந்
தாரான் முரணைநகர் தானென்று சாற்றலாம்
பாராளும் வேந்தன் பதி

(ப-ரை) பார் ஆளும் வேந்தன் பதி-நிடதநாட்டை ஆளும் அரசனாகிய நளமகாராஜனுடைய நகரத்தை, தாமரையாள் வைகும் தடம் தோளான் - திருமகள் வாழும் பெருமைகள் பொருந்திய தோளையுடையவனும், காமருபூதாரான்-அழகான பூமாலையை யணிந்தவனும், மா மனு நூல் வாழ வரு சந்திரன் சுவர்க்கி-சிறந்த மனுநீதி நூல் ஓங்க வந்து தோன்றினவனுமாகிய சந்திரன் சுவர்க்கி யென்பவனுடைய, முரணைநகர்தான் என்று சாற்றல் ஆம் - முரணையம் பதியே யென்று சொல்லலாம்.

(க-ரை) மாவிந்த நகரத்தை, சந்திரன் சுவர்க்கி என்பவனுடைய முரணைநகரே யென்று சொல்லலாம்.

(வி-ரை) இது வியாசர் கூற்றன்று. கவி கூற்று. இவ்வாசிரியர் "ஆதரித்தவனொருபிதா" என்றபடி, தம்மை ஆதரித்துப் போற்றியவனாகிய சந்திரன் சுவர்க்கி யென்பவனுக்கு நன்றிசெலுத்துவதற் கடையாளமாக, இதுமுதல் இடையிடையே சிற்சில பாக்களில் ஆங்காங்கு அவனைப் புகழ்ந்து கூறி அவன் பெயரை என்றும் அழியாமல் நிலைநிறுத்துவர். இவரைப் போலவே கம்பரும் தமது இராமாயணத்தில் சடையப்ப வள்ளலைப் புகழ்ந்து பாடியிருக்கின்றார். சந்திரன் சுவர்க்கி யென்பவன், சோணாட்டுச் சிற்றரசன். இவனுடைய வேண்டுகோளாலேயே புகழேந்தியார் இந் நளவெண்பாவைப் பாடிப் புகழேந்தினார். மாமனு நூல் வாழ வந்தான் என்பதனாலேயே இவன் மனுநீதி தவறாமல் அரசாண்டான் என்பது பெற்றாம். மனுநீதி தவறா

மல் அரசாள்வதே அக்காலத்து வேந்தர் பெருமை. இதனால், மனுநீதி சோழனென்னொருவன் திருவாரூரிலிருந்தரசாண்டகதையும் ஒன்று வழங்கிவருவது காண்க. 'தாமரையான்' என்பதற்குத் 'திருமகள்' என்பதே பொருள். ஆயினும், இங்குத் தடந்தோளை அவளுக்கு இடமாக்கி யிருக்கின்றமையால், வெற்றித் திருமகள் அல்லது விசயலட்சுமி யென்று கொள்க. 'தடம்' என்பதற்கு'இடம் அகன்ற' என்றே பொருளாம். ஆகையால், இது மார்புக்கு அடையாய் வருவதே மரபாகும். தோளுக்கு வருங்கால் பெருமைபொருந்திய என்று கொள்வதே ஒழுங்காம். தடந்தோளென்பதை முழங்காலைத்தடவுதோள் அதாவது நீண்டதோளென்று பொருள்கொள்வாருமுளர். காமர் என்பதே 'காமரு' என்று உகரச்சாரியை பெற்று வந்தது. தான் என்பது தேற்றப்பொருளில் வந்ததால்; 'நகரே' என்று பொருள் விரித்தாம். நாம்; பதியைச் சாற்றலாம் என்று கொண்டு, நாம்-எழுவாய், சாற்றலாம்-பயனிலை - பதியைச் செயப்படுபொருளென்று கொள்ளலாம். அன்றி, சாற்றல்- எழுவாய், ஆம் - பயனிலை என்று கொள்வதூஉம் மற்றொன்று. பதி- எழுவாய், சாற்றலாம்-பயனிலை யென்பதூஉம் இன்னொன்று. பதியானது சாற்றற்கு ஆம் என்று கொள்க. (கஎ)

[அந்நகரத் திருந்தாண்ட மன்னன் பெயர் நள னெனல்.]

ஓடாத தானை நளனென் றுளனொருவன்
பீடாருஞ் செல்வப் பெடைவண்டோ—டூடா
முருகுடைய மாதர் முலைநனைக்குந் தண்டார்
அருகுடையான் வெண்குடையான் ஆங்கு.

(ப-ரை) ஆங்கு-அந்நகரத்தில், பீடு ஆரும் செல்வம் பெடை வண்டோடு ஊடா-பெருமைபொருந்திய காதல் மிகுந்த பெண் வண்டானது ஆண்வண்டோடு பிணங்கினதனால், முருகு உடைய- (மலர்த்) தேன் உடைந்தொழுக, (அதனால்) அருகு இருந்த மாதர் முலை நனைக்குந் தண்மைதார் உடையான்-பக்கத்தில் அணைந்திருக்

கும் பெண்களின் மூலேக்கண்களை நனையச் செய்கின்ற குளிர்ச்சி பொருந்திய மாலையை யணிந்தவனும், வெண்மை குடையான் - வெண்கொற்றக் குடையையுடையவனுமாகிய, ஓடாத தானை நளன் என்று - (சண்டையிற்) பின்வாங்கி ஓடாத சேனைபலமுள்ள நள மகாராசனென்னும் பெயர் கொண்டு, ஒருவன் உளன் - ஓரரசன் இருந்தான்.

(க-ரை) அந்நகரத்திற் சேனைபலம் பொருந்திய நளனென்னும் அரசன் ஒருவன் இருந்தான்.

(வி-ரை) இங்கே 'பீடாருஞ் செல்வம்' என்றது உண்மைக் காதற் செல்வத்தை. 'வண்டோடு' என்பது, வேற்றுமை மயக்க மாய், 'வண்டினிடத்து' என்று பொருள்படுவது காண்க. மலர்த் தேன் - அழிந்தொழுகுவதையே 'உடைந்தொழுக' என்றார். உடை தல் - மகரந்தக்கட்டுக் குலேதல். அருகில் (அணைந்திருக்கு) மாதர் மார்பை, நனைக்கும் முருகு (விரிமலராலாகிய) தண்டாருடையா னென்று கூட்டுக. "ஊடுதல் காமத்திற் கின்பம்" என்றதனால் 'ஊடா' என்றார். ஊட என்பதின் நீட்சியே 'ஊடா' என்பதாம். ஆகையால், 'ஊட அதனால்' 'ஊடினதனால்' என்று செயவென் வாய்பாட்டு வினையெச்சமாகப் பொருள் விரித்தாம். முருகுடை அருகுடை, வெண்குடை யென் பவைகளில் குடை யென்பது, திரி பணியாக வந்து வேறுபொருள் தரும் வேடிக்கையை உய்த் துணர்ந்துகொள்க. இதுபோலவே

"சாமுன்ன மாவிலேயே
ஏந்துமடன் மாவிலேயே
மாரன் கணைப்பதுவு மாவிலேயே"

என்று மும்மொழி மடக்கணியாகப் பாடியுள்ளார்கடிகைமுத் துப் புலவரும். மூலே நனைக்கும் என்பது தற்போது தகாதென்று முகநனைக்கும் என்று சில பிரதிகளில் மாற்றிப்பதித்திருக்கின்றது. இவைகளெல்லாம் காலத்துக்குத்தக்கபடி மூலத்தை மாற்றும் அலங்கோல மென்றுணர்க. திண்டார் முருகுடைய, மூலேநனைக்கும்

மாதர் அருகுடையான்' என்பதூஉம் இன்னொருமொழிமாற்று. 'குளிர்ந்த மலர்மாலைத்தேன் அழிந்தொழுக (அதனால் அது) மூலை களை நனைக்கும் பெண்களைத் தன்னருகில் உடையவன்' என்பது பொருள். 'வெண்குடை' என்பது இயற்கைச்சிறப்பு, "வெண்ணிலா" என்புழிப் போல. கருநிலா, செந்நிலா முதலியவையில்லை யாகை யால் வெண்ணென்னும் அடையின்றி நிலாவென்பதே சாலும். இது போலவே, அரசர்குடை வெண்பட்டானன்றிக் கரும்பட்டு, செம் பட்டு முதலியவற்றாற் செய்வதில்லை ஆகையால் குடையான் என் பதே சாலும் என்க. தார் அருகுடையான் என்பதை அப்படியே மொழிமாற்றமற் கொண்டு, மாலையைத் தன் மார்பி னருகிலுடை யான் என்று பொருள் விரிப்பாரு முளர். மாலையைக் கழுத்தி லணிந் திருப்பதன்றி, அருகிற் கழற்றி மார்பினருகில் வைத்திருப்பது சம் பிரதாய மன்றென் றொதுக்குக. அப்படிக் கழற்றி வைத்திருக்கு மாலை, மாதர் மார்பை நனைப்ப தெப்படி? (௧அ)

[நளன், நீதியோ டரசாண்டா னெனல்.]

சீத மதிக்குடைக்கீழ்ச் செம்மை யறங்கிடப்பத்
தாதவிழ்பூந் தாரான் றனிக்காத்தான்—மாதர்
அருகூட்டும் பைங்கிளியு மாடற் பருந்தும்
ஒருகூட்டில் வாழ வுலகு.

(ப - ரை) தாது அவிழ் பூ தாரான - மகரந்தப்பொடி சிந்து கின்ற மலர்மாலை யணிந்த நளமகாராசன், மாதர் - பெண்கள், அருகு-தம்மருகில் (வைத்துக்கொண்டிருந்து), ஊட்டும் பசுமை கிளி யும் - (பாலையும் பழத்தையும்) ஊட்டி வளர்க்கின்ற பச்சைக் கிளி யும், ஆடல் பருந்தும்-போராடலில் வல்ல பருந்தும், ஒரு கூட்டில் வாழ - ஒரே கூண்டில் பகைமை நீங்கி வாழும்படி, சீதம் மதி குடைக்கீழ்-குளிர்ந்த தன் சந்திரவட்டக் குடைநிழலில், செம்மை அறம் கிடப்ப-குற்றமற்ற நல்லறம் நிலைத்து நிற்க, உலகு, தன்னாட் டை, தனி காத்தான் - தன்னொப்பா ரின்றி ஆண்டுவந்தான்.

(க - ரை) நளன், பருந்துங் கிளியும் ஒருகூட்டில் வாழும்படி அறிநெறியில் அரசாண்டான்.

(வி - ரை) "சீதமதி வைத்த முடி பாதமலரைச்சிறிது, தேடுதல் நினைத்த பரமே" என்றார் எல்லப்பநாவலரும். மதிக்குடை- உவமைத்தொகை. "குடைக்கீழ்" இதில் கீழ் என்பது ஆகுபெயராய் நிழலை உணர்த்திற்று. செம்மையறம் - பண்புத்தொகை. 'பைங் கிளியும் ஆடற் பருந்தும் ஒரு கூட்டில் வாழும்படி, சீதமதிக் குடைக் கீழ்ச் செம்மையறம் (நிலைபெற்றுக்) கிடப்ப உலகு ஆண்டான்' என்று கூட்டுக. கேவலம் ஐயறிவுடைய பறவைகளே பகைமை நீங்கி மனமொத்து ஒரே கூட்டில் வாழுமானல் ஆறறிவாளிகளாகிய மாந்தர் மனமொத்து வாழ்வதற்குக் கேட்பானேன்? என்னுங் குறிப்பெச்சந் தோன்றக் கூறியதைக் குறித்து நோக்குக. இல்லாரை உடையாரும், நல்லாரைப் பொல்லாரும், எளியாரை வலியாரும் தன்னுணையால் வருத்துதலின்றி அறவழியில் நளன் ஆண்டமையே இங்குக் குறித்திருக்கின்றது. எளியார்க்குக் கிளியும் வலியார்க்குப் பருந்தும் உவமானமாயினமை காண்க. 'ஆடல் பருந்து' என்பதற்குக் 'கிளி போன்ற எளிய பறவைகளோடு போராடி வெற்றி பெறவல்ல வலிய பறவையாகிய பருந்து' என்பதே திரண்ட பொருளாம். இங்கே குடையென்று நளன் ஆணையைக் குறித்திருப்பது காண்க. இதுவும் ஆகுபெயராம். 'கிடப்ப', 'வாழ' என்பவைகளைச் செவ்வெண்களாக்கி, அறங் கிடப்பவும் பருந்துங் கிளியும் வாழவும் என்றும் பொருள் கொள்வாருமுளர். இப்படிப் பொருள் கொள்வதனுல் இருவினையில் ஒன்றுக்கொன்று தொடர்பின்றிக் கெடும். 'அறங் கிடப்பதனுல்' பருந்துங் கிளியும் ஒரு கூட்டில் வாழ உலகாண்டான்' என்று கொள்ளினும் ஒருவாறு பொருந்தும். 'தனிக் காத்தான்' என்பதற்குத் 'தன்னுவார் பிறரின்றித் தானேயாய்க் காத்தான் என்பதே பொருள். பசுமை + கிளி = பைங்கிளி; இதில் "ஈறு போதல்" என்பதனுல், மைகெட்டு, "அடியகரம்ஐயாதல்" என்பதனுல் பைசு கிளியென்றாய், "இனையவும்" என்பதனுல் சுகரங்கெட்டு ஙகர

இனந் தோன்றி, பைங்கிளி யென்றாயிற்று. பூந்தாரான - பூவாலாகிய தாரான் என்று விரியுமாகையால் மூன்றும் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையாகக் கொள்க. அரசரைக் குறிக்கும்போதெல்லாம் ஆசிரியர் மாலையைக் குறித்தே புகழ்கின்றார். 'மூலநனைக்குந் தண்டார்' என்றும், 'காமருபூந்தார்' என்றும் மேலைச் செய்யுள்களிலும் கூறியிருக்கின்றமை காண்க. (௧௧)

[நளன், பூங்காவனத்துக்குப் போனானெனல்.]

வாங்குவளைக் கையார் வதன மதிபூத்த
பூங்குவளைக் காட்டிடையே போயினான்—தேங்குவளைத்
தேனாடி வண்டு சிறகுலர்த்து நீர்நாடன்
பூநாடிச் சோலை புக.

(ப - ரை) தேம் குவளை தேன் ஆடி வண்டு சிறகு உலர்த்தும் நீர் நாடன் - தித்திப்பான குவளைமலர்த்தேனிற் குளித்துக் களித்து வண்டுகள் தம் சிறகுகளை உலர்த்துகின்ற நீர்வள மிக்க நிடதநாட்டரசனாகிய நளன், பூ நாடி சோலை புக - பூப்பறிக்க விரும்பிச் சோலைக்குள் நுழைவதற்கு, வாங்கு வளை கையார் வதனம் மதி பூத்த-வாங்கி யணிந்துகொள்ளும் வளையல்களுள்ள கைகளையுடைய பெண்களின் முகமாகிய சந்திரனிடத்துப் பூத்துள்ள, குவளை பூ காடு இடையே போயினான் - (கண்களென்னும்) குவளைமலர்க் காட்டினடுவிற் போனான்.

(க - ரை) நளன், பெண்களின் கண்கள் தன்னழகையே விரும்பிப் பார்த்துக்கொண்டிருக்கப் பூங்காவனத்துக்குப்போனான்.

(வி-ரை) 'தேம்' என்பதற்கு மணமென்று கொள்வாருமுளர். "தேம்படு பனையின்" என்பதிலும், "பசுவுண்ட தேம்படு தென்னி ரமுதமாம்" என்பதிலும் தேம் என்பது தித்திப்பென்றே பொருள் படுவது காண்க. வாங்குவளை - வினைத்தொகை; "வாங்குவில்" என்புழிப்போல. வளைந்த வளையென்று பொருள் கொள்வாரு

மூளர். வளைந்திருப்பதனால் (வளையென்று )தொழிலாகுபெயராய் நிற்குமிதற்கு வளையென்னும் அடைமொழி அநாவசியமாம். இப்படிப் பொருள் கொளலுமன்றி யிதற்கு, 'விரகதாபத்தால் தேக மெலிந்து, வளைகள் வாங்கு (நீங்கு) கின்ற கைகளையுடையார்' என்று பொருள் கொளலும் இன்னொன்று. நளன் ஒருவன்; பெண்கள் பலராகையால், அவன் உடற் கூட்டுறவு எல்லார்க்கும் தவறாமற் கிடைப்ப தரிது. அதனால் அவர்களிற் பலர் அவன் அழகில் மயங்கி விரகதாபத்தால், தம் உடல் மெலிந்து, வளைவாங்கு கையாராயிருந்தன ரென்பது குறிப்பெச்சமாய்ப் பொருள் கொள்ளக் கிடப்பதுங் காண்க. 'வதனமாகிய சந்திரன் பூத்த' என்று, மதியென்பதை முதல் வேற்றுமையாக்கிப் பொருள் கொள்வாரும் உளர். 'தன்னழகையே விரும்பிக் கண் கொட்டாமல் மங்கையர் பார்க்க, நளன் போனான்' என்பதனால், 'வதனமதி பூத்த பூங்குவளைக் காட்டிடையே போயினான்' என்றார். கருங்குவளைகள் நீரினன்றி மதியிலும் பூத்தனவென்பது அதிசய நவிற்சி குவளை மலர்த்தேனைக் கொள்ளைகொண் டுண்ணும் வண்டுகள் அதிற் குளித்துக் களித்துப் பிறகு தத்தம் சிறகுகளை உலர்த்தின என்றதனால் மலர்வளத்தையும், அதனால் நீர்வளத்தையும், அதனால் நிலவளத்தையும், அதனால் நாட்டுவளத்தையும் நாட்டினபடியாம். நீர் நாடன்-எழுவாய், போயினான் பயனிலை. (உ0)

[அப்படி அவன் சென்றது இளவேனிற் காலத்தி லெனல்.]

வென்றி மதவேடன் வில்லெடுப்ப வீதியெலாம்
தென்றன் மதுநீர் தெளித்துவர—நின்று
தளவேனன் மீதலருந் தாழ்வரைசூழ் நாடற்
கிளவேனில் வந்த தெதிர்.

(ப - ரை) நின்ற தளவு ஏனலமது தாழவரை சூழ நாடற்கு எதிர்-(முல்லை நிலத்தில்) வளர்ந்த முல்லைக்கொடியானது குறிஞ்சி நிலத்தில் (விளைந்துள்ள) தினைப்பயிரின்மேற் (படர்ந்து) மலருகின்ற மலைச்சாரல் சூழ்ந்த நிடதநாட்டரசனாகிய நளமகாராஜனுக்

கெதிரில், மதவேள் தன் வென்றி வில் எடுப்ப - மன்மதனானவன் தன்னுடைய வெற்றி மிகுந்த வில்லாயுதத்தைத் தாங்கவும், வீதி எல்லாம் தென்றல் மதுநீர் சிந்திவா - தெருக்களிலெல்லாம் தென்றற் காற்றானது மலர்த்தேனாகிய நீரைத் தெளித்துப் (புழுதி அடக்கவும்), இளமை வேனில் வந்தது - இளவேனிற் காலம் வந்தது.

(க - ரை) மன்மதன் வில்லெடுத்தும் தென்றல் நீர் தெளித்தும் தன்னைத் தொடர இளவேனிற் காலமானது நளமகாராசனை எதிர்கொண்டு வந்தது.

(வி - ரை) 'வென்றி' என்பது வெற்றி யென்றும் வரும்; வென்றியென்பதை மதவேளுக்கடையாக்கிப் பொருள் கொள்ளலுமாம். மதவேளாகிய சேனைத்தலைவன் வில்லேந்தியும், தென்றலென்னும் சேனவீரன் தெருப்புழுதி யடங்க நீர் தெளித்தும் தன்னைத் தொடர, இளவேனிலென்னும் சிற்றரசன், நளமகாராஜனென்னும் பேரரசனை எதிர்கொண்டழைக்க வந்தானென்பதே திரண்ட பொருள். முல்லைநிலக் கருப்பொருளாகிய தளவு, குறிஞ்சி நிலக் கருப்பொருளாகிய ஏனன்மீது படரும் என்றதனால் திணை மயக்கங் கூறியபடியாம். அன்றியும், முல்லைநிலமாகிய காட்டரணுக்கு அணித்தாகக் குறிஞ்சிநிலமாகிய மலையரண் பொருந்தி நிடத நாட்டை அலங்கரித்திருந்தது என்றபடியுமாம். மதன் + வேள் + தன் என்பது மதவேடன் என்றாயினமைக்குச் "சில விகாரமாம் உயர்திணை" என்பதும், "குறில் செறியாலள" என்பதுமே விதிகளாம். 'மதவேள்' 'மதுநீர்' என்பன மதனாகிய வேள் என்றும் மதுவாகிய நீர் என்றும் விரியுமாகையால் இருபெயரொட்டுப் பண்புத்தொகைகளாம். இளவேனிற்காலத்தில் மதவேள் வில்லெடுப்பதும் தென்றற்காற்று வீசுவதும் இயற்கையாதலால் இங்கே அவைகளை உருவமாக்கிக் கூறினார். இளவேனிற்காலமாகிய வசந்த காலத்தில், மல்லிகைமுதலிய மண மலர்கள் மலர்வது இயற்கையாகையால், அவைகளிலுள்ள மதுநீர்மேல் தென்றற்காற்றுப் படிந்து சிந்திய தென்பார், 'தென்றல் மதுநீர் சிந்திவா' என்றார். இளவேனில் - எழுவாய், வந்தது - பயனிலை. (உக)

[நளன் பூங்காவைச் சேர்ந்தா னெனல்]

தேரிற் றுகளைத் திருந்திழையார் பூங்குழலின்
வேரிப் புனனனைப்ப வேயடைந்தான்—கார்வண்டு
தொக்கிருந்தா லித்துழலுந் தூங்கிருள்வெய் யோற்
புக்கிருந்தா லன்ன பொழில். [கொதுங்கிப்

(ப - ரை) தூங்கு இருள் வெய்யோற்கு ஒதுங்கி புக்கு இருந்தாள் அன்ன-மாறுத இருளானது சூரியனுக்கெதிரில் (நிற்கமாட்டாமையால்) விலகி ஒளித்துக்கொண்டிருந்தால்அதுபோன்ற, கருமை வண்டு தொக்கு இருந்து ஆலித்து உழலும் பொழில் - கருவண்டுகள் கூட்டமாயிருந்து களித்துச் சுழல்கின்ற சோலையை, தேரின் துகளை திருந்து இழையார் பூங்குழலின் - தன்னுடைய தேருருளைகளிற் கிளம்பிய புழுதியைத் திருத்தமான ஆபரணங்களை யணிந்த பெண்களின் பூ முடித்த கூந்தலினின் றொழுகும், வேரி புனல் நனைப்ப அடைந்தான் - பூந்தேனாகிய நீர் நனைத்து அடக்கும்படி (நளன்) சேர்ந்தான்.

(க - ரை) பெண்களின் கூந்தலில் முடித்த மலர்த்தேன், தன் தேர்ப்புழுதியை அடக்கும்படி நளமகாராசன் சென்று பூங்காவைச் சேர்ந்தான்.

(வி - ரை) தேரின்துகள், ஐந்தாம் வேற்றுமை எதுப்பொருளில் வந்தது; இங்கே தேர் என்பது உருளைக்கு ஆகுபெயராய் வந்தது. திருத்தமான வேலைப்பா டமைந்துள்ள காரணத்தால் 'திருந்திழையார்' என்றார். 'வேரியென்பது' மலர்மணத்துக்குப் போலவேமலர்த்தேனுக்குமா மாகையால் 'வேரிப்புனல்' என்றார். வேரிப்புனல்-இருபெயரொட்டு. நனைப்ப எ என்பதில் ஏகாரம் அசைநிலை. ஆலித்து - கட்குடித்துக் களித்துப் பாடி யெனினுமாகும். உழலும், சுழலும் என்பன ஒரு தொடர்; 'குடியால் மயக்கிக் கிடக்கும்' எனினும் பொருந்தும்; தூங்கு இருள் - நீங்காத இருள்.

வெய்யோன்-வெம்மை யென்னும் பண்படியாகப் பிறந்த ஆண்பாற் படர்க்கைப்பெயர். 'ஒதுங்கி' என்பதற்கு அஞ்சிப் பின்வாங்கி எனினும் பொருந்தும். சோலைமரங்களி னடர்த்தியால் இருண்டிருப்பது, வெயிற் கொதுங்கி யிருள்புகுந்திருந்தாற்போ லிருந்தது' என்று பொருள் கொள்வார் உவமான உவமேய இலக்கண முணராதார். இன்னும் அவரே உழலும் என்பதைஇயும், அன்ன என்பதைஇயும், பொழிலையே கொண்டு முடியும் பெயரெச்சங்களாக்கி இடரெய்துவர்; அற்றன்று. அன்ன என்னும் பெயரெச்சம், கார்வண்டு என்னும் பெயரைக் கொண்டு முடிவதும், உழலும் என்பது பொழிலைக் கொண்டு முடிவதுமே சரியான மொழிமாற்றாகும்; இதுவே ஆசிரியர் கருத்தும் ஆன்றோர் பொருட்கோளுமாம். தூங்கிருள், வெய்யோற் கொதுங்கிப் புக்கிருந்தாலன்ன கார்வண்டு தொக்கிருந்தாலித்துழலும் பொழி லென்பதே சரியான உவமான உவமேயங்களைக் காட்டும் பொருள் கொண்ட மொழி மாற்றாகும். 'உழலும் கார்வண்டு தொக்கிருந்தாலித்துத் தூங்கிருள் வெய்யோற் கொதுங்கிப் புக்கிருந்தாலன்ன பொழில்' என்பதூஉம் இன்னொரு மொழிமாற்று. தொக்கு: தொகு - பகுதி, உ - வினையெச்ச விகுதி; பகுதி இரட்டித்துக் காலங் காட்டிற்று. அன்ன என்பது அகரச்சுட்டடியாகப் பிறந்த குறிப்புப் பெயரெச்சமாம்; இன்ன என்பதும் இப்படியேயாமென் றுணர்க. கார்வண்டு - பண்புத்தொகை; கருமை + வண்டு—கார் வண்டு; "ஈறுபோதல்" என்னும் சூத்திர விதி கொண்டது. (௨௨)

[சோலையில் நளனுக்கெதிரில் அன்னப்புள் தோன்றிற் றெனல்.]

நீணிறத்தாற் சோலை நிறம்பெயர நீடியதன்
தாணிறத்தாற்பொய்கைத் தலஞ்சிவப்ப—மாணிறத்தான்
முன்னப்புட் டோன்று முளரித் தலைவைகும்
அன்னப்புட் டோன்றிற்றே யாங்கு.

(ப - ரை) ஆங்கு - அச்சோலையில், மாண் நிறத்தான் முன் - அகன்ற மார்பையுடைய நளராசனுக்கெதிரில், அப்புள் தோன்றும்

முளரித்தலை வைகும் அன்னப்புள்-தண்ணீரில் தோன்றுகிற தாமரைமலரில் தங்கியிருக்கும் அன்னப்பறவை, (தன்) நீள் நிறத்தால் சோலை நிறம் பெயர-தனது (உடலின்) வெள்ளை நிறத்தின் மிகுதியால் அச்சோலையானது நிறம் மாறவும், நீடிய தன் தாள் நிறத்தால் பொய்கை தலம் சிவப்ப - தனது பாதத்தின் செந்நிறத்தின் மிகுதியால் (அங்குள்ள) தடாகத்தின் (தண்ணீருள்ள) இடம் செந்நிறமாகவும், தோன்றிற்று - தென்பட்டது.

(க - ரை) அங்கே தடாகத்திலுள்ள தாமரை மலரில் வாழும் அன்னப்பறவை நளன் கண்ணுக்குத் தென்பட்டது.

(வி - ரை) நீணிறம் - நீள் நிறம்; வினைத்தொகை; நீண்ட நிறம் என விரியும். சோலையானது நிறமாறவும் என்று விரிவதால்எழுவாய்த்தொடர். நிறமாறுதல்-பச்சை நிறமாறி வெள்ளைநிறமாகுதல். பொய்கையிற் றண்ணீர் செந்நிறமாதலைப் 'பொய்கைத் தலம் சிவப்ப' என்றார். 'மாண் நிறத்தான்' என்பதற்கு 'மாட்சிமையுற்ற அழகுடையா னென்பதூஉம் மற்றொன்று. 'முளரி' அதன் மலரைக் குறிப்பதால் முதலாகுபெயராம். தோன்றல் — உதித்தல்; இங்கே அது தென்படலுக்காயிற்று. அன்னப்பறவைக்கு உடல் வெள்ளை, பாதம் சிவப்பு என்று குறிப்பிற் கொள்க. (உ௯)

[நளன், அன்னத்தைப் பிடிக்கச் சேடியை ஏவினனெனல்.]

பேதை மடவன்னந் தன்னைப் பிழையாமல்
மேதிக் குலமேறி மென்கரும்பைக்— கோதிக்
கடித்துத்தான் முத்துமிழுங் கங்கைநீர் நாடன்
பிடித்துத்தா வென்றான் பெயர்ந்து.

(ப - ரை) மேதி குலம் ஏறி மென்மை கரும்பை கடித்து கோதி முத்து உமிழும் கங்கைநீர் நாடன் = எருமைமந்தை, கொல்லையிற் சென்று மெல்லிய கருப்பங்கழிகளைக் கடித்துக் குதப்பி (அவைகளுக் குள்ளிருக்கும்) முத்தங்களை உமிழ்கின்ற கங்கை நீர்

வளமுள்ள நிடதநாட்டரசனாகிய நளன், (தனக்கருகிலிருந்த சேடி ஒருத்தியை நோக்கி), 'பேதை பெயர்ந்து மடம் அன்னந்தன்னை பிழையாமல் பிடித்து தா' என்றான் — ஏ, பெண்ணே! நீ போய் இந்த இளவன்னத்தைத் தப்பவிடாமற் பிடித்துக் கொண்டுவந்து கொடு' என்றான்.

(க - ரை) நளன் தனக்கருகிலிருந்த சேடியொருத்தியை நோக்கி, "ஏ பெண்ணே! இந்த அன்னத்தைத் தவறாமற் பிடித்துக் கொடு" என்றான்.

(வி - ரை) பேதை-அண்மைவிளி; பேதாய் - சேய்மைவிளி. சேடி தனக்கருகிலிருந்தா ளாகையால் நளன் அவளைப் 'பேதை' என்று விளித்தான். இதையே அன்னத்துக்கடையாக்கிப் பேதைமையாகிய இளவன்னம் என்று பொருள் கொள்வாருமுளர். 'மடம்'என்பதற்கு இளமை, பேதைமைமுதலிய பொருள்களுண்டு. மடம் மவ்வீறொற்றழிந்து உயிரீறொத்தது. மேதிக்குலம்-எருமைக் கூட்டம் எனினுமாம். ஏறுதல் - தாராளமாய்ச் செல்லுதல்; தங்கு தடையின்றித் தாராளமாய் எருமைகள் சென்று கொல்லைக் கரும்புகளைக் கடித்துக் குதப்பித் தம் வாயிற் றட்டிய முத் தங்களை உமிழும் கங்கை நீர் நாடன் என்பதால், கங்கை பாயும் சமவெளிப்பிரதேசத்தி லிருந்த நிடதநாட்டின் வளம் நன்கு விளங்குகின்றது. முத்தம் பிறக்கும் பத்திடங்களிற் கரும்பும் ஒன்றாகும். கரும்புக்கு மென்மைத்தன்மை சாற்றின் மிகுதியால் உண்டாவதென்க. (உச)

[சேடியர் அன்னத்தைப் பிடித்துக் கொடுத்தல்.]

நாடிமட வன்னத்தை நல்ல மயிற்குழாம்
ஓடி வளைக்கின்ற தொப்பவே—நீடியநற்
பைங்கூந்தல் வல்லியர்கள் பற்றிக் கொடுபோந்து
தங்கோவின் முன்வைத்தார் தாழ்ந்து.

(ப - ரை) நீடிய நல் பசுமை கூந்தல் வல்லியர்கள்-நீண்டு நன்ருய்ச்செழித்து வளர்ந்த கூந்தலையுடைய பூங்கொடி போன்ற சேடியர்கள், நாடி - (பிடிக்க) விரும்பி, மடம் அன்னத்தை நல்ல மயில் குழாம் ஓடி வளைக்கின்றது ஒப்ப - அந்த இளவன்னப் பறவையை அழகான மயிற் கூட்டங்கள் ஒன்று கூடி ஓடி வளைப்பதுபோல, பற்றி கொடுபோந்து - (வளைத்துப்) பிடித்துக் கொண்டுவந்து, தம் கோவின் முன் தாழ்ந்து வைத்தார் - தமது அரசனாகிய நளனுக்கெதிரில் வணங்கி வைத்தார்கள்.

(க - ரை) மயிற்கூட்டங்கள் வளைத்துப் பிடிப்பதுபோல சேடியர்கள் அன்னத்தைப் பிடித்துக் கொண்டுவந்து நளனெதிரில் வைத்தார்கள்.

(வி - ரை) 'நாடி' என்பதற்கு அரசன் பேச்சை ஆராய்ந்து என்பாருமுளர். 'நீடிய பைங்கூந்தல் வல்லியர்கள்' என்றதனால், அன்னத்தை வளைத்துப் பிடிக்க ஓடும் அவசரத்தால், அவிழ்ந்து தொங்கும் கூந்தலையுடைய சேடியர்கள் என்று குறிப்பெச்சமாக் கொள்க. அப்படிக் கூந்தல் அவிழ்ந்தலைய ஓடுவதனால்தான் அவர்கள், தோகையழகுடைய மயிற் கூட்டத்தை ஒத்திருக்கிருர்களென்று கொள்க. 'வல்லி' பாவை யென்புழிப்போல உவமையாகுபெயராய்ப் பெண்ணை யுணர்த்திற்று. புகுந்து என்பதின் மரூஉவே, போந்து என வந்தது. கொடு என்பது கொண்டு என்பதின் இடைக்குறையாம். அரசன் ஒருத்திக்குக் கட்டளையிட்டான். ஆயினும், அவளோடு பலரும் சென்றது அவனுடைய நன்குமதிப்பைப் பெறும் பொருட்டேயாகும். (உரு)

[அரசனைக் கண்டு அன்னம் வருந்திற் றெனல்.]

அன்னந் தனைப்பிடித்தங் காயிழையார் கொண்டுபோய்
மன்னன் திருமுன்னர் வைத்தலுமே—அன்னம்
மலங்கிற்றே தன்னுடைய வான்கிளையைத் தேடிக்
கலங்கிற்றே மன்னவனைக் கண்டு.

(ப - ரை) அன்னந்தன்னை - அன்னப் பறவையை, ஆய் இழையார் அங்கு பிடித்துக்கொண்டுபோய் — ஆய்ந்தணிந்த நகைகளையுடைய பெண்கள் அவ்விடத்திற் பிடித்துக்கொண்டுபோய், மன்னன் திருமுன்னர் வைத்தலும் ஏ - அரசனெதிரில் வைத்தவுடனே, அன்னம் - அவ்வன்னமானது, தன்னுடைய வான் கிளையை தேடி மலங்கிற்று - தன்னுடைய சிறந்த சுற்றமாகிய மற்றை யன்னங்களைக் காணாமல் தேடி வருந்திற்று; (அன்றியும்) மன்னவனை கண்டு கலங்கிற்று - அரசனைப் பார்த்து மருண்டுமனக்கலக்கமுற்றது.

(க - ரை) பெண்கள் பிடித்துக் கொண்டுபோன அன்னம் தன் சுற்றத்தைக் காணாமல் துயருற்றது ; நளனைக் கண்டு கலங்கிற்று.

(வி - ரை) 'அங்கு' என்பதை அசையாகவுந் தள்ளலாம். 'ஏ' என்பவைகளும் அசைநிலைகளும் இசைநிறைகளுமாம். 'திருமுன்னர்' என்பதில் திருவென்பது அரசச்செல்வத்தைச் சிறப்பிக்கும் அடையாக வந்தது. மலங்குதல்-வருந்துதல். 'வான்கிளை' என்பதில் வான் என்பது பெருமையைக் குறிக்க வந்ததெனினுமாம். மன்னவன் வேட்டமாடுதல் போர்புரிதல் முதலிய வீரத்தொழிலில், வல்லவனாகையால், தன்னை யென்செய்வானோ வென்று அவனைக் கண்ட அன்னம் கலங்கிற்றென்று கொள்க. கிளையும் வல்லியென் புழிப்போல உவமையாகுபெயராம். 'வைத்தலும்' என்பதில் வைத்தல் -தொழிற்பெயர், உம் - வினையெச்சப் பொருட்டு. (உக)

[நளன் அன்னத்தை அஞ்சாதே யெனல்.]

அஞ்சன் மடவனமே! உன்ற னணிநடையும்
வஞ்சியனையார் மணிநடையும்—விஞ்சியது
காணப் பிடித்ததுகா ணென்றான் களிவண்டு
மாணப் பிடித்ததார் மன்

(ப - ரை) களி வண்டு மாண பிடித்த தார் மன் - மதுவுண்டு களிக்கும் வண்டுகள் சிறக்கக் கட்டிய மலர்மாலை யணி

ந்த அரசன், மடம் அன்னமே !-ஓ இளமையும் அழகும் பொருந்திய அன்னப் பறவையே! அஞ்சல் - பயப்படாதே; உன்றன் அணி நடையும் - உன்னுடைய அழகான நடையும், வஞ்சி அனையார் மணி நடையும் - கொடிபோன்ற மாதர்களுடைய வனநடையும், விஞ்சியது காண பிடித்தது - (ஆகிய இவற்றுள் எது) சிறந்த தென்று தெரிந்துகொள்ளும் பொருட்டே உன்னைப் பிடித்துக் கொண்டுவந்தது ஆம் (வேறொன்று மின்று); காண் - நீ தெரிந்து கொள், என்றான் - என்று அதைத் தேற்றினான்.

(வி - ரை) 'காணப் பிடித்ததுநான் காணென்றான் கார்வண்டு மாணப் பிடித்த தார்மன்' என்றும் பாடபேத முண்டு; 'வண்டு கள் மதுவுண்டு வாழ்வு சிறக்கப் பிடித்துக் கட்டிய மலர்மாலை என்று பொருள் விரித்துக் கொள்க. அஞ்சல் - எதிர்மறை வியங் கோள் வினைமுற்று. "மகனெனல் மக்கட் பதடியெனல்" என்பதில் முதல் எனல் போல-மணிநடை வனநடை அலங்காரநடை அழகு நடை யென்பன ஒரு தொடர். 'பிடித்ததுகாண் என்பதில்' காண் என்பதை அசையாகத் தள்ளுவாரு முளர். 'வண்டு பிடித்த தார்' என்பதற்கு வண்டுகள் கூட்டமாய்ப் பற்றியுள்ள தார் எனினுமாம். காணப் பிடித்துக்கொண்டு வந்ததாம் என்று கூட்டிக்கொள்க. உன்னைப் பிடித்தது விஞ்சியது காணும் பொருட்டேயாம் எனினும் பொருந்தும். அரசன்-தோ: எழுவாய், என்றான் பயனிலை. பிடித்தது - காலங்காட்டுந் தொழிற்பெயர். பிடிக்கின்றது, பிடிப்பது என்று முறையே நிகழ்கால எதிர்காலங்கள் வருமென் றறிக. மாண் என்னும் பகுதியடியாகப் பிறந்த வினையெச்சமே மாண என்றாயிற்று. (உஎ)

[நளனிடத்தில் அன்னம் பயந்தெளிந்திருந்த தெனல்.]

செய்ய கமலத் திருவை நிகரான
தையல் பிடித்த தனியன்னம்—வெய்ய
வடுமாற்ற மில்லா வரசன்சொற் கேட்டுத்
தடுமாற்றந் தீர்ந்ததே தான்.

(ப-ரை) செய்ய கமலம் திருவை நிகர் அன-செந்தாமரைமலரி லெழுந்தருளிய திருமகள் போன்ற, தையல் பிடித்த தனி அன்னம்-சேடிப் பெண் பிடித்துக்கொண்டு வந்த சிறந்த அன்னப்பறவை, வெய்ய அடுமாற்றம் இல்லாத அரசன் சொல் கேட்டு - கொடுங் கொலைப்பகையற்ற அரசனுடைய சொல்லைக் கேட்டு, தடுமாற்றம் தீர்ந்தது - மனக்கலக்கம் நீங்கிற்று.

(க - ரை) நளனுடைய நண்பான வார்த்தையைக் கேட்டு, அன்னம் பயந் தெளிந்திருந்தது.

(வி-ரை) ஏயும், தானும் அசைகள். தான் தீர்ந்தது என்று, தான் என்பதைத் தீர்ந்தது என்பதற்குக் கருத்தா என்பாரும் உளர். செய்ய - செம்மை + அ - "ஈறுபோதல்" என்னும் சூத்திரவிதி பெற்றது. கமலம் + திருகமலத்திரு - மவ்வீ றொற் றழிந் துயிரீறொத்து வன்மை மிகுந்தது. 'தனி' என்பதற்குத் தன்னொப்பில்லாத என்று கூறலுமொன்று, வெய்ய வெம்மை + அ; குறிப்புப் பெயரெச்சம். தன்னைக் கொல்லத்தான் அரசன் பிடிப் பித்தானேவென்று ஐயுற்றது அன்னமாகையால், 'அடுமாற்றம்' என்றார். 'மாற்றம்' என்பதற்குச் சொல்லென்பாரு முளர். சொல் லென்பது அடுத்தாற்போல் வருவதால், மாற்றம் என்பதற்குப் பகையென்று பொருள் கொள்வதே தகையாமென்க. மாற்றான்-பகைவன். மாற்றம், பகைமை - தொழிற்பெயர். தடுமாற்றம் - தொழிற்பெயர். தடுமாறு-பகுதி. அன்னம் - எழுவாய், தீர்ந்தது - பயனிலை. அடுமாற்றம்-வினைத்தொகை. (உஅ)

[நளனுக்கு அன்னம் தமையந்தியின் இருப்பை
அறிவித்த தெனல்.]

திசைமுகந்த வெண்கவிகைத் தேர்வேந்தே யுன்றன்
இசைமுகந்த தோளுக் கிசைவாள்—வசையில்
தமையந்தி யென்றோதுந் தையலாள் மென்றோள்
அமையந்தி யென்றே ரணங்கு.

(ப - ரை) திசை முகந்த வெண்மை கவிகை தேர் வேந்தே - நான்கு பக்கங்களிலும் பரவிய வெள்ளைக்குடை நிழலில் தேரேறி நடத்தும் அரசே!, உன்தன் இசை முகந்த தோளுக்கு - உன்னுடையபுகழ் மிகுந்ததோள்களுக்கு, மென்மைதோள் அமை அந்தி என்று ஓர் அணங்கு-மெல்லிய தோள்கள் மூங்கிலழகி யென்னும் ஒப்பற்ற வரமகளாகிய, வசை இல் தமயந்தி என்று ஓதும் தையலாள் - குற்றமற்ற தமயந்தி என்று சொல்லும் ஒருபெண், இசைவாள் - பொருத்தமாயிருப்பாள்.

(க - ரை) அன்னம் நளனை நோக்கி, "உன்னுடைய இசை முகந்த தோளுக்கு மூங்கில் தோளையுடைய தமயந்தியே சரியானவள்" என்றது.

(வி - ரை) நளன் இசை முகந்த தோளழகன், தமையந்தி மூங்கிற்றோளழகி; இருவர்க்கும் பொருத்தமா மென்றபடி. இருவர்க்கும் கடிமண முடிக்கு நாட்பொருத்தம் பார்க்குமுன், ஆட்பொருத்தம் பார்க்கவேண்டும் ஆகையால், தோட்பொருத்தங் கூறினார். நான்கு திசைகளிலும் கூடுமானால், இன்னுமுள்ள நான்கு திசைகளையுங் கூட்டி எட்டுத் திசைகளிலும் நளனுடைய ஆணை சென்றதென்பார், 'திசைமுகந்த வெண்கவிகை' என்றார். இங்கே வெண்கவிகை யென்றது நளனுடைய மனுமுறையாட்சியை. கவிகை, புதைய லென்புழிப் போலக் குடையை உணர்த்திற்று. வெண் + கவிகை - வெட்கவிகை யென்றாகாமல், வெண்கவிகை யென் றியல் பானமைக்கு

"இடையுரிவடசொலி னியம்பிய கொளாதவும்"

என்ற சூத்திரமே ஆட்சியாம். 'அமை அந்தி' என்பதற்கு மூங்கிலை ஒத்தது என்று பொருள் கொள்வாரும் உளர். தையல் - பண்பாகுபெயர். திசை-இடவாகுபெயர். அணங்கு, பாவை யென்புழிப்போலஉவமையாகுபெயர். தமயந்தி=தமையந்தி - இடைப்

போலி; அந்தத்தை உடையவள் அந்தி; "பொன்னி" என்பழிப் இகரம் பெண்பால் விகுதி. ௩௧

["தமயந்தி யார்மகள்" என்று நளன் அன்னத்தை வினவினனெனல்.]

அன்ன மொழிந்த மொழிபுகா முன்புக்குக்
கன்னி மனக்கோயில் கைக்கொள்ளச்—சொன்னமயில்
ஆர்மடந்தை யென்றா னனங்கன் சிலைவளைப்பப்
பார்மடந்தை கோமான் பதைத்து.

(ப - ரை) அன்னம் மொழிந்த மொழி புகாதமுன் - அன்னப் பறவை யெடுத்துச் சொன்ன சொல் தன் காதில் சரியாய் நுழை யாத முன்பே, கன்னி மனம் கோயில் புக்கு கைக்கொள்ள-கன்னி கையாகிய தமயந்தி, தன் மனமாகிய கோயிலுக்குள் நுழைந்து (அதை) அவள் வசமாக்கிக்கொண்டதனால், அனங்கன் சிலை வளைப்ப மன்மதன் கருப்புவில்லை வளைத்ததனால், பார் மடந்தை கோமான்-பூமியாகிய பெண்ணுக்குத் தலைவனான நளன், பதைத்து-துடித்து (அன்னத்தை நோக்கி), சொன்ன மயில் - நீ சொன்ன மயிலனை யாள், ஆர் மடந்தை என்றான்-யார் பெற்றமகளென்று கேட்டான்.

(க - ரை) அன்னஞ் சொன்ன சொல் நளன் காதில் நுழை யாத முன்பே, அவன் மனதில் தமயந்தி புகுந்துகொண்டதால் அவன் பதைத்து "அவள் யார் மகள்"? என்று அன்னத்தைக் கேட் டான்.

(வி-ரை) புகா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். கைக் கொள்ளஎன்பது முக்காலத்துக்கும்பொதுவான வினையெச்சம். இங் கிது அனங்கன் சிலைவளைப்பதற்குக் காரணமாயிருந்ததால் இறந்த காலம்ஆகையால் அவள் வசமாக்கிக்கொண்டதனால் என்றுபொருள் விரித்தாம். 'சிலை வளைப்ப' என்பதில் வளைப்ப என்பதாஉம் பதைத்து என்பதற்குக் காரணமாயிருந்ததால், இறந்தகால வினை யெச்சமாம், பதைத்து என்பதாஉம் இறந்தகால வினையெச்சமாய்

என்றான் என்னு மூற்றைக் கொண்டு முடிந்தது. கன்னி மனக் கோயில் கைக்கொள்ள (அதனால்) அனங்கன் சிலை வளைப்ப (அதனால்) பதைத்து, சொன்ன மயில் ஆர்மடந்தை என்று முடித்துக்கொள்க. அந்+அங்கன் - உடல் இல்லாதவன்; மன்மதன். எப்படி? இவன் சிவபெருமான் யோகத்திருந்தபோது, தேவர் வேண்டுகோளுக் கிரங்கி, அவ் யோகத்தைத் தன் வில் வலியால் அழிக்கச் சென்று தானே உட லழிந்தான். இதுபற்றியே சைவ எல்லப்ப நாவலரும்

"எல்லா வுயிர்க்கும் உயிராரு ணேசர் இவரசைவி
னல்லா லணுவு மசையாத தென்பதறிந்தனமே
வில்லாடன் மாற விருக்கவும் யோகம் விளைத்தவந்நாள்
புல்லா திருந்தன வெல்லாவுயிருந்தம் யோகத்தையே"

என்றார்.

இப்படித் தன் வில்வலி செல்லாதிருந்த மையாலேயே மன்மதன் தேவர் வேண்டுகோளுக் கிணங்கிச் சிவயோகத்தை அழிக்கச் சென்று, நெற்றிக்கண்ணின் தீப்பற்றிக் கொண்டு மாண்டான். அங்க மழிந்து பங்கப்பட்டு அனங்கனானான். புகாமுன்-புகுந்ததும் புகாததற்கு முன்பே; பாதி நுழைந்தது நுழையாததுமாயிருக்கும்போதே. இது அதிசயவணியாம். (ந௦)

[தமயந்தி வீமராசன் மகள் எனல்.]

எழுவடுதோண் மன்னா! விலங்கிழையோர் தூண்டக்
கொழுநுதியிற் சாய்ந்த குவளை—யுழுநர்
மடைமிதிப்பத் தேன்பாயு மாடொலிநீர் நாடன்
கொடைவிதர்ப்பன் பெற்றதோர் கொம்பு.

(ப - ரை) எழு அடு தோள் மன்னா! - தூணத்தை ஒத்த தோள்வலியுடைய அரசனே!, இலங்கிழை - (நான் சொன்ன அந்த) விளங்கும் ஆபரண மணிந்த பெண்ணானவள் (வேறெவளு

மல்லள்); உழுநர் - உழுவர், ஏர் தூண்ட - ஏரிற் கட்டிய மாடுக ளைத் தூண்டி நடத்துகையில், கொழு நுதியில் சாய்ந்த குவளை - காறின் நுனி கீறிச் சாய்ந்து வீழ்ந்த குவளைமலரை, மடை மிதிப்ப - நீர்மடையில் (அவர்கள்) மிதிப்பதனால், தேன் பாயும் - (அதிலிருந்து) தேன் வழிந்து பாய்ந்தோடுகின்ற, மாடு - வயற்புறமுள்ள, ஒலி நீர் நாடன் - அலையோசையுள்ள நீர்வளமுள்ள நாட்டையுடையவனுகிய, கொடை விதர்ப்பன் - ஈகையிற் சிறந்த விதர்ப்பராஜன், பெற்றது ஓர் கொம்பு - பெற்றெடுத்து வளர்த்தவ ளாகிய ஒப்பற்ற பூங்கொம்பு போல்வாள்.

(க - ரை) அன்னம் நளனை நோக்கி, "அரசனே! நான் சொன்ன பெண் வேறெவளுமல்லள்; விதர்ப்பராஜன் மகள்" என்று சொல் லிற்று.

(வி - ரை) 'எழு' எழுந்தொழிலையுடைய தென்பதால், இது தொழிலாகுபெயர்; தூணைவென்ற தோள் என்பாருமுளர். 'அடு தோள்' என்பதை வினைத்தொகையாக் கொள்க. தூணை அடுத்த- ஒத்த தோள் என்பது திரண்ட பொருள். அடு என்பதற்கு அடுத்த, ஒத்த என்பதே முதற் பொருள்; கொள் என்பது இரண்டாவது பொருள்; வென்ற என்பது மூன்ருவது பொருளாகக் கொள்ள வேண்டும்; ஆகையால், முதற்பொருளாகிய அடுத்த = ஒத்த + என் பதே உத்தமப்பொருளா மென்க. இலங்கிழை - வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. 'ஏர் தூண்ட'என்பதில் ஏர் என்பது ஆகுபெயராய் மாட்டைக் குறித்தது. நுதியின் - நுதியி ஞல்; மூன்ரும் வேற்றுமை.'குவளை' இங்கே இரண்டாம் வேற்றுமை அழிதற்பொருள். மிதிப்ப செயவெனெச்சம், மாடு, பொன், பக்கம் என்பதனுல் இங்கே மாடு என்பதற்குப்புறம் என்றுபொருள் விரித் தாம். ஒலிநீர் என்பது கடல் நீரையுங் குறிக்கும். விதர்ப்ப நாட்டை யாண்டவன்,விதர்ப்பன். இலங்கிழை - எழுவாய்,கொம்பு - பயனிலை. எழுவாயை நோக்கிக் கொம்பு என்பதற்குப் பூங்கொம்புபோல் பவளென்று பொருள் விரித்தனம். பெற்றது என்பதும் இப்படியே இருபெயரொட்டாகக் கொடியோடு சேர்வதால் பெற்றெடுத்து

வளர்த்தவளாகிய என்று உயர்திணைப் பொருள்பெற்றது. பெற்றது-வினையாலணையும் பெயர். (ருக)

["தமயந்தி பெண்ணரசு செய்கிறாள்" எனல்.]

நாற்குணமு நாற்படையா வைம்புலனு நல்லமைச்சா
வார்க்குஞ் சிலம்பே யணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணா வதன மதிக்குடைக்கீழ்
ஆளுமே பெண்மை யரசு.

(ப - ரை) நால்குணமும்-(நாணம், மடம், அச்சம், பயிர்ப்பென்னும்) நான்கு குணங்களுமே, நால் படை ஆக-(தேர், ஆனை, குதிரை, காலாளென்னும்) நால்வகைச் சேனைகளாகவும், ஐந்து புலனும் - (மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும்) ஐந்து பொறிகளுமே, நல் அமைச்சு ஆக - நல்ல மந்திரிமார்களாகவும், ஆர்க்கும் சிலம்பே-(பாதத்தில்) ஒலிக்கின்ற தண்டைகளே, அணி முரசு ஆக - சிறந்த பேரிகையாகவும், கண் ஏ - கண்களே, வேல் படையும் வாள்(படையும்) ஆக - வேலாயுதமும் வாளாயுதமுமாகவும், வதனம் மதி குடை கீழ் - முகமாகிய சந்திரவட்டக் குடைநிழலில், (அவள்) பெண்மை அரசு ஆளும் - (அவள்) பெண்தன்மை யென்னும் அரசை ஆளுவாள்.

(க - ரை) "தமயந்தி தன்னுடைய நாற்குண முதலியவைகளையே நாற்படை முதலியனவாகக் கொண்டு பெண்ணரசாளுவாள்."

(வி - ரை) முதல் ஈரேகாரங்களும் பிரிநிலைகள்; ஈற்றேரேகாரம் அசை. நாற்குணங்களில் முதலாவது நாணமென்பது கூச்சம்; இதையே வெட்க மென்பாருமுளர். இதுவே பெண்தன்மையில் முதன்மை யானது. இதிலிருந்தே மற்ற மூன்றும் பிறந்து சிறந்திருக்கும். இது இல்லையேல் மற்ற மூன்றும் இலவாகும். கணவ

னிடத்துக் காதற் குறிப்பைக் காட்ட இயற்கையி லுண்டாகும் மன வொடுக்கம்,மடம்என்பது மேற்சொன்னவெட்கங்காரணமாகக்கண வனுக்குத் தன்மேலுள்ள காதலை உணர்ந்தும் உணராததுபோ லிருப்பது. இதைத்தான் தெரிந்தும் தெரியாததுபோ லிருப்ப தென்பர். இது படித்த பெண்களுக்கும் இருக்கவேண்டிய உயர் குண மென்பதுபற்றியே பெண்ணரசியாராகிய ஔவையாரும்.

"பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்."

என்றார். பேதைமை யென்பது இங்கேதெரிந்தும் தெரியாதது போலக் கணவனெதிரில் அடங்கியிருக்க வேண்டிய மடம் என்பதை யே குறிக்கும். அச்சம் என்பது அஞ்சவேண்டியவைகளுக்கு அஞ்சி நடக்கும் அறிவுடைமை. இதற்கும் மேற்குறித்த மடம் என்பதற் கும் சம்பந்தம் உண்டு. தெரிந்தும் தெரியாததுபோலக் கணவ னெதிரில் அஞ்சியிருப்பதே அச்சமாம். இதுபற்றியே நாயனாரும்

"அஞ்சுவ தஞ்சாமை பேதைமை அஞ்சுவ
தஞ்ச லறிவார் தொழில்."

என்றார். அஞ்சவேண்டியவைகளுக்கு மிஞ்சுவதே பேதைமை யாம். இது ஆண் பெண் இருபாலார்க்கும பொதுப்படக் கூறி யுள்ளது. இந்தப் பேதைமைக்கும் "பேதைமை, யென்பது மாதர்க் கணிகலம்" என்றதில் உள்ள பேதைமைக்கும் வேறுபா டுண்டு. இந்தப் பேதைமை அஞ்சாமைக்கு அஞ்சுதலாகும். இதற்குக் கார ணம் மடமும் மடத்துக்குக் காரணம நாணமுமாகும். கடைசியாகப் பயிர்ப்பென்பது, அச்சங் காரணமாகத் தோன்றும் அருவருப்பு. இது கணவன் கை, தனமேற் பட்டாலும், பெண்ணுக் கியல்பாயுள்ள அருவருப்பு. இவை நான்கும் கற்புடையார்க்கு இயற்கையாயுள்ள அருங்குணங்களாம். இவைகள்தாம் தமயந்தியின் பெண்ணரசாட்சி க்கு மாட்சியா யமைந்திருந்த சதுரங்க சேனைகளாம், ஐம்பொறிக ளே புலன்களின் வழியில் மனதைச் செலுத்திக் கெடுக்காமல் பாதுகாத்தன; ஆகையால்,மந்திரிகளாயின-அரசாட்சிக்குப்பேரிகை

யொலி இன்றியமையாததாகையால் சிலம்பே அதுவாயிற்று' அகக்கண் மந்திரியானதுபோலப் புறக்கண் வாளும் வேலுமாயிற்று. வதனமாகிய மதியாகிய இடை யென்றதனால் உருவகனருவுகமாக் கொள்க. அவள் - தோன்று எழுவாய், ஆளும் - பயனிலை, அரசு - செயப்படுபொருள். அரசாளும். பயனிலை என்பாருமுளர்.

[தமயந்தியின் இடை முலைப்பளு பொறு தெனல்.]

மோட்டிளங் கொங்கை முடியச் சுமந்தேற
மாட்டா திடையென்று வாய்விட்டு—நாட்டேன்
அலம்புவார் கோதை யடியிணையில் வீழ்ந்து
புலம்புமா நூபுரங்கள் பூண்டு.

(ப - ரை) இடை - தமயந்தியின் இடுப்பானது, மோடு இளமை கொங்கை-உயர்ந்து வளரும் இளமுலைகளை, முடிய சுமந்து ஏறமாட்டாது என்று - அவள் ஆயுள்நாள் முழுவதும் தாங்கி நிற்கும் வலியுடைய தாதாதென்று, நூபுரங்கள் - (அவளுடைய பாதச்) சிலம்புகள், நாள் தேன் அலம்புவார் கோதை அடி இணையில் வீழ்ந்து-புதுத்தேன் ததும்பும் (மலர் சூடிய) கூந்தலையுடையாளாகிய அவளது இரு பாதங்களிலும் விழுந்து, பூண்டு வாய்விட்டு புலப்பும் - (அவைகளுக்கு) அணியாகி வாய் திறந்து ஒலிக்கும்.

(க - ரை) தமயந்தியின் இடை, முலைப்பளு தாங்காதென்று சிலம்புகள் புலம்புகின்றனவாம்.

(வி—ரை) மோடு-உயர்வு. இளமை + கொங்கை = இளங் கொங்கை;''ஈறுபோதல்''என்னும் சூத்திர விதி பெற்றது. 'முடிய' என்பதற்கு கெடுநாளைக்கெனினும், முற்றும் பருத்து வளருமட்டு மெனினும் பொருந்தும். அவை இளமையாயிருக்கும்போதே இடை தாங்கமாட்டாமல் துவள்கின்றமைதே; முற்றும் வளர்ந்தால் தாங்குவதெப்படியென்று சிலம்புகள் புலம்புகின்றன என்று கூட்டுக. சிலம்புகள் அலம்புவதையேபுலம்புவதென்றார். இது தற்குறிப்பேற்றவணியாகும்,

ஏறமாட்டா தென்பது நிமிர்ந்திராமல் வளைந்து ஒடிந்துபோ மென்பதனால் - நாள்தேன், நாள்மலர் என்புழிப்போலப் புதுமையை உணர்த்துகிறது; அலம்பு + வார் = வினைத்தொகை; வார் + கோதை = வினைத்தொகை; ஆகையால், அலம்புவார்கோதை யென்பது இரு வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாம். அடியிணை = இணை அடி; நகர்ப்புறம், புறநகர் என்புழிப்போல இலக்கணப்போலி. ஆம் - அசைநிலை. (௫௫)

[தமயந்தியின் இடை, என்றுந் துவளு மெனல்.]

என்று நுடங்கு மிடையென்ப வேழுலகு
நின்ற கவிகை நிழல்வேந்தே—ஒன்றி
யறுகாற் சிறுபறவை யஞ்சிறகால் வீசுஞ்
சிறுகாற்றுக் காற்றாது தேய்ந்து.

(ப - ரை) ஏழ் உலகும் நின்ற கவிகை நிழல் வேந்தே-இந்தப் பூவுலகின் ஏழு தீவுகளிலும் சென்று நிலைத்துள்ள குடை நிழலையுடைய அரசனே!. ஆறு கால் சிறுமை பறவை ஒன்றி அம் சிறகால் வீசும்-ஆறுகால்களையுடைய சிறிய பறவைகளாகிய வண்டுகள் நெருங்கியிருந்து, தமது அழகான இறக்கைகளால் உண்டாக்குகிற, சிறுமை காற்றுக்கு ஆற்றாது-மென்மையாகிய காற்றைப் பொறாமல், இடை - அவளுடைய இடுப்பானது, தேய்ந்து-மெலிந்து, என்றும் நுடங்கும் என்ப-எப்போதும் துவளும் என்று சொல்லுவார்கள்.

(க - ரை) தமயந்தியின் இடையானது, வண்டுகள் தம் சிறகால் வீசும் காற்றைச் சகியாமல் துவளும் (அத்தனை நுண்ணியதாம்.)

(வி-ரை) 'என்றும்' என்றதனால், நடக்கும்போதே யன்றிப் படுக்கும்போதும் எழும்போதும் இருக்கும்போதும் என்றும் கொள்க. பார்த்தோர்-தோன்றா எழுவாய், என்ப - பயனிலை; யென்று கொள்க. ஏழுலகு என்றது ஏழு தீவுகளை. அவை, நாவற்

றீவு முதலியனவாம். இங்கே கவிகை யென்றது அவன் ஆணையை; இருபத்தொன்பதாஞ் செய்யுளைக் காண்க. ஒன்றுதல் - நெருங்குதல்; ஒன்று - பகுதி. வண்டை அறுகாற் பறவை யென்றதற்கு,

"ஓர்காற் செலின் அறுகால் வந்தனை யென்பர்"

என்னும் பெரியார் பாட்டை ஒப்பிட்டுக் காண்க. சிறகால்-மூன்றும்வேற்றுமைக் கருவிப்பொருள். சிறுகாற்றுக்கு-நான்காம் வேற்றுமைப் பகைப்பொருள் என்பாருமுளர்; இதை வேற்றுமை மயக்கமாக இரண்டாம் வேற்றுமையிற் கொள்வதே ஏற்றமா மென்க. ஆற்றாது-ஆற்றாமல்; எதிர்மறை வினையெச்சம். தேய்ந்து-உடன்பாட்டு வினையெச்சம்; இவை யிரண்டில், முன்னையது பின்னயதையும், பின்னையது 'நடங்கும்'என்னும் வினையையுங்கொண்டு முற்றியது. 'அறுகால்' என்பதற்கே ஆறுகால்களையுடைய வண்டு என்று பொருள் கொள்ளின் பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையாம்; அப்போது அறுகாற் சிறு பறவை யென்பதற்கு ஆறுகால்களையுடைய வண்டாகிய சிறுபறவை யென்று பொருள் கொள்க. பறவை - தொழிற்பெயர்; பற - பகுதி; ஐ-வினைமுதற் பொருண்மை விகுதி;தொழிலடியாகப் பிறந்த பெய ரெனினுமாம். தொழிற்பெயராக்கொளின் பறவைக்கு ஆகுபெயரா மென்க. ()

[தமயந்தியின் நெற்றியே மன்மதன் அம்பு தீட்டு மிடமெனல்.]

செந்தேன் மொழியாள் செறியளக பந்தியின்கீழ்
இந்து முறியென் றியம்புவார்—வந்தென்றும்
பூவாளி வேந்தன் பொருவெஞ் சிலைசார்த்தி
ஏவாளி தீட்டு மிடம்.

(ப - ரை) பூவாளி வேந்தன்-மலரம்புகளையுடைய மன்மதன், என்றும் வந்து-எப்போதும் வந்திருந்து, பொரு வெம்மை சிலை சார்த்தி - போர் செய்யுங் கொடிய வில்லைச் சாரவைத்து, ஏ ஆளி தீட்டும் இடம்-அம்புவரிசைகளைத் தீட்டிக் கூர்மைச் செய்யுமிடம், செம்மை தேன் மொழியாள்-செந்தேன் போன்ற தீஞ்சொல்லைப்

பேசும் தமயந்தியினுடைய, செறி அளகபந்தியின் கீழ் - நெருங்கிய முன்னெற்றிமயிர் வரிசையின் கீழேயுள்ள, இந்து முறி என்று இயம்புவார்-பிறைத்துண்டமாகிய நெற்றியென்று (கண்டோர்) சொல்லுவார்கள்.

(க - ரை) தமயந்தியின் நெற்றியென்னும் பிறைத்துண்டமே மன்மதன் தன் ஏவாளிகளைத் தீட்டு மிடமாம்.

(வி - ரை) செம்மை + தேன் = செந்தேன். "ஈறுபோதல்" என்னும் சூத்திரவிதி பெற்றது. செறியளகம் - வினைத்தொகை. அளகபந்தி - ஆறும் வேற்றுமை. வடசொற்களாகையால் வலி மிகவில்லை. இந்து முறியென்றது நெற்றியை. மன்மதன் வில்லென்றது புருவங்களை. நெற்றியே அம்புகளைத் தீட்டும் சாணைக்கல்லாம். முன்னெற்றியில் அழகாய்ச் சுருண்டு தொங்கும் குறுமயிரே அம்புகளாம். பூவாளி-இருபெயரொட்டு. பொருசிலை - வினைத்தொகை. ஏவாளியென்பதற்கு ஏவாகிய அம்புகளென்று பொருள் றுவாரு முளர். ௩௫

[தமயந்திக்கும் அன்னத்துக்கும் சம்பந்தம் என்னெனல்]

அன்னமே! நீயுரைத்த வன்னத்தை யென்னாவி
யுன்னமே சோரு முனக்கவளோ—டென்ன
அடைவென்றான் மற்றந்த வன்னத்தை முன்னை
நடைவென்றா டன்பா னயந்து.

(ப - ரை) அந்த அன்னத்தை - (தனக்கெதிரிலிருந்த) அந்த அன்னப் பறவையை, முன்பு - இளமையிலேயே, நடை வென்றாள் தன்பால் நயந்து - நடையினால் வென்றவளாகிய தமயந்தியின்மேல் இச்சை வைத்து, அன்னமே - ஓ அன்னப்பறவையே!, நீ உரைத்த அன்னத்தை உன்னவே-நீ சொன்ன அன்னம் போல்வாளை நினைக்கும்போதே, என் ஆவி சோரும் - என் உயிர் வாடுகின்றது. 'அவளோடு உனக்கு அடைவு என்ன?'' என்றான் - 'அவளோடு உனக்குள்ள சம்பந்தம் யாது?' என்று (நளன்) கேட்டான்.

(கு - ரை) "உனக்கும் தமயந்திக்கும் என்ன சம்பந்தம்?" என்று நளமகாராசன் அன்னத்தைக் கேட்டான்.

(வி- ரை) அன்னமே - விளி. அன்னம் போல்வாளை அன்னம் என்றது உவமையாகுபெயர். உன்னவே என்பதிலுள்ள ஏகாரத்தை அசைநிலையாத் தள்ளுவாருமுளர்; இதைப் பிரிநிலையென்றேனும் தேற்றமென்றேனுங் கொள்வதே சிறப்பாம். முன்னே என்பதிலுள் ஏகாரம் பிரிநிலை. நளன் - தோன்றா எழுவாய்; என்றான் - பயனிலை. அடைவு - தொடர்பு, சம்பந்தம். நயந்து என்னும் வினையெச்சம், என்றான் என்னும் வினை கொண்டு முற்றியது. மற்று. அசைநிலை. அந்த அன்னம் என்றது தமயந்தியைப்பற்றிச் சொன்ன அன்னத்தைச் சுட்டிற்று. (௩௬)

## [தமயந்தியின் நடையைக் கற்க அன்னம் அவளிடத்தில் வந்ததெனல்]

பூமனைவாய் வாழ்கின்ற புட்குலங்கள் யாமவடன்
மாமனைவாய் வாழு மயிற்குலங்கள்—காமன்
படைகற்பான் வந்தடைந்தான் பைந்தொடியாள் பாத
நடைகற்பான் வந்தடைந்தோம் நாம்.

(ப - ரை) காமன் படை கற்பான் வந்தடைந்தான்-மன்மதன் (அவளுடைய கட்பகழியைக் கண்டு) அம்பெய்யுந் தொழிலைக் கற்கும் பொருட்டு அங்குவந்து சேர்ந்தான்; நாம் பசுமை தொடியாள் பாதம் நடை கற்பான் வந்தடைந்தோம்-(அவனைப்போலவே) நாங்களும் அந்தப் பசும் பொன்வளையலை யணிந்தவளுடைய கானடையைக் கற்றுக்கொள்ளும்பொருட்டு (அங்கு) வந்து சேர்ந்தோம். (ஆகையால்), பூமனைவாய் வாழ்கின்ற புள் குலங்கள் யாம் அவள் தன் மாமனைவாய் வாழும் மயில்குலங்கள்-மலர்வீட்டில் வாழும் பறவையினங்களாகிய நாங்கள் அவளுடைய மாளிகையில் வாழும் மயிற் கூட்டங்கள் (போல அவளோடு பழகியிருக்கிறோம்).

(க - ரை) "தமயந்தியினிடத்தில் காமன் படைகற்க வந்தான்; நாங்கள் நடை கற்க வந்தோம்" என்று அன்னம் நளனிடத்திற் சொல்லிற்று.

(வி - ரை) பூமனை - இருபெயரொட்டு. மனைவாய் - ஏழாம் வேற்றுமை. புட்குலங்கள், மனிதரது தொகுதி என்புழிப் போல ஒன்றன்கூட்டத் தற்கிழமைப் பொருளையுடைய ஆறும் வேற்றுமைத் தொகை. அவள் + தன் = அவடன்; இதில் வருமொழி முதலிலுள்ள தகரம் டகரமாகையில் ளகரம் கெட்டது. மாமனை- அரண்மனை, திருமகள் விலாச மாளிகை. 'மயிற் குலங்கள் போல அங்கேயே தங்கிப் பழகியிருக்கின்றோம். அவளுடைய நடை கற்கவந்தோமே, அதுதான், வந்து நெடுநாளாகியும், அந்நடையைக் கற்று அதன்படி நடக்கமாட்டாமல் நாங்கள் அங்கேயே தங்கியிருக்க நேரிட்டதனால், அவளோடு வாழும் மயிற் கூட்டங்கள் போலாயினோம்' என்று கூட்டுக. பின்னீரடியில் அவளரண்மனைக்குக் காமன்படைகற்க வந்தபடி நாங்களும் அவள்நடைகற்க வந்தோமென்று அன்னம் அவளிடத்திற்கு வந்த காரணத்தைக் கூறிற்று. 'அப்படி வந்தும் இன்னும் அவள் நடையைக் கற்கவலியின்றி அங்கேயேமயிற்கூட்டங்கள் போலத் தங்கியிருக்கின்றோம்' என்றதனால் அதற்கு அவளோடுள்ள சம்பந்தமும் தெரிவித்தபடியாம். இதில் மேலைப்பாட்டிலுள்ள நளன் வினவுக்கு அன்னத்தின்விடை அடங்கியிருப்பது காண்க. பூமனையினும் அவள்தன் மாமனை எமக்குச் சிறந்திருக்கிற தென்பதூஉம், அவள் நடை நாங்கள் கற்க அவாவும் அழகுநடை என்பதூஉம் குறிப்பிற் றோன்றுவது தெரிக. அவளுக்கு வயது வந்ததுமுதல் அவளுடைய கண்ணழகிலும் சொல்வனப்பிலும் மயங்கிய காமன் அங்குப் படைகற்பான் வந்தானென்பதையும் குறிப்பிற் கண்டுகொள்க. படை - படைத்தொழில்; இது ஆகுபெயர்; தொடுக்குந் தொழிலையுடையது தொடை, விடுக்குந் தொழிலையுடையது விடை என்புழிப்போல. இதில் ஐகாரம் செயப்படுபொருண்மை விகுதி. (௩௭)

[நளன், தமயந்தியின்மேற் காதல் கொண்டா னெனல்.]

*இற்றது நெஞ்ச மெழுந்த திருங்காதல்*
*அற்றது மான மழிந்தது நாண்—மற்றினியுன்*
*வாயுடைய தென்னுடைய வாழ்வென்றான்வெங்காமத்*
*தீயுடைய நெஞ்சுடையான் றேர்ந்து.*

(ப - ரை) நெஞ்சம் இற்றது - (அது கேட்டவுடனே அவனுக்கு) மன நிலை அழிந்தது; இரும் காதல் எழுந்தது - பேராசை வளர்ந்தது; மானம் அற்றது - பெருமை நீங்கிற்று, நாண் அழிந்தது - வெட்கம் கெட்டது; (ஆகையால்) வெம்மை காமம் தீ உடைய நெஞ்சுடையான் - கொடுங்காம மென்னும் தீ மூண்ட மனமுடையானாகிய அவன், தேர்ந்து - சற்று நிதானித்து, மற்று - நீ சொன்ன திருக்கட்டும்; இனி-இனிமேல், என்னுடைய வாழ்வு - என்னுடைய உயிர் வாழ்க்கை, உன்னுடைய வாய் உடையது - உன்னுடைய வாயை (இடமாக)வுடையதாயிருக்கிறது, என்றான் - என்று சொன்னான்.

(க - ரை) அன்னத்தை நோக்கி நளன், "ஏ அன்னமே! இனி நான் சகியேன்! நான் பிழைத்திருக்க வேண்டுமானால் அவளிடத்தில் நீ போய்ப் பக்குவமாய்ப் பேசிக் காரியத்தை முடித்து வா!" என்றான்.

(வி - ரை) நெஞ்சம் இறுதலாவது உடைதல்; அதாவது. நிலை தளர்தல். இருநில மென்பதுபோல இருங்காத லென்பதூஉம், பேரளவைக் குறித்தது. மானம் அறுதலாவது முற்றும் ஒழிதல். தான் அரசனென்னும் பெருமை தோன்றா தொழிதல். நாணம் அழிதல் - கேவலம் ஒரு பறவையினிடத்தில் தன்னுடைய அழிநிலையைக் கூசாமற் சொல்லத் துணிதல். மற்று என்பதை அசையாகக் தள்ளுவாரு முளர்; இங்கே வினைமாற்றுப் பொருளிற் கொண்டாம். உன் வாயுடையது என்பதில் உள்ள உடையது - குறிப்பு வினைமுற்று. உடைய - குறிப்புப் பெய

ரெச்சம். உடையான் - ஆண்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர். தமயந்தியின் இருப்பை எனக்கறிவித்த நீயே நேரிற் சென்று பக்குவமாய்ப் பேசி அவளை இணக்குவித்தாலன்றி என் உயிர் நில்லாது என்னுங் குறிப்புத் தோன்றவே 'உன்னுடைய வாயுடையதென்னுடைய வாழ்வென்றான்' என்றார். நெஞ்சுடையான்-எழுவாய், என்றான் - பயனிலை. மற்று என்பதற்கு 'இதுவரையில் அவளைப்பற்றி உன் வாயாலேயே எனக்கறிவித்துக் காதன் மூட்டினாய்; அதனால் நான் வாடி வருந்துகிறேன்; இனிமேலும் உன் வாயாலேயே நான் பிழைத்திருக்க வேண்டியவனாயிருக்கிறேன்; எல்லாம் நீ போய் அவளிடத்திற் பக்குவமாய்ப் பேசி அவளை இணக்குவிப்பதி லிருக்கிறது; இல்லையேல் நான் இறப்பது சத்தம்; இதுவே என் விரதம்' என்று குறிப்பிற் கூறியபடியுமாம் என்று பொருள் கொள்க. "வெங்காமத் தீயுடைய நெஞ்சுடையான் தேர்ந்து, 'இறந்தது நெஞ்சம், எழுந்த திருங்காதல்' என்று அவனே கூறியபடி பொருள் கொள்ளல் பொருந்தாதென்க. இது முற்றும் ஆரிய நைஷதத்திற்குச் சாம்பிரதாய விரோதமாம். (௩௮)

[அன்னம் தமயந்தி யிடத்திற் சென்ற தெனல்]

வீமன் றிருமடந்தை மென்முலையை யுன்னுடைய
வாம நெடும்புயத்தே வைகுவிப்பேன்—சேம
நெடுங்குடையா யென்றுரைத்து நீங்கியதே யன்னம்
ஒடுங்கிடையா டன்பா லுயர்ந்து.

(ப - ரை) சேமம் நெடுமை குடையாய்-(உலகுயிர்க்கு) இன்ப காரணமான பெரியகுடையையுடையவனே!, வீமன் திருமடந்தை மென்மை முலையை-வீமராசனுடைய செல்வமகளாம் தமயந்தியினுடைய மெல்லிய முலைகளை, உன்னுடைய வாமம் நெடுமை புயத்தே வைகுவிப்பேன்-உன்னுடைய அழகான பெரிய தோள்களினிடத்திலேயே பொருந்தச் செய்வேன், என்று அன்னம் உரை

த்து - என்று அன்னமானது (நளனிடத்திற்)சொல்லி, ஒடுங்கு இடையாள்தன்பால் உயர்ந்து நீங்கிற்று-குறுகிச் சிறுத்த இடையையுடையாளாகிய தமயந்தியினிடத்து உயரப் பறந்து போயிற்று.

(கு - ரை)"தமயந்தியை உனக்கே மனைவியாக்குவேன்"என்று அன்னம் நளனிடத்திற் சொல்லி, அவளிடத்துப் பறந்து போயிற்று.

(வி - ரை) வீமன் - வீமராசன்; ஆறும் வேற்றுமை மயக்கம் ; நான்காம் வேற்றுமைக்கே முறைப்பொரு ளுரியதாம். திரு - செல்வம்; இதுவே செல்வியென்று வழங்கிவருவதையும் காண்க. திரு அழகியவென்று கொண்டு பண்புத்தொகையாக்குக. மென்மைமுலை. "ஈறுபோதல்"என்பதனுல் மென்முலையென்றாயிற்று. வாமம் நெடுமை புயம்-இரு பண்புத்தொகை. 'புயத்தே' என்பதில் ஏகாரம் அசையெனத் தள்ளுவாரு முளர். இதைத் தேற்றமென்றேனும் பிரிநிலையென்றேனும் கொள்வதே சிறந்ததாம். வைகுவிப்பேன் - பிறவினைத்தன்மை ஒருமை எதிர்கால வினைமுற்று - சேமநெடுங்குடை - இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத் தொகையாக்குவதே பான்மையாமென்க. நீங்கியதே என்பதில் ஏகாரம் அசைநிலை; இசைநிறை யெனினுமாம். ஒடுங்கிடை - வினைத்தொகை. வாமநெடும் புயத்திலேயே வைகுவிப்பேன் என்று கூட்டி நிச்சயப்பொருளாகவுங் கொள்க. நீ தவிர வேறொருவனுக்கவள் மாலையிடச் செய்யேன் என்பது கருத்து, நீ சேமநெடுங்குடையா னுகையால் உன் எண்ணம் சேமமாய்ப் பலிக்கும் என்பது குறிப்பு. என்று-இடைச்சொல். (நக)

[அன்னம் எப்போது திருமிவருமென்று நளன் எதிர் பார்த்திருந்தா னென்னல்.]

இவ்வளவிற் செல்லுங்கொலிவ்வளவிற் காணுங்கொல
இவ்வளவிற் காத லியம்புங்கொல்—இவ்வளவின்

மீளுங்கொ லென்றுரையா விம்மினான் மும்மதநின்
றாளுங்கொல் யானை யரசு.

(ப - ரை) மும்மை மதம் நின்று ஆளும் கொல் யானைஅரசு - மூன்றுவிதமான மதங்களும் நிலைத்து அதனால் அவைகளின் வசப்பட்டு நிற்கும் கொலையானையையுடைய அரசனாகிய நளமகாராசன், இ அளவில் செல்லுங்கொல்-(அன்னம்)இத்தனை நேரம் (குண்டின புரிக்குப்) போயிருக்குமோ!, இ அளவில் காணுங்கொல் - இத்தனை நேரம் தமயந்தியைப் பார்த்திருக்குமோ!, இ அளவில் காதல் இயம்புங்கொல் - இத்தனை நேரம் (எனக் கவள்மேலுள்ள) உண்மையன்பைச் சொல்லியிருக்குமோ!, இ அளவில் மீளுங்கொல் - இத்தனை நேரம் (அங்கிருந்து) திருமிவந்துகொண்டிருக்குமோ!, என்று உரையா விம்மினான் - என்று சொல்லிப் பெருமூச்சு விட்டு ஏங்கினான்.

(க - ரை) இத்தனை நேரம் அன்னம் போயிருக்குமோ என்பது முதலியவைகளைச் சொல்லி நளமகாராஜன் ஏங்கினான்.

(வி - ரை) இது கைக்கிளையின்பாற்படும். இது முதல் ஐந்து பாடலும் கைக்கிளையாகிய ஒருதலைக்காம விரகவேதனையையே குறிக்கு மென்க. இவ்வளவில் என்பவைகளிலுள்ள இகரம் சுட்டளவைக் குறிக்கிறது. உரையா என்பது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம்; செய்யாநின்று என்பதின் திரிபாகவும் சிலர் கொள்ளுவர். யானைக்குக் கன்னமதம் கபோல மதம் பீச மதம் என்பவைகளே மும்மதங்களாம் - கொல் என்பவைகள் ஐயப் பொருளில் வந்தன. கொல்யானை என்பது வினைத்தொகையாமாயினும் கொலையானை யென்று பொருள் கொண்டாம். கொல் என்பது ஐகாரம் புணர்ந்து கெட்ட முதனிலைத் தொழிற்பெயர், செல் என்புழிப்போல. மும்மத வயப்பட்டு மதோன்மத்தமாயிருப்பதே களிற்றியானையின் சிறந்த இலக்கணமாம். ஆகையால், மும்மதங்களும் பொருந்தி நின்று (அதை)ஆள்வதாகக் கூறியிருக்கின்றது. 'அரசு'-

பண்பின் பெயர் பண்பிக்கானமையால் ஆகுபெயர். அரசு - எழுவாய், விம்மினான் - பயனிலை. இங்கே விம்முதலாவது பெருமூச் செறிந்து ஏங்குதல். (௩௦)

[நளன் தமயந்தியை எண்ணியெண்ணி மனமுருகின னெனல்]

சேவல் குயிற்பெடைக்குப் பேசுஞ் சிறுகுரல்கேட்
டாவி யுருகி யழிந்திட்டான்—பூவி
னிடையன்னஞ் செங்கா லிளவன்னஞ் சொன்ன
நடையன்னத் தன்பா லயர்ந்து.

(ப - ரை) பூவின் இடை அன்னம் - தாமரைமலரில் வாழும் அன்னப்பறவை, செம்மை கால் இளமை அன்னம் - (அன்றியும்) சிவந்த காலுகளையும் இளம் பருவத்தையுமுடைய அன்னப்பறவை, சொன்ன-எடுத்துக்கூறிய, நடை அன்னம்தன்பால் அயர்ந்து-அழகு நடை நடக்கும் அன்னம்போல்பவளாகிய தமயந்தியின்மேல் ஆசை அதிகரித்து (அதனால்) சேவல் குயில் - ஆண்குயிலானது, பெடைக்கு-பெட்டைக்குயிலோடு, பேசும் சிறு குரல் கேட்டு-பேசுகின்ற மெல்லிய குரலோசையைக் கேட்டு, ஆவி உருகி அழிந்திட்டான்-உயிர் தளர்ந்து அறிவழிந்தான்.

(க - ரை) குயில்கள் ஆணும் பெண்ணும் பேசுங்குரலைக் கேட்டு நளன் அறிவழிந்தான்.

(வி - ரை) சேவற்குயில் என்று குயிலென்பதைச் சேவலோடு கூட்டாமல் பெட்டையோடு சேர்ப்பார் சிலர்; அப்போது சேவல் என்பதற்கு ஆண்குயிலென்று எப்படிப் பொருள் கொள்ளலாம். முந்திச் சேவற் குயிலென்று கூட்டிக்கொள்வதனால், பிந்தி வரூஉம் பெடையென்பதற்குத் தாராளமாய்ப் பெண்குயிலென்று பொருள் விரிக்கலாம். பெடைக்கு என்பது பெடையோடு என்று

மூன்றும் வேற்றுமை உடனிகழ்ச்சிப்பொருளில் இருக்கவேண்டியது, நான்காம் வேற்றுமைக் கொடைப்பொருளில் வந்தது வேற்றுமை மயக்கமாம். சிலர் இதை எழாம் வேற்றுமை என்றும் இயம்புவர். சிறு குரல் என்பதில் சிறுமை மென்மையைக் குறித்தது. குரல், ஓசைக்கு வந்தமையால் ஆகுபெயர். ஆவி உருகி அந்த ஆவியே அழிந்திட்டான் அதாவது மூர்ச்சையானுன் என்று பொருள் கொள்வாருமுளர். பூவின் இடை அன்னம் என்பதற்குக் கமலாசினியாகிய திருமகளென்று பொருள் கூறுவாறுமுளர். இங்கது சிறவாது. பூவினிடை யன்னமும் செங்காலின வன்னமுமாகிய தூது சென்ற அன்ன மென்பதே சிறந்த பொருள். இது, செய்யுளாகையால் ஆசிரியர் அலங்காரமாய் அந்த இரன்னத்தையே அன்னம் அன்னமென்று வன்னிக்கின்ருர். ஆகையால் இது, பூவினிடைச் செங்கா லிளவன்னம் என்றிருந்தாலே போதுமானது; இது தெரியாதார் இலக்குமியை இழுத்துக் கொண்டுவருவர். நடையன்னம் என்பதற்கு, அன்னஞ் சொன்ன அழகுநடையன்னமாகிய தமயந்தி யென்று பொருள் கொள்க. நயந்து என்னும் செய்து என்னும் வாய்பாட்டெச்சம் உருகி என்னும் எச்சத்தையும், மற்றது, அழிந்திட்டான் என்பதையும் கொண்டு முடிந்தன. நளன்-தோன்று எழுவாய், அழிந்திட்டான் - பயனிலை. பூவினிடை யன்னம் என்பது 'வாவினிடையன்னம்' என்றும் பாடபேதமுண்டு அப்போது திருமகள் எப்படி வருவாள்? பொருள் கொள்வதெப்படி? (௩௧)

[நளன் மயிலகவுவதைக் கண்டு மனமறுகினுனெனல்.]

அன்ன முரைத்த குயிலுக் கலசுவான்
மென்மயிறன் தோகை விரித்தாட—முன்னதனைக்
கண்டாற்று துள்ளங் கலங்கினுன் காமநோய்
கொண்டார்க்கி தன்றே குணம்.

(ப - ரை) அன்னம் உரைத்த குயிலுக்கு அலசுவான் - அன்னஞ் சொன்ன குயிற்குரலுடையவளாகிய தமயந்தியைப் பெறும்

பொருட்டு மன மேங்கிநிற்கும் நளன், மென்மை மயில் தன்தோகை விரித்து ஆட - மெல்லிய இறகையுடைய மயிலானது தன் கலாபத்தை விரித்தாடிக்கொண்டிருக்க, முன் அதனைக்கண்டு-தன் னெதிரில் அதைப் பார்த்து, ஆற்ருது,உள்ளம் கலங்கினன். பொருமல் மனங் கலங்கி நின்ருன்; காமம் நோய் கொண்டார்க்கு குணம் இது அன்ருே-பெண்ணைசை நோய் பிடித்தவர்க்கு இயல்பாயுள்ள குணம் இதுவல்லவா?

(கு - ரை) அன்னஞ்சொன்ன குயிலாகிய தமயந்திக்காக மயங்கி நிற்கும் நளன் மயிலாடக் கண்டு மனங் கலங்கினன்.

(வி - ரை) 'அன்னம் உரைத்த' என்பதற்கு 'அன்னத்தினுல் சொல்லப்பட்ட' என்று பொருள் கூறுவாருமுளர். குயிலுக்கு என்பது உவமையாகுபெயராய்த் தமயந்தியைக் குறித்தது. அலசுதல் - ஏங்குதல். குயிலின் பொருட்டு அலசுதல் என்றிருப்பதால், நான்காம் வேற்றுமைப் பொருட்டுப்பொருள்; இதை மூன்ரும் வேற்றுமைக் கருவிப்பொருளின் மயக்கமாக மயங்குவாருமுளர். குயிலினுல் அலசுவான் என்பதற்குக் குயிலினுல் அலசப்படுவான் என்று அவர்கள் பொருள் கொண்டிருக்க வேண்டும். காணுத குயிலால் அலன் எப்படி அலசப்படுவான்? இது பொருந்தாப் பொருள். உள்ளங் கலங்கினன் என்பது

"உயர்திணை தொடர்ந்த பொருண் முதலாறும்"

என்பதனுல் வந்தது. 'ஆண்மயில் இப்படி தன் சிறகை விரித்தாடிப் பெண்மயிலை மகிழ்விக்கின்றதே! இப்படி நாமுஞ் செய்வதற்கில்லையே! அந்தக்காலம் எப்போது வருமோ' என்று ஏங்கினன் னென்று ஒட்டுக. அலசுவான் எழுவாய் உள்ளங் கலங்கினன்-பயனிலை. உள்ளங்கலங்கினு னென்பது உள்ளங் கலங்கிற்று என்றிருக்கவேண்டியது. மேற்சொன்ன காரணத்தால் கலங்கினு னென்ருயதைக் கவனிக்க. (௬௨)

[நளன் தமயந்தியின் இடையொப்பான பூங்கொடியைக் கும்பிட்டா னெனல்.]

*வாரணியுங் கொங்கை மடவா ணுடங்கிடைக்குப்*
*பேருவமை யாகப் பிறந்துடையீர்—வாரீர்*
*கொடியா ரெனச்செங்கை கூப்பினா னெஞ்சந்*
*துடியா நெடிதுயிராச் சோர்ந்து.*

(ப - ரை) நெஞ்சம் துடியா நெடிது உயிரா - மனந்துடித்துப் பெருமூச்சுவிட்டு, கொடியார்-ஏ, பூங்கொடியாரே!, வார் அணியும் கொங்கைமடவாள்-கச்சணிந்த மார்பையுடைய தமயந்தியினுடைய, நுடங்கு இடைக்கு - துவள்கின்ற இடுப்புக்கு, பெருமை உவமை ஆக பிறந்து-பெரிய உவமானமாகத் தோன்றி, உடையீர்- (அதனால் எய்தும் பயனை) உடையவராயிருக்கின்றீர்; வாரீர் (ஆகையால் நீவிர் என்னருகே) வம்மின்! என-என்று, சோர்ந்து -மெலிந்து, செம்மை கை கூப்பினான்-தன் சிவந்த கைகளை (நளன்) குவித்து வணங்கினான்.

(க - ரை) நளன் தமயந்தியைப்போலப் பூங்கொடிகளைக் கண்டு, தன் கைகுவித்து வணங்கினான்.

(வி - ரை) மடவாள் - குணப்பெயர்ப் பகுபதம். மடமை - பகுதி; ஆள் - விகுதி. நுடங்கு இடை-துவளும் இடை. இது கொடி போலத்துவள்வதால், கொடி இதற்குஉவமானமாயிற்று. பெருமை+உவமை; பேருவமை, "ஈறுபோதல்" என்னும் சூத்திர விதி பெற்றது. உடையீரென்னுஞ் செயப்படுபொருள் குன்றா முன்னிலைப் பன்மை வினைமுற்றுக்குப் பயனை யென்று செயப்படுபொருள் வருவித் துரைத்தாம். 'வாரீர்' என்பது குறுகும்வழி குறுகிற்று. ஏ கொடியார், (நீர்) பிறந்துடையீர்; ஆகையால், வாரீர் என்று கூட்டுக. கொடியார் - அண்மைவிளி. நளன் நெஞ்சந் துடியா நெடிதுயிரா, 'கொடியார்! வாரணியுங் கொங்கை மடவாள் நுடங்கிடைக்

குப் பெருவமையாகப் பிறந்துடையீர் - (ஆகையால் நீர்) வாரீர் எனச் சேர்த்து செங்கை கூப்பினுனென்று மொழிமாற்றிப் பொருள் கூட்டிக் காண்க. கொடியார் ''உவப்பினுஞ் உயர்வினும் சிறப்பினுஞ் செறலினும்'' என்ற சூத்திரப்படி அஃறிணை உயர்திணையாயிற்று. கொடியாரென்று ஒரு கொடியையே மரியாதைப் பன்மையாகவாவது, பலகொடிகளையுங் கூட்டியென்றாவது கொள்ளலாம். வாரீர்=வா+ரு+இர். செடுமை + இ+த்+உ=நெடிது இங்குச் சிறப்பால் பூங்கொடி, தமயந்தியின் இடைக்கு இணையாயிற்று. கொடியார் என்பதற்குத் 'தற்போது என்னை வருத்தும் தமயந்திபோலக் கொடுமையானவர்களே!' என்பதூஉம் மற்றேரொலிப் பொருள்; இதற்குச் சிலேடை யென்பர் வடநூலார். கூப்பினுன் - பிறவினை ஆண்பாற் படர்க்கை இறந்தகால வினைமுற்று; கூம்பு - தன்வினைப் பகுதி. (சுடு)

[தமயந்தியின் கொங்கையிள நீராதிகளால் காமதாகந் தணிய நள னெண்ணினு னெனல்]

கொங்கையிள நீராற் குளிர்ந்தவிளஞ் சொற்கரும்பால்
பொங்கு சுழியென்னும் பூந்தடத்தில்—மங்கைநறுங்
கொய்தாம வாசக் குழனிழற்கீ ழாறேனே
வெய்தாமக் காம விடாய்.

(ப - ரை) மங்கை - தமயந்தியினுடைய, கொங்கை இளமை நீரால் - மோட்டிளமார் பென்னும் இளநீர்க்காய்களினுலும், குளிர்ந்த இளமை சொல் கரும்பால் - குளிர்ச்சியான மழலைச் சொற்களென்னும் கருப்பஞ்சாற்றினுலும், பொங்கு சுழி என்னும் பூ தடத்தில்-விளங்குகின்ற உந்திச்சுழி யென்னு மலர்ப்பொய்கையில், நறு கொய் தாம வாசம் குழல் நிழல் கீழ் - புதிதாகக் கொய்த மலர்மாலை மணநிறைந்த கூந்தற் சோலையின் நிழலின்கீழ்த் தங்கி, வெய்து ஆம் அ காமம் விடாய் ஆறேனே-கொடிதாகிய அந்தக்காம வேட்கையைத் தணித்துக் கொள்ளமாட்டேனே.

(க - ரை) தமயந்தியின் கொங்கையிளநீர் முதலியவைக ளால், காமவேட்கை தணியமாட்டேனே என்று நளன் இரங்கி னான்.

(வி - ரை) கொங்கையிளநீர் - இருபெயரொட்டு. இள நீர் - இளமையாகிய நீரையுடைய காய் என்று அல்லாத மொழிகள் தொக்கிவருவதால் அன்மொழித்தொகை. இளஞ்சொல் - இள மையாகிய சொல் ; பண்புத்தொகை. இங்கே இளமை யென்பது மழலையைக் குறிக்கிறது; அதாவது, மழலைச் சொற்கள் என்றபடி. சொற் கரும்பு - சொல்லாகிய கரும்பு ; இருபெயரொட்டு. இங்கே கரும்பு என்றது அதன் சாற்றுக் காயினமையால் ஆகுபெயர். பொங்குசுழி - வினைத்தொகை. சுழியென்றது நாபியை. சுழிப் பது சுழியாகையால் தொழிலாகுபெயர். நீர்க்குச் சுழிப் பது இயற்கையாதலால் 'பூந்தடம்' என்றார். குழல் நிறமென் றதனால் கூந்தற்சோலை யென்றும். ஆற்றேனோ என்னும் பிற வினை தன்வினையாக வந்தது கவிநயம். வெப்பமுள்ள காமத்தை விடாவென்றதற்கேற்பக் கொங்கையை அது தணியத்தகுந்த இள நீ ரென்றார்; சொற்களை கருப்பஞ்சா றென்றார்; சுழியைப் பூந்தட மென்றார்; குழலைச் சோலைநிழ லென்றார்; விடாயாறேனோ என்பது பசி தீரேனோ என்புழிப்போ லெனினு மமையு மென்க. (சுசு)

[தமயந்தி அன்னத்தைக் கண்டு என்னடி வந்தா யெனல்]

மன்னன் விடுத்த வடிவிற் றிகழ்கின்ற
அன்னம்போய்க் கன்னி யருகணைய—நன்னுதலுந்
தன்னுடல் விட்டுத் தனியிடஞ்சேர்ந் தாங்கதனை
என்னுடல் சொல்லென்றா ளிங்கு,

(ப - ரை) மன்னன் விடுத்த-நளராசன் அனுப்பிய, வடிவில் திகழ்கின்ற - அழகிற் சிறந்த, அன்னம் போய்-அன்னப் பறவையா னது பறந்துபோய், கன்னி அருகு அணைய - மங்கைப் பருவப் பெண்ணாகிய தமயந்தியினிடத்திற் சேர, நன்மை நுதலும் - அழ

கான செற்றியையுடையாளாகிய அவளும், தன் ஆடல் விட்டு-தன்னுடைய பூக்கொய்தல் முதலிய பொழில் விளையாட்டுகளை நிறுத்தி தனிமை இடம் சேர்ந்து - ஆருமில்லாத இடத்தில் போய், ஆங்கு அதனை ஈங்கு என் நாடல் சொல் என்றாள் - அந்த இடத்தில் அவ் வன்னப்பறவையை நோக்கி, "இங்கே நீ என்ன விரும்பி வந்தது சொல்லுக!" என்று கேட்டாள்.

(கு - ரை) அன்னத்தைக் கண்ட தமயந்தி, அதைத் தனியிடத்திற் கொண்டுபோய் "இங்கு நீ என்ன நாடி வந்தாய்" என்றாள்.

(வி - ரை) விடுத்த - தன்வினைப் பெயரெச்சம். வடிவின் ஐந்தாம் வேற்றுமை எதுப்பொருள். தமயந்தி கலியாண மாகாத மங்கைப்பருவமுடையவளாகையால் 'கன்னி' என்றார். நன்னுதல்-பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. உம்மை உயர்வு சிறப்பு; அன்றி, இறந்தது. தழீ இய தென்னலுமாம்-ஆங்கு என்பதை அசைநிலை யென்று தன்ருவாரு முளர். ஆங்கு ஈங்கு என்பன நீட்டும் வழி நீண்டன. ஆடல்-பொழில் விளையாட்டு, பூக் கொய்தல் செண்டாடல் முதலியனவாம். என்ன-வினு, அன்ன இன்ன என்னும் சுட்டுகளைப்போல. தனியிடம் - தனிமையாகிய இடம், பண்புத்தொகை; ஆங்கு ஈங்கு - சுட்டிடப் பெயர்கள். விடுத்த, திகழ்கின்ற இரண்டும் அன்னம் என்னும் பெயரைக் கொண்டு முடிந்த எச்சவினைச்சொற்களாம். நாடல் - புதையலென்புழிப் போலத் தொழிலாகுபெயரெனினு மாம்; நாடியபொருளென்பது பொருள். என்னென்பதைக் குறிப்புவினைமுற்றெனக் கொள்ளு நரு முண்டு. (சஉ)

[உனக்குக் கணவன் நளனென்று அன்னம் சொல்லிற்றெனல்]

செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான் மங்கையர்கள்
தம்மனத்தை வாங்குந் தடந்தோளான்—மெய்ம்மை
நளனென்பான் மேனிலத்து நானிலத்து மிக்கான்
உளனென்பான் வேந்த னுனக்கு.

(ப - ரை) செம்மை மனத்தான் - ஒழுங்கான மனமுள்ளவனும், தண்மை அளியான் - குளிர்ந்த இரக்கமுடையவனும், செம்மை கோலான் - நீதியான ஆட்சி உள்ளவனும், மங்கையர்கள் தம் மனத்தை வாங்கும் தடம் தோளான் - பெண்களின் உள்ளங்களைத் தம் வசப்படுத்தும் பெருந்தோட்களை யுடையவனுமாகிய, மெய்ம்மை நளன் என்பான் - உண்மைநோன்பு நோற்கும் நளமகாராசனென்பவன், மேல் நிலத்தும் நால் நிலத்தும் நிகரான் - விண்ணுலகிலும் மண்ணுலகிலும் புகழாற் சிறந்து, உனக்கு வேந்தன் உளன் - உனக்கு மாலையிடும் தலைவன் (ஒருவன்) இருக்கின்றான்.

(க - ரை) "செம்மனம் முதலிய நற்குணங்களையுடைய நளனென்பான் உனக்குத் தகுந்த நாயகனாக இருக்கிறான்."

(வி - ரை) என்பான் என்பதை என்பால்என்றும் பாடமோதுவாருமுளர்; உனக்கு மாலையிடுந் தலைவன் என்பால் உளனென்று கூட்டுக. என்பால்-என்வசத்தில்; என்பாலென்பதால் திரிபு கெடும்; ஆகையால், என்பான் என்பதே சீரியதென்றெண்ணுவார் அதை அசைநிலையென்று அசைத்தொதுக்குவர். இங்கே நாமும் அப்படியேகொண்டுள்ளோம். செம்மை மனம், தண்மை அளி, செம்மை கோல், தடம்தோள் முதலியவைகள் பண்பு தொகைகள். செம்மை என்பது, மனம் என்பதுஉம் கோல் என்பதுஉம் ஒழுங்கானவையென்று குறிக்கின்றது. உள்ளம் ஒருவழிப்பட்டவனுகையால், நளன் ஏழைகளுக் கிரங்கும் குளிர்ந்த குணத்தையும், அதனால் சமன் செய்து சீர்தூக்கும் தராசுக் கோல்போல ஒழுங்கான ஆட்சியையும் உடையானென்று கொள்க. கோல் இங்கே ஆகுபெயராய் ஆட்சியை உணர்த்திற்று. "தோள் கண்டார் தோளே கண்டார்" என்று இராமாயணத்திற் கம்பர் கூறியபடியே இவரும், 'மங்கையர்கள் தம் மனத்தை வாங்கும் தடந்தோளான்' என்றாரென்க. பெண்களுக்கு முக்கியமாய்க் கண்களையும் மார்புகளையும் வன்னிக்கிறபடி ஆண்களுக்குத் தோள்களையும் மார்பையும் வன்னிப்பது புலவர் வழக்கம். மெய்ம்மை என்பதற்கு உண்மை நோன்பு நோற்பவன், பொய்சொல்லா வாசகன் என்பதே உகந்த

பொருளாம். மேனிலத்தும் நானிலத்தும் (புகழான்) மிக்கா னென்று கூட்டுக. உனக்கு என்பதில் நான்கனுருபைத் தகுதிப் பொருட்டாகக் கொள்க. உனக்கு (மாலையிடத் தகுந்த) தலைவ னென்று பொருள் கூட்டிக் கொள்க. நானிலம்- நான்காகிய நிலங் களையுடைய இடம் என்ற . பொருள் படுவதால், அன்மொழித் தொகையாம். நிலத்தில் நான்குவகை - பாலையொழிந்த குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் என்பனவாம். (௪௯)

[அன்னம் நளனுக்குத் திருமாலும் இணையல்லவென்ற தெனல்]

அறங்கிடந்த நெஞ்சு மருளொழுகு கண்ணு
மறங்கிடந்த திண்டோள் வலியுந்—திறங்கிடந்த
செங்கண்மா லல்லனேற் றேர்வேந்த ரொப்பரோ
அங்கண்மா ஞாலத் தவற்கு.

(ப - ரை) அறம் கிடந்த நெஞ்சம்-புண்ணியம் நண்ணிய மன மும், அருள் ஒழுகும் கண்ணும் - இரக்க மிகுந்த கண்களும், மறம் கிடந்த திண்மை தோள் வலியும்-வீரஞ் செறிந்து உறுதியானதோள் வல்லமையும் (பொருந்தியிருப்பதால்), அம் கண் மா ஞாலத்து அவற்கு-அழகான இடமகன்ற பெரிய பூமியில் அந்நளனுக்கு, திறம் கிடந்த செம்மை கண் மால் அல்லனேல்-வல்லமையிற் சிறந்த செங் கண்ணனாகிய விஷ்ணுமூர்த்தியும் இணையல்ல ரென்றால், தேர்வேந் தர் ஒப்பரோ-மற்றைத் தேரூர்ந்துவாழும் பாரரசர் சமானமாவார்க ளோ? (ஆகா ரென்றபடி).

(க - ரை.) "நாராயணனே நளனை ஒவ்வான்; ஆகையால், ஞாலத்தாசில் அவனுக்கிணையாவர் ஒருவரும் இலர்."

(வி - ரை) மால்தன் - பெருமையால் எல்லாரையும் மயக்கு பவனென்பது பொருள் கொள நிற்பதால் ஆகுபெயர். எல்-வினை யெச்ச விகுதி; இது சேர்ந்து முற்றை யெச்சமாக்கிற்று. ஒப்பரோ என்பதில் ஓகாரம் எதிர்மறை விகு. ஒப்பரோ என்பதில் எதிர் காலத்தைப் பகரங் காட்டிற்று. ஞாலத்து + அவன் எனக் கொள் ளாது ஞாலத்தவன் என்று ஒருமொழியாக் கொண்டு நளன் என்பா ரும் உளர். அப்போது ஞாலத்தை ஆகுபெயராக நிடதநாட்டுக்குக்

கொண்டு நிடதநாட்டை யாள்பவனென்று பொருள் கொள்க. அவ ற்கு என்பதை நான்காம் வேற்றுமையில் இரண்டாம் வேற்றுமை ஒப்புப்பொருள் மயங்கிவந்த வேற்றுமைமயக்கமாக் கொள்க. நெஞ்சு இம் மார்பின் பெயர் மனத்துக்கு இடவாகுபெயரா வந்தது. (சஎ)

[நளன் புகழைக் கேட்ட தமயந்தி, காதலால் வெளுத்திருந்தா ளெனல்.]

புள்ளின் மொழியினொடு பூவாளி தன்னுடைய
வுள்ளங் கவர வொளியிழந்த—வெள்ளை
மதியிருந்த தாமென்ன வாய்ந்திருந்தாள் வண்டின்
பொதியிருந்த மெல்லோதிப் பொன்.

(ப - ரை) வண்டின் பொதி இருந்த மென்மை ஓதி பொன் - வண்டுக்கூட்டங்கள் தங்கிய மெல்லிய கூந்தலையுடைய திருமகள் போன்ற தமயந்தி, புள்ளின் மொழியினொடு - அன்னப்பறவையின் சொல்லோடுகூடவே, பூவாளி (மன்மதனெய்யும்) மலரம்புகள், தன்னுடைய உள்ளம் கவர - தன் மனத்தைக் கொள்ளை கொண்டத னால், ஒளி இழந்த - ஒளி மழுங்கிய, வெள்ளை மதி இருந்தது ஆம் என்ன - வெண்ணிலா இருந்ததைப்போல, வாய்ந்து இருந்தாள் - வெளுத்திருந்தாள் (வெண்மை நிறம்) பொருந்தி யிருந்தாள்.

(க - ரை) நளன் புகழைக் கேட்கும்போதே தமயந்திக்குக் காதல் வளர்ந்ததாகையால் இளமை நிறமாறி வெளுத்திருந்தாள்.

(வி - ரை) பூவாளி யென்பதை மலரம்புகளையுடைய மன் மதனென்று பொருள் கொண்டு அன்மொழித்தொகையாகக் கொள்வதும் ஒன்று. மலராகிய அம்புகளையுடையா னென்பதால் இருபெயரொட்டு. கவர - செயவென் வாய்பாட்டு வினை; காரணப் பொருட்டு - கோழிகூவப் பொழுது புலர்ந்தது என்புழிப்போல. வெள்ளைமதி வெண்மையாகிய மதி; இங்கே வெண்மையென்பது

ஐ விகுதி பெற்றது. கருமதி செம்மதி யிலையேனும் வெண்மதி யென்பது இயல்பின்மை விசேடணம் - கருங்காக்கை என்புழிப் போல. இளமை வளமை மாறி வெளுத்தாளென்பது தோன்ற 'வெள்ளை மதியிருந்ததாமென்ன வாய்ந்திருந்தாள்' என்றார். பொன் உவமையாகுபெயர். (சஅ)

[நளன் காதலை அன்ன முரைக்கக்கேட்டுத்
தமயந்தி மயங்கினுனெனல்]

மன்னன் மனத்தெழுந்த மையனோ யத்தனையும்
அன்ன முரைக்க வகமுருகி—முன்ன
முயங்கினாள் போற்றன் முலைமுகத்தைப் பாரா
மயங்கினா ளென்செய்வாள் மற்று.

(ப - ரை) மன்னன் மனத்து மையல் நோய் அத்தனையும்- நளராசனது மனத்தி லெழுந்த காதல்நோ யெல்லாவற்றையும், அன்னம் உரைக்க - அன்னம் எடுத்துக் கூறியதனுல், அகம் உருகி- (தமயந்தி தன்) மனங் கரைந்து, முன்னம் முயங்கினாள்போல் - (மாலையிடுவதற்கு) முன்னேயே அவனைச் சேர்ந்தவள் போல (ஆசை யதிகரித்து), தன் முலை முகத்தை பாரா மயங்கினாள்-தன் னுடைய முலைக்கண்கள் விம்முவதைப் பார்த்துக் காம மயக் கங் கொண்டாள், மற்று என் செய்வாள் - (அவளால்) வேறு என்ன செய்ய முடியும்?.

(க - ரை) நளனுக்குள்ள காதல்நோ யவ்வளவையும் அன்னம் விடாமல் உரைத்ததனுல் அவனை முயங்கினாள்போலத் தமயந்தி மயங்கினாள்.

(வி-ரை) மையல் + நோய் - இருபெயரொட்டு; ஆசைநோ யெனினுமாம். முன்னம் முயங்கினாள்போல என்பதற்கு அது சொல்வதற்கும் சொல்லாததற்கு முந்தியே அத்தனை விரைவி

லென்று குறிப்பிற் பொருள் தருவது காண்க. காதற் பெருக்கால் முலைக்கண்கள் தடித்த வுணர்ச்சி யுண்டாகிய தாகையால் முலைமுகத்தை இறங்கிப் பார்த்தாள் என்பதாம். பாரா என்பது செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம், மயங்கினுளென் னும் வினை கொண்டு முடிந்தது. (சக)

[தமயந்தி தன்னிலையை நளற்குத் தெரிவிக்க அன்னத்தை யேவினு ளெனல்.]

வாவி யுறையு மடவனமே யென்னுடைய
ஆவி யுவந்தளித்தா யாகியாற்—காவினிடைத்
தேர்வேந்தற் கென்னிலைமை சென்றுரைத்தி யென்று
[ரைத்தாள்
பார்வேந்தன் பாவை பதைத்து.

(ப - ரை) வாவி உறையும் மடமை அன்னமே! -(மலர்த்)தடா கத்தில் வாழும் அழகான அன்னப்பறவையே! சென்று-(நீ) போய், காவினிடை-பூஞ்சோலையிலுள்ள, தேர்வேந்தற்கு - தேரூரும் நள மகாராசற்கு, என் நிலைமை உரைத்தி - என்னிருப்பை (இப்போது நீ காண்கிறபடி) சொல்லு, (அங்ஙனம் சொன்னால்) என்னுடைய ஆவி உவந்து அளித்தாய் ஆகி-என்னுயிரை யெனக்கு நீவிரும்பித் தந்தாயாகிறாய்'' என்று, பார்வேந்தன் பாவை பதைத்து உரைத் தாள்-என்று பாரரசனும் வீமராசனுடைய மகளாகிய தமயந்தி (மனஞ் சகியாமல்) பதறிச் சொன்னாள்.

(க - ரை) "ஓ அன்னமே ! நீ சென்று நளமகாராசற்கு என் னில்மையை யெடுத்துரைத்தால், எனக்கு நீ உயிர் தந்தது போலாகும்.''

(வி-ரை) வாவி-பொய்கை எனினுமாம். மடமை - அறியாமை, அதனால் இளமை, அதனால் அழகு என்றும். உவந்து - மகிழ்ந்து,

அதனுல் விரும்பி யென்றும், ஆதி. ஆ-பகுதி, த்- எழுத்துப்பேறு, இ. நிகழ்கால முன்னிலை ஒருமை விகுதி. ஆல். அசைநிலை. உரைத்தி என்பதூஉம் ஆதியென்பதுபோல முன்னிலை ஒருமையேவல் வினைமுற்று. பார் என்றது வீமனுண்ட நாட்டுக்கு ஆகுபெயர். பதைத்தல்-விரக தாபத்தால் வருந்துதல். 'நீ போய்ச் சொல்வாயில்லையேல் என் னுயிரைத் திரும்பிவந்து காண்பாயல்லை' என்பதைக் குறிப்பிற் காண்க. (௬௦)

[தமயந்தியிடத்திலிருந்து அன்னம் நளனிடத்திற் றிரும்பிச் சென்ற தேனல்.]

மன்னன் புயமின் வனமுலைக்குக் கச்சாகு
மென்ன முயங்குவிப்பே னென்றன்னம்—பின்னும்
பொருந்தவன்பா லோதிமலர்ப் பூங்கணைகள் பாய
இருந்தவன்பாற் போன தெழுந்து.

(ப - ரை) மன்னன் புயம் நின் வனம் முலைக்கு கச்சு ஆகும் என்ன — "நளமகாராசனுடைய தோள்கள் உன்னுடைய அழகு முலைகளுக்குக் கச்சமாகும் என்று சொல்லும்படி, முயங்குவிப் பேன் என்று - அணையச்செய்வேன்' என்று, அன்னம் - அவ் வன் னப்பறவையானது, பின்னும் - மறுபடியும், பொருந்த - தமயந்தி யின் மனதில் நன்றாய்ப் பதியும்படி, அன்பால் ஓதி - அன்போடு சொல்லிவிட்டு, மலர் பூங்கணைகள் பாய இருந்தவன்பால் - (மன் மதனுடைய) மலர்களாகிய அழகான அம்புகள் பாயும்படி (அவை களுக்கிலக்கா) யிருந்தவனுகிய நளனிடத்து, எழுந்துபோனது - உயரப் பறந்துபோயிற்று.

(க - ரை) "உன்னை எப்படியேனும் நளமகாராசன் மணக் கச் செய்வேன்" என்று அன்னம் தமயந்திக்குச் சொல்லிவிட்டு நள னிடத்திற்குச் சென்றது.

(வி-ரை) களன் புயங்கள் தமயந்தியின் முலைக்குக் கச்சாதலென்பது இவைகள் அவைகளை அழுந்தப் புல்லி மறைத்த லென்றபடியாம். வனம் வன்னம் ஒரு தொடர். மூயங்குவிப்பேன், பிறவினை எதிர்காலமுன்னிலை வினைமுற்று. கச்சு-மார்க்கவசம்; கஞ்சுகம் எனினுமாம். அன்பேரோடோதி யென்பது அன்பாலோதி யென்று வந்தது உருபு மயக்கம் - மலர்ப்பூங்கணைகள் - மலராகிய பூங்கணைகள்; இருபெயரொட்டு. பாய - செயவெனெச்சம். (௱க)

[தமயந்தியின் வேறுபாட்டைத் தோழியர் அவள் தாய்தந்தையாக கறிவித்தா ரெனல்.]

கொற்றவன்றன் றேவிக்குக் கோமகடன் றோழியர்கள்
உற்ற தறியா வுளநடுங்கிப்—பொற்றொடிக்கு
வேறுபா டுண்டென்றார் வேந்தனுக்கு மற்றதனைக்
கூறினாள் பெற்ற கொடி.

(ப - ரை) கோ மகள் தோழியர்கள் - இளவரசியாகிய தமயந்தியினுடைய தோழிமார்கள், உற்றது அறியா உள்ளம் நடுங்கி - (அவளுக்கு) நேரிட்ட (காதல் நோயை) அறிந்து மனம் நடுங்கி, கொற்றவன் தன் தேவிக்கு-வீமராசனுடைய மனைவியிடத்தில் (போய்), பொன் தொடிக்கு-(உன்னுடைய)பொன் வளையணிந்த (மகளாகிய) தமயந்திக்கு, வேறுபாடு உண்டு என்றார். (எப்போதும்போலில்லாமல் நிலைமை) மாறியிருக்கிற தென்று சொன்னார்கள்; அதனை - அந்தச் செய்தியை, பெற்ற கொடி - அவளைப் பெற்றவளாகிய அவள், வேந்தனுக்கு — அரசனிடத்தில், கூறினாள் - சொன்னாள்.

(க - ரை) தமயந்தியின் நிலைமாற்றத்தைத் தோழிமார் அவள் தாயாகிய அரசிக்கு அறிவிக்க, அவள் சென்று அதனை அரசனுக் கறிவித்தாள்.

(வி - ரை) உற்றது அறியா என்பதற்கு உற்றதை அறியாமல் என்று எதிர்மறை வினையெச்சமாகவும் பொருள் விரிப்பாருளர்

என்ன காரணத்தால் அவள்நிலை மாறினளென்று தெரியாமல் பயந்து போய்த் தோழிமார்கள் அரசிக்கு அறிவித்தார்கள் என்பதாம். அப்படியானல், பிறகு அரசி அரசனுக்கு அறிவித்ததும் அவன் சென்று மகளைக் கண்டு, அவள் ஒன்றுஞ் சொல்லாமல் மௌனமாயிருந்ததனாலேயே உண்மை யுணர்ந்து சுயம்வரநாள் குறித்ததும் தவருக முடியும். ஆகையால், அறியா என்பதைச் செய்யா என்னும் உடன்பாட்டு வினையெச்சமாகவே கொண்டு (காதல் நோயை) அறிந்து என்று பொருள் கொள்வதே ஏற்றமாமென்க. கன்னிப் பெண்ணுக்குக் காதல் நோய் வந்ததனால்'அரசன் கேட்டால் எம்மை என் செய்வனோ!', என்று தோழியர் நடுங்கினரென்று கொள்க. கன்னிக்குக் காளைமேற் காதல்' என்று வெளிப்படையாய்ச் சொல்லாமல், இடக்கரடக்கலாய் 'வேறுபாடு' என்றார்கள். தேவிக்கு என்பது ஏழாம் வேற்றுமை மயக்கம்; இதை அப்படியே நான்காம் வேற்றுமைக் கொடைப்பொருளாகக் கொள்ளும் புத்திலக்கணக் கவிகளும் உளர். இது செய்யுள் வழக்கேயன்றி உலக உரை நடை வழக்குமாமாயினும் உண்மையில் நான்காம்வேற்றுமை அன்றென அறிக. மற்றவைகளையும் இப்படியே கொள்க. முதற் குவ்வும் மூன்ருங் குவ்வும் நான்காம் வேற்றுமைக் கொடைப்பொரு ளென்றும், இரண்டாங்கு ஏழாம் வேற்றுமை இடப்பொருள் மயக்கமென்றும் கூறுவாரு முளர். கொடி-உவமை யாகுபெயர். (௫௨)

[வீமன் தமயந்தியின் மாளிகைக்குச் சென்றனெனல்]

*கருங்குழலார் செங்கையினல் வெண்கவரிப் பைங்கால்*
*மருங்குலவ வார்முரச மார்ப்ப—நெருங்கு*
*புரிவளைநின் றேங்கப் போய்ப்புக்கான் பெற்ற*
*வரிவளைக்கை நல்லாண் மனை.*

(ப - ரை) கருமை குழலார்-கறுத்த கூந்தலையுடைய பெண்களது, செம்மை கையினல் - சிவந்த கைகளினல், வெண்மை கவரி-வெளுத்த சாமரைகளின், பசுமை கால் - குளிர்ந்த காற்று, மருங்கு இருபக்கங்களிலும், உலவ - (வீசி) உலாவவும், வார் - தோல்வா

ரிறுக்கிக் கட்டிய, முரசம் ஆர்ப்ப-பேரிகை முழங்கவும், நெருங்கு புரி வளை - நெருங்கிச் சுழிந்துள்ள சங்கங்கள், நின்று ஏங்க - நிலையா யொலிக்கவும் போய் - (வீமராசன்) சென்று, பெற்ற - தான் பெற்றெடுத்த, வரி வளை கை நல்லாள் மனை - வரிக ளமைந்த வளைய லணிந்தகைகளையுடைய தமயந்தியின் மாளிகையில், புக்கான் - நுழைந்தான்.

(க - ரை) வீமராசன், சாமரை யிரட்டவும்-பேரிகை முழங்கவும் - சங்கமூதவும் சென்று தமயந்தியி னரண்மனையைச் சேர்ந்தான்.

(வி - ரை) கருமை + குழல் = கருங்குழல்; செம்மை + கை = செங்கை; வெண்மை + கவரி = வெண்கவரி; பசுமை + கால் = பைங்கால்; இவைகள் பண்புத்தொகைகள். நிறவேற்றுமை கற்பித்துத் தொடுத்தமையால் முரண்டொடையணியாம். உலவ, ஆர்ப்ப ஏங்க - வினைச் செவ்வெண். உலா என்பது உல எனக் குறுகியது. உலவு - பகுதி; புறா புறவு, களா களவு என்னும் பெயர்களையுங் காண்க. (௫௩)

[தமயந்தி தன் தந்தையை வணங்கினளெனல்]

கோதை சுமந்த கொடிபோ லிடை நுடங்கத்
தாதை திருவடிமேற் றான்வீழ்ந்தாள்—மீதெல்லாம்
காந்தாரம் பாடிக் களிவண்டு நின்றரற்றும்
பூந்தாரம் மெல்லோதிப் பொன்.

(ப - ரை) களி வண்டு காந்தாரம் பாடி - மதுவுண்டு மகிழ்கின்ற வண்டுகள் காந்தாரமென்னும் இசைப்பாட்டைப் பாடி, மீது எல்லாம் நின்று அரற்றும் - மேலெல்லாம் தங்கி ஒலிக்கின்ற, பூ தார் அம் மென்மை ஓதி பொன் - பூமாலையணிந்த அழகிய கூந்தலையுடைய திருமகள்போன்ற தமயந்தியானவள், கோதை சுமந்த கொடிபோல் - கூந்தலைத் தாங்கிய பூங்கொடிபோல், இடை நுடங்க

இடை துவளும்படி, தாதை திரு அடி மேல் வீழ்ந்தாள் - தன் தந்தையின் அழகிய பாதங்களில் விழுந்து வணங்கினாள்.

(க - ரை) தமயந்தி, கோதை சுமந்த கொடிபோலத் துவண்டு தன் தந்தையின் திருவடிகளில் விழுந்து வணங்கினாள்.

(வி - ரை) கோதை பூமாலை யென்பார் கூற்று இங்குப் பொருந்தா தென்க. 'பூந்தாரம் மெல்லோதி' என்று தமயந்தியைக் குறிக்கையில், மலரையும் கூந்தலையுங் குறித்தபடி, உவமானத்துக்கும் மலரையும் கூந்தலையுமே குறிக்கவந்த ஆசிரியர், 'கோதை சுமந்த கொடிபோல்' என்றார் கொடி பூங்கொடி யாகையால், அதில் இயற்கையாகவே மலர்கள் இருக்கும். ஆனால், கோதையாகிய கூந்த லிராது. ஆகையால், கோதையாகிய (கூந்தல்) சுமந்த கொடி யொன்றிருந்தால் அதுபோலென்று கொள்வதே சிறப்பென்க. இது இல்பொருளுவமவணி. கோதை சுமந்த கொடியோல், பூந்தாரம் மேல்லோதிப் பொன் வீழ்ந்தாளென்று கூட்டுக. அ+மெல்லோதி யென்று பிரித்து அந்த மெல்லிய கூந்தலையுடையா ளெனினுமாம். தான் வீழ்ந்தான் என்பதில் தான் என்பதை அசைநிலையாக் கொள்க; இசைநிறையெனினுமாம். மீதெல்லாம் என்பதைப் பூந்தார் என்பதனோடு ஒட்டிப் பூந்தார் மீதெல்லாம் என்று மொழிமாற்றிப் பொருள் கொள்க. கொடியென்பது தமயந்தியின் இடைக்கும் அவள் நிலமேற் கிடந்த நிலைக்கும் உவமானமாயினமை காண்க. காந்தாரம் என்பது ஒருவகைப் பண்- இதை வண்டுகள் பாடுவவென்பது கவிக்கோள். பொன் என்பது உவமையாகுபெயர். (ருச)

[தமயந்தியி னிருப்பைக் கண்ட வீமன் சுயம்வரம் ஏற்படுத்த எண்ணின னெனல்.]

பேரழகு சோர்கின்ற தென்னப் பிறைநுதன்மேல்
நீரரும்பத் தன்பேதை நின்றாளைப்—பாராக்
குலவேந்தன் சிந்தித்தான் கோவேந்தர் தம்மை
மலர்வேய்ந்து கொள்ளு மணம்.

(ப - ரை) பெருமை அழகு சோர்கின்றது என்ன - மிகுந்த அழகானது பொங்கி வழிகின்றது போல, பிறை நுதல்மேல் நீர் அரும்ப நின்றாள் தன் பேதையை-மூன்றாம்பிறை போன்ற நெற்றி யின்மேல் வியர்வைநீர் துளிக்க அங்நின்றவளாகிய தன் மகளை, குல வேந்தன்-சூரியகுலத் தோன்றலாகிய வீமராசன், பாரா-பார்த்து, கோவேந்தர்தம்மை-இப் பூவுலகத்தரசரை, மலர் வேய்ந்து கொள் ளும் மணம் - பூமாலை சூட்டி (அவர்களில் ஒருவனைக் கணவனாகக் கொள்ளும் (சுயம்வர) மணத்தை (ஏற்படுத்த), சிந்தித்தான்- எண்ணினான்.

(க - ரை) நெற்றியில் வியர்வை சொட்டியதைத் தன் காதலி யின் காதற்குறியென்று கண்ட வீமன் சுயம்வரம் ஏற்படுத்த எண் ணினான்.

(வி - ரை) வியர்வையை அழகு வழிந் தொழுகுவதற்கு உவ மானமாக்கின தநியற்புத மென்க. வியர்வை வழிந்தது, விழுந் தெழுந்த வருத்தத்தினாலேயே யன்றிக் காதல் மிகுதியானும் என் று கண்டுகொண்ட வீமன் சுயம்வரம் ஏற்படுத்த விரைந்தெண்ணி னனென்றுகொள்க. பேதைநின்றாளை என்பதை இலக்கணப்போலி யாக்கொண்டு நின்றாள் பேதையை என்று மொழிமாற்றிக்கொள்க. நின்றாளாகிய பேதையையென்று விரிவதால் இருபெயரொட்டு. கோவேந்தர்தம்மை என்பதை ஏழாம் வேற்றுமை மயக்கமாக் கொண்டு, தம்மில் (ஒருவனை) என்று பொருள் விரிப்பாருமுளர். சுயம்வரமண்டபத்தில் பல்லரசரும் நிரம்பியிருப்பாராகையால் அவர் தம்மையெல்லாம் பார்த்து அவர்களில் ஒருவனை மாலைசூட்டிக் கண வனாக் கொள்ளு மணமென்று பொருள் கொள்வதே பான்மையாம். ஆகையால், தம்மையென் றிரண்டாம் வேற்றுமையி லிருப்பதை ஏழாம் வேற்றுமை மயக்கமென்று மயங்கவேண்டா. பாரா - செய்யாவென்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். மலர், மாலைக்காதல் கருவியாகுபெயர். (௫௯)

[தமயந்தியின் சுயம்வரநாளை வீமன் விளம்பரப் படுத்தினனெனல்.]

மங்கை சுயம்வரநா ளேழென்று வார்முரசம்
எங்கு மறைகென் றியம்பினான்—பைங்கமுகின்
கூந்தன்மேற் கங்கைக் கொழுந்தோடு நன்னாடன்
வேந்தர்மேற் றூதோட விட்டு.

(ப - ரை) பசுமை கமுகின் கூந்தல்மேல் - பச்சைநிறமான பாக்குமரத்தின் கூந்தற் பாளைகளின்மேல், கங்கை கொழுந்து ஓடும் நன்மை நாடன் - கங்கையாற்றின் வெள்ள நீர்த்துளிகள் பாய்ந் தோடும் வளப்பமுள்ள விதர்ப்ப நாட்டரசனாகிய வீமன், வேந்தர் மேல் - மற்றையரசர்களிடத்தில், தூது - தூதர்களை, ஓடவிட்டு - விரைந்து சென்று (சுயம்வரநாளை) அறிவிக்க ஏவி, மங்கை சுயம் வரம்நாள் ஏழ் என்று - தமயந்தியின் சுயம்வர மணநாள் இன்றைக் கேழாநாளென்று, எங்கும் - தன்னுடைய நகரமடங்கலும், வார் முரசம் அறைக என்று - வாரிறுக்கிய பேரிகை அடியுங்கோளென்று, இயம்பினான் - கட்டளையிட்டான்.

(க - ரை) வீமன், தமயந்தியின் சுயம்வரநாள் ஏழாநாளென்று அரச ரனைவர்க்கும் ஆளனுப்பியும் தன்னுடைய நகரத்திற் பறை யறைந் துந் தெரிவித்தான்.

(வி - ரை) சுயம்வரம்-ஒரு பெண் தானே தன்னிச்சையில் ஒரு கணவனை வரித்தல். இது பண்டையரசர் வழக்கு. மற்றையோரும் இதைவேறுவிதமாக வழங்கிவந்தனர். இதுவே பெண்ணுக்குத் தன் னிச்சையிற் கொள்ளும் வரனைத் தேடித் தருவது. இப்போதும் இவ் வழக்கம் நம்மிந்து பந்து மித்திரர்கள் பலர்க்குள்ளும் இருப்பது பான்மையாம். அன்றிப் பெண்களின் இச்சையின்றிப் பெற்றோ ரிச் சையின்படி செய்யும் திருமணங்களெல்லாம் தெரு மணங்களாகவே சீரழியுமென்க. கூந்தன் மேல் என்றதனால் கமுகு என்றதைக் கூந் தற்கமுகென்று கொண்டாம். கூந்தற்கமுகுசாதாரணமாய், மற்றைக்

கமுகைப்பார்க்க அதி உயரமாய் வளர்வது இயற்கை. ஆகையால், கமுகை நீர்க்கொழுந்து, அத்தனை உயரப் பாய்ந்த தென்பதனல், அதன் வெள்ளவேகம் விளங்கினபடியாம். கொழுந்து என்றது வெள்ளநீர்த் திவலையை ; இது உவமையாகுபெயர். எழ் என்றது ஏழென்னும் நான் அளவைக் குறிப்பதால், எண்ணலளவை யாகு பெயர். அறைக+என்று அறைகென்று - வியங்கோள் ஈற்றகரம் கெட்டது. சுயம்வரம், சயம்வரம், சயமரமென்பன ஒருதொடர்.()

[சுயம்வர விளம்பரங் கேட்ட அரசர் பலரும் விரைந்து பரந்தன ரேனல்]

மாமுத்த வெண்குடையான் மால்களிற்றான் வண்டிரைக்குந்
தாமத்தரிச்சந்திரன் சுவர்க்கி—நாமத்தார்
பாவேய்ந்த செந்தமிழா மென்னப் பரந்ததே
கோவேந்தர் செல்வக் குழாம்.

(ப - ரை) மா முத்தம் வெண்மை குடையான்-சிறந்த கெட்டி முத்துக் குச்சுக்கள் பொருந்திய வெள்ளைக் குடையையுடையவ னும், மால் களிற்றான் - (மத) மயக்கங் கொண்ட பட்டத்தியானை யை யுடையவனுமாகிய, வண்டு இரைக்கும் தாமத்து அரிச்சந்திரன் சுவர்க்கி-வண்டுகள் பாடுகின்ற மலர்மாலை யணிந்த (அரிச்)சந்திரன் சுவர்க்கியென்னும் அரசனுடைய, நாமத்து ஆர்-பெயரைப் பொருந் திய பா ஏய்ந்த - செய்யுளுக்கிசைந்த, செம்மை தமிழ் ஆம் என்ன- செந்தமிழைப்போல, கோவேந்தர் செல்வம் குழாம்-பூவுலகாளும் அரசர்களுடைய சிறந்த கூட்டம், பரந்தது-வீமராசதானிக்கு வரும் பொருட்டு நான்கு திக்கிலும் பரவியது.

(க - ரை) சுயம்வரத்துக்காக வீமராசதானிக்கு வரும் பொருட்டுப் பற்பல அரசரும் விரைந்தெழுந்து பரவினார்கள்.

(வி - ரை) மாமுத்த மென்றதனல் சிறந்த கெட்டிமுத்த மென்றும். இதனல் விதர்ப்பனுடைய அரசின் பெருமை நன்கு

விளங்குகின்றது. இதையே சிறந்த முத்துக்களாலாகிய குடையெனினுமாம் மால்களிற்றுன் என்பதற்கு மதங்கொண்ட பட்டத்து யானை என்பதே சரியாம். மதங்கொண்ட யானைச்சேனை யென்று கூறுவாறுமுளர். வண்டு இரைக்கும் தாமத்து - வண்டுகள் ரீங்காரஞ் செய்கின்ற மலர்மாலை எனினுமாம். அரிச்சந்திரன் போன்ற சுவர்க்கியென் றெடுத்தாரொரு புலவர். பதினேழாஞ் செய்யுளில் சந்திரன் சுவர்க்கி யென்றே வந்திருப்பதால், இங்கே அரிச்சந்திரன் சுவர்க்கியென்பது அவனுடையமுழுப்பெயராயிருக்கவேண்டுமன்றி, அரிச்சந்திரனைப்போல மெய்பேசும்சுவர்க்கியென்பதல்ல. இன்னொருவர் அரி + சந்திரன் சுவர்க்கி யென்றெடுத்து, விஷ்ணுவைப்போன்றசந்திரன் சுவர்க்கி யென்றார். இதுவுமல்ல; அதுவுமல்ல. அவனுடைய முழுப்பெயர் அரிச்சந்திரன் சுவர்க்கி யென்பதேயாகும். பதினேழாம் செய்யுளில் அரிச்சந்திரன் சுவர்க்கி யென்னும் முழுப்பெயர்க்கும் இடமில்லை, ஆகையால், 'மாமனுநூல் வாழ வரு சந்திரன் சுவர்க்கி' என்றார். இங்கே இடங் கொடுத்தமையால், 'தாமத் தரிச்சந்திரன் சுவர்க்கி' என்றார். நாமத்து ஆர் - பெயரோடு கூடிய என்பதூஉம் ஒன்று. நாமம் + தார் = நாமமாலையாகிய என்பதூஉம் இன்னொன்று. செந்தமிழ், வெண்டமிழ், பைந்தமிழ் என்று நான்கு நிறங்களிலும் தமிழுண்டு. ஆனால், நீலத்தமிழென்னும் ஐந்தா நிறத்தமிழ் வழக்கில் இல்லை; அதுவும், கொச்சையாக அங்கிலங் கலந்து பேசும் நவீனத் தமிழுக்கு வழங்கலாம். பா, பாவுதலாற் பாவாதலாற் றொழிலாகுபெயர். குழாம் - எழுவாய், பரந்தது - பயனிலை. (௧எ)

[சுயம்வரத்துக்கு வந்த அரசர்கூட்டத்திற்கு அரண்மனையிலிடம் போதாதுநகரத்தில் ஈண்டிற் றெனல்.]

செந்தடையும் வண்டுறைதார்ச் செய்யாள்வளர் மார்பன்
கந்தடையும் வேழக் கடைத்தலைவாய் — வந்தடைந்த
பூவேந்தர் தங்கள்கிளை பொன்னகரி லீண்டிற்றே
கோவேந்தன் மாதைக் குறித்து.

(ப-ரை) செந்து அடையும்-மகரந்தம் படியும், வண்டு உறை யும் தார் - வண்டுகள் வாழ்கின்ற மாலையை அணிந்த, செய்யாள் வளர் மார்பன்-திருமகள் தங்கும் மார்பையுடையவனாகிய விதர்ப்ப ராசனது, கந்து அடையும் வேழம் கடைத்தலைவாய்-கட்டுத்தறியிற் கட்டிய யானைகளையுடைய தலைவாசலில், கோவேந்தன் மாதை குறித்து-சிறந்த அரசனும் அவ் வீமன் மகளாகிய தமயந்தியினிமித் தம், வந்து அடைந்த-வந்து சேர்ந்த பூவேந்தர் தங்கள்கிளை-பூமியி லுள்ள அரசர் கூட்டம், பொன் நகரில் ஈண்டிற்று - அழகான அக் குண்டினபுரியிலும் நெருங்கிற்று.

(க-ரை) வீமராச னரண்மனை முற்றத்தில் இடம் பற்றாமை யால், சுயம்வரத்துக்கு வந்த அரசர் கூட்டம் குண்டினபுரியிலும் நெருங்கிற்று.

(வி-ரை) செந்தடை யென்பதைச் செம்மை + தடையெனப் பிரித்து, நல்ல கவசம் என்று பொருள் கூறி, வீமனுக்கே அடை யாக்குவாருமுளர். செந்து-மகரந்தம். செய்யாள்=செம்மை + ஆள்; ஈறுபோதல் என்னும் சூத்திர விதியால் செய்யா ளென்றாயிற்று. உறைதார் - வினைத்தொகை; வளர்மார்பன் என்பதும் அதுவே. தலைக்கடை யென்பது மோனைநோக்கிக் கடைத்தலை யென்று இலக்கணப்போலியாக வந்தது. தங்கள் கிளை, இது வெண்பாச் சீரன்று. தேமாங்கனிச் சீராயினும், புகழேந்தியார் வெண்பாவில் நடைநயநோக்கித் தவறி யுபயோகித்திருந்தாலும், அதை நாம் கூவி ளங்காயாகக் கொள்ளவேண்டும். இப்படியே சிற்சில ஆன்றோ ரும் வெண்பாவிற் சொன்னயநோக்கிக் கனிச்சீரையுங் காய்ச்சீராக உபயோகித்திருக்கின்றார்கள். பொன் நகர் - திருமகள் விலாச நகரமெனினு மமையும் ஏகாரம் அசைநிலை. கோ - சிறந்த, நல்ல வமிசத்திற் றோன்றிய எனினுமாம். கோவேந்தன் மாதையுளங் கொண்டு என்றும் பாடபேதமுண்டு. கிளை-எழுவாய், ஈண்டிற்று- பயனிலை.

(இஅ)

[மன்னர் கூட்டம் சோலைகளிலும் தடாகங்களிலும் பரவிற் றெனல்.]

புள்ளுறையுஞ் சோலைகளும் பூங்கமல வாவிகளும்
உள்ளும் புறமு மினிதுறைந்தார்—தெள்ளரிக்கண்
பூமகளைப் பொன்னைப் பொருவேல் விதர்ப்பன்றன்
கோமகளைத் தம்மனத்தே கொண்டு.

(ப - ரை) தெள் அரி கண்-தெளிவாய் விளங்குகின்ற இரேகைகள் பொருந்திய கண்களையுடைய, பூமகளை - பொறுமையில் பூமாதேவி போன்றவளை, பொன்னை - அழகில் திருமகள் போல்பவளை, பொரு வேல் விதர்ப்பன் தன் - சண்டை செய்யும் வேலாயுத மேந்திய விதர்ப்பராசனுடைய, கோமகளை - சிறந்த மகளாகிய தமயந்தியை, தம் மனத்தே கொண்டு - தங்கள் மனங்களில் இச்சை கொண்டு, புள் உறையும் சோலைகளும் - பறவைகள் வாழும் பூஞ் சோலைகளிலும், பூ கமல வாவிகளும் - தாமரைப்பூத் தடாகங்களிலும், உள்ளும் புறமும் - முறையே சிலர் முன்னையதில் உள்ளிடத்திலும், சிலர் பின்னையதில் வெளியிடத்திலும், இனிது உறைந்தார் - சுகமாய்த் தங்கியிருந்தார்கள்.

(க - ரை) தமயந்தியைத் தத்த மனங்களி லமைத்துச் சிற்சில வேந்தர் பூஞ்சோலைகளிலும், சிற்சிலர் தாமரைத் தடாகங்களிலும் சந்தோஷமாய்த் தங்கி யிருந்தார்கள்.

(வி - ரை) புள்ளுறையுஞ் சோலைகளின் உள்ளும் பூங்கமல வாவிகளின் புறமும் என்று நிரனிறையாகப் பொருள் விரித்துக் கொள்க. பூமகளை பொன்னை என்பதற்குப் பூமகளைப்போன்ற அழகுடையவளை என்பாரு முளர். பூமகளைப் பொன்னைப் பொருவில் விதர்ப்பன்தன் கோமகளை யென்றது ஒருபொருளின்மேல் மூன்றடுக்கி வந்ததாக் கொள்க. மனத்தே என்பதில் ஏகாரத்தைத் தேற்றமென்று கொள்ளினும் கொள்ளுக; அசைநிலை யென்று

தன்னினும் தன்னுக. இனிது - குறிப்பு வினையெச்சம்; இனிமை-பகுதி; இது பண்படியாகப் பிறந்தது. கோ இலக்கணையால் மேன்மையை உணர்ந்திற்று. வந்த அரசர் அரண்மனையில் இடம் போதாமையால் நகரத்திலும், நகரத்தில் இடம் பற்றாமையால் சோலைகளுக்குள்ளும், சோலைகளில் இடங்கொள்ளாமையால் தடாகக்கரைகளிலும் தங்கியிருந்தார்களென்று முன் செய்யுளின் கருத்தோடிதையுங் கூட்டிப் பொருள் கொள்க. பூமகளை என்பதற்கே பூதேவியென்றும் சீதேவியென்றும் பொருள் கொள்வாருமுளர். அப்போது பொன்னை என்பதற்கும் பொன்போலும் அழகிற் சிறந்தவளை யென்று பொருள் கொள்க. சிலர், கோமகளைத் தம் மனத்தே கொண்டு சோலைகளின் உள்ளும் தடாகங்களின் புறமும் இனிதுறைந்தா ரென்று கூட்டுக. சிலர் -தோன்றா எழுவாய், உறைந்தார் - பயனிலை. (ரு௧)

[தமயந்தியினிடத்திற் சென்ற அன்னந் திரும்பி வருவதை நளன் கண்டா னெனல்]

வழிமேல் விழிவைத்து வாணுதலா ணாம
மொழிமேற் செவிவைத்து மோகச்—சுழிமேற்றன்
னெஞ்சோட வைத்தயர்வான் கண்டா னெடுவானில்
மஞ்சோட வன்னம் வர.

(ப - ரை) வழிமேல் விழி வைத்து - (அன்னம் போன) வழிமேற் கண்ணோட்டி, வாள் நுதலாள் நாம மொழிமேல் செவி வைத்து - விளங்குகின்ற நெற்றியையுடைய தமயந்தியின் பெயரென்னும் சொல்லோசைமேல் காதையோட்டி, மோகம் சுழிமேல் தன் நெஞ்சு ஓடவைத்து - (தமயந்திமேல்) மோகமென்னும் நீர்ச்சுழியில் தன் மனத்தைச் சுழன்றோடவிட்டு, அயர்வான் - வருந்துகின்றவனாகிய நளன், நெடுமை வானில் - அகன்ற ஆகாயத்தில், மஞ்சு ஓட - மேகங்கள் தன் சிறைக்காற்றால் ஓடும்படி, அன்னம் வர கண்டான் - அன்னம் வருவதைப் பார்த்தான்.

(கு - ரை) அன்னம்போன வழிமேல் விழி வைத்து வருந்திக் கொண்டிருந்த நளன், தமயந்தியினிடத்திலிருந்து, அது திரும்பி வருவதைப் பார்த்தான்.

(வி - ரை) "அன்னம், இவ்வளவிற் செல்லுங்கொல், இவ் வளவிற் காணுங்கொல், இவ்வளவிற் காதலியம்புங்கொல்' என்று எண்ணியெண்ணி அது போன வழிமேல் விழியையும், அது திருமி வந்து சொல்லும் தமயந்தியின் பெயராகிய சொல்லோசைமேல் செவியையும் வைத்ததனுல் அவள் மோகமெனும் சுழியில் மனஞ் சுழன்றிருந்தான் நளனென்பது தோன்ற வழிமேல் விழிவைத்து என்பது முதலாகக் கூறினுர். நாமமொழி - நாமமாகிய மொழி யென்று விரியுமாற்ருல் இருபெயரொட்டு. விழி ஆகுபெயராய்ப் பார்வையை உணர்த்திற்று. மஞ்சோடு+அ+அன்னம் எனப் பிரித்து மேகத்தோடு கூடவே அந்த அன்னமும் எனவும்-மஞ்சோடு என்பதற்கு அழகோடும் என்றும் பொருள் கொள்வாரு முளர். அன்னம் வர கண்டான் என்பதற்கு அன்னம் வருவதைக் கண்டான் என்று காலங்காட்டுந் தொழிற்பெயராகவேனும், வருதலை யென்று சாதாரணத் தொழிற்பெயராகவேனும், வரவென்றேமுக்காலத்துக் கும் பொதுவான வினையெச்சமாவேனும் பொருள் கொள்க. அயர் வான் - வினையாலணையும் பெயர், எழுவாய்; கண்டான்-பயனிலை.

[நளன் அன்னத்தின் வார்த்தையை ஆசையாய்க் கேட்டா னெனல்.]

முகம்பார்த் தருணோக்கி முன்னிரந்து செல்வர்
அகம்பார்க்கு மற்றோரைப் போல—மிகுங்காதல்
கேளா விருந்திட்டான் அன்னத்தைக் கேளாரை
வாளால் விருந்திட்ட மன்.

(ப - ரை) செல்வர் முகம் பார்த்து-பணக்காரருடைய இனிய முகக்குறிப்பைக் கண்டு, அருள் நோக்கி-இரக்கங் காரணமாக அவர்

கன் பேசும் இனியவார்த்தையைக் கேட்டறிந்து, முன் இரந்து அவர்களுக் கெதிரில் ஏற்று (நின்று), அகம் பார்க்கும் - (அவர்க ளுடைய) உள்ளக் குறிப்பை எதிர்நோக்கும், மற்ருரைப் போல - (செல்வரல்லா) ஏனையோராகிய (வறியோரைப் போல), கேளா - ரை வாளால் விருந்திட்ட மன் - பகையாசரைத்தன் வாளாயுதத்தாற் (கொன்று கழுகுமுதலியவைகளுக்கு) விருந்துண்ணக் கொடுத்த அரசனாகிய நளன், மிகுங் காதல் - (தமயந்தியினுடைய) மிகுந்த காதலைப்பற்றிப் (பேசின), அன்னத்தை - அன்னப்பறவையினு டைய (வார்த்தைகளை), கேளா இருந்திட்டான் - கேட்டுக்கொ ண்டே இருந்துவிட்டான்.

(க - ரை) நளன் வேறொன்றின் மனதைச் செலுத்தாது தமயந்தியின் காதன்மிகுதியை ஓதின அன்னத்தின் வார்த்தை களைக் கேட்பதிலேயே மனதைச் செலுத்தினான்.

(வி - ரை) செல்வர் முகம் பார்க்கும் வறியோரைப் போல வே நளனும் அன்னத்தின் முகக்குறிப்பை அது வரும்போதே கண்டுகொண்டான்; அதனுடைய இரக்க மிகுந்த இனிய வார்த் தைகளைக் கேட்டபடியே இருந்தான். ஏன்? கடைசியாக அத னுடைய திருவுளக்குறிப்பை எதிர்நோக்கியிருந்தனுகையால் என்க.

"வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலு நனிநல்ல"

என்னும் நீதிநெறிவிளக்கப் பாட்டில் மற்றையோன் என்ப தற்கு வள்ளன்மை யுள்ளவனென்று பொருள் கொண்டிருப் பதுபோலவே இங்கே வந்துள்ள மற்றோரை யென்பதற்கும் வறி யோரையென்று பொருள் விரித்தாம். இதைச் சிலர் அற்றோ ரென்று பிரித்து மோனைக் கிடந்தேடி இடரெய்துவர். கேளா என்பது கேட்டு என்று பொருள் படுவதால், செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு வினையெச்சம். இருந்திட்டானென்று பிரிக்காமல் விருந்திட்டானென்றே பிரித்து, அன்னத்துக்குப் பாற் சோறுமுதலிய விருந்திட்டானென்று பொருள் கொள்வாருமுளர்.

றிபுக்குப் பங்கம் நேரிடுவதால் அது தகாதென்று ஒதுக்குக. காதல்-காதலைப்பற்றிய பேச்சுக்காவதால் கருவியாகுபெயர். கேளா இருந்திட்டான்-ஆசை மிகுதியால் ஒன்றுந் தோன்றாமல் அன்னத்தை ஒன்றுங் கேளாமல் இருந்திட்டானென்று கேளா என்பதை எதிர்மறை வினையெச்சமாகக் கொள்ளுவாருமுளர். அன்னத்தையென்பது அன்னத்தின் வார்த்தைகளுக்காவதால் திருவள்ளுவர் படித்தான் என்பதில் திருவள்ளுவர் என்பது கருத்தனாகுபெயராய் நூலுக்காவது போல, அன்னத்தின் வார்த்தைக்குக் கருத்தனாகு பெயராயிற்று. (௬௧)

["தமயந்தி சேமந்தானோ?" என்று நளன் அன்னத்தைக் கேட்டா னெனல்.]

அன்னக் குலத்தி னரசே யழிகின்ற
என்னுயிரை மீள வெனக்களித்தாய்—முன்னுரைத்த
தேமொழிக்குத் தீதிலவே யென்றான் றிருந்தாரை
ஏமொழிக்கும் வேலா னெடுத்து.

(ப - ரை) திருந்தாரை ஏமம் ஒழிக்கும் வேலான் - பகையரசரைச் செருக்கோட்டும் வேலாயுதத்தை தாங்கிய நளன், அன்னம் குலத்தின் அரசே-அன்னப்பறவை யினத்திற்கு அரசே!, அழிகின்ற என் உயிரை-தமயந்திக்காக (வருந்தி) வாடுகின்ற எனது உயிரை, மீள எனக்கு அளித்தாய் - (பழையபடி) நிலைத்திருக்க, எனக்குத் தந்தனை; முன் உரைத்த தே மொழிக்கு தீது இலவே - சற்று முன்னே எனக்கு நீ சொல்லிப்போன தேன்போலும் இனிய சொல்லைப் பேசுகின்ற (தமயந்திக்குத்) துன்பங்கள் ஒன்றும் இல்லையே யென்று, எடுத்து என்றான் - எடுத்துக் கேட்டான்.

(க - ரை) "ஏ, அன்னமே! உன் வார்த்தையால் என்னுயிரைக் காத்தாய். நீ சொல்லிப் போன தமயந்தி யென்னும் பெண்ணுக்குத் தீங்கொன்று மில்லையே" என்று வினவினான்.

(வி - ரை) தமயந்தியின் மேல் காதல் மிகுந்திருந்தானாகை யால், நளன் தன் காதற் பொருளுக்கு எங்கே தீங்கு நேரிட்டுவிடு கிறதோ என்ற அச்சத்தால் அதி அவசரமாய், "முன் சொன்ன தேமொழிக்குத் தீங்கிலவே" என்று வினவினான். முன் சொன்ன வென்பதற்கு முதலிற் சொன்ன அல்லது முதன்மையாய்ச் சொன்னவென்று போலிப் பொருள் கூறுவர்சிலர். தேன் + மொழி தேமொழி - தேமா என்புழிப்போல, னகரம் கெட்டது. இது தேன்போன்ற மொழியையுடைய பெண்ணென்று அல்லாதமொழி தொக்கியிருப்பதால் அன்மொழித்தொகையாகும். தீது, தீமை ஒரு தொடர், பண்புப்பெயர். இலவே என்று இது பன்மைவினை கொண்டு முடிவதால், தீமைகள் என்று பொருள் பெற்றது. அன்னக் குலம் - ஆறும் வேற்றுமைத்தொகை. அன்னத்தினது குலம் என்று விரியுமாற்றால் ஒன்றன் கூட்டத்தற் கிழமை-மனிதர் கூட்டம் என் புழிப்போல. அரசு-ஆகுபெயர். அழிந்துபோக இருந்த என்னுயி ரைப் பழையபடி உடலில் நிலைத்திருக்குமாறு உன் இன்னுரையால் மீட்டாயென்றுபொருள் விரித்துக்கொள்க. திருந்தாரைக்கொட்ட மடக்கும் வேலான் என்று பொருள் படுவதால், எமொழிக்கும் என்பதை மானபங்கஞ் செய்தான் என்புழிப்போல ஒருசொல்லாக் கொள்க. அப்போது திருந்தாரை என்பதிலுள்ள ஐயுருபு அழித் தற் பொருளில் வந்ததென்று கொள்க. அவனைக் கூறுபோட்டான் என்பதும் இப்படியே யாவது காண்க. வேலான் - எழுவாய், என் றான் - பயனிலை. (௯௨)

[தமயந்தியின் காதலைக் கேட்ட நளன் அறிவழிந்தா னெனல்.]

கொற்றவன்ற னேவலினாற் போயக் குலக்கொடியா
லுற்றதுவு மாங்கவடா னுற்றதவு—முற்று
மொழிந்ததே யன்ன மொழிகேட் டரசற்
கழிந்ததே யுள்ள வறிவு.

(ப - ரை) கொற்றவன்தன் ஏவலினான் - நளராசனுடைய வேண்டுகோளால், போய் - தான் சென்று, அ குலம் கொடியால்

உற்றது உம்-அந்தக் குலமகளாகிய தமயந்தியினிடத்தில் சேர்ந்ததையும், ஆங்கு-(அவ்விடத்தில் இவனுடைய அழகுமுதலியவற்றைத் தான் சொல்லக்கேட்ட) போது, அவள் உற்றது உம்-அவள் அடைந்த காதல் நோயையும், அன்னம் முற்றும் மொழிந்தது-அன்னப்பறவை ஒன்றையும் விடாமல் விவரமாய் விளம்பிற்று. மொழி கேட்டு - அந்த வார்த்தைகளைக் கேட்டவுடனே, அரசர்க்கு-அரசனாகிய அவனுக்கு, உள்ள அறிவு அழிந்தது-கொஞ்சநஞ்சம் இருந்த மதியும் மயங்கிற்று.

(க - ரை) நளனேவலால் அன்னம் தமயந்தியினிடத்திற் சென்று அவனுடைய காதலை விளம்பியதையும், அதுகேட்டு அவள் கொண்ட காதல்நோயையும் சொல்லக் கேட்டவன் அறிவழிந்தான்.

(வி - ரை) நளன் தமயந்தியினுடைய எண்ணத்தை அறியாத முன்பே அவளழகைப்பற்றி அன்னஞ் சொல்லக்கேட்டு அறிவழிந்திருந்தான். ஆயினும், அவளெண்ணம் என்னுமோ என்னும் சந்தேக அறிவுமாத்திரம் அவனை வாட்டிக்கொண்டே இருந்தது. இப்போது அன்னந் திரும்பிவந்து அவளுடைய காதற்குறிப்பைத் தெரிவித்தபோது அவனுக்கு அந்த அறிவும் ஒழிந்து தன்னை மறந்து பரவசமானான் என்பது தோன்றவே 'ஒழிந்ததே யுள்ளதறிவு' என்றார். அறிவும் என்பதனீற்றில் உம்மை தொக்கது. அன்னம் மொழி யென்பதை அன்ன + மொழி யெனப் பிரித்து அப்படிப்பட்ட வார்த்தை யென வேடிக்கைப்பொருள் கொள்வாரு முளர். கொற்றம்-வெற்றி; அதை உடையவன் கொற்றவன் ; தொழிலடிப்பெயர். உற்றது என்னும் இரண்டில் முன்னையது இறந்தகாலத் தொழிற்பெயர், பின்னையது அக்கால வினையாலணையும் பெயர். உற்றதும் என்றாகாமல் உற்றதுவும் என்று வகர உடன்படுமெய் வந்தது காண்க. (௬௩)

[அறவழிந்த நளன், படுகுழியில் யானைபோல், செயலற்றுக் கிடந்தா னெனல்.]

கேட்ட செவிவழியே கேளா துணர்வோட
வோட்டை மனத்தோ டுயிர்தாங்கி—மீட்டுங்
குழியிற் படுகரிபோற் கோமான் கிடந்தான்
தழலிற் படுதளிர்போற் சாய்ந்து.

(ப - ரை) கேட்ட - அன்னத்தால் தமயந்தியின் செய்தியைக் கேட்ட, செவி வழியே-காதின் வழியாகவே,கேளாது உணர்வு ஓட - தன்னைக் கேளாமலே அறிவு ஓடியதனால், ஓட்டை மனத்தோடு - உடைந்த மனத்தோடு, உயிர் தாங்கி - உயிரைத் தாங்கிக் கொண்டு, மீட்டும் - அதற்கு மேலும், தழலில் படு தளிர்போல் சாய்ந்து - நெருப்பில் அகப்பட்ட துளிரிலைபோல வாடி வீழ்ந்து; கோமான்-அரசனாகிய நளன், குழியில் படு கரிபோல் கிடந்தான் - படுகுழியி லகப்பட்ட யானையைப்போலச் செயலற்றுக் கிடந்தான்.

(க - ரை) தமயந்தியின் செய்தியைக் கேட்ட செவிவழியே உணர்வு நீங்கிய நளன், குழியில் விழுந்த யானைபோல ஓய்ந்து கிடந்தான்.

(வி - ரை) கேளாது ஓட என்பதனால், அறிவு நளன் வசத்தில்லை யென்றதாயிற்று. செவிவழியே யென்பதில் ஏகாரம் தேற்றம். மனத்தோடு உயிர் தாங்கி என்பதற்கு மனத்தையும் உயிரையும் தாங்கி என்று பொருள் கொள்ளின், ஓடு உருபு உடனிகழ்ச்சிப் பொருளது. ஓட்டை மனம் ஆங்கிலத்தில் (Broken heart) என்பது - நல்ல மனம் (Sound heart) இதுவே நாணயங்களுக்கும் வழங்கிவருகிறது. அவன் மனம் செல்லா நாணயம்போல, எதிலும் செல்லாமல் இருந்தது என்னுங் குறிப்பால் 'ஓட்டை மனம்' என்றார். செல்லு நாணயம் போல இருக்கின், அவன் மனம் அவன் வசப்பட்டு நிற்கும். கோமான் இதில் மான் என்பது பெயர் விகுதி, சீமான் என்புழிப்போல. (௯௪)

[தமயந்தியின் சுயம்வரச் சேதியைத் தூதர்,
நளனரண்மனைக்குக் கொண்டுவந்தா ரெனல்.]

*கோதை சுயம்வரநாள் கொற்றவனுக் குற்றுரைப்ப*
*ஏதமிலாக் காட்சியர்வந் தெய்தினார்—போதிற்*
*பெடையோடு வண்டுறங்கும் பேரொலிநீர் நாடன்*
*அடையாத வாயிலகம்.*

(ப-ரை) போதில் - தாமரைமலரில், பெடையோடு வண்டு உறங்கும் - பெண்வண்டுகளுடனே ஆண்வண்டுகள் தூங்குகின்ற பெருமை ஒலி நீர் நாடன் - பேரோசையுள்ள நீர்வளமுள்ள நிடத நாட்டரசனாகிய நளனுடைய, அடையாத வாயிலகம் - என்றும் மூடாத தலைவாசலில், கோதை சுயம்வரம் நாள் - பூங்கோதையை யுடைய தமயந்தியின் சுயம்வர நாளை, கொற்றவனுக்கு-வெற்றியரச னாகிய அவனுக்கு, உற்று உரைப்ப - நெருங்கிச் சொல்வதற்கு, ஏதம் இல்லாத காட்சியர் வந்து எய்தினார் - குற்றமிலாமதியுடைய தூதர்கள் சென்று சேர்ந்தார்கள்.

(க-ரை) நளனுடைய மூடாத வாசலில், வீமன் தூதர், தமயந்தியின் சுயம்வரச் சேதியைத் தெரிவிக்கக் கொண்டுவந்து சேர்ந்தார்கள்.

(வி-ரை) 'கோதை' ஆகு பெயராய்ப் பெண்ணை யுணர்த்திற்று. சுயம்வரநாள் சுயம்வரத்துக்குக் குறித்தநாள் என்று விரியுமாற்றால் நான்காம் வேற்றுமை உருபும்பயனும் உடன்றொக்க தொகையாக் கொள்க. உற்று - இறந்தகாலம்; உரு என் பகுதி யிரட்டிக் காலங் காட்டிற்று. ஏதம் இல்-ஏதமானது இல்லாத என்று விரியுமாற்றால் எழுவாய்த்தொட ரென்க. இல்லா + காட்சியர் = இல்லாதகாட்சியர்; இது குறிப்புப் பெயரெச்சத்தொடராகும். காட்சியர் - தொழிலடிப்பெயர்; காண்பார்-வினையாலணையும்பெயர். ''பொதுசெறியும்போது விரியும் பூவை மருவும் பூவை'' என்றார் பிறசான்றோரு

மாகையால், இங்குப் போது என்பது காலவாகுபெயராய்ப் பூவை யுணர்த்திற்று. மேட்டிலிருந்து பள்ளத்திற்பாயும் நீர்க்கும், மதகில் வேகத்தோடோடும் நீர்க்கும் ஒலி யியல்பாகையால் 'பேரொலி நீர் நாடன்' என்றார். இது நீர்வளத்தைக் குறிப்பதாம். பகைவர் பயமில்லாமைக்கும், ஆதுலர் வரவேற்புக்கும் குறையிரப்போரைக் கோடற்கும் இடையூறின்றி யென்றென்றும் திறந்தது திறந்தபடியேயிருக்குமாகையால், நளனுடைய அரண்மனைவாயிலை, 'அடையாத வாயில்' என்றார். (கூடு)

தமயந்தியின் சுயம்வரத்தைத் தூதர்சொல்லக் கேட்ட நளன் குண்டினபுரம் போகத் தீர்மானித்தானெனல்.]

காவலன்றன் றூதர் கடைக்கா வலர்க்கறிவித்
தேவலிற்போ யீதென் றியம்புதலு—மாவிற்
பொலிந்ததேர் பூட்டென்றான் பூவாளி பாய
மெலிந்ததோள் வேந்தன் விரைந்து.

(ப - ரை) காவலன்தன் தூதர்-வீமராசனுடைய தூதர்கள், கடை காவலர்க்கு அறிவித்து-வாசல் காப்பவர்க்குத் (தாங்கள் வந்த கவையைத்) தெரிவித்து, ஏவலில் போய்-(நளனுடைய) கட்டளையால் (உள்ளே) போய், ஈது என்று இயம்புதலும்-காரியம் இன்னது என்று சொன்னவுடனே, பூவாளி பாய மெலிந்த தோள் வேந்தன் - (மன்மதனுடைய) மலரம்புகள் பாய்வதனால் தளர்ந்த தோள்களையுடைய நளன், மாவின் பொலிந்த தேர் விரைந்து பூட்டு என்றான்-குதிரைகளால் விளங்கிய தேரைத் துரிதமாய் ஆயத்தப்படுத்து என்று சாரதிக்குக் கட்டளையிட்டான்.

(க - ரை) விதர்ப்பன் தூதர், தமயந்தியின் சுயம்வரச்செதியை அறிவித்தவுடனே நளன் தன் தேரைப் பூட்டிக்கொண்டு வரும்படி சாரதிக்குக் கட்டளையிட்டான்.

(வி - ரை) விரைந்து என்பது பூட்டென்னும் வினை கொண்டது; என்றான் என்னும் வினைகொண்ட தென்பாருமுளர்.

கடைக்காவலர்-இரண்டாம் வேற்றுமைத்தொகை. இயம்புதலும் என்பதில் உம் விகுதி எதிர்காலத்தையும் தொழிலெச்சத்தையும் காட்டுவதால் எதிர்கால வினையெச்சமாம். மாவின் என்பதற்குக் குதிரைகளை யென்றே பொருள் கொண்டு செயப்படுபொருளில் ஐந்தாம் வேற்றுமை மயங்கிற்று என்பாரு முளர். மாவினை யென்று கொண்டு ஐயுருபு தொக்கதாகவுங் கொள்வர் சில்லோர். இங்கே ஐந்தாம் வேற்றுமை ஏதுப்பொருளாகக் கொண்டு மூன்றும் வேற்றுமையில் விரித்துப் பொரு ளுரைத்திருப்பது காண்க- "கல்வியிற் பெரியர் கம்பர்" என்புழிப்போல. வாள்-கூர்மை; அதை உடைமையால் வாளி யென்பது பண்பாகுபெய ராகும்.

"யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்செல் மருங்கில் வேற்றுமை சாரும்."

என்னும் சூத்திரத்தை மாவின் என்பதற்குப் பொருத்திக்கொள்க.

[விதர்ப்பனூர்க்குத் தேரைச் செலுத்தென்று நளன் தன் சாரதிக்குக் கட்டளையிட்டா னெனல்.]

கெட்ட சிறுமருங்குற் கீழ்மகளிர் நீள்வரம்பி
லிட்ட பசுங்குவளை யேரடித்த—கட்டி
கரையத்தே னூறுங் கடனா டனூர்க்கு
விரையத்தே ரென்றான் வேந்து.

(ப - ரை) கெட்ட சிறுமை மருங்குல் கீழ் மகளிர் - தேய்ந்த சின்ன இடையையுடைய பள்ளச்சிகள், நீள் வரம்பில் இட்ட பசுமை குவளை - நீண்ட வரப்புகளில் (களைந்து) போட்ட பசுமையான நீலோற்பல மென்னுங் குவளைமலர்கள், ஏர் அடித்த கட்டி கரைய தேன் ஊறும் - (உழவர்) ஏர் ஓட்டியதனால் (பெயர்ந்த) மண்ணாங் கட்டிகள் கரையும்படித் தேன் சுரக்கின்ற, கடல் நாடன் ஊர்க்கு- கடலோரத்திலுள்ள விதர்ப்பராசனுடைய நகரமாகிய குண்டின

புரத்துக்கு, வேந்து விரைய தேர் ஊர் என்றான்-அரசனாகிய நளன் (சாரதியை நோக்கி) வேகமாகத் தேரை நடத்தென்று கட்டளை யிட்டான்.

(கு - ரை) நளமகாராசன், தன் சாரதியை நோக்கி "விதர்ப்ப ராசனுடைய குண்டினபுரத்திற்கு அதிவேகமாகத் தேரை ஓட்டிக் கொண்டு போ!" என்றான்.

(வி - ரை) 'கெட்ட' என்பதற்குக் காணாமற்போன என்று பொருள் விரிப்பதூஉம் ஒன்று. மற்றை அவயவங்களெல்லாம் கண்களுக்குத் தோன்றவும் இடையொன்றே மறைந்திருக்கின்ற தென்று கொள்க. இதனால் இடையின் நுண்மையுண்மைதெரிவித்தபடியாம். இத்தனை இடையழ குடையாரைக் கீழ்மகளிர் என்றது, சில புலவர் பொருள்கொள்ளுமாறு அவர்களைக்கீழ்க்குலத்தாரென்றபடியன்று. எந்நேரமும் அவர்கள் நீர்நிலையாகிய பள்ளத்திலிருந்தே ஏருழல், களைபிடுங்கள், நாற்று நடல் முதலிய அருமையான உழவுத்தொழில் முயற்சியிற் சிறந்தாராதலான் பள்ளச்சிகள் பள்ளன்கள் என்று பெயர்பெற்றார்கள். மேலிடமாகிய மேட்டிடத்திலன்றிக் கீழிடமாகிய பள்ளத்திலிருப்பதால் இவர்கள்கீழ்மகளிர் என்றுபெயர் பெற்றாரே யன்றிச் சிலபோலிப்புலவர் பொருள் கூறுகிறபடி இழிகுலத்தாரன்று புகழேந்தியார் அருமையான உழவுத்தொழி லியற்றுவோரை இழிகுலத்தோர் என்று ஒருகாலும் இயம்பாரென்க. இழிகுலத்தார் என்றொரு குலத்தா ரிருந்தாரென்பதே நந்தமிழ்நாட்டு வழக்கன்று. உழவுத்தொழில் நெசவுத்தொழிலாகிய இரண்டையுஞ் செய்வாரே கம்பர் ஒட்டக்கூத்தர் முதலிய புலவோர் கொள்கையின்படி உயர்குலத்தோ ராவார். ஏனையோர் எவரேனும் இழிகுலத்தாரே யாவார். "உழுவார் உலகத்தார்க்காணி" என்பது நாயனார் வாக்கு. பள்ளர் வருந்தி யுழைத்துப் பயிரிட்டனுப்புவதை யுண்டு ஏப்பமிட்டு அவர்களை இழிகுலத்தா ரென்பது நன்றி கொன்றதாகும். நீள் வரம்பு-வினைத்தொகை. ஏர்-ஆகுபெயராய் மாடுகளை உணர்த்திற் றென்பாரு முளர். வரம்பு-பண்பாகுபெயர். கடையன் கடைசி என்புழைவகளும் பாலைக் கடந்து வெண்ணெய் கொள்ளும் பொதுவ

போலவே, நிலத்தை உழவுமுதலியவைகளாற் கடைந்து பயிராகிய பலன்கொள்பவரென்று பொருள் படுமன்றி வேறாகா. (கள)

[நளன் குண்டினபுரியைச் சேர்ந்தா னெனல்.]

சடைச்செந்நெல் பொன்விளைக்குந் தன்னாடு பின்னாக்
கடற்றானை முன்னாகக் கண்டான்—அடற்கமைந்த
வில்லியரும் பொற்றாம வீமன் றிருமகளாம்
நல்லுயிரும் வாழு நகர்.

(ப - ரை) சடை செம்மை நெல் பொன் விளைக்கும் - சடைச் சம்பா வென்னும் செந்நெற் பயிரானது பொன்னிறமான கதிர்களை ஈனுகின்ற, தன் நாடு பின் ஆக-தன்னுடைய நிடதநாடு பின் தள்ளிப்போகவும், கடல் தானை முன் ஆக - (தன்னுடைய) கடல் போல் விசாலமான சேனையின் தொகுதி முன்னேறிச் செல்லவும், அடற்கு அமைந்த வில்லியரும்-சண்டைசெய்யப் பொருந்திய வில் வீரரும், பொன் தாமம் வீமன் திருமகள் ஆம் நன்மை உயிரும் - அழகான மலர்மாலை யணிந்த வீமராசனுடைய செல்வ மகளாம் தமயந்தி யென்னுந் தன்னுடைய சிறந்த உயிரும், வாழும் நகர் கண்டான்-வாழ்கின்ற குண்டினபுரமென்னும் நகரத்தை (நளன்) பார்த்தான்.

(க - ரை) தன்னாடு பின்னே செல்லவும் தன் சேனை முன்னே செல்லவும் சென்ற நளன், குண்டின புரியைக் கண்டான்.

(வி - ரை) 'சடைச் செந்நெல்' என்பதற்குச் சடை போலத் தாள்க ளடர்ந்த வெனப் பொருள் கொள்வார் சிலர். தாள்களல்ல, கதிர்களே சடைபோல நெருங்கிப் பற்றியிருப்பதால், சடைச்சம்பா வென்றே ஒருவித நெற்பயிருண்டு என்று கொள்க. பொன் விளைக்கும் என்பதற்கு, பொன் விளைந்த களத்தா ரென்புழிப் போலப் பொன்னையே விளைக்கு மென்று பொருள் கொள்வாரு முளர். ஆயினும், இங்கே செம்

பொன்னிறமான கதிர்களென்று பொருள் கொள்வதே மாண்யாகும். பின்ஞ என்பதுபின்ஞக என்பதின் கடைக்குறை. அடல்-கொல்லுதல் ; அடு-பகுதி, அல் - தொழிற்பெயர் விகுதி. வில்+ல் இ+ய்+அர் படர்க்கைப் பன்மைப் பொருட்பெயர். 'உன்னுடைய வாயுடைய தென்னுடைய வாழ்வு' என்ருஞகலான், நளனுக்குத் தமயந்தி உயிராஞள், உயிர் போன்றவளே உயி ரென்றது உவமையாகுபெயர். (கூஅ)

[நாரதர் தேவலோகம் போஞ ரெனல்.]

நெற்றித் தனிக்கண் ணெருப்பைக் குளிர்விக்குங்
கொற்றத் தனியாழ்க் குலமுனிவன்—உற்றடைந்தான்
தேஞடுந் தெய்வத் தருவுந் திருமணியும்
வாஞடுங் காத்தான் மருங்கு.

(ப - ரை) தேன் நாடும் தெய்வம் தருவும் - வண்டுகள் நாடிச் செல்கின்ற தெய்வீகமான கற்பகமரங்களையும், திரு மணியும் - சிறந்த சிந்தாமணியையும், வான் நாடும் - தேவலோகத்தையும், காத்தான் மருங்கு - காப்பவஞகிய தேவேந்திரனிடத்தில், நெற்றி தனிமை கண் நெருப்பை - சிவபெருமானுடைய மூன்ருங் கண்ணென்னும் நெருப்பையும், குளிர்விக்கும் - குளிரச் செய்யும், கொற்றம் தனிமை யாழ்குலம் முனிவன் - (இசையில்) வெற்றி பூண்டதஞல் உயர்வொப்பில்லா மகதியென்னும் யாழையுடைய சிறந்த தவ விசிட்டராகிய நாரதமுனிவர், உற்று அடைந்தான் - மனம் பொருந்திச் சென்று சேர்ந்தார்.

(க - ரை) நாரதபகவான் தேவேந்திரனிடத்தில் மனம்பொருந்திச் சென்று சேர்ந்தார்.

(வி - ரை) நாரதருடைய மகதியாழோசையின் குளிர்ச்சிக்கு முன்னே நெருப்புகளுக்கெல்லாம் சிறந்த நெருப்பாகிய சிவஞர் நெற்றிக்கண்ணெருப்புங்குளிர்ந்து தண்ணென்ருகும் என்பது

தோன்ற'நெற்றித்தனிக்கண்ணெருப்பைக் குளிர்விக்கும்' என்றார். நாரதருடைய யாழோசையின் குளிர்ச்சியால், சிவனுருடைய நெருப்புக்கண்சூடும் உறைக்காது என்றபடியாம். அந்த யாழோசையில் மனம் பொருந்தியிருப்பார்க்கு எந்தச்சூடும் தண்ணென்றிருக்குமென்று கொள்க. இதனுல் நாரதபகவானுடைய மகதியாழோசையின் இனிமையின் சிறப்பைக் கூறியபடியாம். திருவை வேறு பிரித்துச் சங்கநிதி பதுமநிதி யென்பாருமுளர். அங்ஙனமாயின், திருவும் என்று உம்மை கொடுத்துக் கூறியிருக்க வேண்டும். தேனுடும் என்பதுமுதல் செவ்வெண்ணுக வந்தவைகளில் திரு என்பது மட்டும் உம்மைத்தொகையாக வாராது என்பதை உய்த்துணரவில்லாரே அங்ஙனம் திரு என்னும் அடைமொழியை வேறு பிரித்துக் கூறுவர்; இது சிறவாதென்று தள்ளுக. தேன் + ஆடும் எனப் பிரித்து, தேன் கூடுகள் ஆடிக்கொண்டிருக்குமென்று பொருள் கொள்வாருமுளர். குலம் மேன்மையைக் குறித்தது. முனிவன் - எழுவாய்; அடைந்தான்-பயனிலை. (கூக)

[நாரதரைப் பார்த்து ஐயுற்ற தேவேந்திரன் அவர் முகத்தை நோக்கினனெனல்.]

வீரர் விறல்வேந்தர் விண்ணாடு சேர்கின்றார்
ஆரு மிலராலென் றையுற்று—நாரதனார்
நன்முகமே நோக்கினு னாகஞ் சிறகரிந்த
மின்முகவேற் கையான் விரைந்து.

(ப - ரை) நாகம் சிறகு அரிந்த மின்முக வேல் கையான்-மலைகளினுடைய சிறகுகளை வெட்டின ஒளி வீசுகின்ற வச்சிராயுதத்தை ஏந்திய கையையுடையவனுகிய இந்திரன், வீரர் விறல் வேந்தர் விண் நாடுசேர்கின்றார் ஆரும் இலர் என்று ஐயுற்று - 'வில்வீராகிய வல்லரசரில் சுவர்க்கம் புகுவோர் ஒருவரு மில்லையே! என்ன காரணம்?' என்று சந்தேகப்பட்டு, நாரதனார் நன்மை முகமே விரைந்து நோக்கினன் - நாரதபகவானுடைய தெளிவான முகத்தையே விரைவாகப் பார்த்தான்.

(கு - ரை) 'வெற்றிவேலரசரில் எவரும் சுவர்க்கம் புகுவ ரில்லையே' என்று ஐயுற்ற தேவேந்திரன், நாரதர் முகத்தைப் பார்த்தபடியே யிருந்தான்.

(வி - ரை) வீரர் விறல்வேந்தர் என்பதை உம்மைத்தொகை யாகக் கொண்டு, வீரரும் வெற்றிவேந்தரு மென்று பொருள் கூறு வாரு முளர். வீரராகிய விறல்வேந்த ரென்று இருபெயரொட் டாகக் கொள்வதே இசைந்ததாம். வீரராகிய விறல்வேந்தரில் யாரும் சுவர்க்கம் புகாத காரணம் என்ன? பூலோக மெங்கும் போரில்லையோ! இல்லாததனுல் வீரரில் எவரும் இறப்பா ரில்லை - இறப்பா ரில்லாததனுல் சுவர்க்கம் புகுவா ரில்லை. இது தான் காரணமோ, வேறன்னவோ! நாரதர் என்ன சொல்வாரோ பார்ப்போம்' என்று ஐயுற்று ஒன்றும் பேசாமல் மௌனமாகத் தேவேந்திரன் அவர் முகத்தை விரைந்து பார்த்தபடியே இருந் தான் என்று கொள்ளுக. நாகம் சிறகு அரிந்த என்பதற்கு மலை களைச் சிறகு வெட்டின என்று பொருள் கூறிச் சிறகரிந்த என்ப தை ஒருவினையாக் கோடலு மொன்று-பசுவைப் பால்கறந்தான் என்புழிப்போல-நன்னூல் பெயரியல் சூத்திரம். ருஅ-ஏகாரம் பிரி நிலை. நாரதர் முகத்தோற்றத்தால் அவர் என்னவோ சொல்லவந்தா ரென்று கண்டுகொண்ட தேவேந்திரன் தன் ஐயத்தை வெளி யிடாமல் மௌனமாய் அவர் முகத்தையே பார்த்தா னென்க. சேர் கின்றாரிலர் என்பது, உடன்பாட் டெதிர்மறை. வந்தானிலன் என் புழிப்போல. மலைகளுக்கு ஆதிநாளில் சிறகுக ளிருந்தன வென்ப தூஉம், அவைகள் உலகுயிர்க்கு இன்னல் விளைத்தன வென்ப தூஉம், அவைகளின் கொட்டத்தை அடக்கி உலகுயிரைக் காக்க இந்திரன் தன் வச்சிராயுதத்தால் அவைகளின் சிறகுகளை அறுத்தா னென்பதூஉம் புராண கதை. மால்வரையை வச்சிரத்தா லீர்ந்தா னென்றும் இந்நூல் எழுபத்து மூன்றும் செய்யுளில் வருவதையுங் காண்க. (௭O

[மன்னரனைவரும் தமயந்தியின் சுயம்வரத்துக்குப் போனாரென்று நாரதர்கூறினா னெனல்.]

வீமன் மடந்தை மணத்தின் விரைதொடுத்த
தாமம் புனைவான் சயம்வரத்து—மாமன்னர்
போயினா ரென்றான் புரந்தரற்குப் பொய்யாத
வாயினான் மாதவத்தோர் மன்.

(ப - ரை) பொய்யாதவாயினான் மாதவத்தோர் மன்-பொய்க்காத வாக்கை உடையவரும், சிறந்ததவமுனிவர்க்கரசருமாகிய நாரத முனிவர், வீமன் மடந்தை மணத்தின் சயம்வரத்து விரை தொடுத்த தாமம் புனைவான் - வீமராசனுடைய மகளாகிய தமயந்தியின் கலியாணத்துக்காக (ஏற்படுத்திய) சுயம் வரத்தில், வாசனையோடு கட்டிய மலர்மாலையை அணிந்துகொள்ளும் பொருட்டு, மா மன்னர் போயினார் என்றான்-சிறந்த அரசர் பலரும் சென்றார்களென்று சொன்னார்

(க - ரை) "வீமராசன் மகளாகிய தமயந்தியின் சுயம்வரத்துக்கு மன்னரனைவரும் சென்றார்கள்'' என்று நாரதர் தேவேந்திரனுக்குக் கூறினார்.

(வி - ரை) தேவேந்திரன் சுவர்க்கம்புகுவாரில்லையே யென்று கொண்ட சந்தேகமுந் தெளியும்படி நாரதர் கூறின குறிப்பைஉய்த்துணர்ந்து கொள்க. மன்னரனைவரும் தயமந்தியின் சுயம்வரத்தை நாடிச் சென்றமையால் போரில்லை யாயிற்று - போரில்லாததால் அதில் இறப்பாரில்லையாயிற்று-இறப்பாரிலாகையால்சுவர்க்கம்புகுவாரும்இலரானார் என்றுவிரித்துக்கொள்க. வீரரும்விறல் வேந்தரும் என்று மேலைஎழுபதாஞ் செய்யுளில் வேறு பிரித்துப் பொருள்கூறுவார்கூற்று இங்கே வெறுங் கூற்றாயினமை காண்க. வீமராசன்மகளாகிய தமயந்தியின் சுயம்வரத்துக்கு மாமன்னரன்றிச் சாதாரணவீரர். சென்றாரெனல் மரபன்றென ஒதுக்குக.வாய் கருவியாகுபெயராய் வாக்கு அல்லது சொல்லை உணர்த்திற்று. நாரதருடைய

அறக்கருணையாலேயே அன்றி மறக்கருணையாற் பிறக்கும் சொர்கமும், என்றும் பொய்யா ஆகலான் 'பொய்யாத வாயினான்' என்றார். பொய்யாத வாயினான் என்பதை மூன்றாம் வேற்றுமைக் கருவிப்பொருளாக் கொண்டு, மாதவத்தோர் மன்னராகிய நாரத முனிவர் தமது பொய்யாத வாயினால் சொன்னானென்று பொருள் கூறலும் ஒன்று. மணத்தின் என்பதற்கு மணத்தினது என்று ஆறாம் வேற்றுமையில் வலிந்து பொருள் கூறுவாருமுளர். இதை ஐந்தனுருபு பொருட்டில் வந்ததென்பாருமுளர். கலியாணத்தையும் சுயம்வரத்தையும் வேறுபிரிக்காமல் ஒன்றுபடுத்திக் கூறுவதே உசிதமாம். சயம் வரத்து என்பதை ஏழாம் வேற்றுமைத் தொகையாகவன்றி வேறு கூறுவதெல்லாம் வீண்பொருளே யாகும். சிலர், சயம்வரத்துக்கு என்றதை நான்காம் வேற்றுமையில் விரித்து இடரெய்துவர் என்க. (௭௧)

[நாரதர் தேவேந்திரனிடத்தில் தமயந்தியின் அழகைப் புகழ்ந்தா ரெனல்.]

அழகு சுமந்திளைத்த வாகத்தாள் வண்டு
பழகு கருங்கூந்தற் பாவை—மழகளிற்று
வீமன் குலத்துக்கோர் மெய்த்தீப மற்றவளே
காமன் றிருவுக்கோர் காப்பு.

(ப - ரை) அழகு சுமந்து இளைத்த ஆகத்தாள் - (தமயந்தியென்பவள்) அழகைச் சுமந்ததனால் இளைத்துப்போன உடலை உடையாள், வண்டு பழகும் கருமை கூந்தல் பாவை - (எந்நாளும்) வண்டுகள் விட்டு நீங்காத கருமையாகிய கூந்தலையுடைய பதுமை போல்வாள், மழ களிற்று வீமன் குலத்துக்கு ஓர் மெய்மை தீபம் - இளமையாகிய ஆண்யானை போன்ற வீமராசன் குலத்துக்கு ஒப்பற்ற பொய்யாவிளக்கு போல்வாள், மற்று அவளே - இன்னும் அந்தத் (தமயந்தியே), காமன் திருவுக்கு ஓர் காப்பு - மன்மதனுடைய செல்வத்துக்குச் சிறந்த காவலாக இருக்கிறாள்.

(க - ரை) தமயந்திக்கு அழகைச் சுமந்ததனால் உடல்இளைத் திருக்கும்; கூந்தலில் இயற்கை வாசனை உண்மையால் வண்டுகள் விடாமற் பொருந்தியிருக்கும். அவள் வீமராசன் மகள்; காமராசன் செல்வத்துக்குக் காவல்.

(வி - ரை) 'என்றார் நாரதர்' என்று சொல்லெச்சமாய் வருவித்துக் கொள்க. தமயந்தியின் கூந்தல் பதுமினிசாதிப் பெண்ணின் கூந்தலைப்போல இயற்கைமண முள்ளதாகையால், அதை விட்டு நீங்க வண்டுகளுக்கு மனம் வாராமல்அங்கேயேசுழன்றுகொண்டிருக்கும் என்பது தோன்ற வண்டு பழகு கருங் கூந்த லென்றார். பாவைபோல்வாளைப் பாவையென்றதும், தீபம்போல்வாளைத் தீபம் என்றதும், காவல் தொழிலைச் செய்பவளைக் காவல் என்றதும் ஆகு பெயர்களாம். அவளுடைய கட்டழகால் ஆண்கள் மயங்கிக் காமன் வயமாவது உண்மையாகையால் காமன் திருவுக்கோர் காப்பு என்றார். பிறகு அவளுடைய கற்பின் ஒளியால் வீமராசன்குலம்விளங்குமாகையால் வீமன் குலத்துக்கோர் மெய்த்தீபம் என்றார். என்றென்றும் அவள் கற்பின் பொற்பு அழியாமல் விளங்குமாகையால், மெய்த்தீபம் என்றுங் கூறினார். மழகளிற்று வீமன் என்பதற்கு யானைச் சேனையையுடைய வீமராசனென்று வேறுகூறுவாருமுளர். மற்று என்பதை அசையாகத் தள்ளுவாரும் மொழிமாற்றாகக் கொள்ளுவாருமுளர் என்க. கன்னிப்பருவத்து இயற்கை வளர்ச்சியால் இளைக்கும் உடலை அழகு சுமந்ததனா லிளைத்த தெனலும் ஓர் அணியாமென்று கொள்க. (எஉ)

[இந்திரன்முதலிய தேவர்களும் தமயந்தியின் சுயம்வரத்துக்கு ஏகினா ரெனல்.]

மால்வரையை வச்சிரத்தா லீர்ந்தானும் வானவரும்
கோல்வளைதன் மாலை குறித்தெழுந்தார்—சால்புடைய
விண்ணாடு நீங்கி விதர்ப்பன் றிருநகர்க்கு
மண்ணாடு நோக்கி மகிழ்ந்து.

(ப - ரை) மால் வரையை வச்சிரத்தால் ஈர்ந்தானும் - நீண்ட மலைகளைத் தன் வச்சிராயுதத்தாற் சிறகரிந்த இந்திரனும், வானவரும் - அக்கினி இயமன் வருணனென்னும் மற்றைத் தேவர்களும், கோல் வளை தன் மாலை குறித்து - அழகான வளையலை யணிந்த தமயந்தியினுடைய சுயம்வரமாலையை உன்னி, சால்பு உடைய விண் நாடு நீங்கி - பெருமை பொருந்திய (தங்களுடைய) பொன்னுலகத்தை விட்டு, விதர்ப்பன் திருநகர்க்கு - வீமராசனுடைய சிறந்த நகரமாகிய குண்டினபுரத்திற்குப் (போக), மண் நாடு நோக்கி மகிழ்ந்து எழுந்தார் - மண்ணுலகத்தை நோக்கி மகிழ்ந்து எழுந்தார்கள்.

(க - ரை) இந்திரன் அக்கினி இயமன் வருணன் முதலிய தேவர்கள் தமயந்தியின் சுயம்வரமாலையைப் பெறும் பொருட்டுக் குண்டினபுரம் போகப் புறப்பட்டார்கள்.

(வி - ரை) நாரதர் சொல்லக் கேட்ட என்று சொல்லெச்சமாய் முதலில் வருவித்துக்கொண்டு, நாரதர் சொல்லக் கேட்ட இந்திரனும், அக்கினி இயமன் வருணன் முதலிய தேவர்களும் தமயந்தியின் மாலையைப் பெறும்பொருட்டுப் பொன்னுடு நீங்கிக் குண்டினபுரம் போக மண்ணுடு நோக்கிப் புறப்பட்டார்கள் என்று கூட்டிப் பொருள் விரித்துக்கொள்க. மால்வரையை வச்சிரத்தாலீர்ந்த செய்தியை எழுபதாஞ் செய்யுளில் நாகஞ் சிறகரிந்த மின்முக வேற்கையான் என்பதற்குக் கூறியுள்ள கதையினுல் தெரிந்துகொள்க. 'வானவரும்' என்று பொதுப்படக் கூறினுரேனும் அக்கினி இயமன் வருணன் முதலியோரென்று சிறப்பாகத் தெரிந்துகொள்க. கோல் என்பதே வளையலைக் குறிப்பதாக வந்திருக்கின்றது. "திங்கள் தங்கு சடையன்" என்னும் தேவாரத்தில்வந்துள்ள "தேவியார் கோல் தட்டியாள்" என்பதில் கோல் என்பதற்கு வளையென்றே பொருள் கொள்ளக் கிடப்பது காண்க. கோலம் என்பதின் கடைக்குறையே கோல் எனக் கொண்டு அழகிய என்று பொருள் விரித்தாம். கோல்வளை யென்பது அன்மொழித்தொகையாகத் தமயந்தியைக் குறிக்கின்றது. கோல்வளை தன் மாலை என்றதனுல் சுயம்வரமாலை யென்றும். அதை யவள் வீசுகையில் அது யார்

கழுத்திற் சூழுமோ அவரையே அவள் வரிக்கவேண்டு மென்பது மரபு. சால்புடைய என்பதற்குப் பல வளங்களு நிரம்பிய வென்று பொருள் கோடலு மொன்று. கணுக்கள் என்று பொருள்படும் வரை யென்பது முதலில் அவைகளையுடைய மூங்கிலுக்காய், பிறகு அது விளையும் மலைக்கானமையால் இருமடி யாகுபெயர்; கார் என்பது மும்மடியாகுபெயராய் நெல்லை யுணர்த்துவதுபோல, வரை யென்பது காரணவாகுபெயராய் மூங்கிலையும், தானியாகுபெயராய் மலையையும் உணர்த்துவது காண்க. வரையை மும்மடியாகுபெய ரென்பாரும். அதை மூங்கிலுக்குச் சினையாகுபெய ரென்பாரு முளர். அது பொருந்தாதென்க. (எந)

[குண்டினபுரத்துக்கு வருகின்ற நளனைத் தேவர்கள் கண்டா ரெனல்.]

பைந்தெரியல் வேல்வேந்தன் பாவைபாற் போயினதன்
சிந்தை கெடுத்ததனைத் தேடுவான்—முந்தி
வருவான்போற் றேர்மேல் வருவானைக் கண்டார்
பெருவானிற் றேவர் பெரிது.

(ப - ரை) பசுமை தெரியல்வேந்தன் பாவைபால் போயின-பசுமையாகிய பூமாலையையும் வேலாயுதத்தையுந்தாங்கிய வீமசேனனுடைய மகளாகிய தமயந்தியினிடத்திற் சென்ற, தன் சிந்தை கெடுத்து அதனை தேடுவான் - தன் மனதைப் போக்கடித்துப் (பிறகு) அதைத் தேடும்பொருட்டு, முந்தி வருவான்போல் - எல்லார்க்கு முன்னேவருபவன்போல, தேர்மேல் வருவானை - தேரின் மேல் வருகின்ற நளனை, பெரு வானில் தேவர் பெரிது கண்டார்-பெருமை பொருந்திய விண்ணுட்டிலிருந்து வந்த இந்திரன்முதலிய தேவர்கள் (பெறும் பொருளிற்) பெரும் பொருளாகக் கண்டார்கள்.

(கு - ரை) எல்லார்க்கு முந்தித்தமயந்தியின் சுயம்வரத்துக்கு வருபவனுகிய நளனை இந்திரன்முதலிய தேவர்கள் இடைவழியிற் கண்டார்கள்.

(வி - ரை) பசுமை + தெரியல் "ஈறுபோதல்" என்னும் சூத்திரத்துக் கிணங்க, பைந்தெரிய லென்றாயிற்று. தெரியல் - ஆகுபெயராய் மாலையை யுணர்த்திற்று. மாலைக்குப் பசுமை யென்பது வாடாமை. தெரியலை வேலாயுதத்திற்குக் கூட்டிச்சூட்டிக்கொளினு மாகும். போயின-இறந்தகாலப் பெயரெச்சம்; இதுவே, போன என்றும் வழங்குமாறு காண்க. போ; பகுதி- ய், "எகரவினை முன்" என்னும் சூத்திரத்ில்நெறியே என்றதனால் வந்தது; இன்-இறந்தகால இடைநிலை, அ- பெயரெச்ச விகுதி. "சாயினும சான்றாண்மை குன்றாமை" என்னும் சங்கச் செய்யுளில், சாயினும் என்பதில் வந்த யகரமெய்யையும் உய்த்துணர்ந்துகொள்க. சிந்தையைக் கெடுத்த லென்பது அதனை இழத்தலே. கெட்ட பொருளைத் தேட வரூஉம் உடையவன் மற்றவர் கண்களில் அது படுமுன் அதி விழிப்பாய் முந்திப் போய்த்தேடுவான் என்னும் மரபின்படி, முந்தி வருவான்போ லென்றார். தேவர் நளனைக் கண்டவுடனே தாம் கும்பிடப் போன தெய்வம் குறுக்கே வந்தபடி, அவனைத் தமக்காகத் தமயந்தியினிடத்திற் றூது போக்கக் குறித்துக்கொண்டார்க ளாகையால், அவனைத் தாம் பெறும் பொருளிற் பெரும் பொருளாமதித்தார்க ளென்பது தோன்றவே 'பெருவானிற் றேவர் பெரிது கண்டார்' என்றார். தேடுவா னென்பதை வினையெச்சமாக்கித் தேடுவானாகி என்று பொருள் விரிப்பதூஉம் மற்றொன்று. முந்தியென்பது வருவான் என்னும் வினைகொண்டு முடிவதால், வினையெச்சமாக் கொள்ளுநரு முளர். பெரிது என்பதைக் குறிப்பு வினையெச்சமெனக்கொள்ளுநர் கொள்க; பெரிது என்பதைக் குறிப்பு வினையாலணையும் பெயரெனக் கோடலே இங்குப் பொருந்துவதாமென்க. (எசு)

[தமயந்தியினிடத்திற் றூது செல்கவென்னும் இந்திரன் வேண்டுகோளுக்கு நள னிசைந்தா னெனல்]

காவற் குடைவேந்தைக் கண்ணுற்று விண்ணவர்கோன்
ஏவற் றொழிலுக் கிசையென்றான்—ஏவற்கு

*மன்னவனு நேர்ந்தான் மனத்தினான் மற்றதனை*
*இன்னதென வோரா திசைந்து.*

(ப - ரை) காவல் குடை வேந்தை கண்ணுற்று - உலகைத் தன்னிழலிற் காக்கும் குடையையுடைய நளமகாராசனைக் கண்டவுடனே, விண்ணவர்கோன் ஏவல் தொழிலுக்கு இசை என்றான் - தேவேந்திரன், (நாங்கள்) ஏவுந் தொழிலுக்கு (நீ) ஒத்துக்கொள்ள வேண்டுமென்று சொன்னான்; மன்னவனும் - (அது கேட்ட) நளமகாராசனும், அதனை மனத்தினால் இன்னது என்ன ஓராது - அவன் கேட்டதைத் தன்மனங் கொண்டு இப்படிப்பட்டதென்றாராயாமலே, ஏவற்கு இசைந்து நேர்ந்தான் - அவ்வேவற்றொழிலுக்கு மனம் பொருந்தி உடன்பட்டான்.

(க - ரை) காவல் குடையையுடைய நளனைக் கண்டவுடனே தேவேந்திரன் தன்னேவற் றொழிலுக் கிசையென்றபடி அவன் ஒப்புக்கொண்டான்.

(வி - ரை) காவல் குடையுடையானாகையால் நளன் தேவேந்திரனையும் ஏவற்றொழிலாற் காப்பானென்பது குறிப்பிற் பெறப்படுவது காண்க. நளன் தன் உடல் பொருளாவி மூன்றாலும் நன்மை செய்து பிறர்க்கென வாழும் பேரறிவாளனாகையால், 'மற்றதனை இன்னதென ஓரா திசைந்து நேர்ந்தான்' என்றார். காவல் குடையென்பதனைக் கம்பரும் தசரதர் குடைக்கு உடுபதியும் தோற்றானென்றார். எல்லா வுயிரையுந் தன் தண்ணொளியால் காக்குந் தன்மையையுடைய உடுபதியாகிய முழுமதியையே அரசருடைய வெண்கொற்றக் குடைக்கு உவமானங் கூறுவது கவிமரபு. ஆகையால், இங்கே காவற்குடை யென்றது நளனுடைய செங்கோலாட்சியைக் குறித்ததாகும். கண்ணுற்று என்னும் வினையெச்சம் என்றான் என்னும் வினைகொண்டு முற்றியது. கண்ணுறு - பகுதி, உ-வினையெச்ச விகுதி, பகுதி யிரட்டக் காலங் காட்டிற்று. மனத்தினால் என்பதை மனத்தில் என்று உருபுமயக்கமா மயங்குவாரு முளர். ஏவல் தொழி லென்பதை இருபெயரொட்டாக ஒட்டுநரு முண்டு. காவல்

தோழி லென்பதைஇயும் இப்படியே கண்டுகொள்க. காவலைச்செய் யுங் குடையென்று இரண்டாவதன் உருபும் பயனும் உடன் தொக்க தொகையாகக் கொள்வதூஉம் மற்றொன்றாகும், (எ௫)

[இந்திரன் நளனை நோக்கி, 'தமயந்தியினிடத்தில் தூதுபோ'! என்றனெனல்.]

செங்கண் மதயானைத் தேர்வேந்தே தேமாலை
எங்களிலே சூட்ட வியல்வீமன்—மங்கைபாற்
றூதாக வென்றானத் தோகையைத்தன் னாகத்தாற்
கோதாக வென்றானக் கோ.

(ப - ரை) செம்மை கண் மதம் யானை தேர் வேந்தே-கோபத் தாற் சிவந்த கண்களையுடைய மதங்கொண்ட யானையைப்போன்ற, தேரூரும் அரசனே!, தேம் மாலை எங்களிலே சூட்ட - தேன் ஊறு கின்ற மலர்மாலையை எங்களில் ஒருவனுக்குச் சூட்டும்படி, இயல் வீமன் மங்கைபால் தூது ஆக என்றான்-நற்குணகணங்களையுடைய வீமராசன் மகளாகிய தமயந்தியினிடத்தில் (நீ) தூதனாகச் செல்லக் கடவாய் என்று (இந்திரன்) சொன்னான். அ கோ அ தோகையை தன் ஆகத்தால்-(அது கேட்டவுடனே) அந்நளராசன்(தான் காதலித் திருந்த) அந்தத் தமயந்தியைத் தன் மனத்தால், கோது ஆக வென் றான் - சாரமற்ற பொருளாக நினைத்து வெற்றி கொண்டான் அவன் காதலுக் கடங்காமல் அதை அடக்கினான்).

(க - ரை) தேவேந்திரன் நளனைநோக்கி, "தேர் வேந்தே! நீ, தமயந்தியின்பாற் தூது போய்வா" என்றான். அவனும் அவள் காதலைமனத்தால் வென்றான்.

(வி - ரை) இந்திரன் நளனை நோக்கி என்பதைச் சொல் லெச்சமாகவருவித் துரைத்துக்கொள்க. செங்கண் மதயானைத் தேர்வேந்தே என்பதை யானையையும் தேரையுமுடைய என்று உம்மைத் தொகையாக்கிப் பொருள் கொள்ளுமாரு முண்டு. அன்

ஞர், தகரம் மிகுந்திருப்பதற்கு என்ன கூறுவரோ அறியேம். மதயானைத் தேர்வேந்தே என்பதை உவமைத்தொகை யாக்குவதே உத்தம மென்க; மதயானையைப் போன்ற அரசனே என்பது பொருள். தூது ஆக என்பதில் ஆக என்பது வியங்கோள் முற்று. கோது ஆக என்பதில் ஆக என்பது வினையெச்சம்; ஆ-பகுதி, முன்னையதிலும் பின்னையதிலும் ககரம் விகுதி. வால் என்று பொருள்படும் தோகை யென்பது அதையுடைய மயிலுக்குச் சினையாகுபெயராய், அம் மயிலைப் போன்ற பெண்ணுக்கு உவமையாகுபெயராய் வந்தமையால் இருமடியாகுபெயராம். திரிபு கெடுமென் றுணராத சிலர், கோதாக என்றுனென்றும் பொருள்கொள்ளலா மென்பர். கந்து சுளிக்குங் கடாயானை யென்பதால் செங்கண் மதயானை யென்றார். தான் எத்தனையோ காதன் முதிர்ந்திருந்தும் தமயந்தியின்மேல் பிறர் காதல் கொண்டுள்ளார் என்று தெரிந்தவுடனே நளன் தனக்கு அவள்மேலிருந்த காதலைக் கோதாக வெறுத்தமையால் உத்தமகுணவானுவது காண்க. (எசு)

[இந்திரனுக்காகத் தமயந்தியினிடத்தில் தூது போக ஒப்பின நளன் மனம் ஊசலாடிய் தெனல்.]

தேவர் பணிதலைமேற் செல்லுந் திரிந்தொருகால்
மேவுமிளங் கன்னிபான் மீண்டேகும்—பாவிற்
குழல்போல நின்றுழலுங் கொள்கைத்தே பூவி
னிழல்போலுந் தண்குடையா னெஞ்சு.

(ப - ரை) பூவின் நிழல்போலும் தண்மை குடையான் நெஞ்சு-பூமிக்கு நிழலைப்போலிருக்கின்ற குளிர்ந்த குடையையுடைய நளராசனுடைய மனமானது, தேவர் பணி தலைமேல் செல்லும்-தேவர்கள் ஏவலைத் தலையின்மேல் (தாக்கிக் கொஞ்ச தூரம்) போகும்; திரிந்து ஒருகால் மேவும் - அது மாறி ஒரு முறை திரும்பி வரும்; மீண்டு இளமை கன்னிபால் ஏகும் - திரும்பி இளங் கன்னியாகிய தமயந்தியினிடத்தில் போகும்;(இப்படி),பாவில் குழல்போல நின்று

உழலும் கொள்கைத்து - செய்தல் நூற்பாவினிடத்தில் அதைச் செலுத்தும் மூங்கில் குழல்போல (அங்கங்கு) நின்று நின்று திரி கின்ற தன்மையையுடையதா யிருந்தது. (ஏகாரம் அசைநிலை, அல்லது இரக்கக்குறி).

(க - ரை) இந்திரனுக்காகத் தமயந்தியினிடத்திற் றூது போன நளன் மனம் செய்தற் குழல்போல இங்கு மங்கும் சென்று சென்று நின்று நின்று உழன்றது.

(வி - ரை) தேவர்களுடைய பணியென்று விரியுமாற்றால் ஆறும் வேற்றுமைத்தொகை. தலைமேல் செல்லும் என்பதற்குத் தலை மேலதாகச்செல்லும் என்று பொருள் கூறலுமொன்று. 'திரிந் தொருகால் மேவும் இளங்கன்னிபால் மீண்டேகும்' என்பதற்கு, மாறி ஒருமுறை தன்னால் விரும்பப்படும் இளங்கன்னியாகிய தமயந்தியினிடம் மீளச் செல்லும்' என்று பொருள் வகுப்பாரு முளர்; இது பொருந்தாப் பொருளென்று தள்ளுக. மார்பின் பெயராகிய 'நெஞ்சு' என்பது தன்னிடத்துள்ள மனதுக்கானதால் இடவாகுபெயர்-பூவென்பதும் அப்படியே யாமென்றறிக. பாவிற் குழலோடுந் தன்மை, நேரிற் கண்டார்க்கே விளங்கும். அது எப் படி ஒருபுறத்திலிருந்து மறுபுறம் பாய்ந்து பாய்ந்து ஓயாது உழல்வ தும் கழல்வதும், எழுவதும் விழுவதும் ஆய் உழல்கின்றதோ அப்படி நளன் மனமும் சென்று நின்று திருமிவந்து சென்று சென் றுழன்றதெனக் கொள்க. நளனாட்சி சென்ற எடு-ம் செய்யு ளிற் கூறியபடி செங்கோலாட்சியாய்ப் பூவுலக வுயிர்க்கெல்லாம் இன்பளித்த காரணத்தால் பூவினிழல்போலுந் தண்குடையா னென் றார். இங்கும் குடையென்றது ஆட்சியை. அவனாட்சியின் கீழ்ப் பூவுயிர்க்கெல்லாம் மனநிறைந்து இன்புற்று வாழ்ந்ததன்மை பசு வும் புலியும் ஒரு துறையில் நீருண்டதென்பதால் நன்கு விளங்கும். செங்கோலாட்சியின் மாட்சியை விளக்கவே குடையென்று வாளா வுரையாது, தண்குடை யென்றார். இதுபற்றியே பெரியபுராண முடையாராகிய சேக்கிழாரும் "தண்ணளிவெண் குடை வேந்தன் செயல்கண்டு தரியாது மண்ணவர்கண் மழை பொழிந்தார்" என்ற

பாசுரத்தில் மீசுரமாகத் தன்ன என்னும் அடைமொழி கொடுத்துக் கூறியுள்ளாரென்க. பணி, இதுவே தெலுங்கில்பனியெனத்திரிந்து வழங்குகிறது - இங்கிது பணிப்பு அதாவது ஏவல் என்னும் பொருள்கொள நிற்பதால் முதனிலைத்தொழிற்பெயராம். போலும் என்பதை அசையாகத் தள்ளுநருமுளர். (எஎ)

[நளன், தமயந்தியிடத்தில் தன்னை யேவின இந்திரனை நோக்கி 'நகர்க்காவலைக் கடந்து நான் எங்ஙனஞ் செல்வேன்?' என்று னெனல்.]

ஆவ துரைத்தா யதுவே தலைநின்றேன்
தேவர்கோ னேயத் திருநகரிற்—காவல்
கடக்குமா றென்னென்றான் காமநீ ராழி
யடக்குமா றுள்ளத் தவன்.

(ப - ரை) காமம் நீர் ஆழி அடக்கும் ஆறு உள்ளத்தவன் - ஆசை நீர்க்கடலை அடக்குகிற சமயத்துக் குகந்தபடி மாற்றிக் கொண்ட மனமுடையவனாகிய நளன், தேவர்கோனே-ஓ தேவராசனே !, ஆவது-(உனக்கு) ஆகவேண்டிய காரியத்தை, உரைத்தாய்-(என்னிடத்திற்) சொன்னாய்; அதுவே-(நானும்) அதைமுடிப்பதற்கென்றே, தலைநின்றேன் - முனைந்து நிற்கின்றேன்; அ திரு நகரில் - அந்த அழகான நகரத்திலுள்ள,காவல்-காவலர்களை, கடக்கும் ஆறு என் என்றான் - (நான் கடந்து செல்லும் விதம் யாது என்று கேட்டான்.

(க - ரை) நளன் தேவேந்திரனை நோக்கி, "ஏ, தேவேந்திரனே! உனக்கு ஆகவேண்டிய காரியத்தை என்னிடத்திற் சொன்னாய். அது முடிக்க நானும் ஒப்புக்கொண்டேன். ஆனால், அந் நகர்க் காவலைக் கடக்கும் விதம் என்ன?" என்று கேட்டான்.

(வி-ரை) ஆவது, இனி ஆகவேண்டுவது என்பதனால் எதிர் கால வினையாலணையும்பெயர். ஏகாரம் வேறொன்றின்றி யென்று

பிரிப்பதால், பிரிநிலை. அவள் ஆசையும் அற்றேன் என்று குறிப் பிற் கொள்க. தலைநின்றேன் - இருசொல் வினைமுற்று ஒருசொற் றன்மை பெற்றது. காவல் என்னும் காரியப்பெயர் அது செய்ப வர்க்காதலால் காரியவாகுபெய ரென்றும், காவல் என்னும்தொழிற் பெயர் அது செய்பவருக்காவதால் தொழிலாகுபெய ரென்றுங் கொள்ளலாம். அடக்குமா றுள்ளத்தவன் என்பதற்குத் திரிபணி யைக் கவனியாதவர் அடக்கும் ஆறு உள்ளத்தவன் எனப் பிரித்து அடங்கச்செய்யும்படி ஊக்கமுடைய நளனென்றும். அடக்கும்வகை யை உடைத்தான மனமுடைய நளனென்றும் என்னென்னவோ மயக்கப்பொருள் கூறி மகிழ்வர். அவை பொருந்தாப் பொருளென்று தள்ளுக. கடக்குமாறு என்பதற்குக் கடக்கும் ஆறு எனப் பிரித்துத் தாண்டும் விதமென்று பொருள் கூறியவர்கள் அடக்குமாறு என்ப தற்கும் அடக்கும் விதமென்று பொருள் கூறல் திரிபணிக்குப் பொருந்தாப் பொருளாகும். நளன், தான் எத்தனையோ ஆசைப் பெருக்குடையானாய்த் தமயந்தியைக் காதலித்திருந்தானாயினும், தேவேந்திரனுக் கவள்மேலிருந்த காதலைக் கேட்டவுடனே சமயத் துக் குகந்தபடி தன் காதலை மாற்றிக்கொண்டான் ஆகையால் காம நீராழி அடக்கும் மாறு உள்ளத்தவனென்றார்; அதற்குகந்தபடியே யாமும் காமநீர்க்கடலை அடக்கும் சமயத்துக் குகந்தபடி மாற்றிக் கொண்ட மனமுடையவனாகிய நளனென்றும். தலைநின்றேன் என் பதற்கு, அதுவே முதற்றொழிலா முடிக்க முனைந்துநின்றே னென் பதே பொருந்து பொருளாம். திருநகர் என்பதற்குப் பல்வளங்களு நிறைந்து மலர்மகள் வாசஞ் சிறந்து விளங்கும் நகர் என்று பொரு ளாதலால் அழகான நக ரென்றும். காமநீராழி என்பதைக் காம மாகிய நீர் நிறைந்த கடல்போலு மனம் என்று அன்மொழித் தொகையாகப் பொருள் கொண்டு, ஒரு காலத்தில் காமநீராழி போன்றிருந்த மனத்தை அடக்கும் மாறுதலையுடைய உள்ளத் தவன் என்றும் பொருள் கொள்ளலாம். (எஅ)

[இந்திரன் நளனை நோக்கி, "நீ போய்த் தமயந்தியைக்காண், யாரு முன்னைக் காணார்" என்றானெனல்.]

*வார்வெஞ் சிலையொழிய வச்சிரத்தான் மால்வரையைப்*
*போர்வெஞ் சிறகறுத்த பொற்றோளான்—யாருமுனைக்*
*காணார்நீபோய் மற்றவளைக் காணென்றான் கார்வண்டின்*
*பாணாறுந் தாரானைப் பார்த்து.*

(ப - ரை) வார் வெம்மை சிலை ஒழிய - நீண்ட கொடுமையாகிய வில்லை வளைத்ததனாலன்றி, வச்சிரத்தால் - (அதற்கெனச் செய்த) வச்சிராயுதத்தினால், மால் வரையை - பெரிய மலைகளை, போர் வெம்மை சிறகு அறுத்த பொன்மை தோளான் - சண்டை செய்தற்குதவியான கொடிய சிறகு வெட்டின அழகிய தோள்வலியுடைய தேவேந்திரன், கருமை வண்டின் பாண் நாறும் தாரானை பார்த்து-கருவண்டுகளின் இசை மணக்கும் பூமாலை யணிந்த நளனை நோக்கி, உன்னை யாரும் காணார் அவளை (நீ) போய் காண் என்றான்-உன்னை யாரும் தெரிந்துகொள்ளமாட்டார்கள்; (ஆகையால் நீ) போய் அவளைப்பார் என்று சொன்னான். (மற்று-அசைநிலை.)

(க - ை) "உன்னை யாருங் கண்டுகொள்ள மாட்டார்கள்; அஞ்சாமல் நீ போய்த் தமயந்தியைக் காணலாம்" என்று இந்திரன் நளனை நோக்கிக் கூறினான்.

(வி - ரை) வார் வெஞ்சிலை யொழிய என்பதற்கு, நீண்ட (காதிட்டுக்கேட்கக்) கடுமையான ஓசைநீங்க என்றும், நீண்ட வேகமான மைநாகமலை தவிர என்றும் பொருள் கூறலும் உண்டு. மலைகள் பறந்துவந்து விழுவதால் உயிர்கள் வருந்தி அபயமிடும் கூக்குரலோசையே காதிட்டுக் கேட்கக் கடுமையான ஓசையென்று கொள்க. இந்திரன் மைநாகமலைதவிர மற்றை மலைகளைச் சிறகரிந்தானென்னும் இராமாயணக்கதையைக் கருதியே நீண்ட வேகமான மைநாகமலை தவிர என்று பொருள் கோடலா மென்றுணர்க. ஆயி

னும்,இவ் வாசிரியரே இந்நூலின் பதினைந்தாம் பாட்டில் வெஞ்சிலை யே கோடுவன என்றதற்கேற்பக்கத்து, வெஞ்சிலையென்பதற்குக் கடுமையான வில்லென்றே பொருள்கொள்ளக் கிடப்பதனால், இங் கும் அதற்குக் கடுமையான அல்லது கொடுமையாகிய வில்லென்று பொருள் கோடலே உரிமையாம். மால்வரையை வச்சிரத்தாலீர்ந்தா னென்னும் எழுபத்து மூன்றாம் செய்யுளோடு இதையும் ஒப்பிடுக. மலைகளின் சிறகை இந்திரன் ஈர்ந்த புராணகதையை இவ்வாசிரியர் எழுபதாஞ் செய்யுளிலுங் குறிக்கின்றார். மலைகளைச் சிறகரிவதற் காகவே இந்திரன் ததீசி முனிவருடைய முதுகெலும்பை இரந்து, அதுகொண்டு புது வச்சிராயுதம் செய்துகொண்டா னென்பதூஉம் ஒரு பழம்புராண கதை. மண்ணுலகத்து மன்னன்மகளைக் காதலித் துப் பொன்னுலகத்து மன்னனாகிய இந்திரன் வந்தா னென்பதோடு மலைகளுக்குச் சிறகிருந்தனவென்பதைஇயும், அவைகளை இந்திரன் சிறகரிந்தா னென்பதைஇயும் ஒப்பிட்டுக்கொள்க. இவைகளைப் புராணங்கள் காரணமின்றிக் கற்பித்திரா. வார்சிலை யென்பதில் வார் என்பதற்கு நீண்டவென்று பொருள் கோடல், அது அம்பெய்ய வளையுங்காலத்தல்லது மற்றைக்காலத்தில் நாணோடு நீண்டிருக்கும் தன்மையைக் கருதியேயாகும். இதுபற்றியே சைவ எல்லப்ப நாவலரும்,

"நாராயண னறியா நாதரரு ணேசருக்கு
வாரார் சிலைகலை மெய் மாதங்க மம்மானை"

என்றார். (எக)

[நளன் செல்கையில் குண்டினபுரம் தேவலோகத் தமராவதிப் பட்டணம்போல மார்ந்திருந்த தெனல்.]

இசைமுகந்த வாயு மியறெரிந்த நாவுந்
திசைமுகந்தா னன்ன தெருவும்—வசையிறந்த
பொன்னாடு போந்திருந்தாற் போன்றதே போர்விதர்ப்ப
நன்னாடர் கோமா னகர்.

(ப - ரை) போர் விதர்ப்ப நன்மை நாடர் கோமான் நகர் - போர் வீரனாகிய விதர்ப்பவளநாட்டரசனுடைய குண்டினபுரி

இசை முகந்த வாயும் - புகழைப் புகுத்துக்கொண்டிருக்கிற வாயில்களையும், இயல் தெரிந்த நாவும்-கட்டட நூலொழுங்கின்படி செய்து விளங்கும் நடுவிடங்களையும், திசை முகந்தால் அன்ன தெருவும்-நான்கு திக்குகளையும் அளந்துகொண் டிருப்பதுபோன்ற தெருக்களையும், (கொண்டிருப்பதனால்), வசை இறந்த - நிந்தை யற்ற, பொன் நாடு போந்து இருந்தால் போன்றது-தேவலோகத் தமராவதிப்பட்டணமே வந்து தன்னிடத்தில் புகுந்துகொண் டிருந்தது போலத் தோன்றிற்று.

(க - ரை) விதர்ப்பன் பட்டணமாகிய குண்டினபுரியானது புகழ் புகும் வாசல்களையும், ஒழுங்கான நடுவிடங்களையும், நீண்ட தெருக்களையும் உடைமையால் அமராவதிபோலத் தோன்றிற்று.

(வி - ரை) போர்விதர்ப்பன் என்ற குறிப்பால், இசை முகந்த என்றதற்குப் போரிற் சிறந்த புகழென்று கொள்க. இந்தப் புகழை நாடோறும் உட்செலுத்திக்கொண்டே யிருக்குமாற்றால் இசை முகந்த வாயும் என்றார். வாய், வாசல், வாயில் என்பன ஒருதொடர். அப்படி உட்சென்ற புகழின்சிறப்பைப் பலரும் எடுத்தோதுவதால் இயல் தெரிந்த நாவும் என்றார். அதைப் பல்லிடத்தும் புறத்திற் பரப்புவதால் திசைமுகந்தாலன்ன தெருவு மென்றார் என்று கொள்வதூஉம் மற்றொன்று. இசைபண்ணும் இயல் பாடலும் திசைமுகத்தல் ஆடலு மெனக்கொண்டு, இயல் இசை நாடகமென்னும் மூன்றையுங்குறித்தாரெனக் கோடலும் இன்னொன்று. வாசல்களில் இசைப் பாட்டுகளும், நடுவிடங்களில் இயல் ஆராய்ச்சிகளும், தெருக்களில் ஆடற்சிறப்புகளும் அமைந்திருந்தன என்பதூஉம் வேறொன்று, வாயும், நாக்கும், பருத்த உடலுமுள்ள மனித்த உடல்போ லிருந்ததென்பதூஉம் பிறிதொன்று. அப் பட்டணம் அமராவதிபோன்றிருந்ததால், அதுவே அங்கு வந்து புகுந்துகொண்டதோ என்று கண்டார் மயங்கும்படி இருந்ததென்றார் ஆகையால், இதுவுமோர் அணியாகும். இதைத் தற்குறிப்பேற்ற மென்பர். போந்து - புகுந்து என்பதின் மரூஉ. பொன்னாடு ஆகுபெயராய் அமராவதியைக் குறித்த தென்க. (அ0)

[கன்னிமாடத்தில் தமயந்தியை நளன் பார்த்தான், அவளும் இவனைப் பார்த்தா ளெனல்.]

தேங்குவளை தன்னிலே செந்தா மரைமலரப்
பூங்குவளை தாமரைக்கே பூத்ததே—ஆங்கு
மதுநோக்குந் தாரானும் வாணுதலுந் தம்மிற்
பொதுநோக் கெதிர்நோக்கும் போது.

(ப - ரை) ஆங்கு - அவ்விடத்தில், மது நோக்கும் தாரானும் வாணுதலும்-(வண்டுகள்) தேனை நோக்கி மொய்க்கின்ற மலர் மாலை யணிந்தவனாகிய நளனும், விளங்குகின்ற நெற்றியையுடைய தமயந்தியும், தம்மில்-தங்களுக்குள், பொது நோக்கு-பொதுவான பார்வையினால், எதிர் நோக்கும்போது - நேர் நேராகப் பார்த்த காலத்தில், தேம் குவளை தன்னிலே - (தமயந்தியின் கண்களாகிய) வாசனைபொருந்திய கருநெய்தற்பூவிலே, செம்மை தாமரை மலர-(நளனுடைய கண்களாகிய) செந்தாமரை மலர்கள் மலர்ந்ததனால், பூ குவளைதாமரைக்கே பூத்தது - அம் மணமுள்ள கருநெய்தற் பூக்கள் செந்தாமரை மலர்களிலே பூத்தன. (ஈற்று ஏகாரம் அசை.)

(க - ரை) நளனும் தமயந்தியும் ஒருவரை யொருவர் பொதுவாக எதிர் நோக்குகையில் குவளையில் தாமரையும் தாமரையில் குவளையும்மாறிமாறிப் பூத்ததுபோலிருந்தது.

(வி - ரை) பொது நோக்கு, மனத்திற் களங்கமின்றிப் பார்க்கும் பார்வை - இயற்கை நோக்கு. ஏகாரங்கள் இரண்டும் பிரிநிலைகள். பூத்தன என்னும் பன்மைவினை கொள்ளவேண்டியது அஃறிணையாகையால் இன வொருமையால் ஒருமைவினை கொண்டது தாமரைக்கு என்பது வேற்றுமை மயக்கம். நோக்கு, நோக்கம் ஒரு தொடர்.

"யானோக்குங்கால் நில னோக்கும் நோக்காக்கால்
தானோக்கி மெல்ல நகும்."

என்பதையும் இதனோடு ஒட்டினும் ஒட்டலாம். தமயந்தியின் கட்பார்வையைக் குவளைமலராகவும், நளனுடைய கட்பார்வையைத் தாமரைமலராகவும் உருவகித்தார். ஆகையால் முதலில் நளன் தமயந்தியைப் பார்த்தபோது, பிறகவள் இவனைப் பார்த்தாளென்று கூட்டிக்கொள்க. இருவரும் ஒருவரையொருவர் இன்னின்னாரென் றுருவத்தால் அறியாராகையால் பொதுநோக் கென்றார். வாணுதல் - பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. (அக)

[நளனைக் கண்டவுடனே தமயந்தியின் மனநிறை மாறிற்றெனல்.]

நீண்ட கமலத்தை நீலக் கடைசென்று
தீண்டு மளவிற் றிறந்ததே—பூண்டதோர்
அற்பின்றாழ் கூந்தலாள் வேட்கை யகத்தடக்கிக்
கற்பின்றாழ் வீழ்த்த கதவு.

(ப - ரை) நீண்ட கமலத்தை நீலம் கடை சென்று தீண்டும் அளவில்-(இப்படி) நளன் கண்களாகிய நெடிய தாமரைமலர்களைத் தன் கருநெய்தன் மலர்போன்ற கட்கடைப்பார்வையானது தீண்டினவுடனே, தாழ் கூந்தலாள் வேட்கை அகத்து அடக்கி -நீண்ட கூந்தலையுடைய தமயந்தியானவள் தன் விருப்பத்தை (உள்ளமென்னும்) அறையில் அடைத்து, கற்பின் தாழ் வீழ்த்த கதவு-கற்பென்னும் தாழ்ப்பாளை அதற்கு முன்னே பூட்டிவைத்துள்ள (நிறையென்னும்) கதவானது, பூண்டது ஓர் அன்பின் திறந்தது - அப்படிப் பூட்டிவைப்பதற்கு முன்னே, தான் கொண்டதாகிய ஒப்பற்ற அன்பின் மிகுதியாகிய (வேகத்தினால்) திறந்துகொண்டது.

(க - ரை) நளனைக் கண்டவுடனே, தமயந்தியின் உள்ளமென்னும் சிற்றறையிலிட்டு, நிறையென்னுங் கதவை யடைத்துக் கற்

பென்னும் தாழிட்டு வைத்த விருப்பமென்னும் பொருளானதுஅன்பென்னும் வேகத்தால் வெளிப்பட்டது.

(வி - ரை) உள்ளத்தையே அறையாகவும், நிறையையே கதவாகவும், கற்பையே தாழக்கோலாகவும், காதலையே பொருளாகவும், அன்பையே கதவைத்திறக்கும் வேகமாகவும் உருவகித்தமை வியக்கற்பாலதாம். வேட்கை - தொழிற்பெயர். நீலம் - பண்பாகுபெயர். நீண்டகமல மென்றது நளன் முகத்தை. நீலக்கடை என்றது தமயந்தியின் கண்கடையை. ஓர் ஆண்மகனைக் கற்புடைநங்கை கட்கடையால் நோக்குவதே இயற்கை. (அஉ)

[நளனழகைப் பார்க்கப் பார்க்கத் தமயந்திக்கது வளர்ந்து கொண்டே வந்ததெனல்]

உய்ஞ்சு கரையேற வொட்டுங்கொ லொண்டொடியாள்
நெஞ்சு தடவு நெடுங்கண்கள்—விஞ்சவே
நீண்டதோ அங்ஙனே யிங்ஙனே நீண்மலரா ள்
ஆண்டதோள் மன்ன னழகு.

(ப - ரை) நெஞ்சு தடவும்-(நோக்குவோனாகிய நளனுடைய) மனதிற் றாக்குகின்ற, ஒண்மை தொடியாள் நெடுமை கண்கள்-அழகான வளையலணிந்த தமயந்தியினுடைய நீண்ட கண்கள், அங்ஙனே விஞ்சவே நீண்டதோ - (அம் மனமிருக்கு மிடமாகிய நளனது) மார்பிடத்தில் மிகுதியாக நீண்டனவோ? (இல்லையானால்) நீள் மலராள்,ஆண்ட தோள் மன்னன் அழகு-(அழகு),மிகுந்த தாமரைமலரில் உள்ள திருமகளுக்கிடமான தோள்களையுடைய நளமகாராசனுடைய அழகு(என்னுங் கடல்)இங்ஙனே உய்ஞ்சுகரை ஏற ஒட்டுங்கொல் - (இங்கே தமயந்தியைத்) தப்பிக் கரையேற விடுமோ?

(க - ரை) தமயந்தியின் கண்கள் நளனழகைப் பார்த்தது பார்த்தபடியே நின்றனவோ? அவனுடைய அழகுக்கடல் அவளைத் தப்பிக் கரையேற விடுக்குமோ?

(வி - ரை) கவி வியக்கின்றார் அல்லது ஐயுறுகின்றார் என்னலுமாம். நளனுடைய மார்பழகைத் தமயந்தி பார்த்தபடியே இருக்கின்றாள். எத்தனை பார்த்தாலும் அத்தனைக்கத்தனை அதனழகு வளர்ந்துகொண்டே யிருக்கின்றது. முடிந்தபாட்டைக் காணேம். ஆகையால், அவள் பார்வை நீண்டுகொண்டேயிருக்கிற தென்போமோ? அல்லது, தாமரையாள் வாழும் அவனுடைய தடந்தோளழகுக் கடல், தன்னில்விழுந்த அவனைத் தப்பிக்கரை ஏற ஒட்டாது என்போமோ? என்றபடியாம். ஒன்று அவனழகுக்குகந்தபடி அவள் பார்வை நீண்டதாகவேண்டும்; அல்லது; அவனழகுக் கடல் அவளைத் தப்பிக் கரையேற வொட்டாதாகவேண்டும். இங்ஙன் அங்ஙன் என்பன இங்ஙனம் அங்ஙனம் என்பவைகளின் கடைக்குறைகள். நீண்டன எனற்பாலது நீண்டது என்று பன்மையி லொருமை வந்தது, பால்வழுவமைதியாம். "ஒருமையிற் பன்மையும்" என்பது சூத்திர விதியாம். உய்ந்து உய்ஞ்சு என்பன ஒரு தொடர். நகரத்துக்கு ஞகரம் மொழியிடைப் போலி. கொல்லும் ஓவும் ஐயப்பொருளன. ஏ - தேற்றம். ஓகாரம் எதிர்மறையென்று அதற் குகந்தபடி பொருள் கொள்ளுநரு முளர். அவனழகுக் கடலுக்குகந்தபடி அவள் கண்கள் நீளமாட்டா; ஆகையால், அதனில் விழுந்த அவள் தப்பிக் கரையேற முடியாது என்பதூஉம் மற்றொரு கருத்து. (அரு)

[தமயந்தி 'இம்மன்னன் மார்பைப் புல்லுவன்' என்றெண்ணினாள்; ஆனால் நாணந்தடுத்த தெனல்.]

மன்னாகத் துள்ளழுந்தி வாரணிந்த மென்முலையும்
பொன்னாணும் புக்கொளிப்பப் புல்லுவனென் — றுன்னி
எடுத்தபே ரன்பை யிடையே புகுந்து.
தடுத்ததே நாணுந் தறி.

(ப - ரை) வார் அணிந்த மென்மை முலையும் பொன்மை நாணும் - கச்சணிந்த மெல்லிய முலைகளும் பொற்பூணூலும், மன் ஆகத்துள் புக்கு அழுந்தி ஒளிப்ப-நளராசனுடைய மார்பிற் புகுந்து

அழுந்தி மறையும்படி, புல்லுவன் என்று உன்னு எடுத்த பெருமை அன்பை-தழுவிக்கொள்வேனென்று (தமயந்தி) நினைத்துக்கொண்ட பெரிய அன்பென்னும் (யானையை), நாண் ஆரும் தறி - அவளுடைய வெட்கமாகிய கட்டுத்தறி, இடையே புகுந்து தடுத்தது-நடுவில் நுழைந்து தடை செய்தது.

(க - ரை) தமயந்தி தன் ஆசைப்பெருக்கால் நளனை அணைய வேண்டு மென்று நினைத்து, இடையி லெழுந்த வெட்கத்தால் அந் நினைப்பை ஒழித்தாள்.

(வி - ரை) மன் - நிலைபேறுடைமை, ஆகுபெயராய் அரசனைக் குறிக்கிறது; இதுவே அன் விகுதி பெற்று மன்னன் என்றும் வருவது காண்க. அகம் நீட்டும் வழி நீண்டு ஆகமென்றாயிற்று. அகமனை உள்ளே பாவமென்பதில் அகமென்பது மனத்தையே குறிக்கும்; இங்கது மார்புக்காவதால் தானியாகுபெயர். நெஞ்சு மனதுக்காவது இடவாகுபெயரானல், அகம் மார்புக்காவது தானியாகு பெயரென்று கொள்க. நாணத்தைக் கட்டுத்தறியாக்கினாராகையால் அதற்கேற்ப அன்பை யானையாக உருவகித்தோம் தமயந்தியின் அன்பாகிய யானை, அவளுடைய நாணமென்னும் கட்டுத்தறியிற் கட்டியிருந்தும், நளன்மேல் அவட்கெழுந்த ஆசை யென்னும் மதமயக்கால், இதினின்று விடுபட்டுப்போக முயன்றது. ஆனலும், இது உறுதியாயிருந்ததால், அது தடைபட்டு நின்றது என்று தற்குறிப்பேற்ற அணியாக் கொள்க - ஏகதேச வுருவக மெனினுமாம். மென்மை இளமையால் உள்ளது. ஒளிப்ப-எதிர்கால வினைச் செயவெனெச்சம். (அச)

[தமயந்தி நளனை, நோக்கி, “நீ யாவன், விஞ்சையனே, தேவனே என்று வினவல்.]

காவல் கடந்திங்கள் கன்னிமா டம்புகுந்தா
யாவனீ விஞ்சைக் கிறைவனோ—தேவனோ
உள்ளவா சொல்லென்றா ளேசற் குழைபுகுந்து
வெள்ளவா ளோர்சோர விட்டு.

(ப - ரை) ஊசல் குழைமீது வெள்ள வாள் நீர் சோர விட்டு- ஊசலைப்போலசைகின்ற குண்டலத்தின்மேல், வாள் வெள்ள நீர் சோரவிட்டு - வாள்போலுங் கண்களினின்று வெள்ளம் போற் பாயும் கண்ணீரை ஒழுகவிட்டு, காவல் கடந்து எங்கள் கன்னி மாடம் புகுந்தாய்-இடையிலுள்ள காவலைத் தாண்டி எமது கன்னி மாடத்தில் நுழைந்தாய், நீ யாவனோ, விஞ்சைக்கு இறைவனோ, தேவனோ - (ஆகையால்) நீ எப்படிப்பட்டவனோ, மாய வித்தைக்கு முதல்வனோ, அல்லது தேவலோகத்தானோ, உள்ள ஆறு சொல் என்றாள் - உள்ளபடி (ஒளியாமற்) சொல்லென்றாள்.

(க - ரை) தங்கள் கன்னிமாடத்துக்குள் காவலைக் கடந்து வந்து நுழைந்த நளனைக் கண்ட தமயந்தி "நீ யாவன், வித்தியா தரனோ தேவனோ? சொல்!" என்றாள்.

(வி - ரை) 'தன்னருகில் வந்த நளனைக் கண்டதமயந்தி' என்று சொல்லெச்சமாக முதலில் வருவித்துக் கொள்க. தமயந்தி - எழு வாய், என்றாள் பயனிலை, இங்கே என்றாளென்பதற்கு, 'என்று வினவினாள்' என்று பொருளுரைத்துக் கொள்க. காதளவோடிய கண்கள் என்பதனால் ஊசற்குழைமீது வெள்ளவாள் நீர் சோர விட்டு என்பதற்குக் குண்டலங்களின்மீது கண்ணீர் ஒழுக விட் டென்றாம். இப்படிப்பட்டவனை நாம் கணவனாக வரிப்பதற் கில்லை யே யென்னும் ஏக்கத்தால்,

> "அன்பிற்கு முண்டோ அடைக்குந்தா ழார்வலர்
> புன்கணீர் பூசல் தரும்."

என்னுந் திருக்குறட் கிணங்க அன்பின் மிகுதியால் தன்னையு மறியாமலே அவள் கண்களில் நீர் ஒழுகின என்று கொள்க. வெள்ளவாள் நீர் என்பதைவாள்வெள்ள நீர் என்று மொழி மாற்றிப் பொருள் கொண்டாம். வெள்ள என்பதற்குக் கூரிய எனக்கொள் வாரு முளர். நீர் என்பதற்குச் சிலர் கருமை யென்று பொருந்தாப் பொருள் பொருத்துவர். இன்னுஞ் சிலர் வெள்ளம் என்பதைக் கடலெனக் கொண்டு அதுபோலும் கண்களென்று பொருள் கூறு

வர். வாள்நீர் என்பதை ஒளி பொருந்திய கண்ணீ ரென்பர். வாள் போலுங் கண்ணை வாளென்றது உவமையாகுபெய ரென்க. புகுந் தாய் என்பதில் யகரம், வருமொழி முதல் யகரத்தை நோக்கித் தொக்கது. நிலைமொழி தனிக்குறி லணைந்த யகரமாயின் வருமொழி முதலில் யகரம் வரின் தொகா தென்க. புகுந்தாய் என்பதை விளி யாக்குவாரு முளர். புகுந்தவாறு என்பது புகுந்தவாவென்று கடை குறைந்தது. ஓகாரங்கள் மூன்றனுள் முன்னையது உயர்வுசிறப்பு வினா - பின்னையவை அறியான் வினாக்கள் - யாவன் என்பது பொது வினாவுமாம். விஞ்சையனோ தேவனோ என்பவை சிறப்பு வினாக்கள். மறைந்து வந்ததனால் விஞ்சையனோ என்றாள். கட்டழகுடைமை யால் தேவனோ வென்றாளென்க. வெள்ள நீர் - உவமைத்தொகை. இப்படிப்பட்ட வெள்ள நீரே நளனுக்குந் தன் மக்களை, மாறுவேடத் திற்கண்டபோதும் தன்னையு மறியாமலே வெளிப்பட்ட விதம்உல கப் பிரசித்தம் - துஷ்யந்தற்கும் தன் மகன் பரதனைக் கண்ட போதும் அவனை அவன்தான் என்று தெரியாதிருந்தும் கண்ணீர் துளும்பின தன்மை யாவர்க்குந் தெரியும். இப்படியே தமயந்திக் கும் நளனை நளனென்று தெரியாதிருந்தும் விட்டகுறை தொட்ட குறையால் அவள் கண்களின் அன்புநீர் அரும்பிற் றென்று கொள்க. (அ௬)

[நளன் தான்வந்த சேதியையும், தன்னுடைய நாடு நகரங் களையுந் தெரிவித்தா னெனல்.]

தீராத காமத் தழலைத்தன் செம்மையெனும்
நீரா லவித்துக் கொடுநின்று—வாராத
பொன்னாட ரேவலுடன் போந்தவா சொல்லித்தன்
நன்னாடுஞ் சொன்னா னளன்.

(ப - ரை) தீராத காமம் தழலை - ஆறாத காமநெருப்பை, தன் செம்மை என்னும் நீரால் அவித்துக்கொடு நின்று - தனது நடுநிலை மை என்னும் தண்ணீரால் தணித்துக்கொண்டு நின்று, நளன் - நள

ராசனுனவன், வாராத பொன் நாடர் ஏவலுடன் போந்த ஆறு சொல்லி - (பூவுலகத்துக்கு) வரத்தகாத தேவலோகத்தாருடைய கட்டளையினால் (தான்) வந்த விதத்தைச் சொல்லி, தன் நன்மை நாடும் சொன்னான் - தனது சீர்வளமிக்க நாட்டின் பெயரையும் தெரிவித்தான்.

(கு - ரை) நளன் தன் காதல் நெருப்பைத் (தன்) நடு நிலைமை யென்னுந் தண்ணீரால் தணித்துக்கொண்டு, தான் தேவ ரேவலால் வந்த விதத்தையும், (தன்) நாட்டின் பெயரையும் தமயந் திக்குத் தெரிவித்தான்.

(வி - ரை) தீராத காமத்தழல் என்றதை "ஆறாக் காமக் கொடிய கனல் ஐவர் மூட்ட அவலமனம் நீறாய் வெந்து கிடப் பேனை" என்னும் அதிவீரராமருடைய வாக்கோடு ஒப்பிடுக. காமத் தழல் - இருபெயரொட்டு. செம்மை யென்பதற்கு நடுநிலைமை யென்று பொருள் கூறியதற்கு இவ் வாசிரியரே பின்னால் சூதாட் டத்தை இழித்துக் கூறுகையில்

"காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதல் மறுத்த லிவைகண்டாய்—போதில்
சினையாமை வைகுந் திருநாடா செம்மை
நினையாமை பூண்டார் நெறி."

என்பதில் செம்மை யென்பதற்குக் கொண்ட பொருளையே காரண மாக் கொள்க. செம்மை யென்பதற்கு நற்குணங்களென்று சாதா ரணப் பொருள் கொள்ளுநரு முளர். காதலை நெருப்பென்றதற் கேற்ப, செம்மையை நீராக உருவகித்தார். உடன் என்னுஞ் சொல் லுருபு மூன்றாவதன் ஏதுப்பொருளில் வந்தது. வாராத பொன் னாடர் என்பதற்கு வருதற்கு அருமையான வென்று பொருள் கோடலு மொன்று. இங்கே நளனுக்கிருந்த நடுநிலைமை வியக் கற்பாலது. தான் அன்பு பூண்டிருந்த நாயகியைத் தேவேந்திரன் முதலியோர் இச்சித்தாரென்று தெரிந்தவுடனே நடுநிலைமையை உத்தேசித்த நளன் தமயந்திமேல் தனக்கிருந்த காதலைத் தவிர்த்தா

னென்க. நன்றூடும் என்பதிலுள்ள உம்மை இறந்தது தழீஇயது. இங்கே நன்மை நாடு என்பதற்கு சீர்வள முதலிய நலஞ்சிறந்த நாடு என்பதே தகுதியாம் போந்தவா, "உள்ளவா" என்புழிப் போல, போந்தவாறு என்பதின் கடைக்குறை. (அசு)

[தேவேந்திரனுக்கு மாலை சூட்டென்று தமயந்திக்கு நளன் கூறினனெனல்.]

என்னுரையை யாதொன் றிகழா திமையவர்வாழ்
பொன்னுலகங் காக்கும் புரவலனை—மென்மாலை
சூட்டுவா யென்றான் றொடையிற்றேன் றும்பிக்கே
ஊட்டுவா னெல்லா முரைத்து.

(ப - ரை) தொடையில் தேன் தும்பிக்கே ஊட்டுவான்-(தன்னுடைய) மலர்மாலையிலுள்ள தேனை வண்டுகளுக்கே உண்கைக் கின்றவனாகிய நளன், எல்லாம் உரைத்து-(தான் வந்த வரலாறு முதலிய)எல்லாவற்றையுஞ் சொல்லி, என் உரையை யாது என்று இகழாது - என்னுடைய பேச்சை என்னவோ என்று அவமதிக்காமல், இமையவர் வாழ் பொன் உலகம் காக்கும் புரவலனை-இமையா நாட்டத்தவராகிய தேவர்கள் வாழும் தேவலோகத்தை ஆள்கின்ற அரசனாகிய இந்திரனுக்கு, மென்மை மாலை சூட்டுவாய் என்றான்- மெல்லிய மலர்மாலையைச் சூட்டென்று சொன்னான்.

(க - ரை) "என்னுடைய சொல்லை அசட்டை செய்யாமல் இந்திரனுக்கே நீ சுயம்வரமாலைசூட்டவேண்டும்"என்று தமயந்தியை நோக்கி நளன் கூறினான்.

(வி - ரை) உரை - முதனிலைத் தொழிற்பெயர்; மலை என்புழிப்போலத் தொழிலாகுபெயரெனினுமாம். 'யாது என்று' என்பதை 'யாதோ என்று' ஓகாரம் கூட்டிக்கொள்க; யாது என்பதை வினாவடியாகப் பிறந்த குறிப்பு வினைமுற்றென்று கொண்டு

எத்தன்மையதென்று பொருள் கொள்ளுநருமுளர். என்னவோ என்று இகழ்ச்சிக் குறியாகிய ஒகாரத்தைக் கூட்டிக்கொள்வதே மேட்டிமையாம். இமயவர், இமையவர் போலி; இமையாதவரை இமையவர் என்பது மங்கலம்; சுடுகாட்டை நன்காடு என்பது போலவும், கெட்ட பாம்பை நல்ல பாம்பென்பது போலவுமா மென்று கொள்க. பொன்னுலகங் காக்கும் புரந்தரனை யென்றும் பாடபேத முண்டு. இந்திரனை மாலை சூட்டுவாய் என்பதினும் இந்திரனுக்கு மாலையைச் சூட்டுவாய் என்று நான்காம் வேற்றுமைக் கொடைப் பொருட்குத் தகுதிப்பொருளாகக் கோடலே தகுதியாம். சூட்டுவாய், ஊட்டுவான் இரண்டும் பிறவினைகள். முன்னையது முன்னிலை ஏவல், பின்னையது வினையாலணையும் பெயர்-முன்னையது சூட்டாயென்றும் வரும். சூட்டுவாய் என்பதிலுள்ள வகரம், முன்னிலை ஏவலானால் உடம்படுமெய்யல்லாத மெய்யென்பர் ஒரு சாரார். முன்னிலையானால், எதிர்கால இடைநிலை யென்பர். வருணன் முதலியோரை நீ மதியாவிடினும் அவர்களிற் றலைவனாகிய இந்திரனையேனும் மாலைசூட்டிக்கொள்வாய் என்னுங் கருத்தமைத் 'தே நளன் தமயந்தியை நோக்கி,பொன்னுலகங் காக்கும் புரவலனை நீ மாலை சூட்டுவாய்' என்றானென்று கொள்க. மாலை சூட்டுவாய் என்பதை இருசொல் ஒரு வினையாக் கொண்டு புரவலனை என்பதைச் செயப்படுபொருளாகவே பொருள் கோடலுமாம். ()

[நளனுக்காகவே சுயம்வரம் வகுத்திருக்கிறதென்று
தமயந்தி கூறினளெனல்.]

இயமாநின் றூர்ப்ப வினவளைநின் றேங்க
வயமருதோண் மன்னு வகுத்த—சுயம்வரந்தான்
நின்பொருட்டா லென்று நினைகென்று ணீள்குடையான்
றன்பொருட்டானை வாடளர்ந்து

(பத-'ரை) நீள் குடையான் தன் பொருட்டால் தளர்ந்து நை வான்-நீளுங் குடையையுடைய நளனுக்காகவே மனந் தளர்ந்து வருந்

தூயவளாகிய தமயந்தி, வயம் மரு தோள் மன்னு-வெற்றி பொருந்திய தோள்களையுடைய அரசனே!, இயமரம் நின்று ஆர்ப்ப-வாத்தியங்கள் நிலைத்து ஒலிக்கவும், வளை இனம் நின்று ஏங்க-சங்குக்கூட்டம் நிலையாய் முழங்கவும், வகுத்த சுயம்வரம் - ஏற்படுத்தியுள்ள சுயம்வரமானது, நின்பொருட்டுதான் என்று நினைக என்றாள்-உன்னிமித்தமாகவே என்று நினைத்துக்கொள்ளக்கடவா யென்று சொன்னாள்.

(க-ரை) தமயந்தி நளனை நோக்கி, "உமக்காகவே சுயம்வர மணம் ஏற்படுத்தியிருக்கிறதென்று நினைத்துக்கொள்க" என்றாள்.

(வி-ரை) இயம்+மரம் என்று இரு சொற்களாகப் பிரித்து, தோற்கருவிகளாகிய பேரிகை முதலியவைகளும், துளைக் கருவிகளாகிய ஊதுகொம்பு முதலியவைகளு மெனப் பொருள் கொள்ளுநருமுளர். மரம் இயம் என மொழி மாற்றி மரத்தினாற் செய்த வாத்திய மென்பாரும், இயம் அரம் எனப் பிரித்து வாத்தியங்கள் மிகுதியா யென்பாரும் சிலருண்டு. இனவளை யென்பது வளையினம் என்பதின் இலக்கணப்போலி; நகர்ப்புறம்புறநகர் என்புழிப் போல. மரு தோள் - வினைத்தொகை. ஆல்கள் இரண்டும் அசை நிலைகள். நினைக என்பதில் ஈற்றகரங் கெட்டது. நீள்குடை வினைத்தொகை. இங்கே குடை யென்றது ஆட்சியை. பூவினிழல் போலுந் தண் குடையான்' என்று வந்துள்ள எழுபத்தேழாம் செய்யுளையும் இதனோ டொப்பிடுக. தான் என்பது தேற்றப்பொருள் தருமாற்றால் நின் பொருட்டு என்பதனோடு கூடி 'உன்னிமித்தமாகவே' யென்று பொருள் தருவது காண்க. நளனுடைய ஆட்சி நாடோறும் நீட்சிபெறுவதாகையால் நீள்குடை யென்றார். வளையினம்-ஒன்றன் கூட்டத் தற்கிழமைப் பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகை;-மனிதர் கூட்டம் என்புழிப்போல. நின்று என்பவைகளை அசைகளாகத் தள்ளுவாரு முண்டு. நைவாள் இங்கே எதிர்காலம் நிகழ்காலப்பொருட்டு; நை-பகுதி, ஆள்-விகுதி, வ்-எதிர்கால இடைநிலை. தளர்ந்து என்னும் வினையெச்சம் நைவாள் என்னும் வினையாலணையும் பெயரிலுள்ள வினைகொண்டு முடிந்தது.

தேவர்களையும் நளனையும் சுயம்வரத்துக்கு வரும்படி தமயந்தி வேண்டினு ளெனல்.]

போதரிக்கண் மாதராள் பொன்மாலை சூட்டத்தான்
ஆதரித்தார் தம்மோ டவையகத்தே—சோதிச்
செழுந்தரள வெண்குடையாய் தேவர்களும் நீயும்
எழுந்தருள்க வென்று ளெடுத்து.

(ப - ரை) போது அரி கண் மாதராள் - தாமரைமலர் போன்ற செவ்வரி படர்ந்த கண்களையுடைய தமயந்தியானவள், சோதி செழுமை தரளம் வெண்மை குடையாய்-ஒளியுள்ள உயர்ந்த முத்துக்கள் பதித்தவெள்ளைக்குடையையுடைய அரசனே!,பொன்மாலை சூட்ட ஆதரித்தார் தம்மோடு - அழகான (சுயம்வரமலர்) மாலையை (நான்) சூட்டுதற்கு விரும்பியவர்களாகிய இப் பூவுலகத்தரசர்களோடு, அவையகத்து - சவையில், தேவர்களும் நீயும் எழுந்தருள்க எடுத்துஎன்றுள்-தேவேந்திரன் முதலிய நான்கு தேவர்களும் நீயும் வந்திருங்களென்று எடுத்துச் சொன்னாள்.

(க - ரை) தமயந்தி நளனை நோக்கி, "தேவர்களும் நீயும் சுயம்வர மண்டபத்தில் மற்றைப் பூவேந்தரோடு வந்திருங்கள்" என்று சொன்னாள்.

(வி - ரை) போது என்பது இங்கே தாமரைமலரைக் குறிக்கின்றது. அரி என்பது கண்களிற்படர்ந்துள்ள சிவந்த இரேகைகளென்பதற்கு "செவ்வரி லோடிய கண்ணாய்" என்னும் சாருவதிசிந்தனையை ஒப்பிடுக. மாதராள் = மாதர் + ஆள் = அழகையுடைய பெண் என்பது பொருள்; அழகி யெனினுமாம்; அழகியாகிய தமயந்தி யென்று கொள்க. தானும் ஏயும் அசைநிலைகள். மாதர் - அழகு. மாதர் அழகு என்பதற்கு "மாதர் மடப்பிடியும்" என்றார் தேவாரமோதிஞரும். அன்றியும், மாதராள் என்பதை, மாது + அர் + ஆள் எனப் பிரித்து, மாது என்பது போலியால் சுரும்பு சுரும்பர் என்றாவது போல, மாதர் என்றாகி, ஆள் என்னும் பகுதிப்பொருள்

விகுதி பெற்ற தென்பாரு முளர். ஆதரித்தார் - இறந்தகாலம்; ஆதரித்து வருவார் என்று எதிர்காலத்திற் கூட்டிக்கொள்க. "சுயம் வரம் உன்னிமித்தமேயா மாதலால், தேவர்களை மாத்திரம் அனுப்பிவிட்டு நீ வாராமல் இருந்துவிடப் போகிறாய்" என்று எச்சரித்தபடி தமயந்தி நளனை நோக்கி, 'தேவர்களும் நீயும்' என்று கொள்க. செழுந்தரள வெண்குடை யென்பதற்கு முத்துக்களாலாகிய குடையென்பாரு முளர். மாதராள் - எழுவாய், என்றாள் - பயனிலை. (அக)

[நளன், தமயந்தியைக் கண்டு பேசின விதத்தைத் தெரிவிக்க தேவேந்திரனிடத்திற்குத் திருமி வந்தா னெனல்.]

வானவர்கோ னேவல் வழிச்சென்று வாணுதலைத்
தானணுகி மீண்டபடி சாற்றவே—தேன்முரலும்
வண்டார் நளன்போந்து வச்சிராயு தற்றொழுதான்
கண்டா ருவப்பக் கலந்து.

(ப - ரை) தேன் முரலும் வண்மை தார் நளன்-தேன் வண்டுகள் ஒலிக்கின்ற அழகான மலர்மாலையைத் தரித்த நளன், வானவர் கோன் ஏவல் வழி சென்று - தேவேந்திரனுடைய கட்டளையின்படி போய், வாள் நுதலை அணுகி - ஒளிபொருந்திய நெற்றியையுடைய தமயந்தியை நெருங்கி, மீண்டபடி சாற்ற - (பேசித்) திரும்பின விதத்தைச் சொல்லுவதற்கு, தான் போந்து - தான் வந்து, கண்டார் உவப்ப கலந்து - தன்னைக் கண்டவர்களாகிய தேவர்கள் மகிழும்படி (அவர்களோடு அளவளாவிக்) கூடி, வச்சிராயுதன் தொழுதான் - தேவேந்திரனை வணங்கினான்.

(க - ரை) நளன் தமயந்தியைக் கண்டு பேசித் திருமிவந்து தேவர்களைக் கண்டு அளவளாவிக் கூடி, தேவேந்திரனை வணங்கினான்.

(வி - ரை) வாணுதல் - பண்புத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை; கருங்குழல் என்புழிப்போல. தான் + அணுகி

அல்லதுதான் + நணுகி யெனவும் பிரிக்கலாம். படிசாற்றவே இரண்டாம் வேற்றுமைத்தொகை யாகையால் வலி மிகவில்லை; சோறு கொடுத்தான், அன்புகாட்டினான் என்புழிப்போலசாற்றவே என்பதி லுள்ள ஏகாரம் ஈற்றசை, அல்லது தேற்ற மெனினுமாம். தேன் என்பதை தேன்வண்டென்றும், வண்டென்றும், பெண்வண்டென்றும் பலபடி பேசுவர். வண்டார் = வண்மை + தார் = பண்புத்தொகை. தார்க்கு வண்மையாவது, அழகாம். போந்து - (திரும்பி) வந்து என்று கொள்க. வச்சிராயுதன் + தொழுதான் - வச்சிராயுதனைத் தொழுதான் - இரண்டாம் வேற்றுமைத்தொகை. வச்சிராயுதன் உயர்திணைப்பெயராகையால், வருமொழி முதலில் தகரம் வர, அதன் ஈற்று னகரம் றகரமாகத் திரிந்தது- (நன்னூல், உருபு புணரியல், கஉம்-சூத்திரம் ; இது செயப்படுபொருளாயில்லாமல் எழுவாயாயிருப்பின் னகரம் திரியாதெனக் கொள்க. வருமொழி முதற் றகரம் திரிந்ததற்கு மெய்யீற்றுப் புணரியல், நஉ-ம் சூத்திரத்தைக் காண்க. (கo)

[நளன், தான் தமயந்தினிடத்திற் பேசியதையும் அதற்கவள் கூறிய மறுமொழியையும் தேவர்கட் கறிவித்தா னெனல்.]

விண்ணவர்த மேவலுடன் வீமன் றிருமகள்பால்
நண்ணு புகழ்நளனு நன்குரைத்த—பெண்ணணங்கின்
வன்மொழியுந் தேவர் மனமகிழத்தான் மொழிந்த
மென்மொழியுஞ் சென்றுரைத்தான் மீண்டு.

(ப - ரை) விண்ணவர்தம் ஏவலுடன் - தேவர்களுடைய கட்டளையினால், வீமன் திருமகள்பால் நண்ணு புகழ் நளனும் - வீமராசன் செல்வமகளாகிய தமயந்தியினிடத்திற் சென்ற புகழை யுடைய நளமகாராசனும், தான் மொழிந்த மென்மை மொழியும் - (தேவர்களுக்காகப் பரிந்து) தான் பேசின நயமான வார்த்தைகளையும், பெண் அணங்கின் நன்கு உரைத்த வன்மை மொழியும் - (கற்பிற்) பெண் தெய்வம் போன்ற தமயந்தியின் தெளிவாகச் சொன்ன உறுதிச்சொற்களையும், தேவர் மனம் மகிழ - தேவர்கள்

மனங் களிக்கும்படி, மீண்டு சென்று உரைத்தான் - திரும்பிவந்து சொன்னான்.

(க - ரை) தேவர்களேவலால் தமயந்தியிடத்திற் சென்ற நளன், தான் சொன்ன நயமான சொற்களையும், அவள் பேசின வைராக்கியமான வார்த்தைகளையுந் திருமிவந்து அவர்களுக்குத் தெரிவித்தான்.

(வி - ரை) நண்ணுபுகழ் என்பதைப்'புகழ் நண்ணு'என மொழி மாற்றிப் புகழ் பெற்ற என்று பொருள் கூறுவாரு முளர். நன்குரைத்தஎன்பதற்குநன்றாய்ச்சொன்னவைகளைக் (குறித்து) என்று பலவின்பாற் படர்க்கை வினையாலணையும்பெயராகவும், நன்றாய்ப் பேசின வென்று பெயரெச்சமாகவும் பேசுவா ருளர். இவ்வுரைகளி லெதுவும் சாம்பிரதாய மன்றென் றொதுக்குக. பெண் + அணங்கின் எனப் பிரித்தாமாயினும் பெண்ணணங்கின் என்பதை, பெண்மை + அணங்கின் எனப் பிரித்துக் கற்புத்தெய்வம் போன்ற தமயந்தியின் எனக் கோடலு மொன்று.

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னுந்
திண்மை யுண்டாகப் பெறின்."

என்பதனல் பெண்மை யென்பதற்குக் கற்பென்றே பொருள் கோடலுமாம். நளன் தான் மொழிந்த மென்மொழியும் பெண்ணணங்காகிய தமயந்தியானவள் நன்குரைத்த அவளுடைய வன்மொழியு மென்று கோடலே நூலாசிரியர் கருத்தாம். நளன்மொழிந்தமென் மொழி, தமயந்தியினிடத்தவன் "தேவேந்திரனுக்கு மாலை சூட்ட வேண்டும்"என்று கூறிய நயமொழியாம். தமயந்தி நன்கு உரைத்த வன்மொழி, நளனை நோக்கி அவள், "சுயம்வரம் உன் பொருட்டே ஆகையால் தேவர்களோடு நீயும்வருக"என்று கூறிய உறுதிமொழி யாம். இவ்விரண்டையும் சற்றேனும் ஒளியாமல், உள்ளது உள்ளபடி கூறினன் நளன் ஆகையால் புகழ் நள னென்றார். "தேவர்கள் முக்கால ஞானியாராகையால், இவைகளை யெல்லாம் நளன் வந்து கூறுமுன்பே நன்குணர்ந்திருந்தார்கள். அதனல் அவர்கள் அவ

னுடைய நடுநிலைமையையும் உண்மையையும் வியந்து மகிழ்ந்தார் கள்'' என்பதனாலேயே 'தேவர் மனமகிழச் சென்று உரைத்தான்' என்றார். விண்ணவர்தம் என்பதில் ஆறும்வேற்றுமை அது உருபுக் குத் தம்மென்பது மயங்கி வந்தது. நண்ணுநளன்-வினைத் தொகை.

[அக்கினிதேவன் முதலியோர் நளனுக்கு, நெருப்புமுதலிய வற்றைப் பெறுகவென்று வரமளித்தா னெனல்.]

அங்கி யமுதநீ ரம்பூ வணியாடை
எங்குநீ வேண்டினைமற் றவ்விடத்தே—சங்கைபறப்
பெற்றா யெனவருணு ணாகண் டலன்றருமன்
மற்றோரு மீந்தார் வரம்.

(ப-ரை) வருணன் ஆகண்டலன் தருமன் மற்றோரும் - வரு ணனும் இந்திரனும் இயமனும் இன்னொருவனாகிய அக்கினிதேவ னும் ஆகிய நால்வரும், அங்கி அமுதம் நீர் அம் பூ அணி ஆடை - நெருப்பையும் சோற்றையும் தண்ணீரையும் அழகான பூமாலையை யும் ஆபரணத்தையும் வஸ்திரத்தையும், எங்கு நீ வேண்டினை அ இடத்து ஏ-எந்த இடத்தில் விரும்புகிறாயோ அந்த இடத்திலேயே, சங்கை அற - சந்தேக மில்லாமல் (நிச்சயமாய்), பெற்றாய் என - பெறுவாயென்று, வரம் ஈந்தார் - வரத்தைக் கொடுத்தார்கள்.

(க-ரை) அக்கினிதேவன் முதலியோர் "நெருப்பு முதலியவை களை, எங்கு நீ வர விரும்புகிறாயோ அங்கு நிச்சயமாய்ப் பெறு வாய்'' என்று நளனுக்கு வர மளித்தார்கள்.

(வி-ரை) நளனுக்கு நெருப்புவரம் தந்தவன் அக்கினி தேவன்; சோற்றுவரந் தந்தவன் இயமதருமராசன்; நீர்வரந் தந்தவன் வருண பகவான் - பூமாலை வரங்கொடுத்தவனும் அவனே - அணியாடை வரமீந்தானும் அவனேயாமென்பது பாரதக்கூற்று. அணியாடை யென்பதற்கு அழகான வஸ்திரமென்பது மொன்று. பெற்றாயென் பது நிச்சயத்தினால் இறந்தகால மாயிற்று; இது பெறுவா யென்ப

தின் காலவழுவமைதி. மற்றோடு மீந்தார் வரம் என்று பாடமோது வாருமுளர். மற்றோரும் என்பதற்குமற்ற அக்கினிமுதலிய தேவர்க ளும் என்பது பொருள்போலும். மற்றோனும் என்று நீக்கடவுளை மட்டும் பரிசுத்தமுடைமையால் வேறுபிரித்துக் கூறினு னென்பதே விவேகமாம். அம்பூ அணியாடை யென்பதற்கு அழகிய பூப்போல் மெல்லியதாய் அணியத்தகுந்த வஸ்திர மென்பதூஉம் மற்றொன்று. நளனுக்கு இந்திரன் தந்த வரம், உத்தம பதவியும், தான் உருவத் தோடு போந்து அவி யுண்ணுவதுமாம். (கூஉ)

## [நளன் தேவர்களோடு தமயந்தியின் சுயம்வர மண்டபத்திற்குச் சென்றானெனல்.]

அங்கவர்கள் வேண்டும் வரங்கொடுக்கப் பெற்றவர்கள்
தங்களொடுந் தார்வேந்தன் சார்ந்தனன்மேல்—மங்கை
வயமருவு கின்ற மனக்கா வலர்க்குச்
சயம்வரந்தான் கண்டதோர் சார்பு.

(ப-ரை) அங்கு அவர்கள் வேண்டும் வரம் கொடுக்கப்பெற்று-அவ்விடத்தில் அத்தேவர்கள் (தாமே தனக்குக்கொடுக்க) வேண்டு மென்று விரும்பிய வரங்களைப் பெற்றுக்கொண்டு, தார் வேந்தன்-மலர்மாலை அணிந்த மன்னனாகிய நளன், மேல்-அதன்பின்பு, அவர்க ளோடும்-அத்தேவர்களுடனே, மங்கை வயம் மருவுகின்ற-தமயந்தி யின்மேல் ஆசைகாரணமாகப் பொருந்தியிருக்கின்ற, மனம் காவலர்க்கு - மனதையுடைய பூவுலகமன்னர்க்கு, சயம்வரந்தான் கண்டது ஓர் சார்பு - சுயம்வரமண்டபமாக ஏற்படுத்திய ஓர் இடத் தில், சார்ந்தனன்-சேர்ந்தான்.

(க - ரை) தேவர்களிடத்தில் வரம் பெற்ற நளன் அவர்க ளோடு கூடிக்கொண்டு போய்த் தமயந்தியின் சுயம்வரமண்டபத்தி லிருந்தான்.

(வி - ரை) வேண்டும் வரம் என்பதற்கு நளன் வேண்டிய வர மென்பாருமுளர். தேவர்கள் தமக்கு நள னியற்றிய உண்மைத்

தொண்டுக்கு உள் மகிழ்ந்து, தாமே அவனை நோக்கி, "உனக்கு வரங் கொடுக்க விரும்புகிறோம்" என்று வலுவிற் கொடுத்தார்க ளன்றிக்

'கைம்மா றுகவாமற் கற்றறிந்தார் மெய்வருந்தித்
தம்மா லியலுதவிதாஞ் செய்வர்.''

என்று மெய்த்தொண் டாற்றிய நளன், 'அவர்களை வருந் தருக' என்று விரும்பிக் கேட்டானில்லை யென்று கோடலே உகந்ததாம். ஆதலால், அன்னார் கூற்றுப் பொருந்தாதென்க. கண்டது - வினை யாலணையும் பெயர். கண்டது + சார்பு - கண்டதாகிய சார்பு என விரியுமாற்றால் இருபெயரொட்டுப் பண்புத்தொகையிலைத்தொ டர். சுயம்வரம் என்றதே ஆரியத்திற்குப் பொருந்துவதாகையால், இவ் வாசிரியர் சயம்வரமென்றது பொருந்தாதெனக்கொள்.கசார்பு என்னும் மோனைக் குகந்தபடி சுயம்வரத்தைச் சயம்வர மாக்கினதி னும்,"சுயம்வரந்தான் கண்ட சூழல்" என்று பாடபேதங்கொண்டி ருக்கலா மென்பர் சில புலவர்.'சுயம்வரங் கண்ட சூழல்' என்றும்ஓத லாம். 'கண்டதோர் சார்பு' என்பதற்கு, 'காண்பித்த சார்பு' என்று பிறவினையாகப் பொருள் கொள்ளவேண்டு மாகையால் 'சயம்வரந் தான் காண்பித்த சார்பு' எனப் பாடமோதினும் இழுக்காது என் பர் இன்னுஞ் சில்லோர். சார்பு தொழிலாகுபெயராய் இடத் தைக் குறித்தது. உறு உற்று என்புழிப்போல, பெறு பெற்று, என்று பகுதி யிரட்டித்துக் காலங் காட்டிற்று; உ - வினையெச்ச விகுதி. (௩௩)

[தன்னெண்ணமெல்லாம் நளன்மேல் நின்றதனால், தமயந்தி கவலை யெய்தினு ளெனல்.]

தூதுவந்த காதலனைச் சொல்லிச் செலவிடுத்த
மாதுவந்து பின்போன வன்னெஞ்சால்—பாதும்
அயிர்த்தா ளுயிர்த்தா ளணிவதனை மெல்லாம்
வியர்த்தா ளுரைமறந்தாள் வீழ்ந்து.

(ப - ரை) தூது வந்த காதலனை - தன்னிடத்துத் தூதாக வந்த காதலனாகிய நளனை, சொல்லி செலவிடுத்த மாது - சொல்ல

வேண்டியவைகளைச் சொல்லிப் போக்கின தமயந்தியானவள் வந்து பின்போன வன்மை நெஞ்சால் - (அவனோடு கூட) வந்து, (அவன்) பின்னேயே தொடர்ந்து போன தன் கடின மான மனதினால், யாதும் அயிர்த்தாள் - எதையும் சந்தேகித்தாள்; உயிர்த்தாள் - பெருமூச் செறிந்தாள், அணி வதனம் எல்லாம் வியர்த்தாள் - அழகான முகமடங்கலும் வெயர்வை அரும்பினாள்; வீழ்ந்து - (மெய்ம்மறந்து தரைமேல்) விழுந்து, உரை மறந்தாள் பேச்சற்றாள்.

(க - ரை) அன்னஞ் சொன்னதானால் நளனிடத்திற் சென்றிருந்த தன் மனம் அவனோடுகூடவே தன்னிடத்திற்கு வந்து மீண்டும் அவனோடு கூடவே போய்விட்டதனால், தமயந்தி எதையும் ஐயுற்று முகமெல்லாம் வேர்த்துப் பெருமூச்சுவிட்டுத் தரைமேல் விழுந்து கிடந்தாள்.

(வி - ரை) அன்னம் வந்து நளனது அழகு குணங் குறி முதலியவைகளைச் சொன்னபோதே தமயந்தியின் மனம் அவனிடத்திற் றூதுபோய் அவனுடைய மார்பிலே பெரிய தோளிலே மயங்கி யின்புறமுயங்கி தன்னையுமறந்து தமயந்தியை மறந்து அவனிடத்திலேயே தங்கி யிருந்துவிட்டது. பிறகு, அவன் தேவர்பொருட்டு இவளிடத்தில் தூது வந்தபோது, அது அவனோடுகூடனே வந்திருந்து, அவன் திரும்பிப்போனபோது, அவனோடுகூடவே திரும்பிச் சென்றதனால், அது கொஞ்சமேனும் இவள்மேல் தண்ணளியில்லாததென்று கொண்டமையாலேயே 'வன்னெஞ்சால்' என்றார். அது அப்படிச் செய்தமையாலேயே இவள் பித்துப்பிடித்தவள் போல எதையும் சந்தேகித்தாள்; காய்ச்சல் நோய் கொண்டவள் போல முகமெங்கும் வெயர்த்தாள்; பேய்க்கோட்பட்டவள் போலத் தரைமேல் விழுந்து பேச்சற்றாள். காதலன் என்பது ஆசைநாயகன், மகன், நண்பன் முதலியோரைக் குறிக்குமாயினும் இங்கது முன்னையவனையே குறித்து நின்றது. வதனமெல்லாம் என்பது வெயிலெல்லாம் மறைத்தது மேகம் என்றபடி ஒருமையிற் பன்மை வந்த பால்வழுவமைதியாம்.

(௬௭)

[தமயந்தி, தன் உள்ளமுதலியவைகளைப் பறிகொடுத்துப் பேச்சுமூச்சற்றனளெனல்.]

உள்ளம்போய் நாண்போ யுரைபோய் வரிநெடுங்கண்
வெள்ளம்போய் வேகின்ற மென்றளிர்போற்—பிள்ளைமீன்
புள்ளரிக்கு நாடன் றிருமடந்தை பூவாளி
உள்ளரிக்கச் சோர்ந்தா ளுயிர்.

(ப - ரை) பிள்ளைமீன் - மீன்குட்டிகளை, புள் அரிக்கும் நாடன் திருமடந்தை - கொக்குமுதலிய பறவைகள் ஆராய்ந்து கொண்டுபோகின்ற (நீர்வளமுள்ள) விதர்ப்பராசனுடைய செல்வ மகளாகிய தமயந்தி, பூ வாளி-(மன்மதனுடைய)மலரம்புகள், உள் அரிக்க - தன்னெஞ்சிற் பாய்ந்து வருத்துதலால், உள்ளம் போய் - (தன்னுடைய) எண்ணம் நீங்கி, நாண் போய்-வெட்கம் நீங்கி, உரை போய் - பேச்சு நீங்கி, வரி நெடுமை கண் வெள்ளம் போய் - செவ் வரி படர்ந்த விசாலமான கண்ணீர் நீங்கி, வேகின்ற மென்மைதளிர் போல் - நெருப்பில் விழுந்து வெந்துகொண்டிருக்கின்ற மெல்லிய மாந்தளிரைப்போல, உயிர் சோர்ந்தாள் - (பேச்சு மூச்சின்றி) அசைவற்றுக் கிடந்தாள்.

(க - ரை) தமயந்தி தன் எண்ணமுதலியவைகளை யிழந்து, நெருப்பில் வேகின்ற மாந்தளிர்போல மன்மதனுடைய மலரம்பின் வேகத்தால் பேச்சுமூச்சின்றி உயிர் சோர்ந்து கிடந்தாள்.

(வி - ரை) உள்ளம் போய் என்பது அவள் மனம் அவள் வசப்பட்டில்லாமையைக் குறிக்கின்றது. மனம் வசப் பட்டில்லாதபோது நாணமுந் தோன்றாதாகையால், நாண்போய் என்றார். நாணம் போனதனால் பேச்சு மாறாட்டமாகும். ஆகையால் உரைபோ யென்றார். பேச்சு மாறி நினைவற்றிருந்தா ளாகையால் கண்வெள்ளம்போ யென்றார். பிறகு அதுவும் போய்த் தன்னை மறந்து அவசமாய் விழுந்து கிடந்தா ளாகையால், சோர்ந்தாளுயிர் என்றார். உள்ளம் இடவாகுபெயராய் மனதைக் குறித்தது. போய்

என்னும் இறந்தகால வினையெச்சம் சோர்ந்தாள் என்னும் வினை கொண்டு முடிந்தது. உயிர் சோர்ந்தாள் என்பது மனந் தளர்ந்தாள் என்புழிப்போல "உயர்திணை தொடர்ந்த" என்னும் சூத்திரத்தி லமைந்தது. மேனி மாந்தளிர் போன்றதாகையால், மென்றளிரொன் றதைமாந்தளிரென்றும். பிள்ளை மீன் - மீன்பிள்ளை, இலக்கணப் போலிமீன் பிள்ளை-மீன் குட்டி. மீன் குட்டிக்கு நீந்தக் கற்பிப்பது போல' என்னும் பழமொழியையும் இதனோ டொப்பிடுக. மீன் குஞ்சு என்பதூஉம் மரபென்பர் சிலர். பிள்ளை மீன், நீர்வள மிகுதி யால் கொக்குமுதலிய புட்கள், தம்மைக் குத்த வந்து, கரையில் அசைவற்று நின்றிருக்கையில், அவைகளின் கால்களைப்பற்றி அரிப் பதூஉம் வழக்கமாகையால் 'பிள்ளை மீன் புள்ளரிக்கும்' என்பதற்கு மீன் குட்டிகள் புட்களைச் செல்லரிப்பது போல அரிக்கும் என்றும் வேறு பொருள் கூறலாம்.

" ஓடுமீ னோடி உறுமீன் வருமளவும்,
வாடி யிருக்குமாங் கொக்கு"

என்றபடி கொக்கானது, சிறுமீன்கள் தன் பசிக்குகந்த இரை யாகா வென்று உறுமீன் வருமளவும் வாடிக் கரைமேல் நிற்பதியற் கை. பூவாளி யென்பதற்கு மன்மதன் என்று பொருள் கூறுவாரு முளர். மலரம்புகளே

"நெஞ்சி லாவிந்த நீள்சூதங் கொங்கைதனில்"

என்ற செய்யுளின்படி அவளுடைய நெஞ்சு, கொங்கைமுதலிய வைகளிற் பாய்ந்து வருத்தின வென்பதே மரபாகும். மீன்குஞ்சு களைப் புள்ளரித்த லென்பது, அவைகளை ஆராய்ந்து பெரியவை களைக் கொண்டு போதல். இங்கே அரித்த லென்பது அரிப் பரித்தலே. மென்றளிர் போல் என்பது மென்றளிர்போல என்ப தின் கடைக்குறை-இங்கே போல என்பது வினையெச்சம். போய், போலச் சோர்ந்தாள் என்று முடித்துக் கொள்க. (கூ)

[தமயந்தி, தனக்கு நளன்மேலுள்ள காதல், தன் உயிர் போகினும் போகாதென்று ளெனல்.]

பூவின்வாய் வாளி புகுந்த வழியேயென்
ஆவியார் போனாலு மவ்வழியே—பாவியேன்
ஆசைபோ காதென் றழிந்தா ளணியாழின்
ஓசைபோற் சொல்லா ளுயிர்த்து.

(ப - ரை) அணி யாழின் ஓசைபோல் சொல்லாள்-அழகான வீணையொலிபோன்ற சொற்களைப் பேசும் தமயந்தி, பூவின் வாய் வாளி - மன்மதனுடைய மலரானகிய அம்புகள், புகுந்த வழியே - என்னுடலிற்) பாய்ந்த வழியாகவே, என் ஆவியார் போனாலும், எனது உயிர் நீங்கினாலும், அவ்வழியே - அவ்வழியாகவே, பாவியேன் ஆசை போகாது என்று-பாவியாகிய எனது ஆசை மாத்திரம் நீங்காதென்று சொல்லி உயிர்த்து அழிந்தாள் - பெருமூச்சு விட்டு அறிவழிந்தாள் (மயங்கினாள்).

(க - ரை) தமயந்தி, மலரம்புகள் பாய்ந்த தன்னுடலின் வழியாகவே தன்னுயிர் போனாலும், தன்னாசைமாத்திரம் போகாதென்று சொல்லிப் பெருமூச் செறிந்து அறிவழிந்து கிடந்தாள்.

(வி - ரை) பூவின்வாய் வாளி என்பதற்குப் பூவை முனையிற் கொண்ட மன்மதனம்புக ளென்று பொருள் கொள்வாருமுளர். பூவினால் வாய்ந்த அம்புகளென்று பொருள்கோடலே சால்புடைத்தாம். பூவின்வாய் - மூன்றும் வேற்றுமைக் கருவிப்பொருள். வாய் வாளி - வினைத்தொகை. வழியே என்பதிலுள்ள ஏகாரங்கள் பிரிநிலைகள் - முன்னையது பிரிநிலை-பின்னையது தேற்ற மெனினுமாம். ஆவியார் என்றது, மயிலார் குயிலார் என்பதுபோலவும், பறவையார் பாம்பார் என்பதுபோலவும் வந்த திணைவழுவமைதி. போனாலும் என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப்பு, அல்லது எதிரது தழீஇயது. பாவியேன் - அடியனேன் என்புழிப்போலத் தன்மை யொருமை

யில் வந்தது. பாவி யென்பது அவன் பாவி, அவள் பாவி, அது பாவி யென்று இருதிணை முப்பாலிலும் வரூஉம் படர்க்கை யொருமைப் பெயர்; அது இங்கே தன்மை ஒருமையைக் காட்ட என் விகுதி பெற்று வந்தது.

"பாவியேன் கண்டவண்ணம் பரமனூர்க்கடுத்ததன்றே?"

என்று வரூஉம் பெரிய புராணச் செய்யுளானு முணர்க. 'போற் சொல்லாள்' என்பதைப்போல் சொல்லா ளெனப் பிரித்து, அதிலுள்ள போல் என்பது போல என்பதின் கடைக்குறை யெனக் கொண்டு, அதை வினை யெச்சமாக்கு நரு முளர். அப்போது போல் என்னும் வினையெச்சம் சொல்லாள் என்பதிலுள்ள சொல்லென் னும் முதனிலைத் தொழிற்பெயரின் வினைகொண்டு முடிந்ததென் பர். கற்பகநேர் கையான் என்பது கற்பகத்தை நேருங் கைவழக்க முடையானென்றும், கற்பகத்தை நேரக் கொடுக்குங்கையை யுடை யா னென்றும் ஈரெச்சங்களினும் விரிந்து பொருடருமாறு இங்கே போல் என்பதூஉம் ஈரெச்சங்களாகிய பெயரெச்ச வினையெச்சங்க ளில் விரிந்து பொருள் படுமாறு காண்க. 'சொல்லாள் என்று, உயிர்த்து, அழிந்தாள்' என்று கூட்டுக. இது, என்று வாயாற் சொல்லி, உடலால் பெருமூச்செறிந்து, மனத்தால் மயங்கினாள்" என்று திரிகரணங்களாலும் அவளுக்கிருந்த காதற் சிறப்பை ஓதற் சிறப்பா யமைந்துள்ளது காண்க. (கக)

[இப்படித் தமயந்தி விரகவேதனையிலிருக்கையில், சூரியன் மறைந்தா னெனல்]

வையம் பகலிழப்ப வான மொளியிழப்பப்
பொய்கையு நீள்கழியும் புள்ளிழப்பப்—பையவே
செவ்வாய வன்றி றுணையிழப்பச் சென்றடைந்தான்
வெவ்வாய் விரிகதிரோன் வெற்பு.

(ப - ரை) வையம் பகல் இழப்ப - பூவுலகம் பகற்பொழுதை இழந்துவிடவும், வானம் ஒளி இழப்ப - ஆகாயம் வெளிச்சத்தை

இழந்துவிடவும், பொய்கையும் நீள்கழியும் புள் இழப்ப - தடாகங்களும் நீண்ட கடற்கரைக் கழிகளும் மீனுண்ணும் பறவைகளை இழந்துவிடவும், செம்மை வாய அன்றில் துணை இழப்ப - சிவந்த வாயையுடைய அன்றிற் பறவை (தன் சேவல், அல்லது பேடாகிய) துணையை யிழந்துவிடவும், வெம்மை வாய் - வெப்பம் பொருந்திய, விரி கதிரோன் - விரிந்த கிரணங்களையுடைய சூரியன், பைய சென்று அடைந்தான் - மெல்ல (மேற்கு) மலையிற் போய்ச்சேர்ந்தான் (மறைந்தான்).

(க - ரை) வையகம் பகற்காலத்தையும், வானகம் வெளிச்சத்தையும், பொய்கையும் கழியும் பறவைகளையும், அன்றில் துணையையும் இழந்து விடும்படி, சூரியன் மேற்கு மலையில் மறைந்தான்.

(வி - ரை) சூரியன் பையவே சென்றடைந்தான் என்று பைய என்பதைச் சூரியனோடு கூட்டாமல், செவ்வாயவன்றில் பைய துணை யிழப்ப வென்று அன்றிலோடு கூட்டுவாருமுளர். அவசரமாய்ச் சென்றடைந்தால், தமயந்திக்கு விரகவேதனை மிகுந்து அவளுடைய உயிர்க்கு இறுதி நேரவுங் கூடும் என்றெண்ணின சூரியபகவான் அவள்மேற் கருணையாய்ப் பையவே சென்றடைந்தான் என்னும் நயந்தோன்றக் கூறிய ஆசிரியர் கூற்று வியக்கற்பாற்று. அன்றியும், அன்றிலும் பகலெல்லாம் இணைபிரியாதிருந்து கூடி மருவி மகிழும் இயற்கை யுடையதாதலால், திடீரென்று பிரியின் ஆணேனும் பேடேனும் உயிர் விடவும் நேரும் ஆகையால் பையப் பிரிந்ததென்று கூறலும் பொருந்தும். ஆயினும், முன்னையதே நன்னய முடைத்தாம். பகலிழப்ப, ஒளியிழப்ப, புள்ளிழப்ப, துணையிழப்ப என்பவைகளினீற்றில் எண்ணும்மைகள் தொக்கு நிற்பதால் வினைச்செவ்வெண்ணாம். பகலிழப்பவும், ஒளியிழப்பவும், புள்ளிழப்பவும், துணையிழப்பவும் என்று விரியுமாறு காண்க. இவை தொகையொடு முற்றும்மை பெறுமைக்கு இடையியல்-கூ-ம் சூத்திர நன்னூல் விதியைக்காண்க. பைய-குறிப்பு வினையெச்சம் - பையென்னும் பண்படியாகப் பிறந்தது, பை - மென்மை. "பையச் சென்றால் வையந் தாங்கும்" என்பதையுங்

காண்க. பை-பகுதி, ய், ''இ, ஈ, ஐவழி யவ்வும்'' என்றபடி எய்திை உடம்படுமெய். அ - பெயரெச்ச விகுதி, வெம்மை + வாய் = வெ வாய்-''ஈறுபோதல்'' என்னும் சூத்திரவிதி பெற்றது. துணை யெல் பதை ஆணுனல் பெண்ணுக்கும், பெண்ணுனல் ஆணுக்கும் கூட டிக்கொள்க. பொய்கையிலும் கழியிலும் மீனுண்ணும் பறவைகள் அன்னம், கொக்கு, தாரா, போதா முதலியவைகள். பகல் - பி தல் என்னும் பொருட்டு; பகு - பகுதி; அல்லீற்றுத் தொழி பெயர்; இது போதுக்காதலால் ஆகுபெயர்; இரவிற் பகுந் பிரிவதென்பது பொருள் - மிகு, மிகல் என்புழிப்போல. வெ வாய் விரிகதிரோன் வெற்படைந்தான் என்று கூட்டுக. ஏகார இசைநிறை அசைநிலை. (கஎ)

[சூரியனாகிய கூத்தன் ஆகாயமாகிய ஆடரங்கில் நடித்து மேற்றிசை மலையில் மணந்தானெனல்.]

மாயிரு ஞாலத் துயிர்காண வானரங்கிற்
பாயிரு ளென்னும் படாம்வாங்கிச்—சேய்நின்
றறைந்தா ரணம்பாட வாடிப்போய் வெய்யோன்
மணந்தான் குடபால் வரை.

(ப - ரை) வெய்யோன்-சூரியனாகிய கூத்தன், மா இரு ஞாலத்து - மிகப் பெரிய பூமியிலுள்ள, உயிர் காண-உயிர்களெல்லாங் கண்டு களிக்கும்படி, வான் அரங்கில்-ஆகாயமாகிய கூத்து மேடையில், பாய் இருள் என்னும் படாம் வாங்கி - பரவுகின்ற இருளாகிய திரைச்சீலையை நீக்கி, சேய் நின்று-தூரத்தில் நின்று, அறைந்து-(அந்தணர்) உரத்துச் சொல்லி, ஆரணம் பாட-வேதகீதங்களைப் பாட, ஆடி போய் - கூத்தாடி முடித்துத் திரும்பிப்போய், குடபால் வரை-மேற்கு மலையில், மறைந்தான்-ஒளித்தான்.

(க - ரை) ஆகாயமென்னுங் கூத்துமேடையில், சூரியனாகிய கூத்தன், இருளென்னும் திரையை நீக்கிப் பகலெல்லாங் கூத்தாடி முடித்து மேற்குமலையில் மறைந்தான்.

(வி-ரை) வெய்யோன்=வெம்மை+ஆன், "ஈறுபோதல்" என்பதனால் வெய்யானென்றாகிச் செய்யுள்வழக்கால் வெய்யோனென்றாயிற்று. மா+இரு=மாவிரு என்று வகர வுடம்படுமெய் பெற்று வரவேண்டியது, "இடையுரி வடசொலின்" என்னும் நன்னூல் மெய்-கூ-நகூ-ன்படி யகர உடம்படு மெய் பெற்று மாயிரு என்றாயிற்று. மாவென்பதும் இருவென்பதும் ஒருபொருட் பன்மொழிகள், மீமிசை என்புழிப்போல. இச்செய்யுளிலுள்ள அணி, தற்குறிப்பேற்றம். குடபால் - ஏழாம் வேற்றுமை. ஆரணம்பாட என்பதற்கு அந்தணரை எழுவாயாக வருவிக்காமல், ஆரணத்தையே எழுவா யாக்குநருமுளர். ஆகாயத்தைக் கூத்துமேடை யாக்குகின்றார் - பூமியைக் கூத்தாட்டவை யாக்குகின்றார். சூரியனைக் கூத்தனாக்குகின்றார் - ஆரணப்பாட்டைப் பின்பாட் டாக்குகின்றார். காலையிருளைத் திரைச்சீலை யாக்குகின்றார். சூரியன் ஆடுவது கிழக்கிற் காகரவென்று சுழன்றுதயமாய் நகர்ந்துகொண்டேபோய் மேற்கில் மறைவதை யென்க. குடபால் என்பதை மேற்குப்பக்கம் மேற்காகிய பக்கமென்று கொண்டு இருபெயரொட்டாக்குவது மொன்று. வரை-தானியாகுபெயரென்று முன்னமேயே கூறியுள்ளோம். வெய்யோன்-எழுவாய், மணந்தான் - பயனிலை. (கஅ)

[சூரியன் மறைந்தவுடனே அந்திப்பொழுது வந்ததெனல்.]

மல்லிகையே வெண்சங்கா வண்டூத வான்கருப்பு
வில்லி கணைதெரிந்து மெய்காப்ப—முல்லையெனும்
மென்மாலை தோளசைய மெல்ல நடந்ததே
புன்மாலை யந்திப் பொழுது.

(ப-ரை) மல்லிகையே வெண்மை சங்கு ஆக வண்டு ஊத - மல்லிகைமொட்டையே வெள்ளிய சங்காகக் கொண்டு வண்டுகள் ஊதவும், வான் கருப்பு வில்லி கணை தெரிந்து மெய் காப்ப-நீண்ட கரும்பாகிய வில்லையுடைய மன்மதன் (மலர்) அம்புகளை ஆராய்ந்தெடுத்து (தன்) உடம்பைப் பாதுகாத்துக்கொண்டிருக்கவும், முல்லை என்னும் மென்மை மாலை தோள் அசைய - முல்லைமலர் என்னும் மெல்லிய மலர்மாலையானது தன் தோளில் ஆடவும், புன்மைமாலை

அந்திப்பொழுது மெல்ல நடந்தது - சிறிய மாலைக்கால மென்னும் அந்திபொழுதாகிய அரசன் பைய நடந்தான்.

(க - ரை) மல்லிகை அரும்பு வண்டின் வாயிற் சங்கமாக வொலித்தது. மற்றை மலரம்புகளை மன்மத னேந்திக் காவல் புரிந்தான். முல்லைமாலை தோளில் விளங்கிற்று. இத்தனை வைபவத்தோடு அந்தியரசன் பையப் பவனி வந்தான்.

(வி - ரை) மெல்ல—குறிப்பு வினையெச்சம்; மென்மை—பகுதி, அ - பெயரெச்ச விகுதி, லகரம் இரட்டியது சந்தி. அந்திப்பொழுதை யொரு அரசனாக உருவகித்தார். இங்கேயும் வினையெச்சங்களைச் செவ்வெண்ணாக் கொள்க. ௧௭—ம் செய்யுளின் விசேடவுரையைக் கண்டு தெளிக. மல்லிகை-முதலாகுபெயர்-தாமரைபோன்ற பாதம் என்புழிப்போல, இங்கே மல்லிகையென்பது அரும்பைக் காட்டிற்று முல்லையும் இப்படியே முல்லைமலரைக் குறிப்பதால் முதலாகுபெயராகும். ஏகாரத்தில், முதலாவது பிரிநிலை; இரண்டாவது அசைநிலை. அந்தியைப்புன்மாலை என்றது அது நீடித்து நில்லாத சிறுபோதாகையா லென்க. மாலை மால்+ஐ - மயங்கவைப்பதென்பது பொருள்; பகலென்றும் இரவென்றும் தோராமல் மயக்குவது; இதைத் தொழிலாகுபெயரெனக் கோடலே மரபு - பகலும் இரவும் கலத்தலென்று பொருள்படுவதா லென்க. மாலையந்தி- இருபெயரொட்டு. கருப்புவில்லியென்பதுகரும்பாகியவில்லியென்று அல்வழிப் பண்புத்தொகையிலும் கரும்பாலாகிய வில்லி யென்று மூன்றும் வேற்றுமைத்தொகையிலும் பொருட்புணர்ச்சி கொள்ள நிற்பதுகாண்க. (௧௧)

[அந்திப்போது தன் மலர்க்கண்ணீர் அரும்ப நிற்கின்ற தந்தோவெனல்.]

புற்கென்றா ரந்தி புனைமலர்க்கண் ணீரரும்ப
நிற்கின்ற தந்தோ நிலங்காப்பான்—முற்கொண்
டடைகின்ற வேந்தர்க்கு மாண்டஞ்சி னோர்க்கும்
இடைநின்ற காலம்போ லின்று.

(ப - ரை) நிலம் காப்பான் முன்கொண்டு அடைகின்ற வேந்தர்க்கும் - பூமியைக் காக்கும்பொருட்டு முற்பட்டுவருகின்ற அரசர்களுக்கும், ஆண்டு அஞ்சினோர்க்கும் - அப்போது அவர்களுக்குப் பயந்துநின்ற சிற்றரசர்களுக்கும், இடைநின்ற காலம்போல்-நடுவே நின்ற காலத்தைப் போல, இன்று - இன்றைய தினத்தில், புற்கு என்று - கபிலநிறங் காட்டி, ஆர் அந்தி - பொருந்திய அந்திப்போதானது, புனை மலர் கண்-அழகான மலர்போன்ற கண்களில், நீர் அரும்ப -(தேனாகிய) நீர் சொரியும்படி, நிற்கின்றது - (தோன்றி) நிற்கின்றது, அந்தோ - ஐயோ!

(க-ரை) பேரரசர்களுக்கும் அவர்களுக்கஞ்சி நிற்கும் சிற்றரசர்களுக்கும் இடையில் நின்ற காலம்போல அந்திப்போதானது மலர்க்கண்ணீர் சொரியக் கபிலநிறங் காட்டி நிற்கின்றது.

(வி - ரை) புற்கு என்றார் என்பதைக் கபிலநிற மடைந்தவர்களெனப் பொருள் கோடலு மொன்று; விரகதாபத்தினால், தம் மேனி நிறமாறிக் கபிலநிறமானவர்க ளென்பது பொருள். இவர்கள் தத்தம் மலர்க்கண்களில் விரகத்தினால் நீர் சொரிந்தா ரெனக் கொள்க. இவர்கள் இப்படி நிற்கும்படி அந்திப்போதானது நின்றது. எதுபோல் நின்றது? நிலங் காப்பான் முற்கொண் டடைகின்ற வேந்தர்க்கும் ஆண்டஞ்சினார்க்கும் இடைநின்ற காலம் போல. ஆகையால், அதற்கு அந்தோ! மலராகிய கண்களில் ஊறுவது தேனாகிய நீர். "அந்திப்போதாகிய மாது தன் அலங்காரமாகிய மலரென்னுங் கண்களில் தேனாகிய நீரைத் தாரை தாரையாக ஒழுக்கினாள். இப்படி அந்திப்போது நின்றது, உலகத்தைக் காக்கும் பொருட்டு முந்திவரூஉம் பேரரசர்க்கும், அவர்களைக்கண்டஞ்சுஞ் சிற்றரசர்க்கும் இடைநின்ற காலம்போலத் தோன்றிற்று. ஐயோ!'' எனக் கூட்டுக. பேரரசர் வெற்றி கருதி மகிழ்ந்திருப்பர்-சிற்றரசர் தோல்வி கருதி மன மழிவர். இருவர்க்கும் இடையில் நின்ற வெற்றியாகிய ஒளியும் தோல்வியாகிய இருளும் போல, பகலுக்கும் இரவுக்கும்இடையிலுள்ள சிறு போதாகிய அந்தியைப் புற்கென்றார் அந்தியென்றார். புற்கு பொன்மையுங் கருமையுங் கலந்த கபில நிறம். இது சிறிதுபோ

தே இருந்துசெல்வதால் வேந்தர்க்கும் அஞ்சினோர்க்கும்இடைநின்ற காலத்தை இதற்கு இணையா இயம்பினார். பேரரசர் சிறிது போதிலேயே சிற்றரசரை வெல்வது நிச்சயமாவது போல, அந்திப் போதும் சிறிது நேரத்திலேயே மாறிவிடுவதனால் உவமை உகந்ததெனக் கொள்க. அந்தோ - இரக்கக் குறிப்பிடைச்சொல். அந்தோ என்றிரங்கினது தமயந்தியின் பொருட்டாமென்க. இது சிறுபோதாயின்றிப் பெரும்போதா நீடித்திருக்குமேல் இரவு விரைவில் எய்தாது, தமயந்தி வருந்தா ளென்றெண்ணியே அந்தோ என்றார். போலின்று - போன்று என இன்னைச் சாரியையாக அகற்றியுங் கொள்வாருமுளர். அந்திப்போது சூரியற்கும் சந்திரற்கும் உரிமையல்லாப் பொதுக்காலம். (க00)

[அந்திப்போ தாகிய மாது சிரித்ததுபோல வெண்ணிலாத் தோன்றிற்றெனல்.]

பைந்தொடியா ளாவி பருகுவா னிற்கின்ற
அந்தி முறுவலித்த தாமென்ன—வந்ததால்
மையார்வேற் கண்ணாள் வனமுலைமே லாரழலைப்
பெய்வா னமைந்த பிறை.

(ப - ரை) மை ஆர் வேல் கண்ணாள் வனம் முலைமேல் - மை தீட்டிய வேல்போலுங் கண்களையுடைய தமயந்தியின் அழகான முலைகளின்மேல், ஆர் அழலை பெய்வான் அமைந்த பிறை - நிறைநிலவாகிய நெருப்பைச் சொரிவதற்குப் பொருந்திய பிறை நிலா, பசுமை தொடியாள் ஆவி பருகுவான் - பசும்பொன் வளையலையணிந்த அத் தமயந்தியின் உயிரை உண்ண, நிற்கின்ற அந்தி முறுவலித்தது ஆம் என்ன வந்தது - பொருந்தியிருக்கின்ற அந்திப்போதென்னும்(மாது) சிரித்ததுபோலாம் என்று சொல்லும்படி தோன்றிற்று.

(க - ரை) தமயந்தியின் உயிரை உண்ணப் பொருந்திய அந்திப்போதென்னு மாது, சிரித்ததுபோல வெண்ணிலா உதித்தது

(வி - ரை) வெண்ணிலாவை முறுவலுக் கிணையாக்கினமைக் கிணங்க அந்திப்போதை மாதென் றுருவகித்தோம். " ஆகட்டும் இவளை விட்டேனு பார். இப்போதே இவள் விரக வேதனையை நரகவேதனைபோல் நடுங்குகின்றாள். இன்னும் வரப்போகும் இரவை எப்படிக் கழிக்கப்போகின்றாள் ? இந்த வேதனையின் சாதனையை இதுவரையில் இவள் கன்னிகையாகையால் இன்னதென் றறியாள். இனியேனுங் கண்டுகொள்ளட்டும். இவளுக்கவ் வேதனையின் உச்சநிலையைக் காட்ட இவளைச் சோதனையில் விட வேண்டும். ஒன்றும் அறியாதவளாகையால், இப்போது படும் விரகதாபமே பெரிதென் றெண்ணி யிருக்கிறாள்'' என் றெண்ணின அந்திமாது தமயந்தியின் பேதமைக்கு நகைத் தது போலப் பிறைநிலா ஆகாயத்தில் வாகா யெழுந்த தென்றபடி யாம். "கூம்பின கையிலுங் கூரிய வாளுண்டு'' என்றபடி அப்படிச் சிரித்த சிரிப்பிலுங் கொடுமை மறைந்திருக்கிறதென்பது தோன்ற வே, மையார் வேற்கண்ணாள் வன முலைமேல் ஆரழலைப் பெய்வா னெழுந்த பிறை வந்ததென்றார். உயிருண்ணக் கங்கணங் கட்டி யிருப்போர் நெருப்பை மூட்டி அதில் மாட்டிக் கொல்வ தியற்கை யாகையால்,பைந்தொடியாளாவி பருகுவான் நிற்கின்ற அந்தி யென் றார். வேற்கண்ணாள் என்பது தமயந்தியையே குறிப்பதால் புறச் சுட்டுச் சேர்த்துக் கொள்க முறுவலித்தது - இறந்தகாலத் தொழிற்பெயர்; "கடந்தது கடந்தது'' என்பதில்முன்னையதைத் தொழிற்பெயராகவும் பின்னையதை வினைமுற்றாகவுங் கொள் வது போல வென்க. பருகுவான், வான் பான் பாக்கு வினை யெச்ச விகுதிக ளென்றபடி, வானீற்று எதிர்கால வினையெச்சம். பிறை=பிற + ஐ=தொழிலடிப் பெயர், அகரந் தொகுத்தல். ஆல்- அசைநிலை (கo௧)

[நிலாப்பிறை தமயந்தியின் முலைமேல், தன் னிலவென்னு நெருப்பைக் கோட்டிற் றெனல்.]

கூட்டுமை போற்சிறந்த கூரிருளைக் கூன்கோட்டால்
கோட்டுமண் கொண்ட குளிர்திங்கள்—ஈட்டுமணிப்

பூணிலா மென் முலைமேற் போதச் சொரிந்ததே
நீணிலா வென்னு நெருப்பு.

(ப - ரை) கூட்டு மை போல சிறந்த கூர் இருளை - கூட்டிய மையைப்போலக் கருநிற மிகுந்த பேரிருளை, கூன் கோட்டால் கோட்டு மண்கொண்ட குளிர் திங்கள்-வளைந்த கொம்பினால் பெயர்த்து மண்ணை அதனுனியில் (களங்கமா) ஒட்டிக்கொண்ட குளிர் நிலா, ஈட்டு மணி பூண் நிலாம் மென்மை முலைமேல்-தேடிப் பதித்த கல்லிழைத்த நகைகள் விளங்குகின்ற (தமயந்தியின்) மெல்லிய முலைகளின்மேல், நீள் நிலா என்னும் நெருப்பு போத சொரிந்தது - வளர்கின்ற நிலவென்னும் நெருப்பைப் போதுமானமட்டும் (மிகுதியாகக்) கொட்டிற்று.

(க - ரை) மைபோன்ற இருளைப் பெயர்த்துத் தன் கொம்பு நுனியில் ஒட்டிக்கொண்டிருப்பது போன்ற களங்கத்தையுடைய வெண்ணிலாவானது தமயந்தியின் முலைமேல், தன் னிலவென்னு நெருப்பை நிறையக் கொட்டிற்று.

(வி - ரை) வெண்ணிலாவானது இருளைத் தன் கோட்டு நுனியாற் சாய்த்துப் பூமியைத் தன் வசப்படுத்திக்கொண்டதென்று பொருள் கூறுவாருமுளர். இதில் வியப்பொன்றும் இல்லை - கவிநயமுங் காணோம்-நிலா இருளை ஒட்டி வெளிச்சத்தைக் காட்டிப் பூமியைத் தன் வசப்படுத்துவது சர்வ சாதாரணம் ஆகையால் இப்பொருள் சிறவாதென் றொதுக்குக. இங்கே நிலாவை யொரு எறு (காளைமாடாக) உருவகித்திருக்கின்றார். அது மதங்கொண்டிருக்கையில் மண்ணைக் கிண்டிக் கொம்பு நுனியில் ஒட்டிக்கொள்வது கண்கூடு. அதுபோலவே, வெண்பிறையும் களங்கங் கொண்டிருப்பதால் இருளாகிய மண்ணைப் பெயர்த்துத் தன் கோட்டில் ஒட்டிக்கொண்டிருப்பதுபோலத் தோன்றிற்றென்று கொள்க. கூட்டுமை-வினைத்தொகை. கோட்டு-வினையெச்சம். ஈட்டுமணியென்பதூஉம் வினைத்தொகையாம்; குளிர் திங்கள் என்பதூஉம் அது. நிலாம்- நிலாவும் என்பதின் மரூஉ. பூண்-முதனிலைத் தொழிற்

பெயர் - அணியென்புழிப்போல. பூணிலா என்பதைப் பூண் + நில்லா வென்றும், பூண் + இல்லா வென்றும் பிரித்து விரகதாபத்தால் முறையே பூண் அதாவது ஆபரணம் நில்லாதவென்றும், அதனால் ஆபரணம் இல்லாதவென்றும் பொருள் கொள்ளினு மமையுமென்க. (௧0௨)

[தமயந்தி, இரவிருட்கும், வாடைக்கும் பிழைத்திரேனென்று ளேனல்.]

அன்னங்கா ணீங்களுமவ் வாதித்தன் றானும்போய்
மன்னும் படியகலா வல்லிரவில்—மின்னும்
மழைத்தாரை வல்லிருட்கும் வாடைக்கு நாங்கள்
பிழைத்தால்வந் தேனென்னும் பேர்.

(ப - ரை) அன்னங்காள் - அன்னப்பறவைகளே!, நீங்களும் அ ஆதித்தன் தானும் போய் - நீங்களும் அந்தச் சூரியனும் நீங்கி, மன்னும்படி-நிலையாய் நின்றுவிடும்படி, அகலா வன்மை இரவில்-(விரைவில்) விடியாத இக் கடினமான இராத்திரியில், மின்னும் மழை தாரை வன்மை இருட்கும். மின்னுகின்ற மேகநீ ரொழுக்கோடு கூடிய கனமான இருளுக்கும், வாடைக்கும்-வட காற்றுக்கும், நாங்கள் பிழைத்தால் - நாங்கள் தப்பிப் பிழைத்திருந்தால், வந்து - நீங்கள் திருமிவந்து, பேர் - (எங்கள்) பேரைக்குறித்து, என் என்னும்-(சேமம்) எப்படியென்று கேளுங்கள்.

(க - ரை) ஓ அன்னப்பறவைகாள்! நீங்களும் சூரியனும் போய் நிலையாய் நின்றுவிடும்படி விரைவில் விடியாத இவ்விரவில் இருளுக்கும் வாடைக்கும் நாங்கள் தப்பினால் நீங்கள் வந்து எங்கள் சேமம் வினவுங்கள்.

(வி-ரை) பேர் என்பதைப் பேர்ந்து எனப் பாடமாகக் கொள்ளுநரு முளர். என்னும்-முன்னிலை ஏவல் வினைமுற்று. மாரிகாலத்திரங்

கல் என்னும் துறையின்பாற்படும் இது. ஆகையால், மின்னு மழைத்தாரை வல்லிருட்கும் வாடைக்கு மென்றார். அகலா அல்லிர வென்று பிரிப்பாரு முளர். அல்லிர வென்பதை மீமிசையாக் கொள்க. வல்லிரு ளென்றது அள்ளிக்கொளலாம்படி தடித்த இருளை. நாங்களென்று பன்மையிற் கூறியது தன்னைப் போன்ற பிறரையுங் கூட்டியென்க. தாரை வல்லிருள் என்றதை உம்மைத் தொகையாக்குநரு முண்டு - இது பொருந்தா தென்க. அகலா- ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். 'நாங்கள் பிழைத்தால் வந்தேனென்னும் பேர்' என்றதனால், நாங்கள் பிழைத்திருக்கப் போவதில்லை யென்று குறிப்பிற் கொள்க. அன்னங்களுக்கும் சூரிய னுக்கும் ஆகாதது போலத் தனக்கும் மாரிகாலம் ஆகாததாயிருக் கின்ற தென்பாள், 'அன்னங்காள் நீங்களும் அவ்வாதித்தன் தானும் போய் மன்னும்படி அகலா - - - - - - மழைத்தாரை வல்லிருட்கும் வாடைக்கும்'' என்றாள். (க0௩)

[விண்மீன்களைத் தமயந்தி, நிலாச்சுடரா னெழுந்த கொப்புளங்க ளென்று ளெனல்.]

செப்பிளங் கொங்கைமீர் திங்கட் சுடர்பட்டுக்
கொப்புளங் கொண்ட குளிர்வானை—இப்பொழுது
மீன்பொதிந்து நின்ற விசும்பென்ப தென்கொலோ
தேன்பொதிந்த வாயாற் றெரிந்து

(ப - ரை) செப்பு இளமை கொங்கைமீர்-செப்பைப் போன்ற இளமையாகிய முலையழகுடைய பெண்காள்!, திங்கள் சுடர் பட்டு கொப்புளம் கொண்ட குளிர் வானை - நிலவின் சுடர் பட்டதனால் கொப்புளித்த குளிர்ச்சியான ஆகாயத்தை, தெரிந்து இப்பொழுதும் - நீங்கள் அறிந்து இந்தச் சமயத்திலும், தேன் பொதிந்த வாயால் - உங்கள் மழலை மொழித்தே னிரம்பிய வாயினால், மீன் பொதிந்து நின்ற விசும்பு என்பது என்கொல்லோ = விண் மீன்கள் நிறைந்திருக்கின்ற ஆகாயம் என்று சொல்வது என்ன காரணமோ? (நான் அறியேன் என்றபடி.)

(க - ரை) தமயந்தி தன் தோழியரை நோக்கி, "நிலவின் சுடரால் கொப்புளித்த குளிர்வானை நீவிர் விண்மீ னிறைந்த ஆகாயமென்று விளம்புங் காரணம் எனக்கு விளங்கவில்லை" என் றாள்.

(வி - ரை) இப்பொழுது என்று பிரித்து, 'இப்பொழுது திங்கள் சுடர் பட்டுக் கொப்புளங் கொண்ட குளிர்வானைத் தெரிந்து' என்று கூட்டிப் பொருள் கொள்ளுநரு முளர்.'இப்பொழுதும் தேன் பொதிந்த வாயால் தெரிந்து' என்று கூட்டுவாரு முண்டு. வாயால் துணிவ தெவ்வாறோ அறியேம். கொங்கைமார் என்ற பல்லோர், படர்க்கை,

"ரவ்வீற் றுயர்பெயர்க் களபெழ வீற்றயல்"

என்றபடி விளியில் கொங்கைமீர் என்றாயிற்று.அம்மைமார், அம்மை மீர்; ஐயன்மார், ஐயன்மீர் என்பனவற்றையுங் காண்க. இப்பொழு தும் என்பதில் உம்மை இறந்தது தழீஇயது. நான் நிலவின் சுட ரான் வெதும்பி வாடுவதைக் காணும்போதும் என்பது பொருள். செப்பு என்பதை,

"செப்பு கவித்தன முலையாய்!"

என்னும் சாகுவதி சிந்தனையோடு ஒப்பிடுக. செப்பு என்பதைச் சிமிழ் என்னலுமாம்-மைச்சிமிழ் முதலியவைகளென்பது பொருள். செப்பு கவித்தன்ன என்பதற்குச் செப்பிணைகளைக் கவிழ்த்தது போன்ற என்பாரு முளர். செப்பு என்பதை வினைப்பகுதியாக் கொண்டு, உயர்வாகப் பேசுகின்ற என்று பொருள் கூறுவாரு முளர்.

"கொப்புள மென்றாதுங் குரங்கு"

என்பதிலும் கொப்புள மென்பது பெயரோ ஆகையால், கொப்புளித்த வென்பது பெயரடிப் பெயரெச்ச வினைச்சொல் லாம். கொல்லை அசையென்பாரு முளர். தேன்போன்ற சொல் லைத் தேனென்ற தாகுபெயர். (கoசு)

[தமயந்தி, சிவபெருமான் காமனைக் காய்ந்தது பொய் யெ
றையுற்று ளெனல்.]

காணுந் தடங்காவுங் காமன் படைவீடு
வானுந்தேர் வீதி மறிகடலும்—மீனக்
கொடியாடை வையமெல்லாங் கோதண்ட சாலை
பொடியாடி கொன்றதெல்லாம் பொய்.

(ப - ரை) கானும் தடம் காவும் காமன் படை வீடு - காடும் இடமகன்ற சோலையும் மன்மதனுக்கு ஆயுதம் வைத்திருக்கும் வீடு; வானும் தேர் வீதி - ஆகாயமும் (அவனுக்குத்) தேரோடும் தெரு; மறி கடலும் மீனம் கொடி ஆடை-அலைகள் மடங்கி வீசுகின்ற கடலும் (அவனுக்கு) மீனக்குறி பொறித்த கொடிச்சீலை; வையம் எல்லாம் (உம்) கோதண்டசாலை - இப் பூவுலகடங்கலும் (அவனுக்கு) வில்வலி காட்டும் இடம்; (ஆகையால்), பொடி ஆடி கொன்றது எல்லாம் பொய்-(மெய்யெலாம்) வெண்ணீறு பூசிய சிவபெருமான், (அவனைக்) கொன்றதாகக் கூறுவதெல்லாம் சுத்தப் புளுகு.

(க - ரை) மன்மதன் தனக்குக் காட்டையும் சோலையையும் படைவீடுகளாகவும், ஆகாயத்தைத் தேரோடும் வீதியாகவும், கடலைத் திரைச்சீலையாகவும், பூவுலகை வில்வலி காட்டு மிடமாகவுங் கொண் டுயிருடனிருக்கையில், அவனைச் சிவபிரான் கொன்றா ரென்பது சுத்தப் புளுகு.

(வி - ரை) கானும் தடம் காவும் என்பதற்குக் காட்டையும், தடத்தையும், அதாவது தடாகத்தையும், சோலையையும் என்று பொருள் கூறுவாரு முளர். காட்டில் மலர்வது முல்லை, தடாகத்தில் மலர்வன தாமரையும் நீலமும், சோலையில் மலர்வன மாவும் அசோகமும் ஆகலான் மன்மதனுடைய ஐயம்புகளாகிய இவைகள் இருக்கு மிடங்களில் தடாகமும் ஒன்றென்பதவர் கருத்துப் போலும். ஆயினும், ஆசிரியர் கருத்து அங்ஙன மன்று. அங்ஙன மாயின்,

கானும் தடமும் காவும் என்று செவ்வெண்ணைச் சிறக்கக் கூறியிருப்பர். தடங்காவும் அதாவது இடமகன்ற சோலையும் என்பதே கவியின் கொள்கையாம். என்? குளமுங் குட்டையும் தடாகமும் பொய்கையும் இல்லாச் சோலை யில்லையென்பதே அநுபவமாம். சோலையைக் கூறுவதனாலேயே அதிலுள்ள தடாகத்தையும் அதிலுள்ள மலர்களையுங் கூறியபடியாம். ஒவ்வொரு சோலையிலும் நீர்ப்பூவும் நிலப்பூவும் கோட்டுப்பூவும் கொடிப்பூவுமாகிய நால்வகை மலரும் இருப்பது இயற்கையாம். காமன் படைவீடு சோலை யென்றால், சோலையிலுள்ள தடாகத்தையும் குறிப்பிற் றெரிவித்தபடியாம். சோலையைக்குறித்தபோது அதற்குள்ளிருக்கும் தடாகத்தை வேறு பிரித்துக் குறிப்பது வேலையற்ற வீண்வேலையாம். சாதாரணச் சிறுகாவெனின், தாமரைமலரும் தடாகமாயில்லாமல் சிறுகுளமாகவுமிருக்கலாமென்றே ஆசிரியர் தடங்காவு மென்றார். தடங்கா வென்றதனானேயே தடாகமும் அதற்குள் ளமைந்திருக்கு மென்பது ஆசிரியர் கருத்து. முல்லை, அந்நிலமாகிய காட்டுக்கே உரிய மலராகையான் அதை மட்டும் வேறு பிரித்து, அஃதிருக்குமிடத்தைக் கானும் என்றும், மற்றை நான்கு மலரும் மருதநிலச் சோலைமலரென்று கொண்டு தடங்காவு மென்றார். இதை யறியாரே தடம் என்பதைத் தடாகம் என்று கொண்டு தயங்குவ ரென்க. படை வீடு - ஆயுதசாலை. மன்மதனுக்கு முல்லை, தாமரை, நீலம், மா, அசோகு என்பவைகளே ஆயுதங்கள். இவைகளில் முல்லை யிருப்பது காட்டில், மற்றை நீர்ப்பூக்களாகிய தாமரையும் நீலமும், கோட்டுப்பூக்களாகிய மாவும் அசோகமும் இருப்பது சோலையில் ஆகையால், அவனுக்கு ஆயுதம் வைக்குமிடம் கானும் தடங்காவும் என்றார். அவனுடைய தேர் தேன்றற் காற்று. அஃதுலாவும்இடம் ஆகாயம். ஆகையால், அவனுக்குத் தேரோடும் வீதி வான் என்றார். அவனுக்குக் கொடிக்குறி மீன். அஃது தோன்றுமிடம் கடல். ஆகையால், அவனுக்கு மீன் எழுதிய கொடிச்சீலை மறிகடல் என்றார். அவனுக்கு வில்வலி காட்டுமிடம் இப் பூவுலகடங்கலும். ஆகையால், வையமெல்லாம் கோதண்டசாலை என்றார். 'இப்படி யிவன் ஆட்சி செலுத்தி மாட்சியுடன், என் போன்றவரை வருத்தி வாழ்கையில், இவனைப் பொடியாடி கொன்றாரென்பது சுத்தப் பொய்' என்று

தன் விரகவேதனையின் மிகுதியால் என்னென்னவோ ஐயுற்றுக் கூறுகின்ருள் தமயந்தி.

"மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான்"

என்ருர் தேவார மோதிஞரும். ஆகையால், புகழேந்தியாரும் பொடியாடி என்ருர். "சுடலையாடி" என்ருர் திவாகரத்தார். "காடுடைய சுடலைப் பொடிபூசி" என்ருர் இன்னெருவர். வெயிலெல்லாம் என்பதுபோல, வையமெல்லாம், கொன்றமெல்லாம் என்பவைகளுடம் ஒருமையிற் பன்மைவந்த வழுவமைதிகள். பொடியாடி என்பதில் இகாம் வினைமுதற் பொருண்மையது. (கOரு)

[தமயந்தி, தன்னுயிர் கொள்ளைபோகின்றதென்று கூறி வாயுலர்ந்து வாடிஞ ளெனல்.]

கொள்ளைபோ கின்றதுயி ரென்னுங் கோளரவின்
முள்ளெயிறே மூரி நிலாவென்னும்—உள்ளம்
கொடிதிரா வென்னுங் குழையுந் தழல்போல்
நெடிதிரா வாய்புலரா நின்று.

(ப - ரை) உயிர் கொள்ளை போகின்றது என்னும் - என்னுயிர் கொள்ளை போகிறது என்பாள்; மூரி நிலா கோள் அரவின் முள் எயிறே என்னும் - பலம் பொருந்திய பிறை நிலாவானது கொல்லும் (நஞ்சுள்ள) பாம்பின் கூரிய முள்போன்ற பல்லோ என்பாள்; இரா உள்ளம் கொடிது என்னும்-இவ் இராப்போது மனக்கொடுமையை உடையது என்பாள்; நெடிது தழல் போல் இரா - (இப்படியவள்) நெடுநேரம் தீயில் விழுந்தாள்)போலத் (துடித்துக் கொண்) டிருந்து, வாய் புலரா நின்று குழையும்-வாயுலர்ந்து மனஞ் சோர்வாள்.

(கு - ரை) தமயந்தி தன்னுயிர் கொள்ளை போகின்ற தென்பது முதலான வார்த்தைகளைப் பேசித் தீயில் விழுந்தாற் போலத் துடித்து வாயுலர்ந்து மனஞ் சோர்ந்தாள்.

(வி - ரை) தீயில் விழுந்தாற்போலத் துடித்ததனால் அவளுடலாலும், கொள்ளை போகின்றதுயி ரென்பது முதலான வார்த்தைகளைப் பேசி யிரங்கியதனால் அவள் வாக்காலும், வாய் புலராநின்று மனங் குழைந்ததனால் அவள் மனத்தாலும் விரகவேதனை நுகர்ந்தமை வெளிப்படையாம். இப்படி யவள் நெடுநேரம் (சொல்லி யிரங்கித்) தீயில் விழுந்தாற்போலத் துடித்துக்கொண்டிருந்து என்று, சொல்லியிரங்கி யென்பதைச் சொல்லெச்சமாக வருவித்துக் கூட்டியுரைத்துக்கொள்க. அவன் நிறங் கரியன் என்பது போல இரா உள்ளங் கொடிது என்பதைச்

"சொற்றொறு மிற்றிதன் பெற்றி"

என்பதனால் வழுவமைதியாகவுங் கொள்க. தழல்போல் நெடிது இரா என்பதற்கு நெருப்பில் இருப்பது போல நெடுநேரம் பள்ளியிற் புரண்டுகொண்டிருந்து எனினுமாம். நெடிதிரா என்பதற்குப் பெரிய இரவில் என்று, கொடிதிரா வென்பதற்குப் பொருள் கொண்டது போலவே, இராத்திரி யென்றே பொருள் கொள்வாரு முளர். திரிபணிக்குப் பொருந்தாப் பொருளாகையால் அஃது கோடற்பாற்றன்று. இரண்டாவ திரா வென்பது செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். நெடிது என்பது நேரத்தைக் குறிப்பதால் ஒன்றன் படர்க்கைப் பெயரென்று கொள்க. புலராநின்று, நிகழ்கால வினையெச்சம் ஆகையால் முக்காலத்துக்கும் பொதுவானது. நிலவும், இரவும், பிறவும் வருத்துவதால், இத்தனைக்கும் தன் ஒருயிரே இலக்கா வருந்துவதால் கொள்ளைபோகின்றதுயி ரென்னும் என்றார். நிலவென்னும் வெண்ணஞ்சைப் பெய்து தன்னை வாட்டும் வெண்ணிலாவின் வடிவம் வளைந்து முட்போற் கூர்மையாயிருப்பதால் கோளரவின் முள்ளெயிறே மூரி நிலாவென்னும் என்றார். இத்தனைக்கும் இடங் கொடு

த்துக்கொண்டு விடியாதிருப்பதால், உள்ளங் கொதிதிரா வென்னும் என்றார். (க0கு)

[தமயந்தி, இவ்விரவு சூரியனை விழுங்கியதனாலேயா இப்படி எரிகின்றதென்று ளேனல்.]

வெங்கதிரோன் றன்னை விழுங்கிப் புழுங்கியோ
கொங்கை யனலிற் கொளுந்தியோ—திங்கள்
விரிகின்ற வெண்ணிலவால் வேகின்ற தேயோ
எரிகின்ற தென்னோ விரா.

(ப - ரை) இரா - இவ்விரவானது, வெம்மை கதிரோன் தன்னை விழுங்கி புழுங்கியோ - வெப்பமாகிய கிரணங்களையுடைய சூரியனை விழுங்கியதனால் வெதும்பியோ, கொங்கை அனலில் கொளுந்தியோ - என்னைப்போன்ற பெண்களின் மூலையனலில் எரிந்தோ, திங்கள்விரிகின்ற வெண்மைநிலவால் வேகின்ற தேயோ - பிறைநிலாவினது பரவுகின்ற வெண்மையாகிய நிலவொளியால் வேகிறதினாலோ, எரிகின்றது - எரிந்துகொண்டிருக்கின்றது, என்னோ - காரணம் யாதோ?

(க - ரை) தமயந்தி, "ஆஹா! இவ்விரவு சூரியனை விழுங்கியது முதலிய காரணங்களால் இப்படி எரிகிறதா, அன்றி வேறேதேனுங் காரண முண்டோ?" என்றையுற் றிரங்கினாள்.

(வி - ரை) 'காரணம் யாதோ என்றவள் ஐயுற் றிரங்கினாள்' என்பதை ஈற்றில் சொல்லெச்சமாக வருவித் துரைத்துக்கொள்க. ஓகாரங்கள் மூன்றும் ஐயப்பொருளனவாகலான் ஐயுற்று ளென்றும். கடை யோகாரம் இரங்கற்பொருளது. வெங்கதிரோன் தன்னை விழுங்கியதனால் சூடேறியோ என்று கூட்டிக்கொள்க. தன்னைப் போன்ற விரகமிக்காரது முலையிற் கிளம்பும் அனலாற் கொதிப்புண்டோ என்று சேர்த்துக்கொள்க. மதியின் வெண்ணில வன

லால் வெதும்பியோ வென்று ஓர்ந்து கொள்க. இப்படி இவ் விர வெரிகின்ற காரணம் இம் மூன்றிலொன்றும் இலதாயின் வேறெது வாயிருக்கலாமென் றையுற்ற ளாகாலான் என்னே என்ருள் என் றுணர்க. இரா எரிகின்றதென்னே என்று மொழி மாற்றிக் கூட் டுக. கொங்கையனல், ஆறும் வேற்றுமையாயின் கொங்கையின தனல் என்றும், ஏழாவதாயின் கொங்கையிற் றங்குமனல் அல்லது கொங்கையிற் பிறக்கு மனல் என்றும் பொருள் விரித்துக்கொள்க.

[தண்ணிலவின் வெம்மையில் வெதும்பிய தமயந்தி, பல்லூழி ஓரிரவாயிற்றோவென் றிரங்கினு ளெனல்.]

ஊழி பலவோ ரிரவாயிற் றோவென்னும்
கோழி குரலடைத்த தோவென்னும்—ஆழி
துயிலாதோ வென்னுஞ் சுடர்மதியங் கான்ற
வெயிலா லுடலுருகா வீழ்ந்து.

(ப -ரை) சுடர் மதியம் கான்ற வெயிலால் உடல் உருகா வீழ்ந்து-ஒளியுள்ள பிறைநிலா வீசிய நிலவென்னும் வெய்யிலால் தன் உடல் வெதும்பி விழுந்து, பல ஊழி ஓர் இரவு ஆயிற்றோ என்னும்-பல்லூழி (ஒன்று சேர்ந்து) இவ்வோ ராத்திரி யாகச்சமைந்த தோ என்பாள்; கோழி குரல் அடைத்ததோ என்னும்—சாமக் கோழி, தன் குரல் அடைபட்டதோ என்பாள்; ஆழி துயிலாதோ என்னும்-கடல் (ஓய்ந்து) உறங்காதோ என்பாள்.

(க - ரை) நிலவின் வெம்மையால் வெதும்பிய தமயந்தி, பல் லூழி சேர்ந்து இவ் விரவாயிற்றோ வென்றும், கோழி குரலடைத்த தோ வென்றும், கடல் உறங்காதோ வென்றும் கூறி யிரங்கினுள்.

(வி - ரை) ஊழிபல - பல்லூழி, இலக்கணப்போலி. கோழி குரல் - எழுவாய்த் தொடர். மாலை சூட்டுநாள் மறுநா ளாகையால் ஆசை மிகுதியால் போது எப்போது விடியுமென்றதே நினைவாய்

எதிர்பார்த்தா ளாகையால் இரவு நீடித்தபடிதோன்றிற்று. அதனால் ஊழி பலவோ ரிரவாயிற்றோ என்றாள். விரகவேதனையின் மிகுதியால் சாமத்தில் தகுதியாகக் கூவின கோழியின் குரல் கேளாமல், கோழிகுரல் அடைத்ததோ வென்றாள். எப்போது உற்றுக் கேட்பினும், அவள், கடலின் அலையொலியைக் கேட்டபடியே யிருந்தாளாகையால் ஆழி துயிலாதோ என்றாள். பல்லூழி பண்புத்தொகையானால் ஊழிபல இருபெயரொட் டென்பாரு முளர். சுடர் மதியம்-இரண்டாம் வேற்றுமைத்தொகை. கான்ற - பெயரெச்சம்; கால் - பகுதி. உருகா - செய்யா வென்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

(கoஅ)

[தமயந்தி, தன்னருகே பறக்கின்ற வண்டின் சிறைக்காற்றுக்கும் முலைப்பாரத்திற்கு மாற்றாது வருந்தின ளெனல்.]

ஆடி வரிவண் டருகே பறக்கவே
வாடி மெலிவாள் வனமுலைமேல்—ஓடிப்
பொறையாகச் சோர்வாள் பொறுக்குமோ காமத்
துறைவா யடங்காத் துயர்.

(ப - ரை) வரி வண்டு ஆடி அருகு பறக்கவே-வரிகளையுடைய வண்டுகள் மகரந்தத்தில் மூழ்கி நெருங்கிப் பறப்பதனாலேயே, வாடி மெலிவாள் - உடல் தேய்ந்து மெலிகின்றவளும், வன முலை மேல் ஓடி பொறை ஆக சோர்வாள் - அழகான முலைகள் (விம்மி) மேலேறிப் பளுவானதனால் (அவைகளைத் தாங்கமாட்டாமல்(தளர்கின்றவளுமாகிய (தமயந்தி), காமம் துறைவாய் அடங்காத துயர் பொறுக்குமோ - காதலென்னும் வழியில் வரும் தணியாத் துன்பத்தைத் தாங்குவளோ? (தாங்காள் என்றபடி.)

(க - ரை) தமயந்தி தன்னருகே பறக்கின்ற வண்டின் சிறைக் காற்றுக்கும்,விம்மி மேலேறும் முலைப்பாரத்துக்கும் ஆற்றாது காமத் துறையில் தணியாத் துன்ப நுகர்ந்தாள்.

(வி - ரை) அருகே என்பதில் ஏகாரத்தை அசையாகத் தன்னுக. பறக்கவே என்பதில் ஏகாரத்தைப் பிரிநிலையாக் கொள்ளுக. மெலிவாள், சோர்வாள் இரண்டும் இயல்பினால் நிகழ்காலம் எதிர்கால மாயின. வரிவண்டுகள் மலர்த்தேன் விரும்பித் தம் வழக்கம் போல் அவளருகே பறந்தன வாகையால், காமத்துறையில் இழிந்து அறிவழிந்து வாடி மெலிபவளாகிய அவளுக்கு அவைகளின் சிறைக் காற்றுத் துன்பந் தருவதாயிற்று. காமத்துறையி லிறங்கி இன்பக் கடலில் நீந்துவோர்க்கு முலைக்குடங்கள் மிதவைகளாக உதவுவ வாயினும் இங்கிவள் தனிமையில் அத்துறையி லிறங்கித் தவிக்கின்றா ளாகையால் அம் மிதவைகளாகிய முலைகள் அவளை அதில் அழுத்து மாறு பளுவாய்த் தோன்றின வென்பார், வனமுலை, மேலோடிப் பொறையாகச் சோர்வாள் என்றார். பொறுக்குமோ மோகத் துறைவா யடங்காத்துயர் என்றும் பாட மோதுவா ருளர். இருவர் தாங்கும் காதற் சுமையைத் தனிமையில் இவளொருத்தியே தாங்க கில்லாள். அதிலும் இவள் ஆண்மகனல்லள். ஆகையால், அவனினும் மிக்கு வாடி மெலிவாள் என்பது தோன்றவே, பொறுக்குமோ காமத்துறைவா யடங்காத்துயர் என்றார்.

ஒருகோட்டுக்கலைமுனியும்,ஒளிதிகழும் புலியாடை யுடுத்த கோவும்,
மருமலர்வாழ்திசைமுகனும்,வானவர்கள்நாயகனும்,மகிடன் தானும்,
கரிய நிறத்திருமாலும், வாலியும், பராசனுமே காமனம்பால் [லே.
பெருமையிழந் தனரென்றாற் சிறுமனிதர்க் கெப்படியோ பேசுங்கா

என்றபடி சிறு மனிதரில் ஒருத்தியாகிய தமயந்தி தன் பெருமை யிழந்து தவித்தது சர்வசாதாரணமாம். சீதாபிராட்டி முதலியோரைப் போலவே தமயந்தியும் கற்புடையா ளாகலான் நளனொருவ னிடத்திலேயே காதலைப் பெருக்கி வாடி மெலிந்தாளென்க. பொறை - நிறையென்புழிப்போலத் தொழிலடிப் பகுபதம், ஐ - செயப்படுபொருண்மை விகுதி. பறக்க, ஆக வென்பன செயவென் வினையெச்சங்களாம் பொறுக்குமோ என்பதில் ஓகாரம், பொறுக்கமாட்டாள் என்னும் விடை தருவதால் உடன்

பாட்டுவினு, எதிர்மறைப்பொருட்டு. அடங்கா - ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம். (கOக)

[தமயந்தி வெண்ணிலாவை நோக்கி, "என்னையே உன்னில வால் வாட்டுதல் நன்று அன்று" என்றுளெனல்.]

ஈர மதியே யிளநிலவே யிங்ஙனே
சோர்குழலின் மீதே சொரிவதெவன்—மாரன்
பொரவளித்தான் கண்ணி யுனக்குப் புலரா
இரவளித்தா னல்லனோ வின்று.

(ப - ரை) ஈரம் மதியே - குளிர்ச்சியாகிய வெண்ணிலாவே!; மாரன்-மன்மதன், இன்று உனக்கு பொர கண்ணி அளித்தான் - இந்நாள் உனக்குச் சண்டை செய்யும்படி (வெற்றிமாலையாகிய தும்பை) மாலையைத் தந்தான்; (அன்றியும்) புலராத இரவு அளித் தான் அல்லனோ - (விரைவில்) விடியாத இராத்திரிப்போதையும் கொடுத்திருக்கின்றான் அல்லனோ? (ஆம்-அங்ஙனங் கொடுத்திருந் தும்) இளமை நிலவு ஏ இங்ஙன் ஏ சோர் குழலின்மீது சொரிவது எவன்-மென்மையாகிய நிலவையே என்னிடத்திலேயே அவிழ்ந்து தொங்கும் கூந்தலின்மேல் கொட்டுவது என்ன காரணம்?.

(க - ரை) வெற்றிமாலையையும் விடியா இரவையும்மாரனிடத் திற் பெற்றுள்ள வெண்ணிலா, வேறெங்குஞ் செல்லாமல் தன் னையே வருத்துங்காரணம் விளங்கவில்லை யென்றுள் தமயந்தி யெ னல்.

(வி - ரை) மதியே என்பதில் ஏகாரம் விளிப்பொருட்டு. இள நிலவே இங்ஙனே என்பவைகளிலுள்ள ஏகாரங்கள் பிரிநிலைப் பொருளன. சோர்குழலின் மீதே என்பதிலுள்ள ஏகாரம், இசை நிறை அசைநிலை. சோர்குழல் - வினைத்தொகை. "மன்மதன் மகத் துவத்தால் இரவு புலராதிருக்கின்றது. அன்றியும், உனக்கு அவன் வெற்றியங் கண்ணியாகிய தும்பையையுங் கொடுத்திருக்கின்றான்.

அங்ஙனம் உனக்கு உபயல மிருந்தும் நீ உன்னிஷ்டம்போம் வெ
வேறிடங்களிற் கன்னியர்பாற் சென்று உன் திறத்தைக் காட்டி
சண்டை செய்து வெற்றி பெறுமல் என்னிடத்திலேயே உன் வ
லமையைக் காட்டி நிலவு நெருப்பை என் அவிழ்ந்த கூந்தலில்
மேற் சொட்டுகின்றாயே! ஏ மதியே! நினக்கிது சம்மதியாவது எ
படி? என் மதிக் கொன்றுந் தோன்றவில்லை'' என்று நிலாவை
நோக்கித் தமயந்தி கூறினுளென்பார் ஈமதியே என்பதுமுதல் இச
செய்யு ளிறுதிகாறும் உள்ள விஷயங்களைக் கூறினு ரென்க-''உன
க்கு எத்தனை வேண்டுமாளுலும் அத்தனை நாழிகையளவாய் இவ்
விரவு நீடித்திருக்கையில் என்னையே வருத்துவது என்ன மதி?''
என்பது குறிப்பெச்சம்.

(கக0)

[தமயந்தி, தன் பெருமூச்சால் மாலை கரியாக, இரவே கரியாக
விருந்து விரகதாபத்தால் தளர்கின்ற ளெனல்.]

தாங்கு நிலவின் றழல்போய்த் தலைகொள்ளத்
தேங்குழல் சேர்வண்டு சிறைவெதும்ப—ஓங்குயிர்ப்பின்
தாமங் கரியாத் தனியே தளர்கின்றாள்
யாமங் கரியாக வின்று.

(ப - ரை) தாங்கும் நிலவின் தழல் போய் தலைகொள்ள-தான் பொறுத்துக்கொண்டிருக்கின்ற நிலவு நெருப்பானது மேலெழும்பித் தலைமண்டை கொண்டுவிட்டதனல், தேம் குழல் சேர் வண்டு சிறை வெதும்ப - மணங்கொண்ட கூந்தலிற் பொருந்திய வண்டுகள் இறகு தீயவும், ஓங்கு உயிர்ப்பின் - பெரு மூச்சினுல், தாமம் கரியா - மலர் மாலைகள் கரிந்துபோகவும், இன்று—இந்நாள், யாமம் கரி ஆக தனியே தளர்கின்றாள் - இரவே சாட்சியாகத் தன்னந்தனியே தவிக்கின்றாள்.

(க - ரை) தமயந்தி பெருமூச்சால் மலர்மாலை தீயவும், நிலவு நெருப்பால் வண்டுகளின் சிறகுகள் வேவவும், இரவே சாட்சியாகத் தன்னந்தனியே விரகதாபத்தால் வருந்துகின்றாள்.

(வி-ரை) தாங்கு நிலவு; தாங்கும் நிலவு-பெயரெச்சத்தொடர்; வினைத்தொகையெனினுமாம். நிலவுநெருப்புதலைமண்டைகொண்டு விட்டபடியால், அதன் வேகத்தைப் பொறுமல் வண்டுகளின் சிறகுகள் கறியாகத் தீந்தன என்றபடியாம். பெருமூச்சின் வெம்மையால் மாலைகள் கறிந்தனவாம். தோழியர்முதலியோர் நடுநிசியாகையால் உறங்கிக் கிடந்தார்கள். தமயந்தி ஒருத்தியுமே தன்னந்தனியே தவித்துக்கொண்டிருந்தாளென்பது தோன்றவே 'யாமங் கரியாத்தனியே தளர்கின்றாள்' என்றார். அவளுடைய விரகவேதனையின் அலங்கோலத்தைக் காண்பார்வேறெவருமிலர் ஆகையால், அதற்குச் சான்றுநிற்பது இரவே என்பார் 'யாமங் கரியா' என்றார். முதற் கரியா என்பது செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சமாம். கரிய என்பதே கரியா என்று நீண்டுவந்தது. கரியாக என்பதின் கடைக்குறையாக்கொண்டு, கரியாகும்படி என்று பொருள் கூறுவதுமொன்று. இரண்டாங் கரியா என்பது கரியாக என்பதின் கடைக்குறை. (கககக)

[தமயந்தி நெருப்பு நடுவிலிருந்து தவஞ் செய்வார் போலப் பூவணையி லிருந்தா ளெனல்.]

மையுற்ற கண்ணருவி வார வளைசோரக்
கையிற் கபோலத் தலம்வைத்து—மெய்வருந்தித்
தேனிருந்த பூங்கணையே தீயாகத் தேமொழியாள்
தானிருந்து செய்வா டவம்.

(ப-ரை) தேம் மொழியாள்-தேன்போ லினிக்குமசொல்லையுடையாளாகிய தமயந்தி, மை உற்ற கண் அருவி வார-மை தீட்டிய கண்களினின்றும் அருவிபோல் நீர் பெருகவும், வளை சோர-வளையல்கள் (உட லிளைத்ததனல்) கழலவும், கைதலத்தில் கபோலம் வைத்து - உள்ளங்கையினிடத்தில் கன்னத்தை வைத்து, தேன் இருந்த பூ கணையே தீ ஆக-தேன்பொருந்திய மலரம்புகளே நெருப்பா யெரிக்கவும், தான் இருந்து மெய் வருந்தி தவம் செய்வாள் - (அவைகளுக்கு நடுவில்) தான் பொருந்தியிருந்து உடல் வருந்தித் தவம் செய்பவள்போலிருந்தாள்.

(க-ரை) தமயந்தி கண்ணீர் பெருகவும், உடல் இளைக்கவும், மலர்வாளி நெருப்பெரிக்கவும், கைத்தலத்திற் கன்னத்தையூன்றி வருந்தித் தவஞ் செய்பவள்போலத் தோன்றினாள்.

(வி-ரை) அருவி, உவமையாகு பெயராய்க் கண்ணீரை உணர்த்தியது. வார, சோர, வைத்து, வருந்தி, ஆக என்னும் வினையெச்சங்கள் தவஞ்செய்வாள் என்பதைக் கொண்டுமுடிந்தன. ஐந்தழல் நடுவணிருப்பவள்போல, மன்மதனுடைய ஐம்மலரம்புகளாகிய நெருப்பு நடுவிலிருந்து பரமானந்தக் கண்ணீர் சொரிவதுபோல, விரகதாபக்கண்ணீர் ஒழுக்கி, தவத்தால் உடலிளைப்பவள் போல, இளைத்ததனால் வளையல்களைக் கழற்றி, நாசிநுனியைப்புருவநடுவிற் செலுத்துபவள் போலக் கைத்தலத்திற்கன்னத்தை யிருத்தி,உடலை உழற்றி, நளனென்னும் பரம்பொருளைக் கண்டு, அதனோடிரண்டறக் கலந்து பரமானந்த நுகரத் தவஞ் செய்பவள் போலத்தோன்றினள் தமயந்தி யென்று உருவக வணியாக்கி யுரைத்தமை கவனிக்கற்பாற்று. கைத்தலம் என்பது கபோலத்தலம் என்று மொழி மாற்றுக

"கைத்தல நிறைகனி யப்பமொ டவல் பொரி!"

என்பதையும்ஒப்பிடுக. மையுற்ற-எழுவாய்த்தொடர். மலையருவியென்பதுபோலக்கண்ணருவி, ஐந்தாம் வேற்றுமை நீக்கப்படுபொருள். பூங்கணை-பண்புத் தொகை, பூவாகிய கணையெனவிரிவும். தேன் இருந்த பூங்கணையென்பதற்கு வண்டுகள் மொய்க்கின்றபுஷ்பபாணம் என்று பொருள் கூறும் புலவருமுளர், இங்கிவைகளை நெருப்பாக உருவகித்திருப்பதால், நெருப்பில் வண்டுகள் மொய்ப்பது சாம்பிரதாயமன்றென்று வண்டென்னும் பொருளைத் தள்ளித் தேனென்னும் பொருளையே கொள்ளுக. மலர்கள் நெருப்பாகையில், அவைகளில் தேன் நெய்யாயிற்றென்று கொண்டு, தேன்பொருளே சிறந்த பொருளாமென்று ஏற்றுக்கொள்க. சிலர். பூங்கணை யென்பதைப் பூவணையென்று விசேடவுரை கூறுவர் - பூவணையே பூங்கணைபோல வுறுத்திய தென்னலுமாம். பஞ்சாக்கினி நடுவிலிருந்து நோற்பது சாம்பிரதாய மாகையால், மன்மதனுடைய ஐங்கணை நெருப்பின்

காப்பணிருந்து நற்றவமாற்றினான் தமயந்தி யென்பதேசால் புடைத்தாம். தேம்மொழியாள் என்றும் தேன்மொழியாளென்றும் பதச்சேதஞ் செய்யலாம் - தேன்போ லினிக்கு மொழியாள், தித்திக்கு மொழியாளென்று பொருள் கொள்க. தேமொழியாள் தவம் செய்வாள் என்று முடித்து, தேமொழியாள்-எழுவாய், செய்வாள்-பயனிலை, தவம்-செயப்படுபொருள். தவம் - தவத்தை; அன்றித் தவஞ் செய்வாள், இருமொழி யொருதொடர்ப் பயனிலையாகவுங் கொள்ளலாம்.

[அன்றிரவிருள் அள்ளிக்கொள்ளலாம்படி, விலைமாதருள்ளம் போலக் கறுத்திருந்த தெனல்.]

அள்ளிக் கொளலா யடையத் திரண்டொன்றாய்க்
கொள்ளிக்கும் விள்ளாத கூரிருளாம்—உள்ளம்
புதையவே வைத்த பொதுமகளிர் தங்கள்
இதையமே போன்ற திரா.

(ப - ரை) இரா - அவ் விராக்காலமானது, அள்ளிக்கொள் ளல் ஆய் - அள்ளிக்கொள்ளும்படிஆகி, அடைய ஒன்றாய் திரண்டு-எங்கும் ஒரேவிதமாய்ச் சேர்ந்து, கொள்ளிக்கும் விள்ளாத கூர் இருள் ஆய்-கொள்ளிக்கட்டையினாலும் பிரிக்கக்கூடாத(அத்தனை) நிறைந்த இருளை உடையதாகி உள்ளம் புதையவைத்த பொதுமகளிர் தங்கள் இதயம் எ போன்றது-தங்கள் வஞ்சகநிலையை மறைத்து வைத்த விலைமாதர் மனத்தை ஒத்திருந்தது.

(க - ரை) அன்றிரவிற் பிறைநிலா மறைந்ததும், திரண் டொன்றாய்க் கூடிய இருளானது, உள்ளொன்று வைத்துப் புறம் பொன்று பேசும் பொதுமகளி ருள்ளம்போற் கன்னங் கரேலென்று தோன்றிற்று.

(வி - ரை) பிரபுலிங்கலீலையிலும், இரவிருளை அள்ளிக் கொளலாம்படி யிருந்ததென்று கூறியிருக்கின்றது. இருளை அள்

ளிக்கொள்ள லென்பது, அதன் தடிப்பைக் காட்டுகிறது. தடிப்பு-கனம். அடைய - அடங்கலும் எங்கெங்கும். திரண்டு ஒன்றாய் - ஒரே இருளாய்க் கூடி. கொள்ளிக்கு விள்ளாத இருள் இல்லை யென்பது முன்னையோர் முடிபு. விளக்குக்கு விள்ளா இருள் இருப் பினும் கொள்ளிக்கட்டையின் செந்நெருப்புக்கு நீங்காத இருள் இல் லாததென்பதே எல்லார்க்கும்விளக்கமாம். கொள்ளிக்கும் விள்ளாத கூரிருள் என்றதனால் அதனுடையமிகுதி யைத்தகுதியாய் விளக்கு கின்றது. உள்ளம் என்பது இங்கே ஆகுபெயராய் விலைமாத ருடைய வஞ்சகநிலையைத் தெரிவிக்கின்றது.

''உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
உறவு கலவாமை வேண்டும்''

என்ற பெரியார் வாக்கு மிகுதியாக விலைமாதரையே குறிக்கின்றதா தும். இதையம்-இதயம்,இடைப்போலி. இரா-எழுவாய், போன்றது யனிலை. கொள்ளிக்கும் என்ற நான்கனுருபு மூன்றாவதற்கு மயங்கி வந்தது. ஏகாரம், முன்னையது அசைநிலை, பின்னையது பிரிநிலை. உம்மை உயர்வுசிறப்பு. பிறைநிலா மறைந்ததனால், அன்றிரவு ஒரே இருளாய் எங்கெங்கும் கன்னங்கரேரென்று பொதுமாத ருள்ளம் போல் கறுத்திருந்ததென்றுகொள்க. அடைய, செயவெனெச் சம். கொள்ளி. கொள்-பகுதி, இ-செயப்படுபொருண்மை விகுதி, ள்-சந்தி; நெருப்பைக் கொண்டது என்பதுபொருள். (கககூ

[அவ் விரவிருளில் ஊர்க்காவலர், மற்றோரிருள் உருக்
கொண்டதுபோல வந்தன ரேனல்.]

ஊக்கிய சொல்ல ரொலிக்குந் துடிக்குரலர்
வீக்கிய கச்சையர் வேல்வாளர்—காக்க
இடையாமங் காவலர்கள் போந்தா ரிருளின்
புடைவா யிருள்புடைத்தாற் போன்று.

(ப - ரை) இடை யாமம் காவலர்கள்-நடுச்சாமத்தில் ஊர்க் காவல் செய்வோர், ஊக்கிய சொல்லர் - உரத்த சத்தத்தோடு பேசும் சொற்களை உடையவர்களாகவும், ஒலிக்கும் துடி குரலர் - சத்திக்கின்ற பறையோசை யுடையவர்களாகவும், வீக்கிய கச்சையர் - அரையிற் கட்டிய கச்சையுடையவர்களாகவும், வேல் வாளர்-வேலாயுதத்தையும் வாளாயுதத்தையும் உடையவர்களாகவும், இருளின் புடைவாய் இருள் புடைத்தால் போன்று - இருளிற் பொருந்திய மற்றோரிருள் உருவெடுத்து, வந்தது போலவும், காக்க போந்தார் - நகர்க்காவல் செய்ய வந்தார்கள்.

(கு - ரை) ஊர்க்காவலர், உரத்தசத்த முடையவர்களாகவும், பறையோசைக் குரலுடையவர்களாகவும், அரையி லசைத்த கச்சையுடையவர்களாகவும் நடுராத்திரியில் நகர்க்காவல் வந்தார்கள்.

(வி - ரை) இருளின் புடைவாய் என்பதை விகுதிமேல் விகுதிபெற்ற ஏழாம்வேற்றுமை விரியாகக்கொள்ளுநரு முளர்-இருளில் என்பது பொருள். இருள் புடைத்தாற் போன்று என்பதற்கு இருளைக் குத்தித் தள்ளினது போல என்பதூஉம் இன்னொன்று. இருளிலே இன்னோ ரிருளைக் குத்தித் தள்ளினதுபோல என்றபடியாம். அசையா இருளிலே அசையும் இருள் வந்ததுபோல எனினுமாம். இங்கே துடி யென்பது மருதநிலத்து உடுக்கை யன்று - குறிஞ்சி நிலத்துத் தம்பட்டமாம். ஒலிக்கும் துடிக்குரலர் என்பதற்கு, சத்திக்கின்ற பறையோசை போன்ற குரலையுடையவர்களென்றும் இரு பொருள் படுவது காண்க. இருள் + புடைவாய் எனப் பிரித்து, இருளுள்ள இடத்தில் என்பதும் ஆம். புடைத்தல் விம்முதலுமாம்; ஆகையால், 'மற்றோரிருள் உரு வெடுத்து வந்தது போலவும் என்றும். இடையாமக் காவலர், திருடரை மறைந்திருந்து பிடிப்போராதலான் காருடை பூண்டிருப்பார் எனபது கருதியே இருள்புடைத்தாற் போன்றென்றார். இருளின் புடைவாய் என்பதை இலக்கணப் போலியாகக் கொண்டு இருளின் வாய்ப்புடை என்று மாற்றி, இருளினுடைய

வாய்ப்புறமாகிய கன்னத்தில் என்று பொருள் கோடலு முண்டு. இருளின் கன்னத்தில் இருள் அறைந்தாற்போன்று என்பது பொருள். தமயந்தியை வருத்தும் பேரிருளாகிய இராவிருளைக் கலற்கார ருருவிற் போந்த காரிருள் கன்னத்திற் புடைக்கும் அறை யோசையே பறையோசையாம். காவலர்கள், சொல்லர், குரலர், கச்சையர், வேல்வாளராய்ப் போந்தாரென்று கூட்டி முடிக்க. ஊக்கிய என்பதற்கு (அஞ்சாமல்) உரத்த என்பதூஉம் ஒன்று. ()

[அவ் விரவில் உலகத்துயிர் யாவும் அயர்ந்து துயின்றன வெனல்.]

சேமங் களிறுபுகத் தீம்பாலின் செவ் வழியாழ்
தாமுள் ளுறைபுகுதத் தார்வண்டு—காமன்றன்
பூவாளி யைந்திற் புகத்துயில் புக்கதே
யோவாது முந்நீ ருலகு.

(ப - ரை) களிறு சேமம் புக-யானைகள் தத்தம் கொட்டில்களிற் சேரவும், தீம்பாலின் செவ்வழியாழ் உறை உள் புகுத - தித்திப்பான பால்போலும் இனிய செவ்வழி யென்னும் இசைபாடும் வீணையானது உறையின் உள்ளே நுழையவும், தார் வண்டு காமன் தன் பூவாளி ஐந்தில் புக - மாலைகளில் மொய்க்கும் வண்டுகள் (அவைகளி னீங்கி) மன்மதனுடைய மலரம்புகளாகிய தாமரைமுத லிய ஐவகை மலர்களிற் புகுந்துகொள்ளவும், முந்நீர் உலகு - கடல் சூழ்ந்த இவ்வுலகத்துயிர் யாவும், ஓவாது துயில் புக்கது - இடைவிடாத தூக்கத்திற் பொருந்தின.

(க - ரை) யானைகள் கொட்டில்களிலும், யாழ்கள் உறை களிலும், வண்டுகள் ஐங்கணைகளிலும் புக்கொளிக்க, இவ் வுலகுயி ரடங்கலும் அவ் விரவில் இடைவிடாத நித்திரையி லமர்ந்தன.

(வி - ரை) சேமம் ஆகுபெயராய் யானைக் கொட்டிலை உணர்த்திற்று. யானை சேமமாய்த் தங்குமிடம், சேமம்; அதாவது, யானை

யைக் காவலோடு கட்டிவைக்குமிடம். நடுநிசிக்கு முந்தி யானைகள் உலப் போவார்க்கும் பிறர்க்கும் உதவியாய்ச் சஞ்சரித்துக்கொண்டிருந்து, பிறகு சேமத்திற் சேர்ந்தன வென்பார், 'சேமங் களிறு புக' என்றார். செவ்வழியாழ் என்பது யாழ்வகைகளில் ஒன்று. செவ்வழியாழும் யானையைப் போலவே நடுநிசிக்கு முந்தி, கீதராக விநியோகத்தி லீடுபட்டிருந்து, பிறகு உறையின் உள்ளே புகுந்த தென்பார் செவ்வழியாழ் தாமுள்ளுறைபுகுத வென்றார். இங்கே தாம் என்பது அசைநிலையாம். தீம்பாலின் - ஐந்தாம் வேற்றுமை ஒப்புப் பொருளது - பால் நாவுக் கினிமையாயிருப்பதுபோலச் செவிக் கினிமையாயிருக்கும் செவ்வழியாழ் என்பது பொருள். தார்வண்டென்று வண்டுக்குத்தார் என்பதை அடைமொழியாக்கியதானல், வண்டும், யானையையும் யாழையும் போலவே நடுநிசியளவும் மாந்தருடைய மலர்த்தாளிற் படிந்திருந்து, பிறகு மன்மதனைங்கணைமலர்களாகியதாமரைமுதலியவைகளிற்படிந்தனவென்க. மன்மதனுடைய ஐங்கணைகள் - தாமரை, மா, அசோகு, முல்லை, நீலம் என்பவைகளாம் - ஓவாது துயில் புக்கது என்றதனல் இடை தவிராமல் ஒரேதூக்கமாய் நல்ல நித்திரை செய்ததென்று கொள்க. உலகு என்று ஒருமையிற் கூறியபடி புக்கது என்று ஒருமை முடிபு கொடுத்தோதினர். புக்கதே என்பதில் ஏகாரம் அசைநிலையாம். முந்நீர்-மூன்றுநீர்; அதாவது, ஆற்றுநீர் ஊற்றுநீர் வேற்று நீரென்னும் மூன்றாகிய நீரையுடைய கடல் என்று பொருள். ஆகையால், இது பண்புத்தொகைப்புறத்துப் பிறந்தஅன்மொழித்தொகையாம். புக, புகுத என்பன நிகழ்கால வினையெச்சங்கள். உள் உறை என்பதை உறை உள் என மாற்றி இலக்கணப்போலியாகக் கொள்க. உறையின் உன்னிடத்திலே எனப் பொருள் கொண்டால் ஆறும் வேற்றுமைத்தொகையாகவும், உறையில் எனப் பொருள் கொளின் ஏழாம்வேற்றுமை விரியாகவும் கொள்க. உள் என்பதை இடத்துக்கு ஆகுபெயராக் கொள்க. பூவாளி யைந்து என்பதை ஐந்து பூவாளி என்றும் மொழிமாற்றி யுரைக்கலாம். பூவாளி-பூவாகியவாளி; இருபெயரொட்டு. உலகு, இடவாகுபெயராய் அதிலுள்ள உயிர்களைக் குறித்தது.

(ககரு)

[அந் நள்ளிரவிற் பேயும் உரை சோர-இரை சோர-உடல்சோர உறங்கிற் றெனல்.]

ஊன்றின் றுவகையா லுள்ள வுயிர்புறம்பே
தோன்றுங் கழுதுந் துயின்றதே—தான்ற
னுரைசோரச் சோர வுடல்சோர வாயி
னிரைசோரக் கைசோர நின்று.

(ப - ரை) ஊன் தின்று உவகையால் - இறைச்சியைத் தின்ற மகிழ்ச்சியினால், உள்ள உயிர் புறம்பே தோன்றும் கழுதும் - (அகத்திம்) உள்ள மூச்செல்லாம் வெளியில் காணும்படியுள்ள பேயும், தன் உரை சோர சோர - தன் சொற்கள் மிகவுந்தளரவும், உடல் சோர- உடல் நிலைதளரவும், வாயின் இரைசோர - வாயிலிருந்து உணவுநழுவவும், கை சோர - கைகள் தளரவும், நின்று துயின்றது - நின்றபடியே தூங்கிற்று. ஏயும் தானும் இசைநிறை அசைநிலைகள்.

(க - ரை) வயிறார இறைச்சியை இன்பமா யுண்டதனால், பெருமூச்செறிய நின்ற பேயும் உரை சோர, உடல் சோர, இரை சோர, இருகை சோர நின்றபடியே அந் நள்ளிரவில் உறங்கிற்று.

(வி - ரை) இதுபற்றியே திருவிளையாடற்புராணமுடையாரும் "எழுதரு மறைகள் தேரா இறைவனை" என்னும் செய்யுளில் "கழுதுகண் படுக்கும் பானுள் இரவினிற் றூது கொண்டோன்"என்றார். "நடுநிசியிற் பேயு முறங்கும்" என்பது பெரியார் வாக்கு. பேய்கள் ஊன்றின்பன வென்பதை அரிச்சந்திரபுராண முடையாரும் மயான காண்டத்தில் விதந்திருக்கின்றார் — அங்குக் காண்க. ஊன் என்பதில் னகரம் சாரியை யென்று கொள்க. ஆ, ஆன் என் புழிப்போல உவகை யென்றது களித்திருத்தலை - இங்ஙனே கள்ளுண்பாரும் களித்திருத்தலைக் களி யென்பர் மேலோர். உள்ளடங்கி யிருக்க வேண்டிய மூச்சும், அளவுக்குமிஞ்சி யுண்ட ஊனான் காரணத்தால் கழுதுக்கு வெளி கிளம்பிற்றென்பார், ஊன்றின் றுவகையா லுள்ள

வுயிர்புறம்பே தோன்றுங் கழுதும் என்றார். அதன்பேச்சுச் சுழுத்தியி லாழ்ந்ததால் சோர்ந்ததென்று கொள்க. அது சாக்கிரத்திலிருந்து சொப்பனத்திலும், சொப்பனத்திலிருந்து சுழுத்தியிலும் செல்லச் செல்லப் பையப் பைய உரை சோர்ந்ததென்பார், உரைசோரச் சோர வென்று அடுக்காகக் கூறினார். சாக்கிரத்திலிருந்து சொப்பனத்திற் செல்லுங்கால் உரையும், சொப்பனத்திலிருந்து சுழுத்தியிற் செல்லுங்கால் உடலும் இரையும் கைகளும் சோர்ந்தன வென்று கொள்க. கழுதும் என்றதிலுள்ள உம்மை இழிவுசிறப்புப்பொருளது, உயர்வுசிறப்பெனினுமாம். உயிர் (உயிர்ப்பு=மூச்சு), முதனிலைத் தொழிற் பெயர், சொல் என்புழிப்போல. கழுதும்-எழுவாய், துய்ன்றது-பயனிலை வாயினிரை - ஐந்தன்ருகை நீக்கப்படுபொருளது. (கககூ)

[பெட்டையன்றில் கூவக் கேட்ட தமயந்தி, கண்ணீராறுய்ப் பெருக்கினு ளெனல்.]

அன்றி லொருகண் டுயின்றொருகண் ணார்வத்தா
லின்றுணைமேல் வைத்துறங்கு மென்னுஞ்சொ—லின்று
தவிர்ந்ததே போலாற்றிச் சாம்புகின்ற போதே
யவிழ்ந்ததே கண்ணீ ரவட்கு.

(ப - ரை) அன்றில் ஒருகண் துயின்று ஒருகண் ஆர்வத்தால் இனிமை துணைமேல் வைத்து உறங்கும் என்னும் சொல் - ஆண் அன்றிற்பறவை ஒருகண்ணைமூடி யுறங்கிமற்றொருகண்ணை, அன்பின் மிகுதியால், தனக் கின்பம் பயக்கும் துணையாகிய பெட்டை யன்றிலின்மேல் செலுத்தித் தூங்கும் என்னும் உலகவழக்காகிய சொல்லானது, இன்று ஏ தவிர்ந்தது போல் - இன்றைக்கே பொய்த்தது போல, ஆற்றி சாம்புகின்றபோது ஏ - (பெட்டையன்றில்) கூடி அடங்குகின்ற அக் கணத்திலேயே அவள் கு கண்ணீர் அவிழ்ந்த. தமயந்திக்குக் கண்ணீர் பெருகிற்று. கடைஏகாரம் அசைநிலை.

(க - ரை) ஆண் அன்றில் பெட்டையின்மேல் ஒருகண்வைத்து மறு கண்ணால் உறங்கும் என்னும் உலகவழக்குச் சொல்,பிழைத்தபடி பெட்டையன்றில்கூடுவதைக்கேட்ட தமயந்திக்குக் கண்ணீர் பெரு கிற்று.

(வி - ரை) அன்றில் - ஆண்அன்றில் (அல்லது) சேவலன்றி லெனக் கொண்டு, சாம்புகின்றபோதே என்பதற்குப் பெட்டை யன்றில் எழுவாயாக்கினும். சிலர் அன்றி லென்பதையே பொது வாக வைத்துக் கூறுவாருமுளர் - ஆண் அன்றில் இரவில் எப் போதும் ஒரு கண்ணை மூடித் துயின்று மறுகண் பார்வையைத்தன் பெட்டைமேற் செலுத்தினபடியே இருக்கும் என்பது உலக வழக் குச் சொல். இது தமயந்திக்குத் தெரியுமாகையால், கூவின அன் றில் ஆண் என்றும் பெண்ணென்றுங் கவனியாமலும் அது கூவின காரணம் இன்னதென் றோராமலும், அதைப் பெட்டை யன்னமாக வும், அது தன்னாயகனைப் பிரிந்திருப்பதனாற் கத்திற்றென்றுங் கொண்டு, தன்னோடதனையும் ஒப்பிட்டுக் கண்ணீ ரொழுக்கிச் சாம்பித் தேம்பினளென்று கொள்க. மேற்கூறிய உலக வழக்குப் பிழைத்ததனாலேயே பெட்டையன்றில் சாம்புகின்றதென்றும், அப்போதே அவட்குக்கண்ணீர் பெருகிற்றென்றும் பொருள் தருவ தால் ஏகாரங்க ளிரண்டும் பிரிநிலைகளாம், சொல் தவிர்ந்தது என் பதை எழுவாய்த்தொடராகவும் - அன்றில் சொல்லைத் தவிர்ந்த தென இரண்டன் தொகையாகவும் கொள்ளலாம். அன்றில் சொல் தவிர்தலாவது, பெட்டையைத் தனியே தவிக்கவிடுவது. தன் னிலையை முன்னிலையோடு ஒப்பிட்டுக்கொண்டாள் தமயந்தி ஆகை யால், கண்ணீர் பெருக்கினளென்க. கக௭)

[உலகெலாஞ் சூழிருளாய் வேகின்ற துன்பகாரணம் யாதோ வென்று தமயந்தி இரங்கினளெனல்.]

எழுலகுஞ் சூழிருளா யென்பொருட்டால் வேகின்ற
ஆழ்துயரமேதென் றறிகிலேன் —பாழி
வரையோ வெனுநெடுந்தோண் மன்னனோ கின்னு
மிரையோ விரவுக் கியான்.

(ப - ரை) பாழி வரையோ என்னும் நெடுமை தோள மனனே வோ - வலுவுள்ள மலையோ என்று மயங்கும்படி நீண்ட தோளுடையமன்னனே! ஏழ்உலகும் சூழ் இருள் ஆய்-ஏழுலகங்களும் சூழ்ந்த இருளையுடையனவாய், என்பொருட்டால் வேகின்ற ஆழ் துயரம் ஏது என்று அறிகிலேன்-எனக்கா வெந்துகொண்டிருக்கின்றதனலாகிய மிக்க துன்பத்திற்குக் காரணம் ஏதுவென்று அறியேன்; (இப்படியிருப்பதனல்) யான் இரவுக்கு தின்னும் இரையோ-நான் (இந்த) இராத்திரி யென்னும் அரக்கனுக்கு உண்ணும் உணவோ? (நீரே சொல்லும்,)

(க - ரை) "ஏ, மன்னவனே! ஏழுலகும் இருண்டு எனக்காக இப்படி வேகின்ற காரணம் என்னவோ தெரியேன். ஆகையால், இவ்விரவினுக்கு உண்ணும் இரையோ யான்? நீரே சொல்லும்.

(வி - ரை) ஏழுலகம் என்றது ஈரேழுலகங்களையும் குறிக்கும். தானிருந்த இடத்தை விரகதாப விசேடத்தால் ஏழுலகென்றுனென்க. சூழ் இருள் - வினைத்தொகை. இருளா - இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கதொகையாகவும் அன்றி இருசொல் ஒருவினையாகவும் கொள்ளலாம். என்பொருட்டு- எனக்கு; நான்காம் வேற்றுமைப் பொருட்டுப் பொருளது. ஆழ் துயரம்-ஆழ்ந்த துயரம்-வினைத்தொகை. அறிகிலேன் - எதிர்மறை முற்று; அறி + கு + இல் + ஏன்; அறி-பகுதி, கு-சாரியை, இல்-எதிர்மறைப்பொருட்டு, ஏன் தன்மையொருமை விகுதி. பாழி - வன்மை. பாழிமால்வரை என்று வந்துள்ள பிறவுரையையும் ஒப்பிடுக. வரையோ-ஓகாரம் ஐயப்பொருட்டு. நெடுந்தோள் - பண்புத்தொகை; நெடுமை + தோள்; "ஈறு போதல்" என்னுஞ் சூத்திர விதி பெற்றது. மன்னவோ என்பதில் ஓவை விளிப்பொருளாகப் பெயரியல், ருகூ-ம் சூத்திரப்படியேனும், இரக்கப்பொருளாக வேனுங் கொள்க. இரையோ என்பதில் ஓகாரம் வினப்பொருட்டு. இரவுக்கியான் என்பதில் ககரமெய்யின்மேலுள்ள இகரம் அஃகியது காண்க. (ககஎ)

[தமயந்தி மாலைக்காலத்திற்கு வாடிய தன்னுயிரை உண்ப
தற்கு ஊதைக்காற்று வந்ததென்று ளேனல்.]

கருவிக்கு நீங்காத காரிருள்வாய்க் கங்கு
லுருவிப் புகுந்ததா லூதை—பருகிக்கார்
வண்டுபோ கட்ட மலர்போன் மருண்மாலை
யுண்டுபோ கட்ட வுயிர்க்கு.

(ப - ரை) கருவிக்கு நீங்காத கருமை இருள்வாய் - கத்தி
முதலிய ஆயுதங்களுக்கும் அசையாத கருமையாகிய இருட்டில்,
கருமை வண்டு பருகி போகவிட்ட மலர்போல் - கருவண்டுகள்
குடித்துக் கழித்துவிட்ட பூவைப்போல, மருள் மாலை உண்டு
போகவிட்ட உயிர்க்கு - மயக்கத்தைச் செய்யு மாலைக்காலமானது
(சாரத்தை உண்டு)கழித்துவிட்ட (என்)உயிரை (மறுபடியும் உண்ப
தற்கு), ஊதை கங்குல் உருவி புகுந்தது - குளிர்காற்று அவ்
விருளை ஊடுருவிக்கொண்டு நுழைந்தது.

(க - ரை) இந்தக் காரிருளில், வண்டுண்டுவிட்ட மலர்
போல், மாலைக்காலமென்னும் மாயவரக்கன் சாரத்தை யுண்டு கழி
த்து விட்ட என் உயிரை மறுபடியும் உண்பதற்கு உதைக்காற்று
நுழைந்தது.

(வி - ரை) கருவியென்றது கத்திமுதலிய கூர்மையான ஆயு
தங்களை. கருவிக்கு என்பதில் நான்கனுருபு ஏதுப்பொருளென்பா
ரிலர். உம்மை உயர்வுசிறப்பு. கருவியாலும் அதாவது கருவியை
ப்பயோகித்தாலும் நீங்காத என்ற பொருள் கொண்டு மூன்றாம்
வேற்றுமைக் கருவிப்பொருளாகக் கோடலே உகந்ததாம். அப்பே
ாதை வேற்றுமை மயக்கமாகக் கொள்க. நான்காம் வேற்றுமை
குதிப் பொருளென்பாரு முளர். கருமை + இருள் = காரிருள்; கரு
மை + வண்டு = கார்வண்டு, இரண்டும் பண்புச் சூத்திரவிதி பெ
ன. கங்குல் + உருவி - இரண்டாம் வேற்றுமைத் தொகை

உருவி - ஊடுருவி - நடுவில் நுழைந்து என்று கொள்க. ஊதை என்பது வாடை - இது உடலையும் உள்ளத்தையும் குளிரால் நடுக்குவது அநுபவம் - அப்போது நாயகனை நீங்கியிருக்கும் நாயகி படும்பாடு பெரும்பாடென்பதும் உலகானுபவமாம். போகட்ட என்பதைப் போகவிட்ட என்று கொள்வதே உகந்ததாம் - வகர இகரம் தொக்கதனால் போகட்ட என்றாயிற்று; போய்விட்ட என்பாருமுளர். அது அநுபவத்துக்கு ஒத்துவரவில்லை. போய்விட்ட என்பது போயிட்ட என்றாகுமன்றி, போகட்ட வென்றாகாது. போகவிட்ட என்பதே விகரம் தொகுத்தலாய், போகட்ட வென்றாவதற்கு ஞாயமும் அனுபவமு முண்டு.

மாலைப்பொழுதின் மகத்துவத்தால் வாடி, வண்டிகுடித்துவிட்டுப்போன பூவைப்போல் சாரமற்று வதங்கியிருக்கும் என் உயிரைக் குடிக்க, ஊதைக்காற்று வந்ததென்று, நடுநிசியில் வந்த அக் காற்றைத் தமயந்தி வெறுத்தாளென்று கூட்டிக்கொள்க. மருள் மாலை என்பதை மருளைச்செய்யும் மாலை என்று இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகையாகக் கொள்ளலே யன்றி, குறவரு மருள் குன்றம் என்புழிப்போல மருளு மாலை யென்று விரித்து வினைத்தொகையாக் கோடலு மொன்று. அன்றியும், மருளவைக்கும் மாலை யென்பதூஉம் மற்றொன்று; மருளச்செய்யு மாலை யென்பதூஉம் இன்னொன்று. தனித்துத் தவிக்கும் காதலர்க்கு மருளைச்செய்யு மாலை யென்று இரண்டாம் வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்க தொகையாகப் பொருள் விரிப்பதைப் பார்க்க, காதலர் மருளுமாலை யென்று விரித்து, வினைத்தொகை யாக்குவதும், அன்றி, காதலரை மருளச் செய்யு மாலை யென்று, காதலர் என்பதை இரண்டாம் வேற்றுமை யாக்குவதும் ஏற்றமென்க

[தமயந்தி எழுந்தாள், படுக்கையில் விழுந்தாள், தூணைக் கட்டி யணைந்தாள், நாணினு ளெனல்.]

எழுந்திருக்கு மேமாந்து பூமாந் தவிசின்
விழுந்திருக்குந் தன்னுடம்பை மீளச்—செழுந்தாளத்
தூணோடு சேர்க்குந் துணையேது மில்லாதே
நாணோடு நின்றழியு நைந்து.

(ப - ரை) பூ மாதவி சின் ஏமாந்து எழுந்திருக்கும் - பூக்களையும் மாங்கொழுந்துகளையும் (பரப்பின) இருக்கையிலிருந்து (நளனுடையஉருவெளித்தோற்றத்தைக் கண்டதனுல் உள்ளங்) களித்துத் தமயந்தி) எழுந்திருப்பாள்; விழுந்திருக்கும்- (அது பொய்த்தோற்றமாகையால் அங்கொன்று மில்லாமல்) விழுந்து கிடப்பாள்; மீள செழுமை தாளம் தூணோடு தன் உடம்பை சேர்க்கும் - மறுபடியும் எழுந்து நீரோட்டமான கெட்டி முத்தங்களைப் பதித்த கம்பத்தில் தன்னுடலைப் (பொருந்தவைத்துத்) தழுவுவாள்; நாணோடு நின்று- (அதனுல்) வெட்கமடைந்து ஒருபுறம் நின்றுகொண்டு,ஏதும் துணை இல்லாது நைந்து அழியும் - வேறொரு துணையு மில்லாமையால் தளர்ந்து வருந்துவாள்.

(க - ரை) (தமயந்தி, விரகதாபத்தால் எழுந்து, நளனைக் காணுமையால் விழுந்து, தூணை அவனெனத் தழுவி, அதற்காக நாணி, துணை யேது மில்லாமையால் மனந் தளர்ந்து வருந்தினுள்.

தமயந்தி, நளனுடைய பொய்த்தோற்றத்தை, கண்டு களித்து எழுந்து, அங்கொன்று மில்லாமையால் விழுந்து மறுபடியும் எழுந்து தூணை அவனெனக் கருதிக் கட்டியணைத்து, அதற்காக நாணி, துணையொன்று மில்லாமையால் தளர்ந்து நின்று

தனியே வருந்துவாள் என்று கூட்டுக. தமயந்தி என்பதைச் சொல்லெச்சமாக முதலில் வருவித்துக்கொள்க. நைந்து அழி வாள் என்பதை ஒருபொருட் பன்மொழி யாக்குவாரு முளர். தூணோடு-வேற்றுமை மயக்கம்.

" ஏமாந்தேன் ஐயா, எழுத்தறியும் பெருமானே!"

என்றார் பிற ஆன்றோரும். ஆகலான், ஏமாத்தல், இறுமாத்தல், களித்தல் என்பன ஒருதொடர்.

" இறுமாந்திருப்பன் கொலோ"

என்றார் தேவாரமுடையாரும். ஆனந்தத்தால் தன்னைமறந் தவச் மாதல் இறுமாத்தல். (கஉ0)

[தமயந்தி, பஞ்சுமெத்தையின்மேல் சோர்ந்த கூந்தலைத் தாங்கிக் கொண்டு, தளர்ந்து பெருமூச்செறிந்தா ளெனல்.]

விரிகின்ற மெல்லமளி வெண்ணிலவின் மீதே
சொரிகின்ற காரிருள்போற் சோரும்—புரிகுழலைத்
தாங்குந் தளருந் தழலே நெடிதுயிர்க்கும்
ஏங்குந் துயரோ டிருந்து.

(ப - ரை) வெண்மை நிலவின்மீது சொரிகின்ற கருமை இருள்போல் - வெண்ணிலவின்மேல் பொழிகின்ற கரிய இருளைப் போல, விரிகின்ற மென்மை அமளி சோரும் புரி குழலை - பரப்பி யிருக்கின்றமெல்லிய படுக்கையின்மேல்அவிழ்ந்துதொங்கும்சுருண்ட கூந்தலை, தாங்கும் - கையில் தாங்கிக்கொள்வாள்; தளரும் - சோர் வாள்; தழலே நெருப்புமயமாகவே, நெடிது உயிர்க்கும் - பெருமூச் செறிவாள்; துயரோடு இருந்து ஏங்கும் - துன்பப்பட்டு இரங்கு வாள்.

(கு - ரை) தமயந்தி படுக்கையில் அவிழ்ந்து மருங்கும் கூந்தலைக் கையில் ஏந்தினபடியேசோர்ந்து, பெருமூச்செறிந்து, துன்பப்பட்டு இரங்கினாள்.

(வி - ரை) விரிகின்ற - விரித்திருக்கின்ற எனினுமாம். மென்மை + அமளி = மெல்லமளி "ஈறுபோதல்என்னுஞ்சூத்திரவிதி பெற்றது. வெண்மை + நிலவு = வெண்ணிலவு - இதுவும் மேலைச் சூத்திரவிதி பெற்றது. மீதே என்பதிலுள்ள ஏகாரம் இசைநிறை அசைநிலை. கருமை + இருள் = காரிருள் - இதுவும் பண்புச்சூத்திர விதி பெற்றது. வெண்ணிலவு, வெண்பட்டு மெத்தைக்கும், காரிருள், கருங்கூந்தற்கும் உவமானங்கள். விரகதாப மிகுதியால் தன் கூந்தல் முதலியவை சோர்வதையும் கவனித்துச் சரிப்படுத்திக் கொள்ள தமயந்திக்குத் தோன்றவில்லை. ஆகையால், அத் தொங்குங் கூந்தலைக்கையி லேந்தினபடியே சோர்ந்து நெருப்பு மூச்செறிந்து துன்பப்பட்டிரங்கினா ளென்க. புரிகுழல் - வினைத்தொகை. தழலே என்பதில் ஏகாரம் பிரிநிலை. தாங்குவதையும் தளர்வதையும் ஏங்குவதையும் பன்முறை மாறிமாறிச் செய்தபடியே யிருந்தா ளென்று கொள்க. (கஉக)

[தமயந்தி, இவ்விரவு விரைவில் ஏகாத காரணம் என்ன? என்று ளேனல்.]

உடைய மிடுக்கெல்லா மென்மேலே யோச்சி
விடிய மிடுக்கின்மை யாலோ—கொடியன்மேல்
மாகாதல் வைத்ததோ மன்னவர்த மின்னருளோ
ஏகாத தென்னோ விரா.

(ப - ரை) உடைய மிடுக்கு எல்லாம் - தனக்குள்ள வன்மை முழுவதையும், என்மேலே ஓச்சி - என்னிடத்திலேயே செலுத்திவிட்டு, விடிய மிடுக்கு இன்மையாலோ - விடிவதற்கு வல்லமை இல்லாததனாலேயோ!, கொடியன்மேல் மா காதல் வைத்ததோ

(கொடுங் குணவானுகிய மன்மதன்மேல் மிகுந்த காதல் வைத்து அவனை விட்டுப் பிரியமனமில்லாதிருக்கின்றதோ!, (அல்லது) மன்னவர்தம் இனிமை அருளோ - நளமகாராசருடைய இனிமையாகிய திருவருளினுலோ!, இரா ஏகாதது என்னே - இந்த இரவு விடிந்து போகாததற்குக் காரணம் இவற்றில் எதுவோ? (அறியேன் என்றபடி.)

(கு - ரை) தமயந்தி, "இவ்விரவு விடியாததற்குக் காரணம், இது தன் வல்லமை முழுவதையும் என்மேல் செலுத்திவிட்டதனுலேயோ, மன்மதனை விட்டுப் பிரிய மன மில்லாததனுலேயோ (அல்லது) நளராசருடைய தயவாலேயோ!" என்ருள்.

(வி - ரை) உடைய உள்ள என்பதுபோலக் குறிப்புப் பெயரெச்சம். ஒச்சி (அதனுல்) விடிய என்றிருப்பதால், ஒச்சி யென்பது காரணப்பொருளதாகிய வினையெச்சம். ஒகாரங்கள் நான்கில் முதல் மூன்றும் ஐயப்பொருளன. கடையொன்றை அசைநிலையாக அகற்றுக. மிடுக்கெல்லாம் - ஒருமையிற் பன்மை வந்த பால் வழுவமைதி. என்மேலே என்பதிலுள்ள ஏகாரம் வேறெவர் மேலும் ஒச்சாமல் என்று பொருள்படுவதால் பிரிநிலை அல்லது தேற்றமெனினுமாம். ஒச்சி, விடிய இரண்டும் வினையெச்சங்கள். கொடியன் என்பதை நளராசனைக் குறித்ததாகக் கொள்ளுநரு முளர். கொடியன் என்று ஒருமையிற் கூறி, உடனே மன்னவர் என்று மரியாதைப் பன்மையிற் கூறியிருப்பதனுலும், கொடியவனுக்கு இன்னருளிருப்பது இயலாமையாலும் அது தகாததென்று ஒதுக்குக. கொடியன் என்றமை, மலரம்புகளான் கொடுமை விளைப்பவன் மன்மதனுகையால் என்க. மன்மதனைப்போலவே இரவும் கொடுமை விளைப்பதில் முதிர்ந்திருப்பதனுல், இனத்தை இனங்ாடுமென்றபடி, தனக்குகந்த நாயகனுகும் மன்மதனைக் காதலித்து, விரைவில் விடியமறைந்திருக்கின்றதோ என்பாள் கொடியன்மேல் மாகாதல் வைத்தோ என்ருள். விரைவில் விடிந்துவிட்டால், இரவு தன்னுயகனை விட்டுப் பிரியநேரு மென்று விடியாதிருக்கின்றதோ என்றையுற்

ருன். இப்படித் தன்னை வருத்தும் இரவைவிரைவில் விடிவிப்பதற்கு மன்னவரால் வெகு சுளு விலாகும். வீராதிவீரராகிய அவர் முயன்ருல் இரவை வெல்வது ஒரு பெருங்காரியமன்று. ஆயினும், இரவை ஒரு பொருளா மதித்து எதிர்ப்பது தமதாண்மைக் கழகன்று என்று அதன்மேல் அருளுடையாராய் நளமகாராசர் வாளா விருக்கின்ரு ரென்றெண்ணின தமயந்தி 'மன்னவர்தம் இன்னருளோ' என்ரு ளென்க. (கஉஉ)

[தமயந்தி மயங்கியுந் தெளிந்தும், வெதும்பியுந் தணிந்தும் கண்ணீர்விட் டோய்ந்திருந்தா ளெனல்.]

மயங்குந் தெளியு மனநடுங்கும் வெய்துற்
றுயங்கும் வறிதே யுலாவும்—வயங்கிழைபோய்ச்
சோருந் துயிலுந் துயிலாக் கருநெடுங்க
ணீருங் கடைசோர நின்று.

(ப - ரை) மயங்கும் தெளியும் மனம் நடுங்கும் - (தமயந்தி) மயங்குவாள், தெளிவாள், மனம் நடுங்குவாள்; வெய்துற்று உயங்கும் - உடல் வெப்பமாக வாடுவாள்; வறிது எ உலாவும் - வீணுக வே சுற்றித் திரிவாள்; வயங்கு இழை போய் சோரும் - விளங்கு கின்ற அணிகள் (தாமாகவே) கழலத் தளருவாள்; துயிலாத கருமை நெடுமை கண் நீரும் கடைசோர நின்று துயிலும்-(எத்துணை என் றும்) தூங்காத கரிய பெரிய கட்கடையில் நீரும் ஒழுகினபடியே (பொய்யுறக்கங்) கொள்ளுவாள்.

(க - ரை) தமயந்தி மயங்குவாள், தெளிவாள், மனநடுங்கு வாள், ஒடுங்குவான், வாடுவாள், ஓடுவாள், அணிகள் கழல்வாள், உழல்வாள், தூங்காத கண்களில் நீருந் துளும்பினபடியே அயர்ந்து பொய்யுறக்கங் கொள்ளுவாள்.

(வி - ரை) மயங்கும், நடுங்கும், தெளியும், உயங்கும், உலாவும், சோரும், துயிலும் என்பவைகள் திணைவழுவமைதிகள். வெய்து=

வெம்மை + து. பண்புச்சுத்திரவிதி பெற்றது, து - பகுதிப்பொருள் விகுதி. வெம்மை கொண்ட நோய் என்றும் பொருள் கொள்ளலாம். அப்போது, து-உடைமைப்பொருள் விகுதியாம். வெய்து + உற்று என வேறு பிரிப்பாரு முளர். வெம்மையை யுற்று என்பது பொருள். கொதிப்பேறியென்றுங் கொள்ளலாம், வறிதே என்பதில் ஏகாரத்தை அசையாகவுந் தள்ளுவர் சிலர்; தோற்றமெனவே தகுதி. வயங்கிழை - வினைத்தொகை. துயிலா - ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் - நடவாக்குதிரை என்புழிப்போல. கருமை நெடுமை கண் - பண்புத்தொகை - கருமையாகிய நெடுமையாகிய கண்ணெனவிரியும் நீரும் என்பதில் உம்மையை அசையாகத் தள்ளுநருமுளர்; இறந்தது தழீஇயதாகக் கொள்வதே ஏற்றமென்க கட்கடைநீரும் சோாநின்று தூங்காமற் றூங்குமெனக் கொள்க. ()

[தமயந்தி, "பேயுமயங்கு மிவ்விரவிருளிற் காதலர்தம்
ஆருயிர்க்கோ ராதரவு முண்டோ" என்றுளேனல்.]

விழுது படத்திணிந்த வீங்கிருள்வாய்ப் பாட்டு
கழுதும் வழிதேடுங் கங்குற்—பொழுதிடையே
நீருயிர்க்குங் கண்ணோடு நெஞ்சுருகி வீழ்வார்த
மாருயிர்க்கு முண்டோ அரண்.

(ப - ரை) கழுதும் விழுதுபட திணிந்த வீங்கு இருள்வாய் பட்டு-பிசாசும், விழுதுவிட்டுப் பலமடைந்தோங்கிய இவ்விரவிருளிலகப்பட்டு, வழி தேடும் கங்குல் பொழுதிடை - வழி தெரியாது தேடி அலைகின்ற இராக்காலத்தில், நீர் உயிர்க்கும் கண்ணோடு நெஞ்சு உருகி வீழ்வார்தம் - நீரைச்சொரியுங் கண்களோடு (நின்று) மனங்கரைந்து விழுகின்ற காதலருடைய, அருமை உயிர்க்கும் அரண் உண்டோ-அருமையாகிய உயிருக்கும் புகலிடம் இருக்கின்றதோ? (இல்லை யென்றபடி.)

(க - ரை) "பிசாசும் வழிதெரியாதலையும் இவ் விரவிருளில் மனங் கரைந்து நீரைச்சொரியுங் கண்களோடு நின்று விழுகின்ற

காதலருடைய ஆருயிர்க்கும் அடைக்கலப் பொருள் இருக்கின்றதோ? என்றாள் தமயந்தி.

(வி - ரை) ஆல் முதலிய மரங்கள் விழுது விட்டுப் பலமடைந்திருக்கிறபடி இருளும் விழுதுவிட்டுத் திணிந்திருந்த தென்றபடியாம். வீங்கிருள் - வினைத் தொகை - வாங்குவில் என்புழிப் போல. கழுதும் என்பதிலுள்ள உம்மை உயர்வுசிறப்பு - குறவரும் மருளுங் குன்ற மென்புழிப்போல. எத்தனை இருளானாலும் அனுயாசமாய் வழிதெரிந்து நடக்கக்கூடிய பிசாசும் மயங்கும் பேரிருள் என்றபடி. இடையே என்பதில் ஏகாரம் இசைநிறை அசைநிலை. நீர் + உயிர்க்கும். நீரைப் பெருக்கும். கண்ணோடு - உடனிகழ்ச்சிப் பொருட்டு. கண்ணோடு என்பதற்குப் பின், நின்று என்பதைச் சொல்லெச்சமாக்கொள்க. அருமை + உயிர் = ஆருயிர் - பண்புச்சுத்திரவிதிபெற்றது. ஆர் + உயிர் - பொருந்திய உயிரென்று பொருந்த வைக்குநருமுளர். அரண், எழுவாய்-உண்டோ-பயனிலை. கங்குற் பொழுது, பகற்பொழுது என்புழிப் போல் இரு பெயரொட்டு. அரண் - காவல் என்று பொருள்படுமேனும் அடைக்கலப் பொருளென்பதே இங்கு ஏற்றதாகும். உயிர்க்கும் என்பதிலுள்ள உம்மை, "புலையனும் விரும்பாத புன்புலால் யாக்கை" என்புழிப்போல இழிவு சிறப்புப் பொருட்டு - உயர்வு சிறப்புப்பொருட் டென்பாரு முளர். நெஞ்சுருகி - எழுவாய்த் தொடர். (கஉ௬)

[தமயந்தி ஆழ்ந்துள்ள துன்பக்கடற்குக் கரைகண்டபடி பொழுது விடிந்ததெனல்]

பூசுரர்தங் கைம்மலரும் பூங்குமுத மும்முகிழ்ப்பக்
காசினியுந் தாமரையுங் கண்விழிப்ப—வாசம்
அலர்ந்ததேங் கோதையா ளாழ்துயரத் தோடு
புலர்ந்ததே யற்றைப் பொழுது.

(ப - ரை) பூசுரர்தம் கை மலரும் - அந்தணருடைய கைகளாகிய மலர்களும், குமுதம்பூவும் முகிழ்ப்ப - ஆம்பற்பூக்களும் குவிய

வும், காசினியும் தாமரையும் கண் விழிப்ப - பூமியிலுள்ளோரும் தாமரைமலர்களும் தமது கண்களைத் திறக்கவும், வாசம் அலர்ந்த தேம் கோதையாள் ஆழ் துயரத்தோடு — மணங்கொண்ட தேன் பொருத்திய மலர்மாலையணிந்த தமயந்தியின் ஆழ்ந்த துன்பத்தோடு, அன்றை பொழுது புலர்ந்தது - அன்றிராக்காலம் நீங்கிற்று.

(க - ரை) வேதியருடைய கைம்மலரும் குமுதமலரும் கூம்பவும், பூவுலகமாந்தரும் தாமரைப்பூவும் கண்திறக்கவும், தமயந்தியின் ஆழ்ந்த துன்பத்தோடு அன்றிராக்காலம் நீங்கிற்று.

(வி - ரை) "அந்தணரென்போ றறவோர்" என்றபடி உலகத்திற் கற்றறிவு குலமேன்மை கருணை பொறை அடக்க முதலிய நற்குண நிறைந்தோர் யாரேனும் பூசரரென்று பெயர் பெறுவர். சுரர் தேவலோகத்திற் சிறந்திருக்கின்றபடி, பூசுரர் பூலோகத்திற் சிறந்தவரென் றுணர்க. அவர்கள் கைம்மலர் முகிழ்த்தல் சந்தியாவந்தனத்திற் சூரியநமஸ்காரம் செய்கையி லென்க. காசினி, இங்கே இடவாகுபெயராய் மக்களையுணர்த்திற்று. சூரியோதத்திற்றாமரை மலர்தே, கண்விழிப்பதாயிற்று. ஆழ்துயர் - வினைத்தொகை. பொழுது புலர்ந்தது என்பதைச் சூரியோதமாயிற்று எனக் கொள்ளலு மற்றொன்று. பொழுதும் விடிந்தது, தமயந்தியின் துன்பமும் கங்கிற்று என்று கொள்க. (க௨௫)

[கிழக்கு மலையில் சூரியன், சந்திரனொளி மழுங்கித் தோற்றினனெனல்.]

வில்லி கணையிழப்ப வெண்மதியஞ் சீரிழப்பத்
தொல்லை யிருள்கிழியத் தோன்றினான்—வல்லி
மணமாலை வேட்டிடுதோள் வாளரசர் முன்னே
குணவாயிற் செங்கதிரோன் குன்று.

(ப - ரை) வல்லி மணம் மாலை வேட்டிடு தோள் வாள் அரசர் முன்னே - பூங்கொடிபோன்ற (தமயந்தியின் சுயம்வரக்) கலியாண

மாலையை விரும்பிவந்துள்ள தோள்களுடைய வாளாயுத மேந்திய அரசர்களுக் கெதிரில், வில்லி கணை இழப்ப – கருப்பு வில்லாளியாகிய காமன் தன் மலரம்புகளை இழக்கவும், தொல்லை இருள் கிழிய–தமயந்திக்குத் துன்பகாரணமாகிய இருட்டு நீங்கவும், குணவாயில் குன்று - கிழக்கு மலையில், செம்மை கதிரோன் தோன்றினான்-சிவந்த கிரணங்களையுடைய சூரியன் உதயமானான்.

(க - ரை) தமயந்தியின் சுயம்வர மணமாலையை இச்சித்து வந்துகூடியிருந்த அரசர்களுக்குமுன்னே, கிழக்குமலையில் சூரியன் உதயமானான்.

(வி - ரை) சூரியோதயமானவுடனே காமனம்பும் தண்ணிலவும் காரிருளும் தலையெடாவாகையால் வில்லிகணையிழப்ப என்பது முதலியவற்றைக் கூறினார். கோமன்னர் பலரும் சுயம்வர மண்டபத்திற் கூடித் தமயந்தியின் மேலேயே நினைவாயிருந்தார்களாகையால், அவர்களகங்களுங் களித்தனவென்பார் வல்விமணமாலை வேட்டிடு தோள் வாளரசர் முன்னே என்றார். இவர்களுக்கும் தமயந்திக்குப்போலவே வில்லியும் மதியமும் இருளும்தந்ததுன்பம்தொலைந்ததென்பார் குணவாயிற் செங்கதிரோன் குன்று தோன்றினானென்றார். வில்லெடுத்தோனெல்லாம் வில்லியேயாயினும் அதில் வல்லவனே அப் பெயர் பெறுவான். இராமனைப்போன்ற வில்லியையும் மயக்க வல்ல வில்வலியுடையான் மன்மதனாகையால் அவனுக்கு வில்லியெனும் பெயர் பொருத்தமாயிங்கமைந்திருப்பது காண்க. (கஉசு)

[சுயம்வரத்துக்கென்று பேரிகை யடித்த ஏழுநாழு மானபின்பு, மன்னர் பலரும் வந்து மண்டபத்திற் கூடினாரேனல்.]

முறைசெறிந்த நாளேழு முற்றியபின் கொற்ற
வரைசெறிந்த தோண்மன்னர் வந்தார்—விரைசெறிந்த
மாலை துவள முடிதயங்க வால்வளையுங்
காலை முரசுங் கலந்து.

(ப - ரை) முரசு எறிந்த எழு நாளும் முற்றியபின்-(சுயம்வரத்துக்கென்று) பேரிகையடித்த ஏழுநாட்களு முடிந்தபிறகு, கொற்றம் வரை செறிந்த தோள் மன்னர் – வெற்றிமிகுந்த மலைபோலுந் தோள்களையுடைய அரசர். விரை செறிந்த மாலை துவள – வாசனை நிரம்பிய பூமாலைக ளசையவும், முடி தயங்க-தலைக் கவசங்கள் (கிரீடங்கள்) பளபளவென்று ஒளி வீசவும், வால் வளையும் காலை முரசும் - வெள்ளைச் சங்கோசையும் காலையிலடிபடும் பேரிகை ஒலியும், கலந்து வந்தார் ஒன்றோடொன்று சேர்ந்து முழங்க (சுயம்வர மண்டபத்திற்கு) வந்தார்கள்.

(க - ரை) சுயம்வரமென்று பேரிகை யடித்துக்கொண்டிருந்த ஏழு நாட்களுங் கழித்தபிறகு, மாலை களசையவும் முடிகள் சொலிக்கவும் மன்னர் வந்து மண்டபத்திற் கூடினார்கள்.

(வி - ரை) முரைசு=முரசு, மொழியிடைப் போலி - எதுகை நோக்கி அகரம் ஐகாரமாயிற் றெனினுமாம். துவள தயங்க என்பன வினைச்செவ்வெண். கலந்து என்பதற்குப் பின் முழங்க என்பதைச் சொல்லெச்சமாக வருவித்துக்கொள்க. வால்வளை-பண்புத்தொகை. வளையு முரசும் அவைகளின் ஒலிகளுக் காயினமையால் பொருளாகுபெயர்களாம். கலந்து என்னும் எச்சம் வந்தார் என்னும் வினைகொண்டு முடிந்தது. (கஉஎ)

[நளமகாராசன் வந்து சுயம்வர மண்டபத்தில் இருந்தானெனல்.]

மன்றலந்தார் மன்னர் நடுவணைய வந்திருந்தான்
கன்று குதட்டிய கார்நீல—முன்றிற்
குறுவிழிக்கு நேர்நாடன் கோதைபெருங்கண்ணின்
சிறுவிழிக்கு நோற்றிருந்த சேய்.

(ப - ரை) கன்று குதட்டிய கருமை நீலம் - கன்றுக்குட்டிகள் வாயிற்குதப்பியுமிழ்ந்த கருங்குவளை மலர்கள், முன்றில் குறுமை

விழிக்கும் நேர்மை நாடன் கோதை பெருமை கண்ணின் சிறுமை விழிக்கு - வாசல்களில் குறுகி விழித்து நோக்குந் தன்மையை யுடைய விதர்ப்ப நாட்டரசன் மகளாகிய தமயந்தியின் பெரிய கண்களினுடைய சிறிய பார்வையைப் பெறுவதற்கு நோற்றிருந்த செய்-தவஞ்செய்திருந்த அரசிளங்குமாரனாகிய நளன், வந்து மன்றல் அம் தார் மன்னர் நடுஅணைய இருந்தான்-(அச்சுயம் வர மண்டபத்துக்கு) வந்து, வாசனையும் அழகும் பொருந்திய மலர் மாலைகளை யணிந்த அரசர் நடுவில் நெருங்கி வீற்றிருந்தான்.

(க - ரை) சுயம்வர மண்டபத்தில் நளமகாராசன் வந்து, பல மன்னர்களுக்கும் இடையில் நெருங்கி வீற்றிருந்தான்.

(வி - ரை) கன்று என்பதை ஆனகன்று என்றும் ஆண்கன்று என்றும் வேறு பிரித்து விளம்புவாருமுளர். கன்றுகுதட்டியது நீல மொட்டுகளாகையால் சிறிது மலர்ந்து குறுமையாக விழித்தன வென்பதுாஎ மொன்று. நேர்நாடான் என்பதை நீர்நாடனென்றும் பாட மோதலாம். சுயம்வரமண்டபத்தில் தமயந்தியும் தன் கடைக் கண்பார்வையாலே நளனை நோக்குவாளென்பது தோன்ற கோதை பெருங்கண்ணின் சிறுவிழிக்கு என்று முணரத்தொகுத்தார்.(கஉஅ)

[மன்னர் பலரையுநளன் வசப்படுத்தித் தமயந்தி வந்து பந்தர்க்கீழ் நின்ற ளெனனல்.]

நித்திலத்தில் பொற்றோடு நீலமணித்தோடாக
மைத்தடங்கண் செல்ல வயமேவந்தர்—சித்த
மருங்கே வரவண்டின் பந்தர்க்கீழ் வந்தாள்
அருங்கேழ் மணிப்பூ ணணங்கு.

(ப - ரை) நித்திலத்தின் பொன் தோடு ஆக - தமயந்தியி னுடைய கெட்டிமுத்துப் பொற்குண்டலமானது நீலக்கல்லிழைத்த குண்டலமாக மாறும்படி, மை தடம் கண் செல்ல-(அவளுடைய)

மைதீட்டிய விசாலமான கண்கள் போக வயம் வேந்தர், சித்தம்வண்டின் மருங்கே வர-வெற்றிமிகுந்த அரசர்களுடைய மனங்கள் வண்டுகளைப்போல் அவள்பக்கத்தில் வர, அருமை கேழ் மணி பூண் அணங்கு - அருமையான நிறமுள்ள செங்கல் லிழைத்த நகைக ளணிந்தவளாகிய அவள், பந்தர் கீழ் வந்தாள்-(சுயம்வரமண்டப முகப்பி லிட்டிருந்த) பந்தலின்கீழ் வந்தாள்.

(க - ரை) தமயந்தி, தன் கருமைக் கண்பார்வையால் வெண்முத்துத்தோடு கருங்குவளை போலத் தோன்றும்படி சுயம்வர மண்டபப் பந்தர்க்கீழ் வந்தாள். அதில், மொய்க்கும் வண்டுகள்போல மன்னர் மனங்கள் அவள் பக்கத்தில் வந்தன.

(வி - ரை) தமயந்தியின் மைத்தடங்கண் பார்வையால், மன்னர் பலரும் அணிந்திருந்த முத்துக்குண்டலங்கள்நீலநிறமாகமாறின என்பார் கூற்று புகழேந்தியர் கருத்துக்குக் கூற்முயினமைகாண்க. பந்தர்க்கீழ் வந்தவளுடைய கருமைக் கண்பார்வை அத்தனை விரைவில் மண்டபத்துக்குள்ளிருந்த மன்னர்நிலக் குண்டலங்களை எப்படிக் கருநிறமாக்கக்கூடும் என்று உய்த்துணர்க. இவளுடைய நித்திலக் காதணியே கருமைநிறமாகும்படிஇவளுடைய மைத்தடங்கண் பார்வைசெல்ல, அதனுல் அதை யொரு கருங்குவளையென மன்னர் மனவண்டுகள் மண்டபத்திலிருந்து வெளியே வர, இவள் பந்தர்க்கீழ் வந்தாள் என்று கூட்டி முடித்துக்கொள்க. பந்தர்க்கீழ் வந்து நின்றவுடனே அத்தனை விரைவாக எந்த மங்கையும் மண்டபத்துக்குள் பார்வையைச் செலுத்தாள். பந்தர்-பந்தல், கடைப்போலி. ()

[மண்டபத்துக்குத் தோழியர் கோணர்ந்த தமயந்தியை, மன்னர் பலரும் கூர்ந்து பார்த்தன ரேனல்.]

பேதை மடமயிலேச் சூழும் பிணைமான்போற்
கோதை மடமானைக் கொண்டணைந்த—மாதர்
மருங்கின் வெளிவழியே மன்னவர்கண் புக்கு
நெருங்கினவே மேன்மே னிறைந்து.

(ப - ரை) பேதை மடம் மயிலை சூழும் பிணை மான்போல்-கவடற்றஅழகான மயிலைச் சூழ்ந்திருக்கின்ற பெண்மான்களைப்போல, கோதை மடம் மானை கொண்டு அணைந்த மாதர் மருங்கின் வெளி வழியே-மாலையணிந்த இளமான்போன்ற தமயந்தியை அழைத்துக் கொண்டு வந்த தோழிப் பெண்களின் இடை வெளியின் வழியாக, மன்னவர் கண் புக்கு-அரசர் கண்கள் நுழைந்து, மேல்மேல் நிறைந்து நெருங்கின — ஒருவர் பார்வைக்குமேல் மற்றொருவர் பார்வையாக நிரம்பிக்கூடின.

(க - ரை) மயிலைச் சூழ்ந்த பெண்மான்களைப்போலத் தமயந்தியைக் கூட்டிக் கொண்டுவந்த தோழிப்பெண்களின் இடைவெளி வழியே மன்னர் பலரும் தமயந்தியைப் பார்த்தபடியே இருந்தார்கள்.

(வி - ரை) பேதை- கள்ளங்கவடின்மை. மடம்=அழகு, அல்லது இளமை யெனினுமாம். பிணைமான் - ஆண்மான். கோதை-சுயம்வரமாலை யென்பாரு முளர் - மாதர்க்கு இடைகள் நுண்ணியவாகையால், அவைகளுக் கிடைவெளிவழியாக மன்னர் பலரும் தமயந்தியின் அழகைக் கூர்ந்து பார்த்தன ரென்றபடியாம். அவர்கள் ஒருவரை ஒருவர் முந்திக் கொள்ளும்படி அதி ஆவலாய் நோக்கினு ரென்பார் மன்னவர் கண்புக்கு மேன்மே னிறைந்து நெருங்கின, என்றார். ஏகாரம் அசைநிலை. (கஉ0)

[வெண்சிறையன்னம் செங்கமல வாவியிற் சேர்வதுபோலத் தமயந்தி சுயம்வரமண்டபத்தில் நுழைந்தா ளெனல்.]

மன்னர் விழித்தா மரைபூத்த மண்டபத்தே
பொன்னின் மடப்பாவை போய்ப்புக்காள்—மின்னிறத்துச்
செய்யதாள் வெள்ளைச் சிறையன்னஞ் செங்கமலப்
பொய்கைவாய்ப் போவதே போன்று.

(ப - ரை) மின் நிறத்து செய்ய தாள் வெள்ளை சிறை அன்னம் - மின்னலி னிறம்போல (ஒளி வீசும்) சிவந்த கால்களையும்

வெளுத்த சிறகுகளையுமுடைய அன்னப்பறவை (ஒன்று), செம்மை கமலம் பொய்கைவாய் போவது போன்று-செந்தாமரைத்தடாகத்திற் போவதுபோல, பொன்னின் மடம்பாவை - திருமகள்போன்ற அழகினையுடைய தமயந்தி,மன்னர் விழி தாமரை பூத்த மண்டபத்து அரசர்களுடைய கண்களாகிய தாமரை மலர்கள் மலர்ந்துள்ள (சுயம்வர) மண்டபத்தில், போய் புக்காள் - போய் நுழைந்தாள்.

(க - ரை) செங்கால் வெண்சிறை யன்னம் செங்கமல வாவியிற் சேர்வதுபோல மன்னர் விழித்தாமரை பூத்த மண்டபத்தில், தமயந்தி போய் நுழைந்தாள்.

(வி - ரை) அன்னம் தமயந்திக்கும், பூத்தசெங்கமலம் மன்னர் கண்களுக்கும், மண்டபம் பொய்கைக்கும் ஏகதேச வுருவகங்களாம். விழித்தாமரை-இருபெயரொட்டு-தாமரைவிழி-உவமைத்தொகை. விழித்தாமரை-இலக்கணப்போலி. பொன்னின்-ஐந்தனுருப்புப் பொருளது. மடம், இளமை எனினுமாம். திருமகளை அழகுக்கிணையாக்குதலே மரபு. அன்றி இளமைக்கிணையாக்குதல் இயைந்தன்று. மின்னிறம் என்றாரேனும் அதனொளி நிறமே இங்குவமையாவது காண்க. போன்று, மேல்அடியாகப்பிறந்த வினையெச்சம், புக்காள் என்னும் வினைகொண்டுமுடிந்தது. தொல்காப்பியப் பொருளதிகார வுவமவியலைக்காண்க. ஏகாரம் இரண்டும் அசைநிலைகள்; பின்னையதைப் பிரிநிலை யென்பாருமுளர். (கஙக)

[தமயந்தியின் கட்கடைகள் யார்மேற் செல்லுமோ வென்று மன்மதனெதிர்நோக்கி நின்றானெனல்.]

வடங்கொள் வனமுலையாள் வார்குழைமே லோடும்
நெடுங்கட் கடைபார்த்து நின்றான்—இடங்கண்டு
பூவாளி வேந்தன்றன் பொன்னாவம் பின்னேயிட்
டேவாளி நாணின்மே லிட்டு.

(ப - ரை) பூவாளி வேந்தன் தன் பொன் ஆவம் பின்னே இட்டு - மலரம்புகளையுடைய மன்மதராசன் தன்னுடைய அழகான

அம்பறாத்தூணியை முதுகிற் கட்டி, ஏவாளி நாணின்மேல் இட்டு - அம்புராசிகளை (விற்) கயிற்றின் மேல் வைத்து, இடம் கண்டு-தக்க இடத்தைத் தெரிந்துகொண்டு (அங்கிருந் தசையாமல்), வடம் கொள் வனம் முலையாள்வார் குழைமேல் ஓடும் நெடுமை கண் கடை பார்த்து நின்றான் - முத்துமாலை யணிந்த அழகான முலைகளை யுடைய தமயந்தியின் நீண்ட காதுகளின்மேற் பாயும் விசாலமான கண்களின் கடைகளை எதிர்நோக்கி நின்றான்.

(க - ரை) மன்மதராசன் தன் அம்பறாத்தூணியை முதுகின் மாட்டி, மலரம்புகளை வில்லிற் பூட்டித் தமயந்தியின் கட்கடை, யார் மேற் செல்லுமோ என்று எதிர்பார்த்துத்தக்க இடத்திற் பொருந்தி யிருந்தான்.

(வி - ரை) வார்குழல்மேலோடும் நெடுங்கண் என்ற பாட மோதுவாரு முளர்-கூந்தலின்மேற் கண் பாய்தல் மரபன்று. குழை யென்பது ஆகுபெயராய்க்காதை உணர்த்திற்று. கட்கடை, கடைக் கண் - இலக்கணப்போலி. அவளுடைய தயவை எதிர் பார்த்திரு ந்தா னெனினுமாம். இப்படிப்பட்ட அழகான அங்கனையா ளென் னும் சேனபலம் இல்லையேல் மன்மதராசன் ஆட்சி நடவா தென்ப தனால், தன் சேனபதியாகிய தமயந்தியின் கடைக்கண்ணருளை யெதிர்நோக்கி நின்றான் காமராசனென்று ரென்க. (கஙஉ)

[சரசுவதிக்குச் சமானமான சேடியோருத்தி, மன்னர் பலரை யும் தமயந்திக்குக் காட்டினளெனல்]

மன்னர் குலமும் பெயரும் வள்ளநாடும்
இன்ன பரிசென் றியலணங்கு—முன்னின்று
தார்வேந்தன் பெற்ற தனிக்கொடிக்குக் காட்டினாள்
தேர்வேந்தர் தம்மைத் தெரிந்து.

(ப - ரை) இயல்அணங்கு-சரசுவதிக்குச் சமானமான கல்வி யறிவில் மிக்க சேடியொருத்தி, தார்வேந்தன் பெற்ற தனி கொடிக்கு முன்நின்று-வெற்றிமாலை யணிந்த வீமராசன் பெற்ற ஒப்பற்ற பூங்கொடி போல்பவளாகிய தமயந்திக்குச் சற்று முன்னே நின்று கொண்டு, மன்னர் குலமும் பெயரும் வளம் நாடும் - (அவ்) வரசர்களுடைய பரம்பரைகளும் (புகழோடுகூடிய) பெயர்களும் தேசங்களும், இன்ன பரிசு என்று காட்டினுள் - இத்தன்மையன வென்று சொல்லிக் காட்டினுள்.

(க - ரை) அங்கு வந்திருந்தமன்னர் குலமுறையை முன்னமே தெரிந்துகொண்ட சேடியொருத்தி, தமயந்திக்கு முன்னின்று சொல்லிக்காட்டினுள்.

(வி-ரை) இயலணங்கு-உவமை யாகுபெயராய்ச் சேடியைக் குறித்தது. இது சரசுவதியையே குறித்ததென்பது ஒவ்வாதென்க. கொடியும் பாவைபோல அவ் வாகுபெயரேயாம். குலமுறையைச் சொல்லி ஒவ்வொருவரையுங் காட்டித் தெரிவித்தாளென்று கூட்டுக. (கரு)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் சோழமன்னர்" என்று காட்டினு ளெனல்]

பொன்னியமுதப் புதுக்கொழுந்து பூங்கமுகின்
சென்னி தடவுந் திருநாடான்—பொன்னிற்
சுணங்கவிழ்ந்த பூண்முலையாய் சூழமரிற் றுன்னார்
கணங்கவிழ்ந்த வேலனிவன் காண்.

(ப - ரை) பொன்னின் சுணங்கு அவிழ்ந்த பூண் முலையாய்-பொன்னிறம் போலத் தேமல் படர்ந்து நகைக ளணிந்து (அழகாய் விளங்கும்)முலைகளையுடைய அரசிளங்குமாரியே!, சூழ் அமரில் துன்ஞர் கணம் கவிழ்ந்த வேலன் இவன்-நெருங்கிச் செய்யும் சண்டை

யிற் பகைவர் கூட்டம் அழிந்தொழிவதற்குத் துணைக் கருவியாகிய வேலேந்திய இவ்வரசன், பொன்னி புதுமை அமுதம் கொழுந்து-காவேறியாற்றின் புதுவெள்ளத்துளிகள், பூ கமுகின் சென்னி தடவும் திரு நாடன் காண்-பூத்த பாளைகளையுடைய பாக்குமரங்களின் உச்சியைத் தொடுகின்ற வளமுள்ள சோழநாட்டையுடையவன் (நீ) காண்பாயாக.

(கூ - ரை) "சுணங்கவிழ்ந்த தனங்களையுடைய தமயந்தி! இந்நின்ற இவர் காவேரி பாயும் சோழநாட்டரசர். நீ காண்பாயாக" என்றாள் சேடி.

(வி - ரை) பொன்னியென்பது காவேரியாற்றின் பல பெயர்களிலொன்று. அமுதம் ஆகுபெயராய் வெள்ளத்தைக் குறித்தது. கொழுந்து என்பது அலைத்துளிகள். பூங்கமுகு என்பதற்கு அழகான பாக்குமரம் எனினுமாம். பொன்னின் - ஐந்தனுருப்புப் பொருட்டு. அவிழ் பூண்முலை-வினைத்தொகை, பெயரெச்சமாக விரித்து வந்தது. சூழமர்-வினைத்தொகை. தன்னூர், ஆராய் என்புழிப் போல வினையாலணையும் பெயர்-காரணப்பொருட்டு.கவிழ்ந்த-முதுகுகாட்டி எனினுமாம். இவன் சூழமரிற்றன்னூர்கணங்கவிழ்ந்த வேலனாகிய பொன்னியமுதின் புதுக்கொழுந்து பூங்கமுகின் சென்னிதடவுந் திருநாடன் என்று முடிப்பதும் ஒன்று காண், என்பதை அசைநிலையாகத் தள்ளுநருமுளர். இவன் - எழுவாய், நாடன் - பயனிலை நீ-எழுவாய், காண்-பயனிலை. முதலில் நாணத்தால் முகங்கவிழ்ந்திருந்தவளைத்தேற்றி நீ காண் என்று னென்பதே இயைந்ததாம். இது போலவே அடுத்தசெய்யுளில் வரூஉம் 'கேள்' என்பதைஇயும் அதற்கடுத்தடுத்து வரூஉம் செய்யுட்களிலுள்ள 'கண்டாய்' என்பதைஇயும் உய்த்துணர்ந்துகொள்க, காவேரி நீர் பாக்குமத்துச் சியைத் தீண்டுமத்தனை உயரத்திற் பாயுமென்பதனால் சோணாட்டு நீர்வளநிலவளங்களின் சிறப்பைக் கூறியபடியாம். இது முதல் பதினாறு செய்யுட்களும் அரசர்குலமுறையைக் கூறுமாறு காண்க. (கூஉ)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் பாண்டிநாட்டரசர்" என்று காட்டினு ளெனல்.]

போர்வாய் வடிவேலாற் போழப் படாதோருஞ்
சூர்வாய் மதரரிக்கட் டோகாய்கேள்—பார்வாய்ப்
பருத்ததோர்மால்வரையைப் பண்டொருகாற்செண்டால்
திரித்தகோ இங்கிருந்த சேய்.

(ப - ரை) போர்வாய் வடிவேலால் போழப் படாதோரும் - சண்டை முகத்திற் கூரிய வேலினாற் பிளவுபட்டுப் பின்னிடையாத வீரரும், சூர் வாய் மதர் அரி கண் தோகாய்-அஞ்சுதலைக் கொள்ளும் மதர்த்த இரேகைகள் படர்ந்த கண்களையுடைய மயிலனையாய்!, கேள் - நான் சொல்வதைக் கேட்பாயாக; இங்கிருந்த சேய்-இதோ இங்கு வீற்றிருக்கும் இக் குமரன், பார்வாய் பண்டு ஒருகால்-இந்தப் பூமியில் முன்னொருகாலத்தில், பருத்தது ஓர் மால்வரையை - பருத்து ஒப்புயர்வற்றதாய் நீண்ட மேருமலையை, செண்டால் திரித்த கோ - பந்தாற் சுழற்றிய அரசனாவான்.

(கு - ரை) "ஏ, வீரரையு மயக்கு மதாரிக்கண் மாதரசி! இந் நின்ற இவர் மகமேரு மலையைத் தங் கைச் செண்டாற் சுழற்றிய பாண்டிநாட்டரசர்." இதை நீ கேட்பாயாக. என்றாள் சேடி.

(வி - ரை) போர்வாய் - ஏழன்விரி. மதர்கண் - வினைத் தொகை - மதர்த்த - செழித்த அல்லது அழகான எனினுமாம். வடிவேல்-பண்புத்தொகை; வினைத்தொகையாயின் வடித்தவேலெனக் கொள்க. சூர் - அஞ்சுதல், அல்லது மயங்குதல் எனினுமாம். வாய்கண் எனக் கூட்டி வினைத்தொகையாக்கொள்க-வாய்ந்த கண் என்பது பெயரெச்சவிரிதோகாய், விளி - தோகைபோன்றவளைத் தோகை யென்றது ஆகுபெயர். மேலைச்செய்யுளிற்காண் என்றது போலவே இச்செய்யுளிலும் கேள் என்றதைக் கண்டுதெளிக. இளைமை வனப்பு முதலிய வளமை அல்லது செம்மையிற் சிறந்தவனைச்

சேய் என்ற காரணப்பெயர் சுப்பிரமணியர்க்குக் காரண இடுகுறியாம் இதனை இவற்கு உவமவாகுபெய ரெனினு மாம். பாண்டிநாட்டுப் பஞ்சந்தீச் சோமசுந்தரக் கடவுளின் கட்டளைப்படி புதையலெடுக்க வுக்கிரபாண்டியன் மேருவைச் செண்டா லடித்தமையே இங்குக் குறித்திருக்கின்றது. இதைத் திருவிளையாடற் புராணத்திற் காண்க. (கரு௫)

[தமயந்திக்குச்சேடி,"இவர்தாம் சேரவேந்தர்" என்றுகாட்டிளைனல்.]

வென்றி நிலமடந்தை மென்முலைமேல் வெண்டுகில்போற்
குன்றருவி பாயுங் குடநாட—னின்றபுகழ்
மாதே யிவன்கண்டாய் மானத் தனிக்கொடியின்
மீதே!சிலையுயர்த்த வேந்து.

(ப - ரை) நின்றபுகழ் மாதே - நிலைபெற்ற புகழையுடைய பெண்ணரசி!,இவன் - இவ்வரசன், வென்றி நிலம் மடந்தை மென்மை முலைமேல் வெண்மை துகில் போல் - பொறுமையில் வெற்றி மிகுந்த பூமாதேவியின் மென்மையாகிய முலைமேலுள்ள வெண்மையாகிய ஆடைபோல, குன்று அருவிபாயும் குடநாடன் - மலை யருவி பாய்கின்ற மேனாட்டரசனாகிய, மானம் தனி கொடியின் மீது சிலை உயர்த்த வேந்து - ஆகாயமளாவி ஒப்பற்று விளங்குங் கொடியின் மேல் விற்குறி யேற்றிய சேர மன்னனாவான்.

(க - ரை) "ஏ நிலையான புகழையுடைய நேரிழாய்! இங்கின்ற இவர், தமது நீண்ட கொடியன்மேற் குறியேற்றி விளங்கும் சேர மன்னராவார்" என்றாள் சேடி.

(வி - ரை) நிலமடந்தைக்கு வென்றியாவது, பொறுமையிற் சிறந்திருப்பது. நில + மடந்தை=நிலத்துக்கு அதிதேவதையாகிய பெண். குன்றருவி - ஐந்தனீங்கற்பொருள், குன்றினின் றருவி யென்று விரியும். குடக்கு - மேற்கு. குடநாடு - மேனாடு-மலைநாடு

மலையாளம். நின்ற புகழ் - "நின்ற சீர் நெடுமாறர் என்பதனாலுங் காண்க. இவன் குடநாடனாகிய வேந்து என முடித்துக்கொள்க. அன்றி, இவன் மானத்தனிக்கொடியின் மீதே சிலையுயர்த்தவேந்தாகிய குடநாடன் எனினுமாம். குடநாடன் வேந்து, வேந்து குடநாடன் இரு பெயரொட்டுகள். சேரமன்னர்க் கொடிக்குறி வில்லுருவம் ஆகையால் 'மானத்தனிக்கொடியின் மீதே சிலையுயர்த்தவேந்து என்றார் வில்லின் உருவத்தை வில்லென்றது ஆகுபெயர். சேரன் கொடியில் வில்லுருவம் தீட்டியிருக்கும். மீதேயென்பதில் ஏகாரம் அசை. கண்டாய் என்பதும் அசை. ஆயினும், பார்த்தாயா என்று பொருள் கூறினுமாம். ((கங. சு)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் யதுகுல மன்னர்" என்று காட்டினளெனல்.]

ஆழிவடி யம்பலம்ப நின்றானு மன்றொருகால்
ஏழிசைநூற் சங்கத் திருந்தானும்—நீள்விசும்பில்
நற்றேவர் தூது நடந்தானும் பாரதப்போர்
செற்றானுங் கண்டாயிச் சேய்.

(ப - ரை) ஆழி வடி அம்பு அலம்ப நின்றான் உம் - கடலிற் கூரிய அம்பைக் கழுவும்படி நின்ற புகழை உடையவனும், அன்று ஒருகால் ஏழ் இசை நூல் சங்கத்து இருந்தான் உம் - முன்னொரு காலத்தில் ஏழுவித சுரங்களைப்பற்றியநூலில் வல்லவர் கூடிய சபையில் தலைவனாயிருந்த புகழை உடையவனும், நீள் விசும்பில் நன்மை தேவர் தூது நடந்தானும் - அகன்ற தேவலோகத்திலுள்ள நற்குணம் பொருந்திய இந்திரன் முதலிய தேவர்களின் (அமிசமாக அவதரித்த பாண்டவர்) தூதனாக நடந்த புகழை உடையவனும், பாரதம் போர் செற்றானும் இசெய் - பாரதச்சண்டையிற் பகைவரை அழித்த புகழை உடையவனும் இவ்வரசிளங் குமரனே யாவன்.

(க - ரை) "ஏ அரசிளம்பாவாய்! இந்நின்ற இவர், தமது கூரிய அம்பைக் கடலிலலம்பியும், இசைநூற்புலவர் சபைத்தலைமை வகி

த்தும், பாண்டவர்க்குத் தூது சென்றும், பாரதப்போர் வென்றும் புகழ்பூண்டயதுகுல வேந்தராவர். இவரை நீ கண்டாயா?'' என்றான் சேடி.

(வி - ரை) இங்கும் கண்டாய் என்பதை அசையாக அகற்றுவதினும் பார்த்தாயாவென்று பொருள்கொள்வதே பான்மையாமெனக. நின்றான், இருந்தான், நடந்தான், சென்றான் முதலிய வினைப்பெயர்களுக்குச் சேய் என்பதைப் பெயர்ப்பயனிலையாக் கொள்வதுமன்றி, இச்சேய் நின்றான், இருந்தான், நடந்தான், சென்றானும் ஆவான் என்று கொள்ளினு மமையும். யது வமிசத்திற்றோன்றிய கார்த்தவீரியன், தான் சிறைபிடித்த இராவணனை மீட்க வந்த அரக்கரைக் கொன்று வென்று தன் ஆயுதங்களைக் கடலிற்கழுவினமையே இங்குக் குறித்திருக்கின்றது. அன்றியும்அவனே நாரத கந்தர்வஇசைவாதத் தலைவனுகயிருந்தமையும்,பிறகு அவ்வமிசத்திற்றோன்றிய கண்ணபிரான் ஐவர் தூதனனமையும், பாரதப்போர் வென்றமையும் குறித்திருப்பதைக் கண்டு தெளிக. ஆழி வடிம்பலம்ப நின்றானும் என்று பாடமோதிப்பத்துப்பாட்டுமதுரைக்காஞ்சி வடிம்பலம்ப நின்ற பாண்டியனென்று வழிகாட்டுவாருமுளர். ()

[தமயந்திக்குச் சேடி, “இவர்தாம் குருகுல மன்னர்'' என்று காட்டினு ளெனல்.]

தெரியி லிவன்கண்டாய் செங்கழுநீர் மொட்டை
அரவின் பசுந்தலை யென்றஞ்சி—யிரவெல்லாம்
பிள்ளைக் குருகிரங்கப் பேடைப்புட் டாலாட்டும்
வள்ளைக் குருநாடர் மன்

(ப — ரை) தெரியில் இவன் - நீ தெரிந்துகொள்ள வேண்டினல், இவ்வரசன்; செம்மை கழுநீர் மொட்டை - செங்கழுநீர் அரும்பை, அரவின் பசுமை தலை என்று அஞ்சி - பாம்பின் பசுமையாகிய தலை யென்றெண்ணிப் பயந்து, பிள்ளைக் குருகு இரங்க - நாரைக் குஞ்சு வருந்த, பேதை புள் இரவு எல்லாம் தாலாட்டும் -

பெண்ணுரையானது இரா முழுவதும் தாலாட்டிக் கொண்டிருக்கும், வள்ளை குரு நாடர் மன் - வளப்பமுடைய குருநாட்டார்க்கரசனுவான்.

(க - ரை) "ஏ, கமல மலர் வதனீ! இங்நின்ற இவர், செங்கழு நீர் மொட்டைப் பாம்பென்று பயந்தழும் தன் குஞ்சைப் பெண்ணுரை யிரவெல்லாந் தாலாட்டித் தேற்றும் நீர் வள முள்ள குரு நாட்டரச ராவார். இவரையும் நீ காண்டாயா?" என்ருள் சேடி.

(வி - ரை) இங்கேயும் கண்டா யென்பதை முன்னிலையசை யாக்கித் தள்ளுவதினும் பார்த்தாயா வென்று பொருள்கொள்வதே பான்மையாமென்க - தெரியிலிவன் குருநாடர் மன், நீ கண்டாய்? என்று கூட்டிக் கொள்க. பிள்ளைக் குருகு - குருகுப் பிள்ளை- இலக்கணப் போலி ; பிள்ளையாகிய குருகு - பண்புத் தொகை. பிள்ளை இளமையைக் குறிப்பதால் குஞ்சு என்ரும் - பிள்ளைபோற் பேச்சினுளை என்ருர் கம்பரும். பிள்ளை யென்பது கிளிப்பிள்ளையுமாம்; ஆயினும் குருகு என்றதனுல் அன்றிற்கும் நாரைக்கும்பொதுவாயினும், நீர் வாழ் பறவையாகிய நாரை யென்று கொண்டாம். குருகு என்பதைப் பறவைப் பொதுவாக்குநரு முளர். இங்கது பொருந்தாது. வள்ளை யென்பதுவள்ளைக் கொடியென்பதுவாயாது; வண்மை + ஐ = வள்ளை யென்பதே வாய்ந்ததாம்-நீர் வளப்பம் என்பது பொருள். வள்ளைப் பாட்டென்று உலக்கைப் பாட்டிற்கும் பெயர். இங்கது உதவாது. இவன் - எழுவாய், மன் - பெயர்ப் பயனிலை. (கரு அ)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் மத்திரமன்னர்" என்று காட்டினு ளெனல்.]

தேமருதார்க் காளையிவன் கண்டாய் செம்மலர்மேற்
காமருசெங் கீன்ற கதிர்முத்தைத்—தாமரைதன்
பத்திரத்தா லேற்கும் படுகர்ப் பழனஞ்சூழ்
மத்திரத்தார் கோமான் மகன்.

(ப - ரை) தேன் மருதார் காளை இவன் - தேன் தங்கிய மலர்மாலை யணிந்த இளையானாகிய இவ்வரசன், செம்மை மலர் மேல்காமருசங்கு ஈன்ற முத்தை-செந்தாமரை மலர்மேல் அழகான சங்குகள் பெற்ற ஒளியுற்ற முத்தங்களை, தாமரை தன் பத்திரத் தால் ஏற்கும் படுகர் பழனம் சூழ் - தாமரைக் கொடியானது தன் இலைக்கையில் ஏந்திக் கொள்ளுகின்ற வெள்ள நிறைந்த பள்ளத் தாக்கான வயல்கள் சூழ்ந்த, மத்திரத்தார் கோமான் மகன் - மத் திர தேசத்தாருடைய அரசன் பிள்ளை.

(க - ரை) "ஏ கட்கமலவல்லீ! இங்கின்ற இவர், செந் தாமரை மலரிற் சங்கீன்ற முத்துப் பிள்ளையைத் தாமரைக் கொடி தன் இலைக்கையாலேந்தும் வயல்வளஞ் சூழ்ந்த மத்திர தேசத்து இளவரசராவார்" என்றாள் சேடி.

(வி - ரை) தேன் + மரு = தேமரு - வருமொழி முதலில் மகரம் வந்தால் தேன் என்பது தேஎன்றாயிற்று; தேமரு - தேன் பொருந்திய. காளை-உவம வாகுபெயராய் இளவரசனைக் குறித்தது. இங்கேயும் கண்டாய் என்பது பார்த்தாயா என்னும் பொருட் டென்று கொள்வதே தகுதியாம். பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை என்றதனால் செம்மலர் என்றதைத் தாமரை மலர் என் றாம். காமம் + மரு = காமரு - ஆசைப் படுகின்ற என்பது பொரு ளாயினும் தாமரைபுரையும் காமரு சேவடி என்பதில் தாமரையைப் போன்ற அழகான சேவடி யென்றே பொருள் கொள்ளு மாற்றால் அழகான என்று பொருள் விரித்தாம்; அழகான பொருளையே அனைவரும் விரும்புவ தியற்கை ஆகையால் காமரு என்பதற்கு அழ கான என்பதே முதற் பொருளாகும்; காமரு என்பதை முத்தென் பதனோடு கூட்டுவாரு முளர். தாமரை என்றதனாலே படுகர் என்ற தற்கு வெள்ள நிறைந்த பள்ள மென்று பொருள் விரித்த தாம். (கரு௧)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் மச்ச தேசாதிபதி" என்று காட்டினுளெனல்.]

அஞ்சாயன் மானே இவன்கண்டா யாலைவாய்
வெஞ்சாறு பாய விளைந்தெழுந்த—செஞ்சாலிப்
பச்சைத்தாண் மேதிக் கடைவாயிற் பாலொழுகும்
மச்சத்தார் கோமான் மகன்.

(ப-ரை) அம்சாயல் மானே-அழகான சாயலையுடைய அரசிளங் குமரியே!, இவன் - இவ்வரசன், ஆலை வால் வெம் சாறு-பாய ஆலையிற் பிறந்து யார்க்கும் விருப்பத்தைத் தருகின்ற கருப்பஞ்சாறுபாய் வதனுல், விளைந்து எழுந்த செம்மை சாலி பசுமை தாள் பால் - வளர்ந் தோங்கிய செந்நெற் பயிர்களுடைய பச்சைத் தாள்களின் பாலானது, மேதி கடைவாயின் ஒழுகும் - எருமை களுடைய கடைவாய்களினின்றொழுகின்ற, மச்சத்தார் கோமான் மகன் - மச்சநாட்டாருடைய அரசன் மகன், கண்டாய்-நீ பார்த்தாயா?

(க - ரை) "ஏ கமலமலர்ப் பதத்துக் கன்னீ! இந்நின்ற இவர், கருப்பஞ்சாறு பாய்ந்து விளையும் நெற்பயிர்த்தாளின் பால், எருமைக்கடைவாயி லொழுகும் வளமுடைய மச்ச தேசாதிபதியின் மைந்தராவார்" என்ருள் சேடி.

(வி - ரை) இங்கேயும் கண்டாயென்பதை அசையாகஅகற்று நருமுள்ர். சாயல், மயில்போலும் சாயல்-உயர்குணங் குலநலம்அழகு பார்வை கற்பு முதலிய உத்தம குணங்களின் குறிப்புகள் விளங்கும் தோற்றம். மான்போன்ற வளைமான் என்றது ஆகுபெயர். வெம் + சாறு=வெஞ்சாறு-தித்திப்பாய் யாரும் விரும் புஞ்சாறு-ஆலையெ ன்றகுறிப்பால் கருப்பஞ் சாற்றுக் காயிற்று. விளைந்து எழுந்த - எழுந்துவிளைந்த, கடைவாய்-வாய்க்கடை, இலக்கணப்போலிகள். பச்சைத்தாளின்பால் மேதிக்கடைவாயினின் றொழுகுதல், அதை பச்சைத்தாளிலிருந்துவரும் பால் மேதிக்கடைவாயில் ஒழுகும் என்பார்

கூற்று அசம்பாவித மென்க; எருமைகளின் மடிகளிலிருந்து ஒழுகுவதேயன்றி யவைகளின் வாய்க்கடைகளினின்றும் பால் ஒழுகுவதென்று அதிசயவணியாகக் கூறி அந்நாட்டு வளத்தை விளக்கினமை காண்க. (கசு0)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் அவந்திநாட்டரசர்" என்று காட்டினு ளெனல்,]

வண்ணக் குவளை மலர்வெளவி வண்டெடுத்த
பண்ணிற் செவிவைத்துப் பைங்குவளை—யுண்ணு
தருங்கா நிற்கு மவந்திநா டாளு
மிருங்கடா யானை யிவன்.

(ப - ரை) இவன்-இவ்வரசன், அருமை கடா வண்ணம் குவளை மலர் வெளவி-அருமையாகிய எருமைக்கடாக்கள் அழகான நீலோற்பல மலரைப்பற்றி, வண்டு எடுத்த பண்ணில் செவி வைத்து-வண்டுகள் பாடத்தொடங்கிய கீதத்தில் காதைச்செலுத்தி, பசுமை குவளை உண்ணாது நிற்கும்-அந் நீல மலரை உண்ண மறந்து நிற்கின்ற, அவந்தி நாடு ஆளும் இரும் கடா யானை - அவந்தி நாட்டை யாளுகின்ற பெரிய மதம்பொழியும் யானையைப் போன்றவன்.

(க - ரை) "ஏ, பைந்தொடீ! இங்கின்ற இவர், குவளை மலரை வெளவிய எருமைக்கடாக்கள் அதனை மறந்து வண்டுகள் பாடும் பண்ணிற் செவிவைத்து நிற்கும் வளமுள்ள அவந்தி யரசராவார்" என்றாள் சேடி.

(வி - ரை) வண்ணம் குவளை-பண்புத்தொகை;வண்ணத்தை யுடைய குவளை யெனக் கொண்டு இரண்ட னுருபும்பயனு முடன் றொக்க தொகை யெனினுமாம். வெளவி - கௌவி ஒரு தொடர் பண்ணுக்கு எடுத்தல் படுத்தல் இரண்டும் அடுத்த தொழில்களாம். பண்-கீதம் என்பதனை கீத மினிய குயிலே என்னும் மணிவாசகத்தா னுமுணர்க செவிவைத்து-செவிசாய்த்து எனினுமாம். பண்ணின் வழிசெவியும்,செவியின் வழி மனமும், மனத்தின் வழிமெய்யும்சென்

றதனால், கடா தன்னை மறந்து அதனால் குவளையை உண்ண மறந்த தென்க. கடாவுங்கீதத்தில் மயங்கிற் றென்றால் அந்நாட்டு நீர்நில வளங்களின் நேர்மை வெளியாயினமை காண்க. கடா யானை என்ப தற்கு ஆண் யானை எனினுமாம். மதம் பொழியும் ஆண் யானை போன்ற அரசன் என்று அல்லாத மொழிதொக்கி வருவதால் கடா யானை யென்பது தேன்மொழி யென்புழிப் போல அன்மொழித் தொகையாம். (கசக)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் பாஞ்சாலமன்னர்" என்று காட்டினு ளெனல்.]

விடக்கதிர்வேற் காளை யிவன்கண்டாய் மீனின்
தொடக்கொழியப் போய்நிமிர்ந்த தூண்டில்-மடற்கமுகின்
செந்தோடு பீறித்தேன் செந்நெற் பசுந்தோட்டில்
வந்தோடு பாஞ்சாலர் மன்.

(ப - ரை) விடம் கதிர் வேல் காளை இவன் - விட மூட்டி ஒளியோடு விளங்குகின்ற வேலேந்திய இளங்குமாரனாகிய இம் மன்னன், மீனின் தொடக்கு போய் ஒழிய நிமிர்ந்த தூண்டில்-மீனைப் (பிடிக்கத் தன்னிடத்தில் மாட்டியிருந்த) இரையானது போய் விட்டதனால் மேலோங்கிக் கிளம்பின தூண்டிற் கோல், மடல் கமுகின் செம்மை தோடு பீறி - மடல்களோடு கூடிய பாக்கு மரத் தின் சிவந்த மலரிதழ்களைக் கிழிக்க, தேன் செம்மை நெல் பசுமை தோட்டில் வந்து ஓடும் பாஞ்சாலர் மன் - அம்மலர்த்தேன் செந் நெற் பயிர்களின் பசுமையாகிய இதழ்களில் வந்து பாயும் பாஞ் சால நாட்டாருடைய அரசன், கண்டாய் - நீ பார்த்தாயா?

(க - ரை) "ஏ, மயிலனையாய்! இந்நின்ற இவர், தன் முள்ளில் மாட்டியிருந்த இரை போய் விட்டதனால் சடுதியிற் கிளம்பிய தூண்டிற்கோல் தாக்கிப் பாக்குப் பாளைத் தேன் பயிரிதழ்களிற் பாயும் பாஞ்சால மன்னராவார்" என்றாள் சேடி.

(வி - ரை) விடம்+கதிர்+வேல் - நஞ்சூட்டியதும் ஒளி வீசு துமாகிய வேல் என்று கொள்க - கண்டா யென்பதை யிங்கும் அசை யென வொதுக்குநரு முளர். மீனின் தொடக்கு - மீனைப் பிடிப்பதற்காகத் தூண்டில் முள்ளிற் பொருந்திய நாங்கூழ் முதலிய இரை. இது போன குறிப்பை யிதவையா லுணர்ந்த தூண்டிற் காரன் சடுக்கென அதை மேலோச்சி யெடுக்கையில் அது பாக்குப் பாளையிற் றாக்கித் தேனொழுகு மெனக் கொள்க. அந்தத் தேன் செந்நெற் பசுந்தோட்டிற் பாய்ந்தோடு மென்றதனால் நிலவள நீர் வளங்கள் குறித்தபடியாம். ஒழியப் போய் நிமிர்ந்த என்பதற்கு, தன் னிடத்திருந்து நீங்கியதனால் மிகவும் நிமிர்ந்த தூண்டில் என்பாரு முளர். (௧௪௨)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் கோசல நாட்டரசர்" என்று காட்டினு ளெனல் ]

அன்னந் துயிலெழுப்ப வந்தா மரைவயலிற்
செந்நெ லரிவார் சினையாமை—வன்முதுகிற்
கூனிரும்பு தீட்டுங் குலக்கோ சலநாடன்
தேனிருந்த சொல்லாயிச் சேய்

(ப - ரை) தேன் இருந்த சொல்லாய் - தேனின் இனிமை பொருந்திய சொல்லையுடைய அரசிளங்குமரியே!, இ சேய்-இவ்வர சிளங்குமரன், அன்னம் துயில் எழுப்ப - அன்னப்பறவையானது தம்மைத் தூக்கத்திலிருந் தெழுப்பியதால், அம் தாமரை வயலில் செம்மை நெல் அரிவார் - அழகான தாமரைகள் நிறைந்த கழனிக ளில் செந்நெற் பயிரை அறுக்கின்றவர்கள், சினை ஆமை வன்மை முதுகில்-கருவுற்றிருக்கும் ஆமையின் வலிவான முதுகோட்டில், கூன் இரும்பு தீட்டும் குலம் கோசலம் நாடன்-வளைவான அரிவாட் களைத்தீட்டுகின்ற(வளத்திற்)சிறந்த கோசலநாட்டை யாள் பவன்.

(க - ரை) "ஏ, தேன்மொழிப் பாவாய்! இங்நின்ற இவர், அன் னப்பறவையின் அரவத்தால் அரை யிரவில் தந்தூக்கத்தை விட்டெ

மூந்து அறுப்பறுக்கும் மள்ளர், ஆமை முதுகில் தம் அரிவாளைத் தீட்டும் வளமிக்க கோசல நாட்டரசராவார்'' என்றாள் சேடி.

(வி-ரை) அன்னத்தைத் துயிலெழுப்பவென்று இரண்டாம் வேற்றுமையில் விரிப்பாருமுளர். அரை யிரவில் எழுந்து அறுப்பறுக்கவேண்டுமென் றெண்ணி வயற்புறத்தில் உறங்குபவரை அன்னம் முதலிய பறவைகள் துயிலெழுப்புவது இன்றளவும் அனுபவமாவுள்ளது ஆகையால் அன்னத்தை மள்ளரெழுப்புதல் அசம்பாவிதமாம். இங்குத் தாமரை யென்றது அதன் கொடிக்காயிற்று. செந்நெல், கூனிரும்பு, வன்முதுகு முதலியன பண்புத்தொகைகள். தேன் அதன் சுவைக்காதலால் இடவாகுபெயர். கூன் இரும்பு-கூன் இரும்பாலாகிய அரிவாள் என்று பொருள் படுவதால் அன்மொழித் தொகை. (கஙஅ)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் மகத நாட்டரசர்'' என்று காட்டினளெனல்]

புண்டரிகந் தீயெரிவ போல்விரியப் பூம்புகைபோல்
வண்டிரியுந் தெண்ணீர் மகதயர்கோ—னெண்டிசையிற்
போர்வேந்தர் கண்டறியாப் பொன்னாவம்பின்னுடைய
தேர்வேந்தன் கண்டாயிச் சேய்.

(ப-ரை) இ சேய் - இவ் வரசிளங்குமரன், எண் திசையில் போர் வேந்தர் கண்டு அறியா - எட்டுத் திக்கிலுமுள்ள சண்டையிற் சிறந்த அரசர்களும் பார்த்திராத, பொன் ஆவம் பின் உடைய தேர் வேந்தன் - அழகான அம்பறுத் தூணியை முதுகிற் கட்டிய தேரூரும் அரசனான, புண்டரிகம் தீ எரிவ போல் விரிய - செந்தாமரை மலர்கள் நெருப் பெரிவது போல் மலர்ந்திருப்பதனால், பூ புகை போல் வண்டு இரியும் தெள் நீர் மகதயர் கோன் - அந்நெருப்பிற் கிளம்பும் அழகான புகையைப் போலக் கருவண்டுகள் பறந்தாடிக் கொண்டிருக்கும் தெளிந்த நீர்வளமுள்ள மகதநாட்டாருருடைய அரசன்.

(க - ரை) "ஏ கண்டு மொழிக் கண்ணே! இந்நின்ற இவர், தாமரை மலர்கள் தீ போல் எரிய, வண்டுகள் புகை போல் அவைகளிற் பறந்து கொண்டிருக்கும் வயல் வளஞ்சூழ் மகதநாட்டரசராவார்" என்றாள் சேடி.

(வி - ரை) புண்டரிகம் வெண்டாமரையையே குறிக்குமாயினும், 'தீ யெரிவ போல் விரிய' என்ற குறிப்பால் செந்தாமரைக்காயிற்று; சாதி ஒருமையால் இது செந்தாமரைக்கும் வழங்கி வருவது காண்க. புண்டரிகாட்ச னென்று செங்கண்மாலைச் செப்புவதுந் தெரிக. நெருப்புப் போலத் தாமரை எரிய அதிற் புகை போல வண்டு இரியுந் தெண்ணீர் மகதர் கோன் என்று கூட்டுக - இதனால் நீர்வளங் குறித்தபடியாம். இவ்வரசன் போரில் என்றும் முதுகாட்டான் என்பதனால் போர் வேந்தர் கண்டறியாப் பின்னுவம் பின்னுடையா னென்றார். இங்கும் கண்டா யென்பதை அசையாகத் தள்ளாமல் பார்த்தாய் என்று பொருள் கொள்ளினுமாம். (௧௫௭)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் அங்க நாட்டரசர்" என்று காட்டினளெனல்.]

கூன்சங்கின் பிள்ளை கொடிப்பவளக் கோடிடறித்
தேன்கழியில் வீழத் திரைக்கரத்தால்—வான்கடல்வந்
தந்தோ வெனவெடுக்கு மங்கநா டாளுடையான்
செந்தேன் மொழியாயிச் சேய்.

(ப - ரை) செம்மை தேன் மொழியாய் - செந்நிறத் தேன் போலும் இனிமையாகிய சொல்லையுடைய இளவரசியே, இ சேய் இவ்வரசிளங்குமரன், கூன் சங்கின் பிள்ளை - வளைந்த சங்குகளின் குட்டிகள், பவளம் கொடி கோடு இடறி - பவளக் கொடியின் கொம்பில் தடுக்கி, தேன் கழியில் வீழ - தேன்பாயும் கழியிலே விழுந்ததனால், வான்கடல் வந்து - பெரிய கடலானது நெருங்கிவந்து, அந்தோ என்ன - இரக்கம் உற்று, திரைகரத்தால் எடுக்கும் அங்கநாடு ஆளுடை

யான்-ஐயோ என்று வருந்தித் தன் அலைகளாகிய கைகளால் தழுவி எடுக்கின்ற அங்கதேசத்தை ஆள்கின்றவன்.

(க - ரை) "ஏ, பவளவாய்ப் பாவாய்! இங்கின்ற இவர் பவளக் கொம்பிடறிக் கழியில் விழுந்த சங்குக் குட்டியைக் கண்ட கடல், ஐயோ வென் றிரங்கி வந்து தன் அலைக் கையால் தழுவியெடுக்கும் அங்க தேசாதிபதி" என்றாள் சேடி

(வி - ரை) சங்கங்கள் வளர்ந்திருப்பதனால் கூன்சங் கென்றார். மீன் குஞ்சு என்பதுபோலச் சங்குக் குஞ்சு எனினுமாம். கொடிப் பவளம் - பவளக்கொடி - இலக்கணப் போலி, இருபெயரொட்டு. தேன் கழி- மலர் முதலியவைகளின் தேனொழுகிப்பாயுங் கழி. கடற் கரைக்கு அடுத்தபடியிலிருந்து அதன் கழிநீர் நிரம்பிநிற்பது, கழி காரணப்பெயர். 'கேட்குற போலவும்' என்னும் நன்னூற் சூத்திர விதியால் வான்கடல் வந்தந்தோவென வெடுக்கு மென்பதையுங் கொள்க. இதிலுள்ள அணியை உய்த்துணர்ந்து கொள்க. அங்க நாடு கடற்கரையுடைய தென்பது இதனால் விளங்குகின்றது. திரைக்கரம் - இருபெயரொட்டு. (கசரு)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் கலிங்கநாட்டரசர்" என்று காட்டினு ளெனல்.]

வெள்வாளைக் காளைமீன் மேதிக் குலமெழுப்பக்
கள்வார்ந்த தாமரையின் காடுழக்கிப்—புள்ளோடு
வண்டிரியச் செல்லு மணிநீர்க் கலிங்கர்கோன்
றண்டெரியற் றேர்வேந்தன் றான்.

(ப - ரை) தண்மை தெரியல் தேர் வேந்தன் (தான்)-குளிர் மலர் மாலையை அணிந்த தேரூரும் அரசனாகிய இவன், மேதி குலம் வெண்மை வாளை காளை மீன் எழுப்ப - எருமைக் கூட்டங்கள்(விழுந்து) வெண்ணிறவாளையிள மீன்களைக்கிளப்புவதனால் (அவைகள்),

கள் வார்ந்த தாமரையின் காடு உழக்கி - தேன் ஒழுகும் தாமரை மலர்வனத்தைக் கலக்கி, புள்ளோடு வண்டு இரிய செல்லும் மணி நீர் கலிங்கர் கோன் - பறவைகளும் வண்டுகளும் அஞ்சியோடும்படி பாயும் அழகிய நீர்வள மிக்க கலிங்க நாட்டாருடைய மன்னனுவான்.

(க - ரை) "ஏ, துடியிடைத் தோகாய்! இச்சின்ற இவர், எருமை மந்தைகள் வாளை மீன்களைக் கிளப்புவதனுல், அவைகள் தாமரைக் காட்டைக் கலக்கி, வண்டுகளும் பறவைகளும் அஞ்சியோடப் பாயும் கலிங்க தேசாதிபதி'' யென்றாள் சேடி.

(வி - ரை) வெண்மை + வாளை = வெள்வாளை - பண்புச்சூத்திர விதி பெற்றது. காளைமீன் - இருபெயரொட்டு ; காளை மீன்-மீன் காளை-இலக்கணப் போலி - காளையாகிய மீன் என விரியும்; வாளை மீன் என்பதும் இப்படியே. மேதிக்குலம்-ஆறன்ஒன்றன்கூட்டத்தற் கிழமை - எழுப்ப. காரணப்பொருட்டுகள். வார்ந்த என்பதனுல், தாமரையின் காடு முதலாகுபெயராய் அதன் மலர்களுக்காயிற்று. சிலர் இது தெரியாமல் தாமரைக் கொடி யென்பர் ; கொடியைக் காடென்பது மரபன்று. புள்ளோடு வண்டிரிய வாளைக் காளை மீன் செல்லுமென்று கூட்டுக. மேதிக் குலம் வந்து விழுவதனுல் வாளை மீன் பயந்தோடுவதே அனுபவமன்றி, வாளைமீன் துள்ளுவதனுல் மேதிக் குலம் பயந்தோடுவ தனுபவ மன்று. தான். அசை. (கசகூ)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் கேகய நாட்டரசர்'' என்று காட்டினு ளெனல்.]

அங்கை வரிவளையா யாழித் திரைகொணர்ந்த
செங்கண் மகரத்தைத் தீண்டிப்போய்க் - கங்கையிடைச்
சேல்குளிக்குங் கேகயர்கோன்றெவ்வாடற் கைவரைமேல்
வேல்குளிக்க நின்றானிவ் வேந்து.

(ப - ரை) அம் கை வரி வளையாய் - அழகான கையிற் கீற்று வளைய லணிந்த அரசிளங்குமாரியே!, தெவ் ஆடல் கை வரை மேல்

வேல் குளிக்க நின்றான் இ வேந்து - பகைவருடைய பலம் பொருந்திய தோள்க ளென்னும் மலைகளின்மேல் வேலாயுதம்பாயும்படி நின்றவனாகிய இவ்விளவரசன், ஆழி திரை கொணர்ந்த செம்மை கண் மகரத்தை-கடலலைகள் (கரைக்கு) அடித்துக் கொண்டுவந்த சிவந்த கண்களையுடைய முதலையை. சேல் தீண்டி போய் கங்கை யிடை குளிக்கும் கேகயர் கோன்-கொண்டைமீன்கள் தொட்டுப் போய்க்கங்கையில் மூழ்கும் கேகயநாட்டாருடைய மன்னவனாவான்

(க - ரை) "ஏ, வரிவளை மாதரிசே! பகைவர் தோளில் வேல் பாய நின்றவராகிய இவ்வரசர், கடல்கொணர்ந்த முதலையைச் சேல் மீன்கள் தீண்டிப்போய்க் கங்கையிற் படியும் வளமுள்ள கேகய நாட்டாருடைய மன்னராவார்'' எனறாள் சேடி.

(வி - ரை) ஆழித்திரை-ஆறன்தொகை. ஆடல் போர்வலி. கைவரை யானையெனினுமாம்; பகையரசனுடை பலம் பொருந்திய பட்டத் தானையின் மேல் வேல் குளுக்க நின்றா னிவ்வேந்து என்று கூட்டுக. தெவ்-பகைமை - இங்கிது ஆகுபெயராய் அஃதுடை யாரைக் குறித்தது. கைவரை- இருபெயரொட்டு- தோள்களாகிய மலைகளெனக் கொள்க. வேந்து-தலைமை அல்லது இறைமை-அஃ துடையார்க்கு ஆகுபெயராயிற்று. வேந்து - எழுவாய், கோன், பெயர்ப்பயனிலை, கோன் - பெயர்ப் பயனிலை. மகரம் என்பதற்குச் சுறா எனினுமாம். முதலை நீருயிரேனும்,கடலில் வாழ்வதாகையால், அதைத் தீண்டியதனால் தீட்டுப்பட்டதாகத் தெரிந்த சேல்மீன் அதை யொழிக்கக்கங்கையிற் குளித்த தென்றுகுறிப்பிற் பொருள் படூஉம் அணியிலக்கணத்தைஊகித் துணர்க. (கசஎ)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் சராந்தர மன்னர்'' என்று காட்டின ளெனல்.]

மாநீர் நெடுங்கயத்து வள்ளைக் கொடிமீது
தானேறு மன்னந் தனிக்கயிற்றில்—போநீள்
கழைக்கோ ளதயரேய்க்குங் காந்தார நாடன்
மழைக்கோதை மானேயிம் மன்.

(ப - ரை) மழை கோதை மானே-மேகம் போன்ற கூந்தலையுடைய அரசிளங் குமரியே!, இமன்-இவ் விளவரசன், மா நீர் நெடுமை கயத்து வள்ளை கொடி மீது ஏகும் அன்னம்-நிறை நீராற் பரவிய குளத்திற் பொருந்திய வள்ளைக் கொடியின் மேற் போகின்ற அன்னப்பறவையானது, தனி கயிற்றில் போகும் நீள்கழை கோதையர் ஏய்க்கும் காந்தாரம் நாடன்-ஒற்றைக் கயிற்றின்மேல் ஏறி நடக்கின்ற நீண்ட மூங்கிற் கெடை கட்டியாடும் தொம்பரத்தியரைப் போலும் (வளமுள்ள) காந்தார நாட்டரசனாவான்.

(க - ரை) "ஏ, காரளகப் பைந்தோடீ! இந்நின்ற இவர், நிறை நீர்த் தடாகத்து வள்ளைக் கொடிமேல் நடக்குமன்னம், மூங்கிற்கெடைமேல் ஒற்றைக்கயிற்றி லேறிநடக்குந் தொம்பரத்தியரை ஒக்கும் காந்த மன்னற்" என்றாள் சேடி.

(வி - ரை) மாநீர்=மிகுதியாகிய நீர் எனினுமாம்-உரிச்சொற்றொடர். நெடுங்கயம் - பண்புத்தொகை. கயத்துவள்ளை - ஏழன் உரும்பயனும் உடன்தொக்கதொகை - தான் இசை நிறை யசைநிலை. தனிக்கயிறு - பண்புத்தொகை. போகும்என்பதில் ஈற்றுயிர்மெய் கெட்டதனால் போமென்றாயிற்று. வள்ளைக் கொடி- இருபெயரொட்டு, கழைக்கோதையர் - ஏழன்உருபும்பயனும் உடன்தொக்கதொகை-கழைமேலேறியாடுங்கோதையரென்பதுபொருள்-மழைக் கோதை - உவமத் தொகை. மான் - ஆகுபெயராய் அதுபோன்ற கண்களையுடைய பெண்ணுக் காயிற்று. (கசஅ)

[தமயந்திக்குச் சேடி, "இவர்தாம் சிந்து நாட்டரசர்" என்று காட்டினா ளெனல்.]

அங்கை நெடுவேற்க ணாயிழையாய் வாவியின்வாய்ச்
சங்கம் புடைபெயரத் தான்கலங்கிச்—செங்கமலப்
பூச்சிந்து நாட்டேறல் பொன்விளைக்குந் தண்பணைசூழ்
மாச்சிந்து நாட்டானிம் மன்.

(ப - ரை) அங்கை நெடு வேல் கண் ஆயிழையாய்-அகங் கையைப்போலக் குவிந்து ஆழ்ந்தும் நீண்ட வேலாயுதத்தைப் போல

அகன்று கூர்ந்துமுள்ள கண்ணழகுபொருந்தி ஆராய்ந்தணிந்த ஆபரணங்களை உடைய இளவரசியே!, இ மன்-இவ்விளவரசன், வாவியின் வாய் சங்கம் புடை பெயர - தடாகங்களிற் சங்குகள் தாமிருந்த இடத்தைவிட்டு நகர்வதனுல், செம்மை தாமரை பூ கலங்கி சிந்தும் நாள்தேறல் - செந்தாமரை மலர்கள் அசைந்து சொரிகின்ற புதுத் தேனுனது, பொன் விளக்கும் தண்மை பணைசூழ் மாசிந்து நாட்டான் பொன்னிறமான நெற்பயிரை விளையச் செய்யும் குளிர்ச்சியான வயல்கள் சூழ்ந்த (வளத்திற்) சிறந்த சிந்து நாட்டரசன்.

(கு - ரை) "ஏ, வடிவேற் கண் மாதரசீ! குளங்களிற் சங்குகள் நகர்வதனுல் தாமரை மலர்கள் அசைந்து சொரியும் தேன், பொன் போலும் நெற்பயிரை விளக்கும் சிந்துநாட் டரசனிவர்" என்ருள் சேடி.

(வி - ரை) அங்கை - அகங் கை - இடைக்குறை - அழகிய கை யெனினுமாம்-குவிந்தாழ்ந்த கை யென்பதே கண்ணுக் குவமையாம் - கையிலுள்ள நெடுவேல் என்பார் கூற்று பொருந்தாதென்க- கையி லில்லாத வேல் கண்ணுக் குவமை யாகா தென்று மயங்க வைப்பதனுல் அது தகாது. ஆய் இழை - பல்லிழைகளில் ஆராய்ந் தணிந்த என்பதே அரச மகட் கழகாம் அன்றி ஆராய்ந்து செய்த என்பது தகாது. தான் - அசைநிலை. சலங்கி - கசங்கி அசைந்து எனக் கொள்க. பொன் - உவமம் அல்லது பண்பாகுபெயராய் நெல்லைக் குறித்தது. மா + சிந்து - எதுகை நோக்கி வலிமிக்கது- உரிச்சொற்றொடர். (கசக)

[நள னுருவிற் சென்றிருந்த இந்திரன் முதலியோரைக் கண்டு தமயந்தி கலங்கினு ளெனல்.]

காவலரைத் தன்சேடி காட்டக்கண் டீரிருவர்
தேவர் நளனுருவாச் சென்றிருந்தார்—பூவரைந்த
மாசிலாப் பூங்குழலாள் மற்றவரைக் காணுநின்
றூசலா டுற்று ளுளம்.

(ப - ரை) பூ வரைந்த மாசு இல்லா பூ குழலாள்-பூ முடித்துக் குற்றமற்று விளங்கும் அழகான கூந்தலையுடைய தமயந்தியானவள், தன் சேடி காவலரை காட்ட கண்டு-தன்னுடைய சேடி அங்கு வந்திருந்த அரசர் அனைவரையுங் காண்பிக்கப் பார்த்து, மற்று நளன் உருஆக சென்று இருந்தார் ஈர் இருவர் தேவர்அவரைகாணாநின்று-பிறகு நளன்போ லுருக்கொண்டு (அங்குப்) போயிருந்தாராகிய இந்திரன் முதலிய நான்கு தேவர்களாகிய அவர்களைக்கண்டு திகைத்து நின்று, உள்ளம் ஊசல் ஆடு உற்றாள் - தன் மனமானது ஊசலாடு வதைப்போலத் தடுமாறுவதை மேற்கொண்டாள்.

(க - ரை) அங்கு வந்திருந்த மன்னர் பலரையுந் தன் சேடி காட்டக் கண்ட தமயந்தி பிறகு, நளன் உருவந் தாங்கி வீற்றிருந்த இந்திரன் முதலிய நான்கு தேவர்களையும் கண்டு மனந்தடுமாறினாள்.

(வி - ரை) ஈரிருவர் தேவர் நளனுருவாச் சென்றிருந்தார்; மற்றவரைக் காணாநின்று (தமயந்தி) உளம் ஊசலாடுற்றாள் என்று இரு தனி வாக்கியங்களாக்கியும் பொருள் கொள்ளலாம். ஆயினும் பூங்குழலாள் என்னும் எழுவாய்க்கும் உற்றாள் என்னும் பயனிலைக்கும் இடையில் அல்லது முதலில் ஈரிருவர் தேவர் நளனுருவாச் சென்றிருந்தாரென்னும் வாக்கியம் வருவது பொருந்தாதாம். வரைதல்-கொள்ளல். மாசு இல்லா என்பது கூந்தலின் இயற்கை மணத்தைக் குறிக்கின்றது. கொங்குதேர் வாழ்க்கை யென்னும் அகவலால் இது பொருந்துமென்க. அழகுகொண்டு குற்றமற்ற இயற்கை மலர் மணம் வீசும் கூந்தலுடையாளென்று பொருள் கொள்ளினுமாம். மற்றுஈ அசையென அகற்றினும் ஆம். (௧௫0)

[மண்ணுலக மன்னரே யன்றி, சுயம்வரத்துக்கு விண்ணுலக வேந்தரும் நளனுருவாய் வந்திருந்தா ரேனல்.]

பூணுக் கழகளிக்கும் பொற்றொடியைக் கண்டக்கால்
நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர்—நீணிலத்து
மற்றேவர் வாராதார் வானவரும் வந்திருந்தார்
பொற்றேர் நளனுருவாய்ப் போந்து.

(ப - ரை) பூணுக்கு அழகு அளிக்கும் பொன் தொடியை கண்டக்கால் - (அழகுக்காகத் தானணிந்துள்ள) நகைக்கு அழகு தரும் (பொன்னுலாகிய வளையலணிந்த) தமயந்தியைப் பார்த்தால், நாண் உக்கு நெஞ்சு உடைய-வெட்கங்கெட்டு மனம் உடைந்து வாடும்படி; நீள் நிலத்து நல்வேந்தர்-இந்தப் பெரிய பூமியிலுள்ள இளவயதுள்ள அரசர்களில், வாராதார் எவர்-வராதவர் யார் (எல்லோரும் வந்திருந்தார்கள் என்றபடி), பொன்தேர் நளன் உருவாக போந்து வானவரும் வந்திருந்தார்-(அவர்களேயன்றி) அழகிய தேரூரும் நளனுருவந் தாங்கி மண்ணுலகத்திற் புகுந்து தேவரும் (அச்சுயம்வர மண்டபத்தில்) வந்திருந்தார்கள்.

(க - ரை) அழகுக்கழகு தரும் தமயந்தியைக் கண்டமாத்திரையில் நாணங் கெட்டு மனமுருகும்படி மண்ணுலக மன்னரேயன்றி விண்ணுலக வேந்தரும் நளனுருவாய்ச் சுயம்வரத்துக்கு வந்திருந்தார்கள்.

(வி - ரை) 'முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா' என்றபடி பதுமினிப் பெண்ணாகிய தமயந்தியின் இயற்கையழகு, உலகாசாரப்படி அவளணிந்திருந்த அணிகளின் அழகுக் கழகுசெய்தன வெனக் கொள்க. இப்படிப்பட்ட பேரழகியைக் கண்டமாத்திரையிலேயே மண்ணரசர் நாணங்கெடுவதும் மனம் உடைந்துவாடுவதும்இயற்கையென்பார், பொற்றொடியைக் கண்டக்கால், 'நாணுக்கு நெஞ்சுடைய நல்வேந்தர் வாராதாரெவர்?' என்றார். இப்படி நேர்பட வுரை விரிக்காமல், நாண் + உகும் + நெஞ்சு + உடைய = வெட்கம் கெடும் நெஞ்சை யுடைய என்றும், உகும் என்பது உக்கும் என்றிரட்டிற்றென்றும், நாண் + உக்கு = வெட்கங் கெட்டு, நெஞ்சுடைய = மனவுறுதியுள்ள என்றும் வெவ்வேறு விசேஷதப் பொருள் விளம்புவாரு முளர். நல்வேந்தர் என்பதில் நன்மை, இளமையைக் குறித்த தென்க. உம்மை இறந்தது தழீஇயது. (கஙு)

[தமயந்தி, அன்னஞ் சொன்னவனுக்குத் தான் மாலைசூட்ட அருள்புரியும்படி தெய்வத்தை வேண்டினளெனல்.]

*மின்னுந்தார் வீமன்றன் மெய்ம்மரபிற் செம்மைசேர்*
*கன்னியா னாகிற் கடிமாலை—யன்னந்தான்*
*சொன்னவனைச் சூட்ட வருளென்றாள் சூழ்விதியின்*
*மன்னவனைத் தன்மனத்தே வைத்து.*

(ப - ரை) *சூழ் விதியின் மன்னவனை தன் மனத்தே வைத்து*- (தமயந்தியானவள்) தன்னைப் பற்றிய விதிவசத்தால் அரசனாகிய நளனைத் தன்னினைவில் இருத்தி, *யான் மின்னும் தார் வீமன்தன் மெய்ம்மை மரபில் செம்மை சேர் கன்னி ஆகில்*-நான் விளங்குகின்ற மாலையை யணிந்த வீமராசனுடைய அழிவிலாக் குலத்தி லுதித்த கற்பு முதலிய பொற்புள்ள கன்னியாயிருந்தால், *அன்னம் சொன்னவனை கடிமாலை சூட்ட அருள் என்றாள்* - (என்னிடத்தில் அந்த) அன்னப் பறவை சொல்லிய நளமகாராசனுக்கே மணமுள்ள சுயம்வர மண மாலையை (நான்) சூட்டும்படி (ஓ தெய்வமே! நீ) திருவருள் புரிக என்று வேண்டினாள்.

(க - ரை) "நான் மட்டும் தொன்றுதொட்டு அழிவிலாது விளங்கும் வீமராசகுலக் கன்னியானால், அந்நளராசனுக்கே மணமாலை சூட்ட அருள் புரிய வேண்டும், ஓ தெய்வமே" என்று தமயந்தி சொல்லிக்கொண்டாள்.

(வி - ரை) மின்னுதல் - விளக்கமுறல் - மெய்ம்மரபு - என்றும் பொய்யாது விளங்கும் உத்தமமரபு - பழிபாவ காரணத்தால் சந்ததி குன்றி அழியாத குலம். செம்மை - கற்பு முதலிய பொற்பு. தான் - அசைநிலை. சொன்னவன் - வினைப்பெயர், இறந்த காலம். சூழ்விதி - வினைத்தொகை. விதியின், மூன்றன் கருவிப் பொருள் 'நளனை மணந்து வனவாச வருத்த நுகரவேண்டிய விதி யிருந்ததால், தமயந்தி அங்ஙன மெண்ணினாள்' என்பார் 'சூழ்விதியின் மன்னவனைத் (நளனை) தன் மனத்தே வைத்து' என்றார் - 'சூழ்

விதியின் மன்னவனை' என்பதற்கு விதிக்கும் தலைவனாகிய கடவுளை என்பாருமுளர். சொன்னவனை என்பதில் ஐயுருபு நான்கன் கோடற்பொருட்டு. தமயந்தி - தோன்றா எழுவாய். (கடுஉ)

[கண் ணிமைத்தல்முதலிய குறிகளால் நளனைத் தமயந்தி தேவரின் வேறு பிரித்துணர்ந்தா ளெனல்.]

கண்ணிமைத்த லானடிகள் காசினியிற் றோய்தலால்
வண்ண மலர்மாலை வாடுதலால்—எண்ணி
நறுந்தா மரைவிரும்பு நன்னுதலே யன்றே
யறிந்தா ளவன்றன்னை யாங்கு.

(ப - ரை) நறுமை தாமரை விரும்பும் நன்மை நுதலே அன்றாள்-மணமுள்ள செந்தாமரை மலரை விரும்பி வாழும் திருமகளுக்குச் சமானமான தமயந்தியானவள், அங்கு - அவ்விடத்தில், கண் இமைத்தலான் அடிகள் காசினியில் தோய்தலால் வண்ணம் மலர் மாலை வாடுதலால் எண்ணி-கண்கள் இமைகொட்டுவதாலும் பாதங்கள் பூமியிற் படுவதாலும் அழகிய பூமாலைகள் வதங்குவதாலும் நிதானித்து, நளன் தன்னை அறிந்தாள் - நளனை இன்னனென்று தெரிந்துகொண்டாள்.

(க - ரை) தாமரையில் வாழும் தாக்கணங்களுக்குச் சமானமான தமயந்தியானவள், கண்ணிமைத்தல் மாலை வாடுதல் பாரிற் பாதங்கள் படுதல் முதலிய குறிகளால் நளனை இன்னனென்று தெரிந்து கொண்டாள்.

(வி - ரை) கண்ணிமைத்தல் முதலிய முக்குறிகளும் தேவர்க்கிலவென்பது இம் மண்ணுலகோர் மதிப்பு -தேவேந்திரன் முதலியோர் நளனுருவிற் போந்திருந்தும் கண்ணிமைத்தல் முதலிய குறிக ளிலராயினரென்பது இதனால் விசதமாகின்றது. ஒரேவரிசையில் நான்கு தேவர்களும் நளனோடு நளனுருவந் தாங்கி வீற்றிருந்தாராகையால், ஐந்து நளர்களை ஒரேகாலத்தில் கண்டு மயங்கினாள் தம

யந்தி; ஆயினும் மேற்கண்ட குறிகளால் மயக்கந்தெளிந்து நளனைத் தேவரின் வேறுபிரித் துணர்ந்து கொண்டான். நறுந்தாமரை யென்பதை மூன்றும் வேற்றுமைக் கருத்தாப்பொருளில் வைத்து, நறுந் தாமரையால் விரும்பப்படுமென்று பொருந்தாப் பொருளுரைப் பாரு முளர்-பண்புத்தொகை. நன்னுதல் - அன்மொழித்தொகை யாய்த் திருமகளை உணர்த்திற்று. ஏ - தேற்றம். (கஞ)

[விண்ணரசர் வெட்கவும் மண்ணரசர் மட்கவும் நளனுக்குத் தமயந்தி நன்மாலை சூட்டினு ளெனல்.]

விண்ணரச ரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகன் ஞாலங் களிகூர—மண்ணரசர்
வன்மாலை தம்மனத்தே சூட வயவேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.

(ப - ரை) விண் அரசர் எல்லாரும் வெள்கி மனம் சுளிக்க- விண்ணுட்டரசர் பலரும் வெட்கப்பட்டு மனம் வருந்தவும், கண் அகல் ஞாலம் களிகூர-இடமகன்ற இந்நிலவுலக மாந்தர் மகிழவும், மண் அரசர் தம் மனத்தே வன்மை மாலை சூட - மண்ணுட்டரசர் தத்தம் மனத்தில் மிகுந்த மயக்கத்தைக் கொள்ளவும், வயம் வேந்தை பொன் பொன்மை மாலை சூட்டினுள் - வெற்றி மிகுந்த நளராசனுக்குத் திருமகளைப் போன்ற தமயந்தி அழகிய சுயம்வர மாலையைக் கழுத்திற் போட்டாள்.

(க - ரை) விண்ணரசர் வெட்கவும் மண்ணரசர் மட்கவும் உலகெங்கும் மகிழவும் நளராசனுக்குத் தமயந்தி திருமண மாலை சூட்டினுள்.

வி - ரை) ஞாலம்-இடவாகு பெயர். வன்மாலை - வன்மையாகிய மயக்கம் - பண்புத்தொகை. விண்ணரசர் மனஞ்சுளிக்கவும் மண்ணரசர் மனமழியவும் மண்ணுலகோர் மனங்களிக்கவும் வயவேந்தைப் பொன் மாலை சூட்டினுளென்று கூட்டி முடித்துக் கொள்க

வெள்கு-பகுதி, இ - வினையெச்ச விகுதி. அகல் ஞாலம் - வினைத் தொகை. பொன்மாலை - பொன்மை மாலை - அழகாகிய பொன்னாற் செய்த மலர் மாலை யென்பாரு முளர். நளன், தமயந்தி சூட்டப் பொன் மாலை சூடினன். ஆனாலும் விண்ணரசர் அவள் சூட்டாமலே தம்மனத்தில் வன்மாலை சூடினார் என்று கவி, மாலை யென்பதை மடக்கணியாக நயம்பட ஓதியிருப்பதை உய்த்துணர்ந்து கொள்க. பொன்-ஆகுபெயராய்த் தமயந்தியைக் குறித்தது. வேந்தை என்பதில் ஐயுருபு நான்கன்பொருட்கண் வந்தது பொருட்டு. (௧௫௪)

[நளனுக்குத் தமயந்தி மாலை சூட்டக் கண்ட மன்னர் முகங்கள் வெளுத்தன வெனல்.]

திண்டோள் வயவேந்தர் செந்தா மரைமுகம்போய்
வெண்டா மரையாய் வெளுத்தவே—ஒண்டாரைக்
கோமாலை வேலான் குலமாலை வேற்கண்ணாள்
பூமாலை பெற்றிருந்த போது.

(ப - ரை) ஒண்மை தாரை கோ மாலை வேலான் - ஒளியையுங் கூர்மையையும் கொண்(டு)ட சிறந்த மலர் மாலையைப் பூண்ட வேலாயுதத்தைத் தாங்கிய நளமகாராசன், குலம் மால் ஐ வேல் கண்ணாள் பூ மாலை பெற்று இருந்த போது-சிறந்த மயக்கத்தைத் தரும் அழகிய வேல்போலுங் கண்களையுடைய தமயந்தியினது சுயம்வரப் பூமாலையைப் பூண்டு வீற்றிருந்தபோது, திண்மை தோள் வயம் வேந்தர் செம்மை தாமரை முகம் போய் வெண்மை தாமரை ஆய் வெளுத்த - திடமான தோள்வலிவுள்ள மன்னருடைய சிவந்த தாமரை முகங்கள் மாறி வெள்ளைத் தாமரைகள் போல வெண்ணிறமாயின.

(க - ரை) மாலையணிந்த வேலை யேந்திய நளன், மயக்கந்தரும் வடிவேற் கண்ணழகியாகிய தமயந்தியின் பூமாலை பெற்று வீற்றிருக்கையில் அங்கிருந்த மன்னருடைய செந்தாமரை முகங்கள் வெண்டாமரையாய் வெளுத்தன.

(வி - ரை) திண்மை தோள்வயம் என்பதற்குத் திடமான புய வலியா லெய்தும் வெற்றி யெனினுமாம். போய், ஆய் என்பவைக ளுக்கு முறையே நீங்கி, ஓங்கி யென்று பொருள் கொண்டு, செந்தா மரை முகம் நீங்கி வெண்டாமரைமுகம் ஓங்கி வெளுத்தன அல்லது செந்தாமரை முக மாறி வெண்டாமரை முக மேறி வெளுத்தன வெனினுமாம். மாலை யென்பவைகளுக்கு பூமாலை யென்றே மூன் றிடத்தும் பொருள் கொண்டு சொற்பொருட்பின் வருநிலையணி யென்பாரு முளர். இங்கது மடக்கணியாய்த் தொடக்குறுப்பதை உய்த்துணர்ந்து கொள்க. கோமாலை யென்பதில் மாலையென்பதை மலை யென்பதின் நீட்சியாக்கியும் பொருள் விரித்து மடக்கணியை நிலைநிறுத்தலாம். வெண்டாமரை ஆய் என்பதிலும் வெண்டாமரை முகமாய் என்று கூட்டுவது மொன்று. (கருரு)

[சுயம்வர மணமாலை சூட்டப்பெற்ற நளன் தமயந்தியோடு புறப்பட்டா னெனல்.]

மல்லன் மறுகின் மடநா குடனாகச்
செல்லு மழவிடைபோற் செம்மாந்து—மெல்லியலாள்
பொன்மாலை பெற்றதோ ளோடும் புறப்பட்டா
னன்மாலை வேலா னளன்.

(ப - ரை) நன்மை மாலை வேலான் நளன் - நற்குண வரிசை யையும் வேலாயுதத்தையும் உடையவனாகிய நளமகாராசன், மல்லல் மறுகில் மடம் நாகு உடன் ஆக-வளமிக்க இராஜ வீதியில் இளங்கி டாரி கூடவர, செல்லும் மழவிடை போல் செம்மாந்து-போகின்ற இளங்காளைமாடுபோல இறுமாந்து,மெல்லியலாள் பொன்மை மாலை பெற்ற தோளோடு புறப்பட்டான் - மென்மைத் தன்மையுள்ள தம யந்தியின் பொன்மைத் தன்மையுள்ள சுயம்வர மாலையைப் பூண்ட புயத்தோடு வெளிப்பட்டான். உம்மை அசைநிலை.

(க - ரை) நற்குண கணங்கள் நிரம்பிய நளமகாராசன், இராஜ வீதியில் இளங் கிடாரியோடு செல்லுங் காளைமாடு போலத் தன் தோளில் சுயம்வர மாலை விளங்கத் தமயந்தியோடு புறப்பட்டான்.

(வி - ரை) மல்லல்-பல வளமான பொருள்களோடு கூடிய மாடமாளிகை கூடகோபுரம் ஆவண முதலியன. மடமும் மழவும் இளமைப் பொருளன வாகலான் முன்னையது பண்பு, பின்னையது உரிச்சொ லென்க. நாகு, பசு வெருமை முதலியவைகளின் பெண்ணின மாடுகளின் பொதுப்பெயர். கிடாரி யென்பது பசுவுக்கும் நாகு என்பது எருமைக்குமே சிறப்பாய் வழங்குகின்றன. தமயந்தியோடு நளன் நாகோடு செல்லுங் காளைபோல இராஜவீதியிற் சுயம்வரமாலை பூண்ட தோளோடு புறப்பட்டான் என்று கூட்டிமுடிக்க. மடநாகு என்பது மடப்பத்தையுடைய நாகு என்றும்விரியுமாகையால் இரண்டன் தொகையுமாம். மடப்பமாகிய நாகு என்று பண்புத்தொகை யாக்கலே பான்மையாம். மாலை யென்பதை ஈங்கும் சொற்பொருட்பின் வருநிலை யென்று நிலைதனர்வாருமுளர். உவமானத்திற்போல உவமேயத்திலும் மெல்லியலாள் உடனாக நளன் புறப்பட்டான் என்று கூட்டுக. மெல்லியாள் என்பதை மூன்றன்றொகையாக்கி மெல்லியலாளோடும்(அவள்தன்) பொன்மாலை பெற்ற தோளோடும் என்று பொருள் விரிப்பதே ஏற்றமென்க. தோளோடு மென்பதில் உம்மை இறந்தது தழீஇயது. (௧௫௬)

[தமயந்தியின் மாலையைப் பெறாது திரும்பிச்சென்ற தேவேந்திரன் முதலியோர் கலிபுருடனைக் கண்டாரெனல்.]

வேலை பெறுவமுதம் வீமன் றிருமடந்தை
மாலை பெறாதகலும் வானாடர்—வேலை
பொருங்கலிநீர் ஞாலத்தைப் புன்னெறியி லாக்கும்
இருங்கலியைக் கண்டா ரெதிர்.

(ப - ரை) வேலை பெறு அமுதம் வீமன் திரு மடந்தை மாலை-கடல் பெற்ற தேவாமிர்தம் போன்ற வீமராசனுடைய செல்வ மகளாகிய தமயந்தியின் சுயம்வர மாலையை, பெறாது அகலும் வான்நாடர்-பெறாமல் திரும்பிச் செல்லுகின்ற தேவர்கள், வேலை பொரும் கலி நீர் ஞாலத்தை-கரையை மோதி வீசும் ஒலியுள்ள அலைகடல் சூழ்ந்த பூவுலகத்தாரை, புன்மை நெறியில் ஆக்கும் இரும் கலியை-(சூது

முதலிய) இழிவழியிற் செலுத்தும் பெருமையை யுடைய கலிபுருடனை, எதிர் கண்டார்-(தமக்கு) எதிரே வரக் கண்டார்கள்.

(க - ரை) தமயந்தியின் சுயம்வர மாலையைப் பெறாமல் திரும்பிச் செல்லும் தேவேந்திரன் முதலியோர் இடைவழியிற் றமக்கெதிரே கலிபுருடன் வரக் கண்டார்கள்.

(வி - ரை) வேலைபெறா-எழுவாய்த்தொடர், பெறா-பெறாத வென்பதின் ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அமுத மடந்தை - அமுதம் போன்ற மடந்தை - உவமத்தொகை யென்றாவது அமுதமாகிய மடந்தை - பண்புத்தொகை யென்றாவது கொள்ளலாம். திரு - செல்வம். தம்பொரு ளென்பதம் மக்கள் என்பதனால் செல்வமென்றாம். மடந்தை யென்றதனால் தமயந்திக்குச் சுயம்வர நடந்த பருவத்தைக் குறித்தபடியாம். தற்போதுள்ள உயர்வகுப்பார் இயற்றும் குழந்தை மணம் அப்போதில்லை யென்றபடியாம். மாலைபெறாது - இரண்டன்றொகை - வேலைபொரும் என்பதூஉம் அதுவேயாகும். பொருங் கலிநீர் - அன்மொழித் தொகை. புன்னெறி - பண்புத்தொகை. இருநெறியிற் செலுத்தும் பெருமையுடையா னென்பது தோன்ற இருங்கலி யென்றார். மாற்றறியாத செழும் பசும் பொன் என்று பரமசிவனைப் பாடியபடி வேலை பெறா வமுதம் என்று தமயந்தியைச் சிறப்பித்தார். அந்த அமுதம் அலைகடலிற் பிறந்தது, இந்த அமுதம் அதனிற் பிறவாதபெருமை யுடையது என்றபடியாம். உருவகத்தை உய்த் துணர்க. ஞாலம் - ஆகு பெயர். (கருஎ)

[தேவேந்திரன் கேட்டதற்குக் கலிபுருடன், "நான் தமயந்தியை மணக்க வருகின்றேன்" என்றுரை னெனல்.]

ஈங்குவர வென்னென் றிமையவர்தங் கோன்வினவத்
தீங்கு தருகலியுஞ் செப்பினான்—நீங்கள்
விரும்பான வீமன் றிருமடந்தை யோடு
மிருப்பான் வருகின்றேன் யான்.

(ப-ரை) இமையவர்தம் கோன் ஈங்கு வரவு என் என்று வினவ. தேவேந்திரன், (நீ) இங்கே வருதற்குக் (காரணம்) என்னவென்று (கலிபுருடனைக்) கேட்க, தீங்கு தரு கலியும் - (வறுமை முதலிய) தீமைகளை உண்டாக்கும் அக்கலிபுருடனும், நீங்கள் விருப்பு ஆன வீமன் திருமடந்தையோடு யான் இருப்பான் வருகின்றேன் (என்று) செப்பினான்-நீங்கள் விரும்பியுள்ள வீமராசனுடைய செல்வ மகளாகிய தமயந்தியுடன் கூடியிருக்க நான் வருகின்றேன் என்று சொன்னான்.

(கு - ரை) இங்கு நீ வருங் காரணமென்னவென்று கேட்ட தேவேந்திரனுக்குக் கலிபுருடன், "நீங்கள் விரும்பியுள்ள தமயந்தியை மணப்பதற்கு நானும் வருகின்றேன்" என்று சொன்னான்.

(வி - ரை) இங்கு என்பது ஈங்கென்று நீட்டும்வழி நீண்டது-வரவு, செலவு என்புழிப்போலத் தொழிற்பெயர். தருகலி—வினைத்தொகை. செப்பினான் - திசைசொல் (தெலுங்கு). திருமடந்தையோடும் என்பதிலுள்ள உம்மையை அசையாகத் தள்ளுக; அன்றி அதை, யான் என்பதனோடு கூட்டி யானும் வருகின்றேனென்று எச்சவும்மையாகக் கொள்ளுக. இருப்பான்-பானீற்றுவினையெச்சம், எதிர்காலப்பொருட்டு. வருகின்றேன் (என்று) செப்பினான் என்று கூட்டியதில், என்று என்பது சொல்லெச்சம். வருகின்றேன் + யான் =வருகின்றேனியான்-மெய்யீற்றுப்புணரியல்- மூன்றாம் சூத்திரங் காண்க. தீங்குதரு - இரண்டன்றொகை. விருப்பான என்பதை ஒருமொழியாக் கொண்டு விரும்பிய என்று பொருள்கோடலுமாம். வீமன் திருமடந்தையை (மணந்து) அவளோடு கூடியிருப்பதற்காக யானும் வருகின்றேனென்று ஒட்டிக்கொள்க. (கடுஅ)

[கலிபுருடனை நோக்கித் தேவேந்திரன், "தமயந்தியின் மண மாலையை நளனே பெற்றான். உன் எண்ணம் நிறைவேறாது, போ" என்றானெனல்.]

மன்னவரில் வைவே னளனே மதிவதனக்
கன்னி மணமாலை கைக்கொண்டான்—உன்னுடைய
உள்ளக் கருத்தை யொழித்தே குதியென்றான்
வெள்ளைத் தனியானை வேந்து.

(ப - ரை) வெள்ளை தனி யானை வேந்து - வெண்மையாய்ச் சிறந்த ஐராவதமென்னும் யானையூரும் அரசனாகிய இந்திரன், மன்னவரில் வைவேல் நளனே மதிவதனம் கன்னி மணம் மாலை கைக்கொண்டான்-பூவுலக அரசரிற் கூர்வேலேந்திய நளமகாராசனே சந்திர முகியாகிய தமயந்தியின் சுயம்வர மணமாலையை அடைந்தான், உன்னுடைய உள்ளம் கருத்தை ஒழித்து ஏகுதி என்றான்-(ஆகையால்) உன்னுடைய மன விருப்பத்தை மாற்றித் திரும்பிப்போ என்று (கலி புருடனை நோக்கிக் கூறினான்.

(க - ரை) "பூவுலக வேந்தரிற் புகழ்பெற்ற நளனே தமயந்தியின் சுயம்வர மணமாலையைப் பூணும் பாக்கியம் பெற்றான். ஆகையால் உன் எண்ணத்தை மாற்றித் திரும்பிப்போ" என்று கலி புருடனுக்குத் தேவேந்திரன் கூறினான்.

(வி - ரை) வைவேல் - பண்புத்தொகை. நளனே என்பதில் ஏகாரம் பிரிநிலை. மதிவதனம்-உவமைத்தொகை. வதனக்கன்னி-தயிர்க்குடம் என்புழிப்போல இரண்டனுருபும்பயனு முடன்றொக்க தொகை. கைக்கொண்டான் - கைக்கொள்-பகுதி. உள்ளக்கருத்தை-ஏழன்தொகை. ஏகுதி-ஏவலொருமை. வெள்ளைத் தனி யானை யென்பதைத் தனி வெள்ளை யானை யென்று மொழி மாற்றினுமாம். வைவேல் நளன் என்றதனால், அவனுடைய தோள்வலி சொன்னபடியாம். மதிவதனக்கன்னி யென்றதனால் தமயந்தியின் வடிவழகை

வன்னித்த படியாம். நளனும் மதிக்குல வேந்தன், தமயந்தியும் மதி முக மடந்தை ஆகையால் பொருத்தம் திருத்தமாயிற்று என்பார் மதிவதனக்கன்னி யென்றார். கன்னி யென்றமையால் தமயந்தியின் கற்பின் பொற்பு விளங்குவது காண்க. (கஙஞ)

[வானவ ரிருக்க மானவற்கு மணமாலை சூட்டியமாதின் எண்ணத்தைக் கெடுக்கின்றேன்'' என்றான் கலிபுருட னெனல்.]

விண்ணரசர் நிற்க வெறித்தேன் மணமாலை
மண்ணரசற் கீந்த மடமாதின்—எண்ணம்
கெடுக்கின்றேன் மற்றவடன் கேள்வனுக்குங் கீழ்மை
கொடுக்கின்றே னென்றான் கொதித்து.

(ப - ரை) கொதித்து - (அதுகேட்ட கலிபுருடன்) கோபித்து, விண் அரசர் நிற்க - வானுலகத்தரசராகிய (நீங்கள்) இருக்க, வெறி தேன்மணம் மாலை-மணமுந்தேனும்பொருந்திய சுயம்வரமண மலர் மாலையை, மண் அரசன் கு ஈந்த மடம் மாதின் எண்ணம் கெடுக்கின்றேன்-பூவுலகத் தரசனாகிய நளனுக்குச் சூட்டிய அறியாமையை யுடைய தமயந்தியின் ஆசையைக்குலைக்கின்றேன், மற்று அவள் தன் கேள்வனுக்கு உம் கீழ்மை கொடுக்கின்றேன் என்றான்-அன்றியும், அவளுடைய நாயகனாகிய நளனுக்கும் தாழ்வைத் தருகின்றேன் (இது நிச்சயம்) என்றான்.

(க - ரை) ''வானவராகிய நீவிரிருக்க மானவனாகிய நளனுக்கு நறுமணமாலை சூட்டிய பேதையாகிய தமயந்தியின் எண்ணத்தைக் கெடுத்து அவளுடைய கணவனுக்கும் தாழ்மை கொடுத்து விடுகிறேன்'' என்றான் கலிபுருடன்.

(வி - ரை) நிற்க வெறிதே என்றும் பாடமோதுவாருளர்-பயனின்றி ஏங்கி நிற்க என்று பொருள் கொள்க. மணமாலை ஏழன்தொகை. ஈந்த—திசைசொல் (தெலுங்கு) மடம் மாது-இரண்

டன் தொகை - அறியாமையுடையா ளாகையால் விண்ணவராகிய உங்களை உல்லிங்கனம் செய்து மண்ணவனாகிய நளனை விரும்பி மாலை சூட்டினாள் என்று குறிப்பிற் பொருள்படும்படி மடமாதி னென்றார். கேள்வன்-கேண்மையை யுடையவன் - சுற்றத்தாரிற் சிறந்தவன் அதாவது கணவன். கீழ்மை - தாழ்வு - வாழ்வை நீக்கித் தாழ்வை ஆக்குவேன் என்றபடியாம். கலிபுருடன் - சொல்லெச்சம்-தோன்றா எழுவாய், என்றான் - பயனிலை. (கசுo)

[நளன் வாய்மை முதலிய நற்குண முடையான், தமயந்தி கற்புடையா ளென்று தேவேந்திரன் சொல்லிச்சென்றா னெனல்.]

வாய்மையுஞ் செங்கோல் வளனு மனத்தின்கட்
டூய்மையு மற்றவன் றோள்வலியும்— பூமா
னெடுங்கற்பும் மற்றவற்கு நின்றுரைத்துப் போனா
னடுங்கொற்ற வச்சிரத்தா னாங்கு.

(ப - ரை) அடும் கொற்றம் வச்சிரத்தான் ஆங்கு நின்று - கொல்லும் வெற்றியிற் சிறந்த வச்சிராயுதமேந்திய தேவேந்திரன் அவ்விடத்திற் சற்றே தாழ்த்து நின்று, அவன் வாய்மையும் செம்மை கோல் வளனும் மனத்தின்கண் தூய்மையும் தோள் வலியும் - அந் நளனுடைய உண்மை நெறியையும் நீதியாட்சியின் மாட்சியையும் மனநேர்மையையும் புயவல்லமையையும், பூமான் நெடுமை கற்பும்- மலர்மகள் போன்ற தமயந்தியின் சிறந்த கற்பையும், அவற்கு உரைத்து போனான் - அக் கலிபுருடனுக்கு (விளங்கச்,) சொல்லிப் போனான்.

(க - ரை) தேவேந்திரன் அங்கு சற்றே தாழ்த்து நின்று நளனுடைய உண்மை நெறி முதலியவைகளையும் தமயந்தியின் கற்பையும் கலிபுருடனுக்குச் சொல்லிச் சென்றான்.

(வி - ரை) மற்று என்பன இரண்டும் அசைநிலைகள் - இரண்டாவதை மற்றவனாகிய கலிபுருட னெனினுமாம். பூமா என்னும்

பாட முண்டு. பூ=பூவில்வாழும், மா=இலக்குமி என்று பொருள் கொள்க. மான் - உவமையாகுபெயர். கற்பு=கணவன் கற்பித்த வழியில் அவன் சொற் றவராமல் நிற்றல் - கற்பெனப் படுவது சொற்றிறம்பாமை என்பதனாலு முணர்க - கற்பு, கல்வி ஒரு தொடர் - பிறவினைப் பொருட்டு - செய்வினைத் தொழிற்பெயர். நெடுமை கற்பு, நீண்டபுகழ் என்புழிப்போல சிறப்பை உணர்த்து கிறது. வளன்=வளம்-போலி-இங்கிது ஆகுபெயராய் மாட்சிமை யுணர்த்திற்று. தூய்மை-மாசிலா நேர்மைக்குக் காரணவாகுபெயர். நெடுங்கொற்ற வச்சிரத்தா னேர்ந்து என்றும் பாடபேத முண்டு. உண்மை நெறியையுங் கற்பின் திண்மை நெறியையு முறையே கொண்டுள்ள கணவன் மனைவியரிடத்தில் உன் செபம் செல்லா தென் றிந்திர னியம்பினானென்பதைக் குறிப்பிற் கொள்க. (கஅக)

["தமயந்தியோடு கூடி நளனிருக்க நான் சகியேன்" என்றான் கலிபுருட னெனல்.]

செருக்கதிர்வேற் கண்ணியுடன் றேர்வேந்தன் கூட
விருக்கத் தரியே னிவரைப்—பிரிக்க
வுடனாக வென்றா னுடனே பிறந்த
விடநாக மன்னான் வெகுண்டு.

(ப - ரை) உடனே-(அங்ஙனம் தேவேந்திரன் சொன்னதைக் கேட்ட) உடனே, பிறந்த விடம் நாகம் அன்னான் - பிறந்தபோதே நஞ்சோடு தோன்றிய நாகப்பாம்பை ஒத்தவனாகிய கலிபுருடன், வெகுண்டு - கோபித்து, செரு கதிர் வேல் கண்ணியுடன்-சண்டையிற் சிறந்து ஒளிவீசும் வேலாயுதம் போன்ற கண்களையுடைய தமயந்தியோடு, தேர் வேந்தன் கூட இருக்க தரியேன்-தேருடைய அரசனாகிய நளன் சேர்ந்திருக்கப் பொறேன், இவரை பிரிக்க உடன் ஆக என்றான் - இவர்கள் இருவரையும் (நான்) பிரித்து விடுவதற்கு (நீவிர்) உடன்படுவீராக என்று சொன்னான்.

(க - ரை) நஞ்சுள்ள நாகம் போன்ற கலிபுருடன் கோபித்துத் தேவேந்திரன் முதலியோரை நோக்கி, "நளதமயந்தியர் கூடியிருக்கப் பொறேன். ஆகையால் இவர்களை நான் பிரிப்பதற்கு நீவிர் உடன் படுமின்" என்றான்.

(வி - ரை) உடனே என்பதைப் பிறந்த என்பதனோடு கூட்டிப் (பிறக்கும்போதே) கூடப் பிறந்த எனினுமாம். செரு=சண்டை. செருவேல் - ஏழன்றொகை - சண்டையையுடைய வேல் என்று இரண்டன்றொகை யாக்குநரு முளர். கூட, இருக்க தரியேன்-சேரவும் (இன்புற்) றிருக்கவும் எனினுமாம் - கூடியிருக்க என்றும் பாட மோதலாம். உடனாக என்பதற்கு உடன்படவேண்டு மெனினுமாம். நாகம் அன்னான்-இரண்டன் ஒத்தற்பொருட்டு. தாயனையான் என் புழிப்போல விடநாகமன்னான் வெகுண்டு என்றான் என்று ஒட்டுக. சினக்கதிர்வேல் என்று இவ்வாசிரியரே இன்னோரிடத்தில் இயம்புவதைஇயும் செருக்கதிர்வே லென்பதனோடு ஒப்பிட்டுத் தெளிக.

[தமயந்தியின் திருமணங் காண வருபவன்போலச் சூரியன் புறப்பட்டா னெனல்.]

வெங்கதிரோன் றானும் விதர்ப்பன் றிருமடந்தை
மங்கலநாள் காண வருவான்போற்—செங்குமுதம்
வாயடங்க மன்னற்கும் வஞ்சிக்கும் நன்னெஞ்சிற்
றீயடங்க வேறினான் றேர்.

(ப - ரை) வெம்மை கதிரோன் தானும்-வெப்பமாகிய கிரணங்களையுடைய சூரியனும், வீமன் திருமடந்தை மங்கலம் நாள் காண வருவான்போல் - வீமராசன் செல்வமகளாகிய தமயந்தியின் கலியாண வைபவத்தைக் காண வருபவன்போல, செம்மை குமுதம் வாய் அடங்க - செவ்வல்லிமலர்கள் வாய்களை மூடிக்கொள்ளவும் (குவியவும்), மன்னற்கும் வஞ்சிக்கும் நன்மை நெஞ்சில் தீ அடங்க-நளனுக்கும் தமயந்திக்கும் உள்ளன்புடைய மனதில் (காதல்) நெருப்பு தணியவும், தேர் ஏறினான் - தேரேறித் தோன்றினான்.

(க - ரை) தமயந்தியின் கலியாணங் காணவருவான்போலச் செவ்வல்லி வாய் மூடவும், நள தமயந்தியர்தம் நெஞ்சிற் காதற்றீ யடங்கவும் சூரியன் தேரேறித் தோன்றினன்.

(வி - ரை) வெங்கதிரோன் - சூரியன்; தண்கதிரோன்-சந்திரன். தான்-அடைஉம்மை-உயர்வு சிறப்பன்றி இறந்தது தழீஇயது எனினுமாம். மங்கல நாள்-இதில் நாளென்பது ஆகுபெயராய் அதில் நடக்கும் வைபவத்தைக் குறித்தது. மங்கலநாணென்பாருமுளர். நாள் என்பதற்குப் புதுமை யென்று பொருள் கூறுவாருமுளர். செவ்வல்லியேயன்றி வெள்ளல்லியும் வாய்மூடி அடங்குவது இயல்பாம். ஆயினும், செவ்வல்லியே பெண்களின் வாய்க்குவமையாவதாக லான் செவ்வல்லி யென்றார். இங்குச் செவ்வல்லியைச் சந்திரன் மனைவியா வுருவகித் திருக்கின்றார். சூரியன் நள தமயந்தியருடைய காதல் நெருப் பெரிவதற்குக் காரணனாகிய சந்திரனை யடக்கின தால், அவர்களை அலர்தூற்றின அவன் மனைவியாகிய குமுதவல்லியும் வாய்மூடி ஒடுங்கினாள். சூரியன் தோன்றினன், சந்திரன் மறைந்தானென்று கொள்க. (கசுரு)

[தோழியர்கள் தமயந்திக்கு மாலை சூட்டி ஆபரணம் பூட்டி அலங்கரித்தா ரெனல்.]

இன்னுயிர்க்கு நேரே யிளமுறுவ லென்கின்ற
பொன்னழகைத் தாமே புதைப்பார்போன்—மென்மலர்
சூட்டினார் சூட்டித் துடிசே ரிடையாளைப் [ருஞ்
பூட்டினார் மின்னிமைக்கும் பூண்.

(ப - ரை) இளமை முறுவலே இனிமை உயிர்க்கு நேர் என்கின்ற-இவளுடைய புன்னகையே எம்முடைய ஆருயிர் போன்றது என்று ஆடவர் கொண்டாடுகிற, பொன் அழகை தாமே புதைப்பார் போல் - திருமகள் போன்ற தமயந்தியின் இயற்கை யழகைத் தாமே கண்ணேறு படுமென்று தோழியர் மறைப்பார்போல, துடி சேர் இடையாளை - உடுக்கையைப் போன்ற இடையையுடைய தம

யந்திக்கு, மென்மைய மலரும் சூட்டினார்-மெல்லிய மலர் மாலைகளும் சூட்டினார், சூட்டி — அங்ஙனம் சூட்டியபின், மின் இமைக்கும் பூண் பூட்டினார் - மின்னலைப்போல் ஒளிவீசும் அணிகளையும் பூட்டினார்கள்.

(க - ரை) ஆடவர் கண்டு 'இவள் இளநகைமே எமதுயிராம்' என்று வியக்கும் தமயந்தியின் அழகை மறைப்பார்போலத் தோழியர் அவளுக்குப் பூமாலை சூட்டினார் பொன்னணி பூட்டினார்.

(வி-ரை) இனிமை + உயிர் = இன்னுயிர். ஆருயிர் = அருமை + உயிர். இனிமையே அருமையா மென்க. இளமுறுவ லொன்றே இன்னுயிர்க்கு நேராம் எனின், ஏனைய வுறுப்புகளின் வனப்புக் குவமையில்லை யென்றபடி 'பொன்னின் குடத்துக்குப் பொட்டிழகேன்' என்பதனால், தமயந்தியை இங்குப் பொன்னென்றார். இயற்கைச் சுவை யூறும் அமுதத்துக்குத் தேனுஞ் சர்க்கரையுஞ் சேர்ப்பது வீணுமாறு போழகியாகிய தமயந்திக்கு ஆபரண முதலிய அணிதல் அனாவசியமாம். ஆயினும் உலக வழக்க ஒழுங்கின்படி அவளழகை மறைப்பதுபோலத் தோழியர் அவளை அலங்கரித்தன ரென்று கொள்க. இதுவே இராமாயணத்திற் கம்பர் கூற்றுமாம். ஏகாரம் பிரிநிலை. இது இடமாற்றிக்கோட லாயிற்று. மலர் - ஆகுபெயரா மாலைக்காயிற்று. உம்மை எதிரது தழீஇயது. (கசு௫)

[சோதிடன் குறித்த நாளில் நள தமயந்தியர்க்குத் திருமணமு நடந்தது. இருவரும் ஓரறைக்குட் சென்றார்க ளெனல்.]

கணிமொழிந்த நாளிற் கடிமணமுஞ் செய்தார்
அணிமொழிக்கு மண்ண லவற்கும்—பணிமொழியார்
குற்றேவல் செய்யக் கொழும்பொன் னறைபுக்கார்
மற்றெவரு மொவ்வார் மகிழ்ந்து.

(ப - ரை) கணி மொழிந்த நாளில் அணி மொழிக்கும் அண்ணலவன்கும் - சோதிடன் குறித்த மங்கல ஓரையில் இனிமையான

சொற்களைப் பேசும் தமயந்திக்கும் பெருமையில் மிகுந்த நளமகாரா சனுக்கும், கடிமணமும் செய்தார் - கலியாணமும் பண்ணினார்கள், மற்று எவரும் ஒவ்வார் - வேறெவரும் தமக்கிணையாகாத அவ்விருவ ரும், பணி மொழியார் குறுமை ஏவல் செய்ய-வணக்கமாய்ப் பேசும் தோழிமார் உபசாரஞ் செய்து பின்னே வர, கொழுமை பொன் அறை புக்கார் தங்க முலாம் பூசியதனா லழகு மிகுந்த அறைக்குள் நுழைந்தார்கள்.

(கு-ரை) நள தமயந்தியர்க்கு மங்கல ஓரையில் திருமண முடித் தார்கள். இருவரும் தமக்குத் தோழிமார் உபசாரம் செய்து பின் தொடர்ந்து வர தங்க முலாம் பூசின அறைக்குள் நுழைந்தார்கள்.

(வி - ரை) இங்கே நாளில் என்பது ஆகுபெயராய் மங்கலஓரை யைக் குறித்தது. அணி யென்பது அலங்காரத்தைக் குறிக்கு மாயி னும், மொழிக்கு, முதல் அலங்காரம் இனிமை யாகையால், இங்கது இனிமையைக் குறித்தது. அணி மொழி என்பதற்கும் அழகான சொற்களையுடையவ ளென்பாருமுளர். அணிமொழி-அன்மொழித் தொகை. அண்ணலவற்கும் என்பதை அண்ணல் + அவற்கும் எனப் பிரித்து இருபெயரொட் டெனினுமாம். பணி மொழியார்-வினைத் தொகை. குறுமை + ஏவல் = குற்றேவல், பண்புச் சூத்திரவிதி யேற்றது. குற்றேவல்-சிறுதொழில் அதாவது அருமை பாராட்டிச் செய்யும் உபசாரம். தம்பதியர் ஏவாமலே அவர்கள் குறிப்பறிந்து சேடியர் செய்யும் சிறுதொழிலே குற்றேவலாம். கொழும்பொன்-தங்கம் - தங்கமுலாம் - அரச மாளிகை யங்ஙனம் தங்கமுலாம் பூசி விளங்குதல் சாதாரணம். கடிமணமும் என்பதில் உம்மை, சுயம் வரமும் செய்து என்று இறந்தது தழீஇயது. (கசூ௫)

[நள தமயந்தியர்மேல் மன்மதன் தன் மலரம்புகளைந்தையும் எய்தா னெனல்.]

செந்திருவின் கொங்கையினுந் தேர்வேந்த னாகத்தும்
வந்துருவ வார்சிலையைக் கால்வளைத்து—வெந்தீயு
நஞ்சுந் தொடுத்தனைய நாம மலர்வாளி
அஞ்சுந் தொடுத்தா னவன்.

(ப - ரை) செம்மை திருவின் கொங்கையினும் - செம்மை நலஞ்சிறந்த திருமகள்போன்ற தமயந்தியின் முலையிலும், தேர்வேந்தன் ஆகத்தும் வந்து உருவ - தேரூரும் அரசனாகிய நளனுடைய மார்பிலும் பாய்ந்து ஊடுருவிச் செல்லும்படி, வார் சிலையை கால் வளைத்து-நீண்ட வில்லை நுனியைப் பற்றிவளைத்து, வெம்மை தீயும் நஞ்சும் தொடுத்து அனைய - சூடான நெருப்பையும் விடத்தையும் கோத் தெய்தது போன்ற, நாமம் அஞ்சு மலர் வாளியும் - அச்சத்தைத் தருஉம் (தாமரை முதலிய) ஐவகை மலரம்புகளையும், அவன் தொடுத்தான் - (அவ்வம்புகளுக் குரியானாகிய) மன்மதன் கோத் தெய்தான்.

(க - ரை) நள தமயந்தியருடைய மார்புகளிற் பாய்ந்து ஊடுருவிச் செல்லும்படி மன்மதன் தன் கருப்புவில்லை வளைத்து அரும்புக் கணைகளை அதி அவசரமாய் எய்தான்.

(வி - ரை) செந்திரு - செய்யாள் - செம்மையைத் தருபவளென்பது பொருள். செந்திரு - அன்மொழித்தொகை. ஆகம், அகம் நீட்டும் வழி நீண்டது. கோகனகத்தாள் ஆகம் கினைத்தே என்று எல்லப்ப நாவலரும். வந்து என்பது பாய்ந்து என்பதற்கு இலக்கணை. வார்சிலை யென்பது போலவே வாரார் சிலை கலை மெய் மாதங்க மென்றார் மேற் குறித்த நாவலரும். கால் என்பது வின்னுனிப் பொது. வெண்ணிலா என்புழிப்போல வெந்தீயும் இயல்பின்மை விசேடணம், மலர் வாளி - இருபெயரொட்டு. முத லீரும்மைகளும் இடை யீரும்மைகளும் எண்ணும்மைகள்; கடையொன்றும் முற்று. அவன் அஞ்சுந் தொடுத்தா னென்று கூட்டுக. மன்மதன் மலரம்புகள், தாமரை, மா, அசோகு, முல்லை, நீல மென்பன. (கசுசு)

[நள தமயந்தியர் நீரு நீருஞ் சேர்ந்தாற்போ லிரண்டறக் கலந்தா ரெனல்.]

ஒருவ ருடலி லொருவ ரொதுங்கி
யிருவ ரெனுந்தோற்ற மின்றிப்—பொருவெங்
கனற்கேயும் வேலானுங் காரிகையுஞ் சேர்ந்தார்
புனற்கே புனல்கலந்தாற் போன்று.

(ப - ரை) பொரு வெம்மை கனற்கு எயும் வேலான்உம் காரிகைஉம் - சண்டையிற் சிறந்த சூடான நெருப்புக்குச் சமானமான வேலாயுத மேந்திய நளனும் தமயந்தியும், ஒருவர் உடலில் ஒருவர் ஒதுங்கி-ஒருவர் உடம்பில் ஒருவர் ஐக்கியமாய், இருவர் என்னும் தோற்றம் இன்றி-இருவர் என்னும் பாகு பாடில்லாமல், புனற்கே புனல் கலந்தால் போன்று சேர்ந்தார் - தண்ணீரிலேயே தண்ணீர் கலந்தது போல (இரண்டறக்) கூடினார்கள்.

(க - ரை) நளனுந் தமயந்தியும் ஒருவருடம்பில் ஒருவர் ஒடுங்கி இருவர் என்னும் பிரிவினை யின்றி அப்போடு அப்பு கலந்தாற் போல இரண்டறக் கூடினார்கள்.

(வி - ரை) நாழி அப்பும் நாழி உப்பும் நாழியாமாறு, நள தமயந்தியருடைய ஈருடலும் ஓருடலாயின எனினுமாம். இரு பாத்திரங் களில் உள்ள ஓரிடத்து நீர் ஒன்று கூடின் வேற்றுமை தோன்றாத படி, மான்சாதிப் பெண்ணாகிய தமயந்தியோடு முயற்சாதி யானாகிய நளன் கூடியதால் அப்போடு அப்பு சேர்ந்தபடி ஐக்கிய நிலையோங்கி இருவரென்னுந் தோற்றம் இல்லாமல் நீங்கிற்றென்க. பொருவேல் வெங்கனற்கேயும் வேல் என்று பிளவுபடுத்திக் கூட்டித் தெளிக. ஒதுங்கி-மறைந்து எனினுமாம். தோற்றம் - பகுத்தறியும் காட்சி-அதாவது இருவரென்னும் பாகுபாடு. கனற்கு எயும் என்பதற்கு நெருப்பை நிகரும் என்று வேற்றுமை மயக்கத்தில் பொருள் விரிப்பினுமாம். புனற்கே என்பதூஉம் வேற்றுமை மயக்கமேயாம். பொருவேல் - வினைத்தொகை. நள தமயந்தியர் சிற்றின்ப நிலையில் ஒத்த இனத்தா ரென்பது மட்டுமன்றிப் பேரின்ப நிலைக்கு அனுகூலமான அன் பொழுக்க முதலியவைகளிலும் ஒத்திருந்தன ரெனக் கொள்க. வெங்கனல் - தண்ணிலா என்புழிப் போல இயல்பின்மை நீக்கிய விசேடணம். (கஅள)

[தமயந்தி தன் தனங்களை முட்டி, நளனுடைய மார்பிற் பாய்ந்து கலவிச்சண்டை செய்தா ளெனல்.]

குழைமேலுங் கோமா னுயிர்மேலுங் கூந்தன்
மழைமேலும் வாளோடி மீள—விழைமேலே
யல்லோடும் வேலா னகலத் தொடும்பொருதாள்
வல்லோடுங் கொங்கை மடுத்து.

(ப - ரை) குழை மேலும் கோமான் உயிர் மேலும் கூந்தல் மழை மேலும் - (தமயந்தி) தன்னுடைய காதுகளின் மீதும் நளனுடைய உயிரின் மீதும் தன்னுடைய தலைமயிரென்னும் மேகத்தின் மீதும், வாள் ஓடி மீள - தன் கண்ணாகிய வாளானது விரைந்து சென்று திரும்பும்படி, அல் ஓடும் வேலான் அகலத்தோடு - இருள் ஓட ஒளி வீசும் வேலாயுத மேந்திய நளனுடைய மார்போடு, வல் ஓடும் கொங்கை மடுத்து - சொற்கேட்டான் காயும் தோற்றோடும் படியான முலைகளை முட்டி, விழைமேல் பொருதாள் - காதலாற் கலவிச்சண்டை செய்தாள்.

(க - ரை) தமயந்தி தன் காதுகளின் மீதும் நளனுடைய வுயிரின் மீதும் தன் தலை மயிரின் மீதும் கண்வாள் பாயக் கொங்கை யானையை முட்டி, அவனுடைய மார்போடு காதற்பெருகிக் கலவிச் சண்டை செய்தாள்.

(வி - ரை) காதளவோடிய கலகக்கண் ணென்று பெண்களின் கண்களைப் பேசுவது புலவரியற்கை யாதலால் குழைமேலும் என்றார். பெண்களின் கண்களைக் கூற்றுக் குவமையாக்குவதும் புலவர் கூற்றுஆகையால் கோமான் உயிர் மேலும் என்றார். கலவிப்போரில் அவிழ்ந்த கூந்தலை முடிய அவகாச மின்மையால் கூந்தன்மழை மேலு மென்றார். விழைமேலே என்பதை வேற்றுமை மயக்கமாக் கொள்க. அல்லோடும் என்பதற்குப் பகையிருள் பாறியகலு மென்னும் பொருள் விரிக்கலாம். விழை என்பதை இழை யெனப் பிரித்து இடரெய்துவாரு முளர். நளனுடைய மார்பாகிய மலையைத் தமய

ந்தியின் கொங்கை யானை முட்டி பெயர்த்ததென்று குறிப்பிற் கொள்க. இது பெண்பாற் கலவி கூறியபடியாம். (கஅ)

[தமயந்தியின் காதலாறு பாய்ந்ததால் நளனுடைய மார்பாகிய வயலிற் குங்கும வண்ட லிட்ட தெனல்.]

வீரனக லச்செறுவின் மீதோடிக் குங்குமத்தி
னீர விளவண்ட லிட்டதே—நேர்பொருத
காராரு மெல்லோதிக் கன்னியவள் காதலெனு
மோராறு பாய வுடைந்து.

(ப - ரை) நேர் பொருத - நேரிற் புணர்ந்து கலவிச் சண்டை செய்த, கருமை ஆரும் மென்மை ஓதி கன்னி அவள் காதல் என்னும் ஓர் ஆறு பாய - கருமை பொருந்திய மெல்லிய கூந்தலை யுடைய இளையாளாகிய அந்த தமயந்தியினுடைய ஆசையாகிய ஒரு நதி பாய்வதனால், உடைந்து வீரன் அகலம் செறுவின் மீது ஓடி-(மடை) திறந்து (போர்) வீரனாகிய நளனுடைய மார்பென்னும் வயலின் மேல் (வெள்ளம்) பெருகி ஓடி, குங்குமத்தின் ஈரம் இளமை வண்டல் இட்டது - குங்குமச் சாந்தின் குளிர்மணமுள்ள இள வண்டலை உண்டாக்கிற்று. (ஏ-அசைநிலை)

(கு - ரை) தமயந்தியின் காதலாறு பாய்வதனால், மடை திறந்து நளனுடைய மார்பென்னும் வயலில் வெள்ளம் பெருகி ஓடிக் குளிர் மணமுள்ள குங்குமச் சேற்றை யுண்டாக்கிற்று.

(வி - ரை) தமயந்தி செய்யும் காதற் சண்டையால் நளனுக்கு வேர்வை யரும்பி, அவன் மார்பிற் குங்குமம் சேறாய்க் குழம்பிற்றென்று கூட்டிக்கொள்க. அகலச்செறு - இருபெயரொட்டு. ஈரக் குங்குமத்தின் இளவண்ட லெனினுமாம். நேர் - எதிர்முகம். கார் என்பதை மேக மென்பாரு முளர். காதலாற்றில் அன்பின்ப

வயலிற் பாய்ந்து குங்குமச் சேடை குழம்பிற்றென்று உருவகத்தை திரப்பிக் கொள்க. கன்னியவள் - இருபெயரொட்டு. செவ்வான மிட்டது என்பது போல வண்டலிட்டது என்பதும் இலக்கணை. ஈரம்=குளிர்மை, இதை ஈர மில வென்பதனானு முணர்க. (கசுக)

[நளன், தமயந்தியின் கொங்கைகளை யழுத்தி யவள் கூந்தல் குலைய வளை யொலிக்கக் கூடினானெனல்.]

கொங்கை முகங்குழையக் கூந்தன் மழைகுலையச்
செங்கயற்க ணோடிச் செவிதடவ—அங்கை
வளைபூச லாட மடந்தையுடன் சேர்ந்தான்
விளைபூசற் கொல்யானை வேந்து.

(ப - ரை) விளை பூசல் கொல் யானை வேந்து - (பகைவரோடு) நேரிடும் சண்டையில் (அவர்களைத் தப்பாமற்) கொல்லும் வல்லமை யுள்ள யானைச் சேனையையுடைய நளமகாராசன், மடந்தையுடன் - தமயந்தியுடன், கொங்கை முகம் குழைய - (அவளுடைய) முலைக் காம்புகள் அழுந்தவும், கூந்தல் மழை குலைய - தலைமயிரென்னும் மேகம் அவிழ்ந்து அலையவும், செம்மை கயல் கண் ஓடி செவி தடவ - செவ்வரி படர்ந்த கயற்கண்டைபோன்ற கண்கள் விரைந்தோடிக் காதுகளைத் தடவவும், அம் கை வளை பூசல் ஆட - அழகான கைகளிற் பூண்டுள்ள வளையல்கள் (ஒன்றோடொன்று தாக்கி) ஒலிக்கவும், சேர்ந்தான் - கூடினான்.

(க - ரை) நளன் தமயந்தியோடு கூடுகையில், அவளுடைய கொங்கை முகங்கள் அழுந்தின; செங்கயற் கண்கள் செவிகளிற் பாய்ந்தன; அங்கை வளைகள் அசைந்தன; கூந்தல் அவிழ்ந்து சோர்ந்தது.

(வி - ரை) கொங்கை முகம் - முலைக்கண்கள் - முலைக்காம்பு கள்-நளன்-மார்பிற் பாய்ந்து அழுந்தின வென்க. மழைக்கூந்த லென மாற்றி உவமைத்தொகை யாகவுங் கொள்க. கலவி நலத்தாற் கண்

விழிகள் கயல்மீன்கள்போல விரைந்து புரண்டோடிப் பாய்ந்தன வென்பார் செங்கயற்கண்ணோடிச் செவிதடவ வென்றார். இது ஆண் பாற் கலவி யாகையால், நளனுடைய முதுகு முதலியவைகளைத் தமயந்தியின் கைகள் தழுவித் தடவினபடியே இருந்தன வென்பார் அங்கை வளை பூசலாட வென்றார். விளைபூசல் என்பதைப் பூசல்விளை யென மாற்றுவாருமுளர். வேந்து-ஆகுபெயர். (கஎ0)

[நளன் தமயந்தியோடு குண்டினபுரியில் நெடுங்காலங் கூடியிருந்தா னெனல்.]

தையல் தளிர்க்கரங்க டன்றடக்கை யாற்பற்றி
வைய முழுது மகிழ்தூங்கத்—தூய்ய
மணந்தான் முடித்ததற்பின் வானுதலுந் தானும்
புணர்ந்தான் நெடுங்காலம் புக்கு.

(ப - ரை) தையல் தளிர் கரங்கள் தன் தடம் கையால் பற்றி-தமயந்தியின் மாந்துளிர் போன்ற கைகளைத் தன் அகன்ற கை களாற் பிடித்து, தூய்ய மணம் - குற்றமற்ற கலியாணத்தை, வையம் முழுதும் மகிழ் தூங்க - இவ்வுலகிலுள்ளாரனைவரும் களிப் படைய, தான் முடித்தற் பின் - நளமகாராசன் நிறைவேற்றிய பிறகு, வான் நுதலும் தானும் நெடுமை காலம் புக்கு புணர்ந்தான் - ஒளிபொருந்திய நெற்றியை யுடையாளாகிய தமயந்தியும் (யோடு) தானும் பலநாள் அங்கேயே தங்கிக் கூடியிருந்தான்.

(க - ரை) நளன் தமயந்தியை மணந்தான். இருவரும் நெடு நாள் இன்புற்று வாழ்ந்தார்கள்.

(வி - ரை) தளிர்க்கரம்-உவமைத் தொகை. தடக்கை-பண்புத் தொகை. வையம்-ஆகுபெயர். மகிழ்தூங்க என்பதில் தூங்க என் பது மிகுதியைக் காட்டுகின்றது. காதலிருவர் கருத்தொருமித் தாதரவு பட்டதே யின்பம் என்றபடி நள தமயந்தியர் தந்திருமண நடைபெறு முன்பே கருத்தொருமித்த உண்மைக் காதலுடையாரா

யிருந்தமையான் 'தூய்ய மணம்' என்றார். நளன் தையல் காம் பற்றித் தூய்ய மணம் முடித்ததற் பின் வாணுதலோடு தானும் நெடுங்காலம் புக்குப் புணர்ந்தானென்று கூட்டுக. தமயந்தியோடு தானும் தன் மாமியாரகத்திலிருந்து கூடி யின்பநுகர்ந்தானென்று கொள்க. தமயந்தியும் தானும் புணர்ந்தா ளென்றிருக்க வேண்டு மென்பாரும், சிறப்பினால் புணர்ந்தானென்று ஆண்பாலொருமை முடிபெற்றதென்பாருமுளர். சீதையோடு இராமன் சென்றான் என்றபடி தமயந்தியோடு நளன் புணர்ந்தானென்று கொள்வதே சால்புடைத்தாம். எண்ணும்மை மூன்றாவதற்கு மயங்கிற்றென்க.



சுயம்வர காண்டம் முற்றுப் பெற்றது.

# (௨) கலி தொடர் காண்டம்

[கலிபுருடனென்னும் சனிபகவான் தான் சூளுரைத்தபடி நளனைப் பற்றித் தொடர்ந்து வாட்டும் கதையைக் காட்டுவதால் இது இப்பெயர் பெற்றது.]

[திருநெடுமாலே வடமொழி மறையின் ஆதி யாவார், தென் மொழி வேதமுதல்வ ராவா ரெனல்.]

காப்பு.

மூந்தை மறைநூன் முடியெனலாந் தண்குருகூர்ச்
செந்தமிழ் வேத சிரமெனலாம்—நந்தும்
புழைக்கைக்கு நேயப் பொதுவர் மகளிர்க்கும்
அழைக்கைக்கு முன்செல் லடி.

(ப - ரை) நந்தும் புழைக்கைக்கும் நேயம் பொதுவர் மகளிர்க்கும் அழைக்கைக்கு முன்செல்அடி-(முதலையிடத் தகப்பட்டு) வருந்திய யானைக்கும் தம்மிடத் தன்பு பூண்ட இடைப்பெண்களுக்கும்(காப்பாகத் தம்மை அவர்கள்)கூப்பிடுவதற்கு முந்தியே சென்ற (திருமால்) திருவடிகளை, மூந்தை மறை நூல் முடி என்னல்ஆம் — பழைமையாகிய வேதநூற் பொருளின் ஆதி யென்று சொல்லத் தகும்; தண்மை குருகூர் செம்மை தமிழ் வேதம் சிரம் என்னல்ஆம்—செந்தண்மையிற் சிறந்த திருக் குருகூரிற் பிறந்த செந்தமிழ்ப் பிரபந்த வேதத்தின் முதல் என்று மொழியத் தகும்.

(க - ரை) யானை முன்னும் அன்புள்ள இடைப் பெண்களின் சேனை முன்னும் சென்ற திருமால் திருவடிகளைப் பழமறையின் ஆதி யெனத் தகும் அன்றிச் செந்தமிழ்ப் புதுமறையின் முத லெனவுந் தகும்.

(வி-ரை) முந்தை மறை நூல் என்றது வடமொழி மறையை. தண்குருகூர்ச் செந்தமிழ்வேதமென்றது நம்மாழ்வா ரருளிச்செயல்களாகிய நாலாயிரப்பிரபந்தத் தமிழ் வேதத்தை. வடமொழி வேதம் சூத்திரர்க்கு மறைக்கப்படும் ஏதம் உடையதாகையால், மறையென்றார். தென்மொழி வேதமே வடமொழி வேதத்திற் றிரண்ட பொருளாய் ஐந்தாங் குலத்தோர்க்கும் வெளிப்படையாய் விளங்குவதாகையால் இதுவே உண்மைக்களஞ்சிய மென்பார், வேதம் என்றார். அது எழுதாக்கிளவியாய் அருகிய தென்பார் மறை யென்றார்; இது எழுதுகிளவியாய்ப் பெருகிய தென்பார், வேத மென்றார். ஆதி மூலமே என்றழைத்தயானைக்கு முன்சென்ற அடிகளை ஆதி யென்றும் இடைப்பெண்களுக்கு முன்சென்றவைகளை முத லென்றும் மொழிக. எனல் -எழுவாய், ஆம் - பயனிலை. (௯)

[சிவபெருமானே மெய்யன்ப ருள்ளத்தார்; அவரே எமக்குக் காப்பாவா ரெனல்.]

*செக்கர் நெடுவானிற் றிங்க ணிலாத்துளும்பி*
*உக்க தெனச்சடைமே லும்பர்நீர்—மிக்கொழுகும்*
*வெள்ளத்தான் வெள்ளி நெடுங்கிரியான் மெய்யன்ப*
*ருள்ளத்தா னெங்கட் குளன்.*

(ப - ரை) செக்கர் நெடுமை வானில் திங்கள் நிலா துளும்பி உக்கது என்ன-செந்நிறமாய்ப் பரவிய ஆகாயத்தில் சந்திரனுடைய ஒளியானது ததும்பிச் சிந்தியதுபோல, சடைமேல் உம்பர் நீர் மிக்கு ஒழுகும் வெள்ளத்தான்-தன் செஞ்சடையின்மேல் ஆகாச கங்கையானது மிகுந்து பாய்கின்ற நீர்ப்பெருக்கை யுடையவனும், வெள்ளி நெடுமை கிரியான் - வெண்மையாய் நீண்ட கயிலைமலையை யுடையவனும், மெய் அன்பர் உள்ளத்தான் - உண்மை யன்பர்கள் உள்ளத்தினுள்ளே எழுந்தருளியிருப்பவனுமாகிய சிவபெருமான், எங்கட்கு உளன் - எங்களுக்குக் (காவலாக) இருக்கின்றான்.

(க - ரை) செஞ்சடைமேல் வெண்ணீர்க் கங்கை பாயும் கயிலை மலை வாசியும் அன்பருள்ளத்தி னுள்ளே விளங்குபவனுமாகிய சிவ பெருமான் எமக்குக் காப்பாவான்.

(வி - ரை) செவ்வானம் செஞ்சடைக்கும், திங்கள் நிலா கங்கை நீர்க்கும் உவமானமாயினமை காண்க. செக்கர், நெடுவான்- பண்புத்தொகைகள். திங்கணிலா ஆறன்தொகைத் தற்கிழமை. "இறைவனே தொண்ட ருள்ளத் தொடுக்கம்" என்ற அவ்வை வாக்கின்படி மெய்யன்ப ருள்ளத்தா னென்றார். வெள்ளி, நெடுங்கிரி- பண்புத்தொகைகள், எங்கட்டு உளான் என்று சொந்தம் பாராட்டிக் கூறுவதால் ஆசிரியருடைய சைவப்பற்று விளங்குகிறது. (உ)

[நளன் சந்திரவட்டக் குடை நிழற்றச் சென்று தேரேறி னானெனல்.]

தவளத் தனிக்குடையின் வெண்ணிழலுந் தையல்
குவளைக் கருநிழலுங் கொள்ளப் — பவளக்
கொழுந்தேறிச் செந்நெற் குலைசாய்க்கு நாடன்
செழுந்தேரி லேறினான் சென்று.

(ப - ரை) பவளம் கொழுந்து ஏறி செம்மை நெல் குலைசாய்க்கும் நாடன்-பவளக்கொடியின் கொழுந்துகள் ஏறிச் செந்நெற் பயிர்களின் கதிர்களைச் சாய்க்கின்ற நிடத நாட்டரசனாகிய நளமகாராசன், தவளம் தனிகுடையின் வெண்மை நிழலும் - வெண்கொற்றக் குடையின் வெள்ளை நிழலும், தையல் குவளை கருமை நிழலும் கொள்ள - தமயந்தியினுடைய கண்களென்னும் கருநெய்தல் மலரின் கருமையாகிய நிழலும் தன்னைக் கவிந்துகொண்டிருக்க, சென்று செழுமை தேரில் ஏறினான் - போய் அழகான தேர்மேலேறினான்.

(க - ரை) வெண்கொற்றக் குடையின் வெள்ளை நிழலுந் தமயந்தியின் கருங்குவளைக் கண்களின் கருமை நிழலுஞ் சூழ்ந்து கொள்ள நளன் சென்று தேர்மே லேறினான்.

(வி - ரை) தமயந்தி தன்னைத் தொடரச் சென்று நளன் தேரேறினனென்று கூட்டுக. அரசர் குடை வெண்பட்டா லாவதென்னும் மரபால் தவளத் தனிக்குடை யென்றார். தனி - ஒப்பின்மை கொற்றத்திற் சிறியது தவளத் தனிக் குடை சந்திரனைப் போலுதலால் தமயந்தியின் குவளைக் கண்கள் மலர்ந்தன வெனக் கொள்க. பிறந்தகத்திலிருந்து புக்கத்திற்குப் போகத் தமயந்தி மனமகிழ்ந்தாளெனக் கொள்க. பவளக் கொழுந்தேறிச் செந்நெற் குலைசாய்ப் பதுபோல நளனும் பிற நாட்டரசரையும் வணக்கவல்லா னென்று குறிப்பிற் கொள்க. (௩)

[தமயந்திக்கு நளன், சோலை வண்டுகள் மாதரை யெதிர் கோள்வனபோ லொலிப்பதைக் காட்டினனெனல்.]

மங்கையர்கள் வாச மலர்கொய்வான் வந்தடையப்
பொங்கி யெழுந்த பொறிவண்டு —கொங்கோ
டெதிர்கொண் டணைவனபோ லேங்குவன முத்தின்
கதிர்கொண்ட பூண்முலையாய் காண்.

(ப - ரை) முத்தின் கதிர் கொண்ட பூண் முலையாய்-முத்து மாலையின் ஒளியினைக் கொண்ட பிறவணிகளணிந்த முலைகளையுடையவளே!, மங்கையர்கள் வாசம் மலர் கொய்வான் வந்து அடைய-பெண்கள் மணமுள்ள பூப்பறிக்க வந்து சேருவதனால், பொங்கி எழுந்த பொறிவண்டு - மேலோங்கிக் கிளம்பின புள்ளி வண்டுகள், கொங்கோடு எதிர்கொண்டு அணைவன போல் ஏங்குவன காண் - தேனோடு (அவர்களை) எதிர்கொண்டு சென்று சேர்வனபோல் ஒலிக்கின்றன (அவைகளை நீ) பார்.

(க - ரை) தமயந்திக்கு நளன், "மாதரசி! இதோ பார் மாதரைக் கண்ட இவ்வண்டுகள் மலர்வாய்த் தேனோடு இசைநெழுகின்றகாட்சி அவர்களை அலைகள் எதிர்கொள்வனபோற்றோன்றுகிறது" என்றான்.

(வி - ரை) மங்கையர்கள்-நளனோடு செல்லும் பரிவார மாதர்கள். கொய்வான்-வானீற்று வினையெச்சம். பொறிவண்டு-இரண்டன் உருபும்பயனும் உடன்றொக்கத்தொகை. கொங்கு-வாசனையெனினுமாம். பூண் முத்தின் கதிர் கொண்ட முலையாய் எனினுமாம். முலையாய்-அண்மைவிளி. பூண் முலை-அன்மொழித்தொகை. முத்து - மாலைக் காகுபெயர். சோலையிற் பூக்கொய்யச் சென்ற பூவையரைக் கண்ட பூத்தேன் வண்டுகள் இரிந்திரைந் தேழீஉங் காட்சியே இங்குக் குறித்ததென்க. பொங்கி - மேலோக்கி-இலக்கணை. பொறிவண்டு-ஞிமிறு-பொன் வண்டு. மற்றொன்று வலியாரைக் கண்ட மெலியார் காணிக்கை செலுத்துவது போன்ற காட்சியென்று கண்டு கொள்க. (௬)

[தமயந்திக்கு நளன், பூங்கொம்புகள் பூவையரடியிற் றாழ்வன பாரென்று காட்டினனெனல்.]

பாவையர்கை தீண்டப் பணியாதார் யாவரே
பூவையர்கை தீண்டலும்அப் பூங்கொம்பு—மேவியவர்
பொன்னடியிற் றாழ்ந்தனவே பூங்குழலாய்காணென்றான்
மின்னெடுவேற் கையான் விரைந்து

(ப - ரை) மின் நெடுமை வேல் கையான் - ஒளிவீசி நீண்ட வேலேந்துங் கையையுடைய நளமகாராசன், பூங்குழலாய் - ஏ பூமுடித்த கூந்தலையுடைய நங்காய்!, பாவையர் கை தீண்ட பணியாதார் யாவர் ஏ - பெண்கள் கையால் தொடின் வணங்காதார் யாவர்(ஒருவரு மிலர் என்றபடி), பூவையர் கை தீண்டலும்-பெண்கள் கை

களால் தொட்டவுடன், அ பூ கொம்பு மேவி அவர் பொன் அடியில் தாழ்ந்தன வ - அந்தப் பூங் கிளைகள் வணங்கி வந்து அவர்களுடைய திருவடிகளில் வணங்கி யிருக்கின்றனவே, விரைந்து காண் என்றான்-அதை நீ விரைவாகப் பாரென்று சொன்னான்.

(கு - ரை) தமயந்திக்கு நளன், "ஏ, காதலீ! பெண்கள் கையால் தொட்டால் உருகி வணங்காதாரும் உண்டா? இதோ பார் இந்தப் பூங்கொம்புகள் அவர்கள் கை பட்டதும் வணங்கி வந்து அவர்கள் பாதங்களில் விழுகின்றன" என்றான்.

(வி - ரை) பாவையர், பூவையர் - ஆகுபெயர்கள். யாவரே, தாழ்ந்தனவேஎன்பவைகளிலுள்ள ஏகாரங்கள் தேற்றப்பொருளன-அசைகளாகத் தள்ளுவாருமுளர். பூங்கொம்பு-பன்மையிலொருமை. பொன்மை + அடி - திருவடி. பூங்குழல் - அன்மொழித்தொகை. 'நாணியென்பதை நாரியென்றுரைத்திடு நலத்தால் வேணுவான து வளைந்து வந்திறங்கிய தென்றல்' என்றும், 'மங்கைமார் செங்கை பட்டால் யாவரே வணங்கிலாதார்' என்று கம்பரும் கூறினமையை இப்பாட்டோ டொப்பிட்டுக் காண்க. (௯)

[தமயந்திக்கு நளன், "இதோ பார், இம்மாதின் முகத்தைத் தாமரை யென்று வண்டு மொய்க்கின்றது" என்று காட்டினனெனல்.]

மங்கை யொருத்தி மலர்கொய்வாள் வாண்முகத்தைப்
பங்கயமென் றெண்ணிப் படிவண்டைச்—செங்கையாற்
காத்தாளக் கைம்மலரைக் காந்தளெனப் பாய்தலுமே
வேர்த்தாளைக் காணென்றான் வேந்து.

(ப - ரை) மலர் கொய்வாள் மங்கை ஒருத்தி வாள் முகத்தை - பூப் பறிப்பவளாகிய பெண்ணொருத்தி தனது ஒளிவீசும் முகத்தை, பங்கயம் என்று எண்ணி படி வண்டை செங்கையால் காத்தாள்-தாமரை பூ வென்று நினைத்து மொய்க்கும் வண்டைத் தன் சிவந்த கை

யால் தடுத்தாள், அ கைக மலரை காந்தள் என பாய்தலும் வேர்த் தாளை - அந்தத் தாமரை போன்ற கையையும் (அது) காந்தள் மலரென் றெண்ணிப் பாய்ந்தவுடனே (அச்சத்தினால்) வேர்வரும்ப நின்றாளவளை, வேந்து காண் என்றான்-நளமகாராசன் நீ பாரென்று தமயந்திக்குக் காட்டினான்.

(க - ரை) "மங்கையாகிய ஒருத்தி மலர் கொய்கிறாள். (அவளுடைய) வாண்முகத்தைத் தாமரை யென்று வண்டு தாவுகிறது. அவள் கையால் தடுக்கிறாள். அக் கையையும் அது காந்தட் பூவென்று பாய்கிற வேடிக்கையை நீ பா" ரென்று நளன் தமயந்திக்குக் காட்டினான்.

(வி - ரை) மங்கையாகிய ஒருத்தி மலர் கொய்துகொண்டிருக்கிறாள் (அவளுடைய) வாண்முகத்தை யென்று கூட்டினுமாம். படிவண்டு - வினைத்தொகை. அக்கைம் மலரை யென்பத னிற்றில் உம்மை தொக்கது. வாண்முகத்தைத் தானபங்கய மென்று பாய்ந்த தென்றால் கைம் மலரையும் காந்தளென்று தாவிற்றென்று ஒட்டிக் காண்க. கைம்மலர் - மலர்க்கை - இலக்கணப்போலி - உவமத் தொகை. கையாகிய மலர் எனின் இருபெயரொட்டு. மலர் கொய்வாளாகி என்பதும் மற்றொன்று. வேர்த்தாளை யென்பதற்கு வேர்த்தவளாகிய அவளை யெனினுமாம். மலர் கொய்வாள், வேர்த்தாள்-வினையாலணையும் பெயர்கள். (௪)

[தமயந்திக்கு நளன், "இதோ பார் இம் மாது, கலவிபுரியும் வண்டைக் கண்டு மலரைக் கொய்யாமல் தளிரைக் கொய்கிறாள்" என்றனனெனல்.]

புல்லும் வரி வண்டைக் கண்டு புனமயில்போல்
செல்லு மடந்தை சிலம்பவித்து—மெல்லப்போய்
அம்மலரைக் கொய்யா தருந்தளிரைக் கொய்வாளைச்
செம்மலரிற் றேனே தெளி.

(ப - ரை) செம்மை மலரில் தேனே - செழித்த மலர்களிற் பொழியும் தேன் போன்றவளே, புல்லும் வரி வண்டை கண்டு- (பூத்த மலரிற்) புணரும் கீற்றுவண்டுகளைப் பார்த்து, புனம் மயில் போல் செல்லும் மடந்தை - கானமயில் போற் போகின்ற ஒரு பெண், சிலம்பு அவித்து மெல்ல போய் - தன் காற்சிலம் போசை யை அடக்கிப் பைய நடந்து, அ மலரை கொய்யாது அருமை தளிரை கொய்வாளை - அப் பூவைப் பறிக்காமல் அழகான தளிர் களைப் பறிக்கின்றவளை, தெளி - கவனித்துப் பார்.

(க - ரை) "பூவிற் கலவியிற் களித்திருக்கும் வண்டைக் கண்டு சந்தடி செய்யாமற் பையச் சென்று, அப்பூவைக் கொய்யாமல் தளி ரைக் கொய்கிறாள் இங்கொருத்தி, இதை நீ பார்" என்று நளன் தமயந்திக்குக் காட்டினான்.

(வி - ரை) காற் சிலம்போசை கல்லென்றொலித்தால் கலவி யிற் களித்திருக்கும் வண்டுக் கிடையூறு மென்று பைய நடந்தாள் அப் பைந்தொடி யென்பதனால் சிலம்பவித்து மெல்லப்போய் என் ருர். அவள் தானும் கலவிநலங் கண்டவளாகையால், கலவியிற் களித்திருக்கும் வண்டிருக்கும் மலரைக் கொய்ய மனம் வராமல் தளிரைக் கொய்தாளென்று தெரிக. அக்காலத்துக் காரிகையார், மன்னுயிரைத் தம்முயிர்போல் மதிக்கும் மாட்சி சிறந்திருந்தமை காண்க. இப்படிப் பூக் கொய்தல் புனலாடல் பொழில் சேறல் முதலிய போதுபோக்கால் அக்காலத் தங்கையார் இயற்கைப் பொருள் அமைப்பின் உண்மை உணர்ச்சி உற்றிருந்தமையை உய்த் துணர்க. சிலம்பு ஓசைக்கானமை ஆகுபெயர் ஆம் என்றறிக. (ரு)

[தமயந்திக்கு நளன், "இதோ பார், நாயகன் ஒருவன் தன்னாயகியின் இடை தாளாதென்று, தான் பறித்த மலரை யவள் பாதத்தில் சூட்டுகிரு னெனல்.]

கொய்த மலரைக் கொடுங்கையி னாலணைத்து
மொய்குழலிற் சூட்டுவான் முன்வந்து—தையலாள்
பாதார விந்தத்தே சூட்டினான் பாவையிடைக்
காதார மின்மை யறிந்து.

(ப - ரை) கொய்த மலரை கொடு கையினால் அணைத்து - (நாயகன் ஒருவன்) தான் பறித்த மலர்களைத் தன் வளைந்த கையாற் பற்றிக்கொண்டு, மொய் குழலில் சூட்டுவான் முன் வந்து - தன்னாயகியின் நெருங்கிய கூந்தலில் முடிப்பதற்கு அவள் எதிரில் வந்து நின்று (உற்றுப்பார்த்து), பாவை இடைக்கு ஆதாரம் இன்மை அறிந்து - அப்பெண்ணின் இடுப்புக்கு வேறே ஆதாரமில்லாமையைத் தெரிந்துகொண்டு, தையலாள் பாத அரவிந்தத்து (ஏ) சூட்டினான் - அப்பெண்ணினுடைய தாமரை போன்ற பாதங்களிலே வைத்தான்.

(கு - ரை) நாயகன் ஒருவன் வல்விரைந்து பூக்கொய்து கொண்டுவந்து தன்னாயகியின் கூந்தலில் முடித்தால் இடை தாளாதென்று அவளுடைய பாதங்களிற் சூட்டினான்.

(வி - ரை) கொடு + கை = கொடுங்கை - கொடுவாள் என்புழிப்போல. இங்கே கொடுங்கை யென்பதற்கு வளைந்தகையென்று பொருள் கோடல் சிறந்ததன்று; கொடு என்னும் அடைமொழியே வேண்டாததாகும். கொய்த என்பதற்கு மோனையாகவேண்டியே கொடுங்கை யென்றார் புகழேந்தியார். வளைவாகிய கை உட்புறம் வளைந்த கை யென்று பொருள் கோடலால் அந்நாயகனுக்குக் கருக்குற்றத்தால் உறுப்பூனம் உண்டென் றேற்படுகிறது. அவன் பிறவியிலேயே வளைந்த விரற் கையனென்று மலைத்தற்கிடமாம். ஆகையால் இப்பாடல், "கொய்த மலரைக் கோடு வந்து நாயகியின் மொய்குழலிற் சூட்டுவான் முன்னின்றான் — தையலாள்............அறிந்து" என்றிருத்தல் தக்கதாம். ஒருவன் என்னும் தோன்றா எழுவாயாகிய சொல்லெச்சத்திற்கும் இடமில்லை யென்றறிக. (கா)

[மலர்களும் முத்துக்களும் நிறைந்த மணற்மேடுகள், புலவிப் பெண்களுக்கு இளைஞர் அமைத்த கலவிப் படுக்கைபோ லிருந்தன வேனல்.]

*எற்ற முலைபார்க் கிளைஞ ரிடும்புலவித்*
*தோற்ற வமளியெனத் தோற்றுமால்—காற்றசைப்ப*
*உக்க மலரோ டுகுத்தவளை முத்தமே*
*எக்கர் மணன்மே லிசைந்து.*

(ப - ரை) காற்று அசைப்ப - காற்றசைத்து உலுக்கியத னால், உக்க மலரோடு வளை உகுத்த முத்தமே-உதிர்ந்த பூக்களோடு சங்கங்கள் உயிர்த்த முத்தங்களே, எக்கர் மணல் மேல் இசைந்து - வெள்ளமேறப் படிந்த மணன் மேடு மேற் பொருந்தி, எற்ற முலை யார்க்கு - பருவத்துக்கும் உருவத்துக்குந் தக்க தனங்களையுடைய பெண்களுக்கு, இளைஞர் இடும் புலவி தோற்றம் அமளி என்ன தோற்றும் - அவர்களுடைய இளங்காதலர் இட்டு வைத்த ஊடற் குறிப்புள்ள படுக்கையைப் போலத் தோன்றும்.

(க - ரை) காற்று வீழ்த்திய மலர்களும் சங்கீன்ற முத்துக்க ளும் எக்கர் மணன்மேட்டிற் படிந்து, இளங்காதலியர்க்கு அவர்கள் காதலர் இட்டுவைத்த புலவிப் படுக்கைபோல விளங்கும்.

(வி - ரை) எக்கர் என்பது எக்குதல் என்று தெலுங்கிலும் வழங்குகிறது. எக்குதல்-ஏறுதல்-வெள்ளம் ஏறுதல்; இது எக் கல் என்றும் வழங்கும் -வேகமாய் வெள்ளம் பாய்கையிற் கொழித்த மணல் மேடுகளுக்கு எக்கர் மணல் என்று வழங்குகிறது. எற்ற முலை யார் என்பதற்கு வளர்ந்த முலையாரென்றும் தாங்கின முலையா ரென்றும் இரண்டா மூன்றும் பொருள் கூறுவாரு முளர். பரு வத்துக்கும் உருவத்துக்கும் ஏற்ற முலையரென்பதே இசைந்ததாம். ஏற்றம் முலையாரென்றும் பிரிக்கலாம். முத்தமே என்பதில் ஏகா ரத்தை அசையாகத் தள்ளுவதினும் தேற்றமாகக் கொள்ளுவதே தகுதியாம். எற்றமுலையார் - ஏந்து முலையா ரென்பதூஉம் இன் னொன்று.

(எ

[உதிர்ந்த மலர்களின்மேல் வாடின மரக்கிளை ஆடுவதால், சோலையின் அழகானது புணர்ந்து வாடின பூவரை யைப்போ லிருந்த தெனல்.]

அலர்ந்த மலர்சிந்தி யம்மலர்மேற் கொம்பு
புலர்ந்தசைந்து பூவணைமேற் புல்லிக்—கலந்தொசிந்த
புல்லென்ற கோலத்துப் பூவையரைப் போன்றதே
அல்லென்ற சோலை யழகு.

(ப - ரை) கொம்பு அலர்ந்த மலர் சிந்தி – மரக்கிளைகள் பூத்த மலர்களை உதிர்த்து, அ மலர்மேல் புலர்ந்து அசைந்து–அம் மலர்களின்மேல் வாடி யாடுவதால், அல் என்ற சோலை அழகு– இருண்டுள்ள தோப்பின் அழகானது, பூ அணைமேல் புல்லி கலந்து ஒசிந்த – பூப் படுக்கையின்மேல் (தமது நாயகரைத்) தழுவிப் புணர்ந்து வாடின, புல் என்ற கோலத்து பூவையரை போன்றது - மங்கிய அழகுடைய பெண்களுக்குச் சமானமாயிருந்தது.

(க - ரை) மரக்கிளைகள் தாம் பூத்த மலர்களைச் சிந்தி, அவைகளின்மேல் வாடியாடுவதாற் சோலையழகானது, பூவணை மேல் தங்கள் நாயகரைத் தழுவிப்புணர்ந்து வாடின தையலரைப் போலிருந்தது.

(வி - ரை) அழகு போன்றது என்று கூட்டுக. உதிர்ந்த மலர்கள் பூவணைக்கும், கொம்புகள் பூவையர்க்கும், அவைகள் வாடி யாடுதல் அவர்கள் தந்நாயகரைத் தழுவிப்புணர்ந்து வாடுவதற்கும் உவமான மாயினமையை உய்த்துணர்ந்து கொள்க. அசைந்து என்பதை அசைய என்பதன் திரியாகக் கொண்டதனால், ஆடுவ தால் என்று பொருள் கொண்டாம். மரங்கள் தழைத்து நெருங்கி யிருந்ததால் சோலை யிருண்டிருந்த தென்று தெரிக. பூவையர்– உவமை யாகுபெயர், இங்கிது அழகுக் கிருமடி யாகுபெயராய் வந்தது. புல் என்ற–ஒளி மழுங்கின எனினுமாம். அல் என்ற

என்பதற்கு இருன் என்று சொல்லித் தகுந்த என்பதுமொன்று. (அ)

[தமயந்தியை நோக்கி நளன், "ஆம்பற்பூவை மார்பிலணைத்த மங்கையின் முகத்தை யது மதி யெனப் பார்ப்பதைப் பார்" என்றனனெனல்.]

கொங்கை முகத்தணையக் கூட்டிக் கொடுங்கையால்
அங்கணைக்க வாய்நெகிழ்ந்த வாம்பற்பூக்—கொங்கவிழ்தேன்
வார்க்கின்ற கூந்தன் முகத்தை மதியென்று
பார்க்கின்ற தென்னலாம் பார்.

(ப - ரை) கொங்கு அவிழ் தேன் வார்க்கின்ற கூந்தல் - மணம் வீசும் தேனை ஒழுக்குகின்ற (பூ முடித்த) தலைமயிருள்ள ஒரு பெண்ணானவள், கொங்கை முகத்து அணைய கூட்டி - தன் முலை முகத்தில் பொருந்தச் சேர்த்து, கொடுகையால் அங்கு அணைக்க - வளைந்த கையால் அவ்விடத்தில் நன்றாய் அணைத்துக்கொண்டிருப்பதனால், வாய் நெகிழ்ந்த ஆம்பல் பூ - வாய் விரிந்த அல்லிப் பூவானது, முகத்தை மதி என்று பார்க்கின்றது என்னல் ஆம் பார் - (அவளுடைய) முகத்தைச் சந்திரனென்று எண்ணி மலரப் பார்க்கின்றது என்று சொல்லலாம்படி இருக்கின்றதை நீ பார்.

(க - ரை) பெண்ணொருத்தி தன் முலை முகட்டில் ஓர் ஆம்பன் மலரை அணைத்ததனால் அது வாய் விரிந்திருப்பது, அவள் முகத்தை அது சந்திரனென்றெண்ணி மலரப்பார்க்கின்ற தென்னலாம்படி யிருப்பதை நீ பாரென்று நளன் தமயந்திக்குக் காட்டினான்.

(வி - ரை) கொடுங்கை-(கஎஎ)ஞ் செய்யுளைக் காண்க. ஆம்பல்-இங்கே அல்லிக்குப் பொதுவானாலும் இலக்கணையாற் செவ்வல்லியைக் கொள்க. கூந்தல் - இங்கு ஆகுபெயராய்ப் பெண்ணை யுணர்த்திற்று. நங்கை யொருத்தி தன் கொங்கை முகத்தணையக்

கூட்டிக் கொடுங்கையால் ஆசையாயணைத்த ஆம்பற்பூவை அழகாய்ப் பார்த்தபோது, அஃதவள் முகத்தை மதியமென்றெண்ணி மலர்ந்த தென்னலாம்படி யிருந்ததென்று கொள்க. (கூ)

[தமயந்திக்கு நளன், "இந்தப் பெண்ணைப் பார், குவளை யிதழை நெற்றியில் வைத்துச் சிவனைப்போலத் தோன்றுகிறாள்" என்று னெனல்.]

கொய்த குவளை கிழித்துக் குறுநுதன்மே
லெய்தத் தனிவைத்த வேந்திழையாள்—வையத்தார்
உண்ணாக் கடுவிடத்தை யுண்ட வொருமூன்று
கண்ணானைப் போன்றனளே காண்.

(ப - ரை) கொய்த குவளை கிழித்து - பறித்த கருநெய்தற் பூவிதழைக் கிழித்து, குறுமை நுதல்மேல்-தனது குறுகிய நெற்றி யின்மேல், எய்த தனிமை வைத்த ஏந்திழையாள் - பொருந்த விநோதமாக வைத்த பெண்ணொருத்தி, வையத்தார் உண்ணாத கடுமை விடத்தை - மூவுலகத்தி லெவரும் உண்ணமாட்டாத கொடிய ஆலாகல விஷத்தை, உண்ட ஒரு மூன்று கண்ணானை போன்றனள் காண் - உண்டு காத்த முக்கண்ணனாகிய சிவபெருமானைப் போலத் தோன்றுகின்றாள் இதை நீ பார்ப்பாயாக.

(க - ரை) " கருநெய்தற் பூவிதழைக் கிள்ளித் தன் னெற்றியி லொட்டிக்கொண்ட மாது, சாக்ஷாத் சிவபெருமானைப் போலத் தோன்றுகின்றாள். இந்த வேடிக்கையை நீ பார்" என்றான் நளன்.

(வி - ரை) கருநெய்தற் பூ கறுப்பாகையால் கண்ணுக் கிணையாயிற்று. அதை அவள் கிழித்து நெற்றியி லப்பிக்கொண்டதால் இருகண்ணி யென்பது போய்ச் சிவபெருமானைப் போல முக்கண்ணியாய்த் தோன்றினது விநோதமாயிருந்தது. பெண்களி னெற்றி குறுகி யிளம்பிறைபோல் இருப்பதே இயற்கையழ கென்பதால் குறுநுத லென்றார். தனி வைத்த என்பதில் தனிமை யென்

பதற்கு விநோதமாக விருபமாக வென்பதே விசேடமா மென்க. வையத்தார் என்பது பொதுவியல் ஏழாஞ் சூத்திர நன்னூற்படி மூவுலகத்தவரையுங் குறித்தது. ஒரு மூன்று என்பது ஒருநூறு என்பதுபோலப் பண்புத்தொகை. (௧0)

[தமயந்திக்கு நளன், "இதோ பார், பெண்ணொருத்தி தன் நாயகன் வீசு நீரை அஞ்சி, அதைத் திருமகளுக்குத் தெரிவிப்பாள் போலத் தாமரைப்பூவில் தன் முகத்தைத் திருப்பிவைத்துக் கொண்டிருக்கிறாள்" என்றானெனல்.]

கொழுநன் கொழுந்தாரை நீர்வீசக் கூசிச்
செழுமுகத்தைத் தாமரைக்கே சேர்த்தாள்—கெழுமியவக்
கோமகற்குத் தானினைந்த குற்றங்க ளத்தனையும்
பூமகட்குச் சொல்லுவாள் போல்.

(ப - ரை) கொழுநன் கொழுமை தாரை வீச கூசி - தன் நாயகன் தடித்த நீர்த்தாரைகளைத் தன்மேல் மோதியதனாற் கூச்சமாய், கெழுமிய அ கோமகன்கு - (அன்பு பொருந்திய) அவ் வாண்மக்களிற் சிறந்த விட நாயகனிடத்தில, தான் குற்றங்கள் நினைந்த அத்தனையும் - தான் குற்றங்களென்று கண்ட எல்லாவற்றையும், பூமகன்கு சொல்லுவாள் போல் - திருமகளுக்குத் தெரிவிப்பவள்போல, செழுமை முகத்தை தாமரைக்கு சேர்த்தாள் - அழகான தன் முகத்தைத் திருப்பித் தாமரைப் பூவிற் பொருந்த வைத்தாள்.

(க - ரை) "வேடிக்கையாய்த் தன்மேல் தண்ணீர் வீசின தன்னாயகனுக் கஞ்சித் தன் முகத்தைத் தாமரைப்பூவிற் சேர்த்த மாது அந்நாயகனிடத்திற் றான் கண்ட குற்றங்களைத் திருமகளுக்குச் சொல்லுபவள்போலத் தோன்றுகிறாள், பார்" என்றானளன்.

(வி - ரை) (௧அ0)ம் செய்யுளிலிருந்து நீர்விளையாடர் சிறப்புத் தொடர்ந்து வருகிறது; இங்கது விளக்கமா யிருப்பதை

உய்த்துணர்க. வேடிக்கையாய்க் குளத்தி லவன், தன்மேல் வீசு நீர்த்தாரைக் கஞ்சித் தன் முகத்தைத் தாமரைப்பூவில் மறைத்துக் கொண்ட நாயகி, அந்நாயகன்மேல் தான் கண்ட குற்றங்களை அத் தாமரையில் வாழும் திருமகளுக்குத் தெரிவிப்பது போலிருந்த தென்பது இயற்கை நவிற்சி யணி. (கக)

[தமயந்திக்கு நளன், "இதோ பார், இன்னொருத்தி, மும்முகம் படைத்தவள் போலத் தாமரை மலர்களைத் தன்னிரு காதுகளிலும் செருகி வருகிறாள்" என்றானெனல்.]

பொய்தற் கமலத்தின் போதிரண்டைக் காதிரண்டிற்
பெய்து முகமூன்று பெற்றாள்போல்—எய்த
வருவாளைப் பாரென்றான் மாற்றாரை வென்று
செருவாளைப் பார்த்துவக்குஞ் சேய்.

(ப - ரை) மாற்றாரை வென்று செரு வாளை பார்த்து உவக்கும் சேய் - பகையரசரை வெற்றி கொண்டதனால் சண்டை செய்யும் வாளாயுதத்தைப் பார்த்து மகிழும் இளவரசனாகிய நளன், பொய்தல் இரண்டு கமலத்தின் போதை - விளையாட்டுக்காக இரண்டு தாமரை மலர்களை, இரண்டு காதில் பெய்து - தன்னிரண்டு காதுகளிலும் செருகிக்கொண்டு, மூன்று முகம் பெற்றாள் போல்-மூன்று முகங்களைப் படைத்தவள் போல, எய்த வருவாளை பார் என்றான்-நம்மை நெருங்கி வரூஉம் இந்நாயகியைப் பாரென்று தன்னாயகியாகிய தமயந்திக்குக் காட்டினான்.

(க - ரை) விநோதமாகத் தாமரை மலர்களைத் தன்னிரு காதுகளிலும் செருகி மும்முகம் படைத்தவள்போல வரூஉம் பெண்ணொருத்தியை இதோ பாரென்று காட்டினான் நளன்.

(வி - ரை) இயற்கையாய் அவட்குள்ள முகத் தாமரையோடு செயற்கையாய்ச் செருகியுள்ள செவித்தாமரைகளிரண்டுஞ்சேர்ந்து

மும்முகக்க ளாயினமை காண்க. அலராத மொட்டுத் தாமரை மேட்டிளங் கொங்கைக்கும் அலர்ந்த செந்தாமரைப் போது முகத்துக்கும் இணையாவது இயற்கை யென்க. போதிரண்டு, காதிரண்டு, முகமூன்று-இலக்கணப்போலிகள். வருவானுக்குச் செருவான் திரிபணியாவது காண்க. மாற்றாரை வென்ற மகிழ்ச்சியால் செருவானைப் பார்த்துவப்பது வீரர் செய்கை யென்று தெரிந்துகொள்க. சேய்-ஆகுபெயராய் நளனைக் குறித்தது. உவக்கும், வியக்கும், உகக்கும் - ஒரு தொடர். (கஉ)

[தமயந்திக்கு நளன், "இதோ பார், இந்நாயகன், மூழ்கி நிமிர்ந்த தன்னுயகியின் முகத்தைத் தாமரை மலரென்றெண்ணி, அவளைத் தேடுகிறான்" என்றுனெனல்.]

பொன்னுடைய வாசப் பொகுட்டு மலரலையத்
தன்னுடனே மூழ்கித் தனித்தெழுந்த—மின்னுடைய
பூணு டிருமுகத்தைப் புண்டரிக மென்றயிர்த்துக்
காணு தயர்வானைக் காண்.

(ப - ரை) பொன் உடைய வாசம் பொகுட்டு மலர் அலைய - பொன்போன்ற மகரப்பொடியின் மணத்தையும் கொட்டையையுமுடைய தாமரை மலர்கள் அலையும்படி, தன்னுடன் ஏ மூழ்கி தனித்து எழுந்த - தன்னோடு கூடவே தண்ணீரில் மூழ்கி (தனக்கு முந்தி) தனியாயெழுந்த, மின் உடைய பூணாள் திரு முகத்தை-ஒலியுள்ள ஆபரணமணிந்த தன்னுயகியின் அழகான முகத்தை, புண்டரிகம் என்று அயிர்த்து - தாமரைப் போதோடு அதுவுமொரு தாமரைப் போதென்று ஐயுற்று, காணுது அயர்வானை காண்-அவளைக் காணுமல் வருந்தும் இந்நாயகனை (நீ) பார்.

(க - ரை) "தன்னோடு கூடவே தண்ணீரில் மூழ்கித் தனக்கு முந்தித் தனித்தெழுந்த நாயகியின் முகத்தைத் தாமரை யென்று சந்தேகித்து, அவளைக் காணுமல் வருந்தித் தேடும் இந்நாயகனை நீ பார்" என்றுனன்.

(வி - ரை) ஆண் மகன் உடல் உரஞ் சிறந்தவனாகையால் தண்ணீர்க்குள் மூழ்கி மூச்சுத்திணறாமல் நெடுநேரமிருந்தான்; நாயகி பெண்மகளாகையால், அவனோடு கூடவே மூழ்கியும் மூச்சுப்பிடிக்க வலியின்றி அவனுக்கு முந்தி யெழுந்து தண்ணீர்க்குமேல் தலையை நிமிர்த்திருந்தாள்; பிந்தியெழுந்த நாயகன் தாமரை மலர்க்கிடையில், அவள்முகத்தையும் அதுவென்று ஐயுற்று அவளைக் காணாமல் வருந்தினானென்று தெரிந்துகொள்க. 'பொன்னையளித்தே பொன்னவிர் எகினப்புள்ளே' என்று பிற ஆன்றோரும் பணித்தமையால் இங்கே பொன் என்பதற்குத் திருமகளென்றும் செப்பலாம், பொன் மகரந்தத்திற் காகுபெயர். புண்டரிகம் வெண்டாமரையேனும் இனவொருமையால் செந்தாமரைக் காயிற்று. (கங)

[தமயந்திக்கு நளன், "இதோ பார், இந்நங்கை மூழ்கி யெழுந்து மயிரை முறுக்குதல், கரும்பாம்பு வெண்மதியை விழுங்குங் காட்சிபோ லிருக்கின்றது" என்று னெனல்.]

சிறுக்கின்ற வாண்முகமுஞ் செங்காந்தட் கையான்
முறுக்குநெடு மூரிக் குழலுங்—குறிக்கிற்
கரும்பாம்பு வெண்மதியைக் கைக்கொண்ட காட்சி
அரும்பாம் பணைமுலையா யாம்.

(ப - ரை) அரும்பு ஆம் பணை முலையாய்-அரும்புக்குச் சமானமான பருத்த முலைகளையுடையவளே!, சிறுக்கின்ற வாள் முகமும்-இப்பெண்ணின் சிறுத்திருக்கின்ற ஒளிபொருந்திய முகத்தையும், செம்மை காந்தள் கையால் முறுக்கும் நெடுமை மூரி குழலும் குறிக்கின் - சிவந்த காந்தட் பூவனைய கையினால் முறுக்கேறுகின்ற வளைந்த கூந்தலையும் கூர்ந்து பார்த்தால், வெண் மதியை கரும் பாம்பு கைக்கொண்ட காட்சி ஆம் - வெண்ணிலாவைக் காரரவாகிய (இராகு) விழுங்கப்பற்றின தோற்றமாகும்.

(க - ரை) "இதோ பார், இம் முழுகியெழுந்த நங்கை தன் மூரிக்குழலை முறுக்குங் காட்சி வெண்மதியை விழுங்குங் கரும்பாம்பின் தோற்றம் போலிருக்கின்றது" என்றான் நளன்.

(வி - ரை) அரும்பு - கோங்கரும்பு - இங்கிது தமயந்தியின் முலை வடிவுக் குவமையாயின்மை காண்க. சிறுக்கின்ற வான்முகம்- இங்கு முகமென்பது சிறுக்கின்ற வென்னும் அடைமொழியால் இராகு பற்றி விழுங்கச் சிறுக்கும் சந்திரனுக்குச் சமானமாமெனக. முழுகியெழுந்து குழலீரம் புலர்த்துமுன், நீராவடிக்கப் பெண்கள் வழக்கமாய்த் தங்குழலை முறுக்கிப் பிழிவதே இங்குக் குறித்திருப் பது ; அப்போததன் தோற்றம் கரும்பாம்பின் தோற்றமென்பதற் கையமில்லை. கிரகண காலத்தில் கரும்பாம்பாகிய இராகு வெண் மதியை விழுங்குகிறதென்னும் புராணக் கூற்றே இங்குத் தேற்ற மாயிற்றெனக. இதிலுள்ள குறிப்பணியைக் குறித்துணர்க. (கசு)

[தமயந்திக்கு நளன், "இதோ பார், மூழ்கியெழூஉம் இந் நங்கை தன் னெற்றியின் மயிரை நீக்குங் காட்சி, மேக நடுவிற்றோன்றும் வெண்பிறையழகுபோலிருக்கின்றது" என்று னெனல்.]

சோர்புனலின் மூழ்கி யெழுவாள் சுடர்நுதன்மேல்
வார்குழலை நீக்கி வருந்தோற்றம்—பாராய்
விரைகொண் டெழுந்தபிறை மேகத் திடையே
புரைகின்ற தென்னலாம் பொற்பு.

(ப - ரை) சோர் புனலில் மூழ்கி எழுவாள் - ஓடு நீரில் முழுகி மேலெழுகின்ற பெண்ணொருத்தி, சுடர் நுதல் மேல் வார் குழலை நீக்கி வரும் தோற்றம் - விளக்கமான தன்னெற்றியின்மேற் படிந்துள்ள நீண்ட கூந்தலை விலக்கிக்கொண்டு வருகின்ற காட்சி, மேகத்திடை விரைகொண்டு எழுந்த பிறை பொற்பு - மேகங்க ளுக்கு நடுவில் விரைவாகத் தோன்றின நிலாப்பிறையின் அழகை, புரைகின்றது என்னல் ஆம் பாராய் - ஒத்திருக்கின்றது என்று சொல்லலாம் நீ பார்.

(க - ரை) "நீரில் மூழ்கி யெழூஉம் இந்நங்கை தன்னெற்றி யிற் கூந்தலை நீக்குகின்ற காட்சி, மேக நடுவில் விரைந்தெழூஉம்

வெண் பிறையின் அழகை ஒத்திருக்கின்றது, நீ கூர்ந்து பார்' என்றனன்.

(வி - ரை) ஆற்று நீர் ஆகாயத்துக்கும், அதில் மூழ்கி யெழூஉம் நாயகியின் கூந்தல் மேகத்துக்கும், அவளுடைய நெற்றி வெண்பிறைக்கும் உவமான மாயினமையை உய்த்துணர்க. முழுகு, மூழ்கு, விழுந்து - வீழ்ந்து என்புழிப்போல. தோற்றம் பொற்பைப் புரைகின்றது என்று முடிக்க; பொற்பு, புரைகின்ற தென்பதற்குச் செயப்படுபொருளாய் ஒத்தற் பொருளில் வந்தது. விரை என்பதற்கு ஒளி யென்று பொருள் கூறுவாருமுளர். ஏகாரம்-அசைநிலை. புரைகின்ற தென்பதற்குத் தோன்றுகின்றதென்று பொருள் கொள்வாருமுளர். வார் என்பதற்கு நீட்சியென்றும் பெயர்ப்பொருளுண்டு. 'வார்ஆர் சிலை கலை மெய்மாதங்கம்அம்மானை' என்னும் பெரியர் பாட்டில் வந்துள்ள வார் என்பதைக் கூர்ந்து தெரிக. இங்கு வார் என்பது வார்ந்த அல்லது நீண்ட என்னும் பெயரெச்சப் பொருள் தருவதால் வார் குழல் வினைத்தொகையாம். (கரு)

[தமயந்திக்கு நளன், "இதோபார், ஒருத்தி, செங்கழுநீர் மலரில் தன் கட்கருமை பாய்வதால் கருங்குவளை யென்றதைப் பறிக்காமற் போகிறாள்" என்றானெனல்.]

செழுநீல நோக்கெறிப்பச் செங்குவளை கொய்வாள்
முழுநீல மென்றயிர்த்து முன்னர்க்—கழுநீரைக்
கொய்யாது போவாளைக் கோல்வளைக்குக் காட்டினான்
வையாரும் வேற்றடக்கை மன்.

(ப - ரை) செம்மை குவளை கொய்வாள் - செங்கழுநீர் மலரைப் பறிக்கவந்த வொருத்தி, நோக்கு செழுமை நீலம் எறிப்ப-தன் கண்கள் உயர்தரமான நீல நிறத்தை (அதன்மேல்) வீசுவதால், முழுமை நீலம் என்று அயிர்த்து - (அதைச்) சரியான கருங்குவளைப் பூ வென்றுஐயுற்று, முன்னர் கழுநீரை கொய்யாது போவாளை - தன்னெதிரிலுள்ள அச்செங்கழுநீர் மலரைப் பறிக்காமல் திரும்பிப்

போகின்றவளை, வை ஆகும் வேல் தடக்கை மன்-கூர்மை பொருந்திய வேலாயுத மேந்திய நீண்ட கையையுடைய நளமகாராசன், கோல் வளைக்கு காட்டினன் - தமயந்திக்குக் காண்பித்தான்.

(க - ரை) செங்கழுநீரைக் கொய்ய வந்தவளுக்குத் தன் கட்கருமையால் அது குவளைமலராகத் தோன்றியதால், அதை அவள் கொய்யாமல் திருமிச் சென்றாள். அவளையும் நளன் தமயந்திக்குக் காட்டினன்.

(வி - ரை) நோக்கு-இதனோடு அம் என்னும் கருவிப்பொருள் விகுதி சேர்ந்து நோக்கம் என்றும் வரும். நோக்கு - வினையடிப் பகாப்பத வினைப்பெயர்; இங்கிது தொழிலாகுபெயராய்க் கண்ணைக் குறித்த தென்க. இதைக் காரிய வாகுபெயரென்று கழறுவாருமுளர். கொய்வாள் - வினையாலணையும் பெயர். நீலம்-குணவாகு பெயராய் மலரைக் குறித்தது. கோல் என்பதே வளைச் சிறப்பு வகையை யுணர்த்துவதால், 'தேவியார் கோல் தட்டி யாளால்' என்றும் சுந்தரர் தேவாரப்படி கோல் வளை யென்பதை உயர்தர வளைய லணிந்தவ ளென்றே பொருள் கொள்ள வேண்டும் - இதை வினைத்தொகை யென்பது வெறுங் கூற்று. (௬௩)

[நளனுந் தமயந்தியுங் குள நதிகளிற் குளித்துக் கடவுளன் போடு கங்கையாடி இணைபிரியாம லிருந்தா ரெனல்.]

காவி பொருநெடுங்கட் காதலியுங் காதலனும்
வாவியு மாறுங் குடைந்தாடித்—தேவிற்
கழியாத சிந்தையுடன் கங்கைநதி யாடி
ஒழியா துறைந்தா ருவந்து.

(ப - ரை) காவி பொரும் நெடுமை கண் காதலியும் காதலனும் - நீலோற்பலம் போன்ற நீண்ட கண்களை யுடைய மனைவியாகிய தமயந்தியும் கணவனாகிய நளனும், வாவியும் ஆறும் குடைந்து ஆடி - குளங்களிலும் நதிகளிலும் குளித்து நீராடி, தேவின்

கழியாத சிந்தையுடன் கங்கை நதி ஆடி - கடவுளினின்றும் பிரியாத மனத்தோடு கங்கை யாற்றில் மூழ்கி, ஒழியாது உவந்து உறைந்தார் - நீங்காமற் களித்துக் கூடி யிருந்தார்கள்.

(க - ரை) தமயந்தியும் நளனும் குள நதிகளிற் குளித்து விளையாடி, கடவுளிடத்திற் கழியாத மனத்தோடு கங்கையில் மூழ்கி ஒருவரை ஒருவர் விட்டுப் பிரியாமல் வாழ்ந்தார்.

(வி - ரை) காவி பொரும் என்பதற்குக் காவியோடு இகலும் என்றும் இயம்புவாரு முளர். அன்பு பிறக்கு மிடம் அருங் காதலியினிடம் என்பதனால் காதலியை முன் வைத் தோதினார். அவர்கள் நிடத நாட்டுக்குச் செல்லும் இடை வழியில் நீர் விளையாடல் பூக் கொய்தல் முதலியவைகளை விநோதமாகச் செய்தார்களென்பதனுன் வாவியு மாறுங் குடைந்தாடி என்றார். 'காதி விளையாடி யிருகை வீசி வந்தாலுந் தாதி மனை நீர்க் குடத்தே தான்' என்றபடி இருவரும் எத்தனை விளையாடியும் மூத்தனை மறந்தில ரென்பதனால், தேவிற் கழியாத சிந்தையுடன் கங்கை நதி யாடி என்றார். நிடத நாட்டு மாவிந்த நகரம் கங்கைக் கரையிலுள்ள தாகையால் தம்பதிய ரிருவரும் தம் பதியை நெருங்கினா ரென்க.

[தமயந்திக்கு நளன், "இதோ தெரிகிற தோப்பு, மாவிந்தத்தில் நாங்கள் இருக்குந் தோப்பைப் போலவே இருக்கிறது" என்று னெனல்.]

நறையொழுகு வண்டுறையு நன்னகர்வாய் நாங்கள்
உறையு மிளமரக்கா வொக்கும்—இறைவளைக்கைச்
சிற்றிடையாய் பேரல்குற் றேமொழியாய் மென்முறுவற்
பொற்றொடியாய் மற்றிப் பொழில்.

(ப - ரை) இறை வளை கை சிறுமை இடையாய் - சிறந்த வளையலணிந்த கைகளையும் சிறிய இடையையு முடையவளே, பெருமை அல் குல் தேம் மொழியாய் - பெரிய அல்குலையும் தித்

திப்பான சொல்லையு முடையவளே, மென்மை முறுவல் பொன்மை தொடியாய் - குளிர் புன்னகையையும் பொன் வளையலையும் உடையவளே, இ பொழில் - இந்தச் சோலை, நறை ஒழுக வண்டு உறையும் நன்மை நகர்வாய் - (சோலைகளில்) தேனொழுகுவதால் வண்டுகள் விடாமல் வசிக்கும் வளமுள்ள நகரமாகிய மாவிந்தத்தில், நாங்கள் உறையும் இளமை மரம் கா ஒக்கும் - நானும் எனக்கு வேண்டியவரும் கூடி இருக்கும் இள மரங்களையுடைய தோப்பைப் போலிருக்கிறது.

(க - ரை) "சிறந்த சங்குவளை முதலியவைகளை யணிந்துள்ள ...ளே! இச்சோலை, மாவிந்தத்தில் நானும் எனக்கு வேண்டியவர் ...ம் இருக்கும் இள மாச்சோலை போலிருக்கிறது" என்றனன்.

(வி - ரை.) நறை யொழுக என்பது காரணப்பொருட்டு. நன்மை + நகர் = நன்னகர் - பண்புச் சூத்திரவிதி; நன்மை-வளம். நாங்கள் என்று நளன் பன்மையிற் கூறியதால் தமயந்திக்கு, 'இம்மைப் பிறப்பிற் பிரியலன் என்றேனைக் கண்ணிறை நீர் கொண்டனள்' என்று நாயனார் புலவி நுணுக்கங் கூறியபடி, தன்னை யன்றி நளனுக்கு நாயகிய ருளரென்று ஐய நிகழ்ந்து புலவி நுணுக்கம் நிகழ்ந்தது; இது அடுத்து வரூஉம் மூன்று செய்யுட்களானும் விளங்கும். முது மரக்கா தழைத்திரா தாகலான் இள மரக்கா வென்றார். சிற்றிடை, பேரல்குல் - முரண்டொடை. நறை யொழுகவண்டுறையும், நாங்கள் உறையும் இள மரக்கா வென்றுங் கூட்டலாம்.

[நளனை நோக்கித் தமயந்தி, "மன்னவனே, இச்சோலை நீங்களிருக்கும் இளமரச் சோலைபோ லிருக்கின்றதோ?" என்று வினவினு ளெனல்.]

கன்னியர்தம் வேட்கையே போலுங் கனிமழலை
தன்மணிவா யுள்ளே தடுமாற—மன்னவனே
இக்கடிகா நீங்க ளுறையு மிளமரக்கா
ஒக்குமோ வென்று ளுயிர்த்து.

(ப் - ரை) தன் மணி வாயுள் கன்னியர்தம் வேட்கையே போலும் களி மழலை தடுமாற - (தமயந்தி) தன்னுடைய அழகான வாயில் கலியாண மகாத மங்கைப் பருவத்துப் பெண்களின் ஆசையைப் போல (வெளிப் பட்டும் படாமலும் உள்ள) மகிழ்ச்சியான மழலைச் சொற்கள் குழறினபடியே, உயிர்த்து - பெருமூச் செறிந்து, மன்னவனே - அரசனே, இ கடி கா நீங்கள் உறையும் இளமை மரம் கா ஒக்குமதோ என்றாள் - இந்த மணமுள்ள சோலை நீயும் உனக்கு வேண்டியவர்களான மாதரும் இருக்கும் இளமரச் சோலையை ஒத்திருக்கின்றதோ என்று கேட்டாள்.

(க - ரை) கன்னிமார் காதலைப் போல வெளிப் பட்டதும் படாததுமான மழலை குழறப் பெருமூச் செறிந்தபடியே தமயந்தி, "அரசனே! இப்பூங்காவனம் நீங்களிருக்கும் இளமரச் சோலை போலிருக்கின்றதோ" என்று கேட்டாள்.

(வி-ரை) "இப்படி நீர், 'நான்' என்று ஒருமையிற் கூறாது, நாங்கள்' என்று பன்மையிற் கூறின காரணம் கன்னிமா ரிடத்தில் உமக்குள்ள காதல்தான் காரணம் போலும்" என்று உரை கொண்டு 'கன்னியர்தம் வேட்கையே போலும்' என்பதைக் கடைசியிற் கூட்டுவாரு முளர், இதைக் களிமழலை யென்பதற்கு அடையாக்குவதே நேர்பொருளாம். கன்னிய ரென்னும் மங்கைப் பருவத்துப் பெண்களின் காதல், கூச்சத்தால் மறைந்தும் பருவத்தால் வெளிப்பட்டும் அப்படியும் இப்படியுமாய் இருப்பதுபோலத் தமயந்தியும் ஐயுற்று களனைக் கேட்பதற்கு வாய்வந்தும் வராமலும் குழறினாள். இதைக் காளிதாசர் பனி மூடிய மலர்த்தேனை உண்பதற்கும் விடுவதற்கும் மனம் வராத வண்டுக் குவமையாக்குகிறார்.

[தமயந்திக்குக் கோபத்தால் உதடுகள் துடித்தன, நெற்றியில் வியர்வையரும்பிக் கட்கடைகள் சிவந்தன வெனல்.]

தொண்டைக் கனிவாய் துடிப்பச் சுடர்நுதன்மேல்
வெண்டரள மென்ன வியர்வரும்பக்—கெண்டைக்
கடைசிவப்ப நின்றாள் கழன்மன்னர் வெள்ளைக்
குடைசிவப்ப நின்றான் கொடி.

(ப - ரை) கழல் மன்னர் வெள்ளை குடை சிவப்ப நின்றான் கொடி - (காலில்) வீரக் காப் பணிந்த பகையரசருடைய வெள்ளைக் குடைகள் (இரத்தந் தோய்ந்ததனால்) செந்நிற மாகும்படி (வெற்றி பெற்று) நின்றவனாகிய வீம ராசனுடைய மகளாகிய தமயந்தி, தொண்டை கனி வாய் சிவப்ப-கோவைப்பழம் போன்ற உதடுகள் துடிக்கவும், சுடர் நுதல் மேல் வெண்மை தாளம் அன்ன வியர்வு அரும்ப - ஒளி பொருந்திய நெற்றியின் மேல் வெண்மையாகிய முத்துக்களைப்போன்ற வேர்வை நீர் அரும்பவும், கெண்டை கடை சிவப்ப நின்றாள் - சேற் கெண்டை போன்ற கட்கடைகள் சிவக்கவும் (சினந்து அசைவற) நின்றாள்.

(க - ரை) தமயந்தி தன் உதடு துடிக்க, நெற்றியில் வேர் வரும்ப, விழிக்கடை சிவக்கச் சினந்து அந் நின்றது நின்றபடி அசைவற் றிருந்தாள்.

(வி - ரை) ஐயுற்று 'நீங்கள் இருக்கும் சோலை போன்றதோ' என்று தமயந்தி கேட்டதற்கு நளன் புன்சிரிப்பாய் விடைகூறுமுன், அவளுக்கு ஐயம் முற்றி அழுக்காறு பழுத்துக் கோபத்துக் கிடம் பண்ணி விட்டது. ஆகையால் அவளுக்கு உதடுகள் துடித்தன; வேர் வைத் துளிகள் அரும்பின; கட் கடைகள் சிவந்தன வென்றுகொள்க. தொண்டை - தெலுங்கிலும் வழங்குவது தெளிக - ஆ தொண்டை யெனினுமாம். கோவை கொவ்வை யென்பன ஒரு தொடர். வெண் குடை செங்குடை யாவதற்குக் காரணம் அவர்களுடைய செந் நீர் தோய்வதனால் என்று கொள்க. வாய்-உதட்டுக்கு முத லாகுபெயர். சிவப்ப சேப்ப சிவக்க சேக்க என்பன ஒரு தொடர். கோபத்தால் என்பது இசை யெச்சமாய்த் தொக்கது. கோபத் தால் துடிக்க, அரும்ப, சிவப்ப நின்றாளென்று கொள்க. (உ0)

[தமயந்தியின் முகவரங்கில், புருவப்பெண், கட்கத்திகளின் மேற் கால் வளைத்துக் கூத்தாடியதை நளன் கண்டது.]

தங்கள் புலவித் தலையிற் றனித்திருந்த
மங்கை வதன மணியரங்கில்—அங்கண்
வடிவாண்மேற் கால்வளைத்து வார்புருவ மென்னுங்
கொடியாடக் கண்டானோர் கூத்து.

(ப - ரை) தங்கள் புலவி தலையில் - தங்களுக்கு உண்டாகிய ஊடற் போதில், தனித்து இருந்த மங்கை வதன மணி அரங்கில் - (தன் னெதிரிற் சற்றே) விலகி யிருந்த தமயந்தியின் முகமாகிய அழகான நாடகசாலையில், அம் கண் வடி வாள் மேல் - அழகிய கண்களாகிய கூரிய வாள்களின் மேல், வார் புருவம் என்னும் கொடி - நீண்ட புருவங்களாகிய பெண்கள், கால் வளைத்து ஓர் கூத்து ஆட கண்டான் - தம் நுனிகளை வளைத்துச் (சுளித்தும் நெளித்தும்) ஒருவிதமான கூத்தாடுவதை (நளன்) பார்த்தான்.

(க - ரை) புலவிப் போதில் தனக் கெதிரிற் சற்றே விலகி யிருந்த தமயந்தியின் முக மென்னும் நாடக சாலையில் புருவங்களென்னும் பெண்கள், கண்களென்னும் கத்திகளின்மேல் தம் நுனிகளென்னும் கால்களை வளைத்துக் கூத்தாடுவதை நளன் பார்த்தான்.

(வி - ரை) தமயந்தியின் முகமே கூத்தாடு மிடமாகவும், புருவங்களே கூத்தியராகவும், கண்களே கத்திகளாகவும், புருவ நுனி வளைவே கால் வளைவாகவும் உருவகித் திருக்கின்றமையை உணர்ந்துகொள்க. கொடி-பூங் கொடிக்கும் பெண்ணுக்கும் ஆகவும், கால் - நுனிக்கும் காலுக்கும் ஆகவும் இரு பொருளணியாவதை எண்ணித் துணிக. மங்கை வதன மணி யரங்கில் வார் புருவ மென்னுங் கொடி (பெண்) அங்கண் வடி வாண் மேல் நுனிகளை (கால்களை) வளைத்து ஓர் கூத்து ஆட (நளன்) கண்டான் என்று கூட்டிக் கொள்க. புருவ மிரண்டா கையால் பன்மையிற் பொருள் விரித்தாம். புலந்த தமயந்தி தன் ஐயனிடத்திற் பிணங்கிப் புரு

வங்களை வளைத்து வெளித்துச் சுளித்துக் காட்டினுளென்று கொள்க. மணியரங்கு என்பதற்குப் பன்முத்து மணியும் இதழ்ப் பவள மணியும் பதித்த சவை யென்பாரு முளர். பெண்ணொருத்தி, கத்திகளின்மேல் கல்களை வளைத்து வைத்துக் கூத்தாடுவதையே தமயந்தியின் புலவிப் பிணக்குக் குவமையாக்கி யிருப்பதை ஊகித் துணர்க. (உக)

[தமயந்தியின் சிறிய திருவடியை நளன் தன் பெரிய முடியிற் சூட்டினதனுல், அவளுங் கோபமாறினு ளெனல்.]

சில்லரிக் கிண்கிணிமென் றெய்வமலர்ச் சீறடியைத்
தொல்லை மணிமுடிமேற் சூட்டினான்—வல்லை
முழுநீலக் கோதை முகத்த மலர்ந்த
செழுநீல மாருச் சிவப்பு.

(ப - ரை) சில் அரி கிண்கிணி மென்மை மலர் சிறுமை அடியை - (தமயந்தியின்) ஒலிக்கின்ற பருக்கைக் கற்களுள்ள சதங்கை யணிந்த சிறிய திருவடிகளை, தொல்லை மணி முடி மேல் சூட்டினான் - (நளன் தன்) பழமையாகிய மாணிக்கங்களிழைத்த கிரீடத்தின்மேல் அணிந்துகொண்டான், (ஆகையால்) வல்லை - உடனே, முழுமை நீலம் கோதை முகத்தே - முழுமையுங் கருமை யாகிய கூந்தலையுடைய தமயந்தியின முகத்திலே, செழுமை நீலம் சிவப்பு மாரு மலர்ந்த - செழிப்பான குவளைகள் (கண்கள்) செந் நிறமாறி மலர்ந்தன.

(க - ரை) தமயந்தியின் சதங்கைத் திருவடிகளை நளன் தன் முடிக் கணியாக்கிக் கொண்டதனுல், உடனே அவள் தன் கட் கடைச் சிவப்பு மாறிக் கோபந்தணிந்தாள்.

(வி - ரை) இந் நூலாசிரியரே மற்றோரிடத்தில், 'தேங்குவளை தன்னிலே செந்தாமரை மலரப் பூங்குவளை தாமரைக்கே பூத்ததே' என்றபடி இங்கேயும் "முழு நீலக் கோதை முகத்தே செழு நீல

மலர்ந்த'' என்றார். நளன் தன் தலைவியின் புலவியை நீக்க வேறு வழி யின்மையால், அவளுடைய திருவடிகளிற் றன் முடியுற வணங்கினான். அங்ஙனம் வணங்கின மாத்திரையில், நீர் கிழிய வெய்து உடுப்போ லவளுடைய கோப மாறியதற் கடையாளமாக அவள் கண்கள் சிவப்பு மாறின. செழு நீலம் என்பதில் நீலம் என்பதை ஆகு பெயராய்க் கண்களென்றே பொருள் கோடலுமாம். அப்போது மலர்ந்த என்பதற்குத் திருவருள் பூத்தன எனக் கொள்க. கோதை - ஆகுபெயராய்த் தமயந்தியைக் குறித்தது. (உஉ)

[தமயந்தி நளனோ டூடலை நீக்கிக் கூடலை யாக்கினா ளெனல்.]

அங்கைவேன் மன்ன னகல மெனுஞ்செறுவிற்
கொங்கையேர் பூட்டிக் குறுவியர்நீர்—அங்கடைத்துக்
காதல் வரம்பொழுக்கிக் காமப் பயிர்விளைத்தாள்
கோதையரின் மேலான கொம்பு.

(ப - ரை) கோதையரில் மேல் ஆன கொம்பு - பெண்களுக்குள் மேன்மையை யுடையவளான பூங் கொம்பு போன்ற தமயந்தி, அம் கை வேல் மன்னன் அகலம் என்னும் செறுவில் - அழகிய கையில் வேலேந்திய நளமகாராசனுடைய மார்பென்னும் வயலில், கொங்கை ஏர் பூட்டி - தன் தனமாகிய ஏரைப்பூட்டி யுழுது, குறுமை வியர் நீர் அங்கு அடைத்து - சிறிய வியர்வையாகிய தண்ணீரை யதில் தேக்கி, காதல் வரம்பு ஒழுக்கி - ஆசையாகிய வரப்பை ஒழுங்காக்கி, காமம் பயிர் விளைத்தாள் - காம மென்னும் பயிரை விளையச் செய்தாள்.

(க - ரை) தமயந்திக்கு ஊடல் நீங்கியதனால், நளன் மார்பில் அவள், தன் தன முகங்க ளழுந்தத் தழுவிக் குறுவியர்வை யரும்பக் காதலைப் பெருக்கிக் காமத்தை விளைத்து அவனோடு கூடி மகிழ்ந்தாள்.

(வி - ரை) நளனுடைய மார்பாகிய வயலில் தமயந்தி தன் கொங்கை ஏர் பூட்டி யுழுது, வியர் நீர் தேக்கிக் காதல் வரம்பாக்கிக்

காமப் பயிர் விளைத்தா ளென்று உருவகத்தை நிரப்பிக்கொள்க. தமயந்தி ஊடலை நீக்கிக் கூடலைத் தேக்கினா ளென்று தெளிக. புலத்தலைப் போக்கிக் கலத்தலை வீக்கினா ளெனினுமாம். கொம்பு-தமயந்திக்கு ஆகுபெயர். கோதையரின் மேலான கொம்பு என்பதை மங்கையர்க்கரசி, பெண்ணினல்லாள் என்பன போலக் கற்புடைமையிற் றலைசிறந்த தமயந்தியின் பெரும் பெண்டன்மைக் குகந்த தாக்கொள்க. (௨௫)

[கார்மேகக் கூந்தற் காரிகையு நளனும் கங்கைக் கரையைக் கண்டா ரெனல்.]

வேரி மழைதுளிக்கு மேகக் கருங்கூந்தற்
காரிகையுந் தானும்போய்க் கண்ணுற்றான்—மூரித்
திரையேற மென்கிடங்கிற் சேலேற வாளை
கரையேறுங் கங்கைக் கரை.

(ப - ரை) மூரி திரை மென்மை கிடங்கில் ஏற - பெரிய அலைகள் மெதுவான (மணற் பரப்புள்ள) அகழியில் ஏறுவதால், சேல் ஏற - கெண்டை மீன்கள் எறிப் பாய (அதனால்), வாளை கரை ஏறுங் கங்கை கரை - வாளை மீன்கள் கரையிற் பாயுங் கங்கை யாற்றங் கரையை, வேரி மழை துளிக்கு மேகம் கருமை கூந்தல் காரிகையும் தானும் போய் கண்ணுற்றான் - தேன் மழை சொரியும் மேகம் போன்ற கரிய கூந்தலையுடைய தமயந்தியும் தானும் (இக் கரை கடந்து) போய்க் கண்டான்.

(க - ரை) நளனுந் தமயந்தியும் கங்கையின் இக்கரை கடந்து போய் அக்கரை கண்டார்கள்.

(வி - ரை) நளன், தமயந்தியும் தானும் போய் அக்கரை கண்டானென்று நள னென்பதைச் சொல்லெச்சமா வருவித்துக் கொள்க. அக்கரையி லுள்ளதுவே மாவிந்த நகர மென்றுணர்க. தேன் மழை பெய்யும் கார் மேக மொன்றிருந்தால் தமயந்தியின்

கூந்தற் குவமையா மென்று உவமை யணியை ஊகித்துணர்க மென்மை யென்பதைச் சேலுக்கும் அடையாக்கிக் கொள்ளலாம். அகழியில் நீரேறச் சேலேற வாளையேறிற் றென்றுணர்க. அவ்வையார் வரப்புயர என்று சோழனை வாழ்த்தியதை இதனோ டொப்பிட்டுணர்க. மூரி-வன்மை - பெருமை. சேல் மீன்கள் பாயத் திரையேறு மென்று பொருள்கோடல் ஒவ்வாதாம். மேகம் ஆகாயத்தது போலக் கூந்தலும் தலையிடத்த தென்பதைக் கூர்ந்து தெளிக. ஏற என்பன காரணகாரியப் பொருளன. (உ௯)

[நள னங்கொரு வளமுள்ள சோலையைப் போய்ச் சேர்ந்தானெனல்.]

சூதக் கனியூற லேற்ற சுருள்வாழை
கோதி லறவேற்குங் குப்பியென— மாதரார்
ஐயுற்று நோக்கு மகன்பொழில்சென் றெய்தினான்
வையுற்ற வேற்றானை மன்.

(ப - ரை) வை உற்ற வேல் தானை மன் - கூரிய வேலாயுதச் சேனையை யுடைய நளன், சூதம் கனி ஊறல் ஏற்ற சுருள் வாழை- மாங்கனிச் சாற்றைத் தன்னிடத்திற் பெற்றுள்ள வாழை இளங்குருத்துகளை, கோது இல் நறவு ஏற்கும் குப்பி என்ன - குற்றமற்ற தேனை ஏற்றிருக்குங் குப்பிகளென்று, மாதரார் ஐயுற்று நோக்கும் அகல் பொழில் சென்று எய்தினான் - பெண்கள் சந்தேகமாய்ப் பார்க்கும் விசாலமானதொரு சோலையைப் போய்ச் சேர்ந்தான்.

(க - ரை) கங்கையின் அக் கரையில் நளனொரு பெரும் பூங்காவனத்தைச் சேர்ந்திருந்தான்.

(வி - ரை) சூத வாழ்க்கையா ரென்று கச்சியின் மாவடிக் கடவுளைக் கூறியுள்ளபடி சூதக்கனி யென்றார். சுருள் வாழையிலுள்ள தனியிலைப் பெயராகிய சுருள் என்ற அடையால் வாழை

யினங் குருத் தென்றும். இது குப்பி (புட்டி) போல் நீண்டிருப்ப தெல்லார்க்குந் தெரியும். மாவின் கீழுள்ள இதில் அதன் கனிச் சாறு பாய்வ தியற்கையாம். ஆகையால் வாழைக் குருத்தைத் தேன் குப்பிக் குவமை யாக்குகிறார். பெண்களுக் கதைப் பார்க்குந்தோறும் வெண்ணிறக் குப்பியோ வென ஐயம் நிகழ்ந் தது. அகல், அகன் — ஒரு தொடர். வைவாள், விழிப் பேதை புலவித்தலையி லெனை வைவாள் என்ற பெரியார் வாக்கும் வையுற்ற வேல் என்பதை விளக்குகிறது. ஊறல் - வினைப் பெயர்; இங்கிது தேனுக்குத் தொழிலாகுபெயராயிற்று. (உ௫)

[தமயந்திக்கு நளன், "இதோ தோன்றும் இந்நகரந்தான் எங்கள் நகரம்" என்று காட்டினனெனல்.]

வான்றோய நீண்டுயர்ந்த மாடக் கொடிநுடங்கத்
தான்றோன்று மற்றித் தடம்பதிதான்—வான்றோன்றி
வில்விளக்கே பூக்கும் விதர்ப்பநா டாளுடையாள்
நல்விளக்கே யெங்க ணகர்.

(ப - ரை) விதர்ப்ப நாடு ஆள் உடையான் நன்மை விளக்கே - விதர்ப்ப நாட்டை யாளுகின்றவனாகிய வீமராசனுடைய தூய குல விளக்குக்குச் சமானமானவளே!, வான் தோன்றி வில் விளக்கே பூக்கும் - ஆகாயம் அளாவத் தோற்றி வான வில்லைப் போலப் பன் னிறங்களில் விளக்குகள் ஒளி வீசும், எங்கள் நகர்-எங்கள் மாவிந்த நகரம், வான் தோய நீண்டு உயர்ந்த மாடம் கொடி நுடங்க - ஆகா யம் அளாவ நீளமாய் உயர்ந்துள்ள மாடங்களிற்றூக்கிய கொடிகள் அசைய, தான் தோன்றும் இ தடம் பதிதான் - தான் உன்னத மாய்த் தோற்றும் இவ் விசாலமான நகரமேயாகும்.

(க - ரை) நளன் தமயந்தியை நோக்கி, "ஏ, வீமராச குமாரி! இதோ தோன்றும் இக் கடிநகர்தான் எங்கள் மாவிந்த நகரம்" என்று காட்டினன்.

(வி - ரை) வான் தோன்றி யென்பதற்குச் சிறந்த தோன்றிப் பூ என்பாரு முளர். விளக்குகள் இக்காலத்துக் காந்த விளக்குகளைப் போலவே அக்காலத்தும் நகராலங்காரமாகப் பன்னிறங்களில் ஏற்றி ஒளி வீசின என்பது இதனுல் விளக்கமாவது காண்க. தோன்றிப் பூ விளக்குப்போல மலர்வது நாட்டுக்கன்றி நகரத்துக் காகாது. வில் விளக்கே பூக்கும் எக்க ணகரென்று இதை நகரச் சிறப்பாகவே கொள்க. வில் விளக்கு என்பதற்கு ஒளி விளக்கு என்பாரு முளர்; இது சிறவாது. மற்று-அசை. தான் கனையும் அசை யென்பாரு முளர். தான் - தனித்தென்று பொருள்தர நின் றது. இரண்டாந் தான் தேற்றப்பொருட்டு. நீண்டுயர்ந்த வென் பது கொடிகளுக் கடையாகும். (உ௲)

[பகைவரைக்கோல் யானை வீரனுகிய நளன் குள முதலியவை களில் நீராடித் தமயந்தியோடு பன்னிரண்டாண்டு கழித்தா னெனல்.]

பொய்கையும் வாசப் பொழிலு மெழிலருவிச்
செய்குன்று மாறுந் திரிந்தாடித்—தையலுடன்
ஆறிரண்டாண் டெல்லை கழித்தா னடையலரைக்
கூறிரண்டாக் கொல்யானைக் கோ.

(ப - ரை) அடையலரை கூறு இரண்டா கொல் யானை கோ - பகைவரை இரு துண்டாக்கிக் கொல்லவல்ல யானையை யுடைய நளமகாராசன், தையலுடன் பொய்கையும் வாசம் பொழி லும்எழில் அருவி செய் குன்றம் ஆறும் திரிந்து ஆடி - தமயந்தி யோடு குளங்களிலும் மலர் மணம் வீசும் சோலைகளிலும் அழகான அருவிகளிலும் செயற்கையால் உண்டாகிய மணல்மேடுகளிலும் ஆறுகளிலும் சென்று நீர் விளையாடி, ஆறு இரண்டு ஆண்டு எல்லை கழித்தான் - பன்னிரண்டு வருஷ காலம் போக்கினுன்,

(க - ரை) தமயந்தியோடு நளன் பொய்கை முதலியவைக ளில் நீர் விளையாடிப் பன்னிரண்டாண்டு கழித்தான்.

(வி - ரை) பொய்கையிலும் அருவியிலும் ஆற்றிலும் நீர் விளையாடினன் - பொழிலிலும் செய்குன்றிலும் ஊசல் பந்து முதலியவைகளாடினன் என்று கொள்க. செய்குன்று - மற்றக் குன்றுகளைப் போல இயற்கையா யுண்டானதன்று; சமயோசிதமாய் மாந்தர் செய்துகொள்ளும் மணன்மேட்டிடம். பன்னிரண்டு வருஷகாலம் நளன் தமயந்தியோடு யாதொரு துன்பமுமின்றிச் சந்தோஷமாய் வாழ்ந்து கழித்தான். கோ கழித்தானென்று முடிக்க; இதுவே கோன் என்றும் வரும். இங்கிது சிறப்புப் பண்பாகுபெயராய் நளனைக் குறித்தது. பகைவரை இருதுண்டாக்கிக் கொல்லும் யானை யென்றதனால் அதனுடைய வீரம் விளங்குகிறது. இங்கே யானையை யானைச் சேனை என்பாருமுளர். இங்கிது பட்டத்தானையைக் குறிக்கிறது. (உஎ)

[தமயந்தி கருக்குறி தோன்றி இரண்டு குழந்தைகளை யீன்றாளெனல்.]

கோல நிறம்விளர்ப்பக் கொங்கை முகங்கருக
நீல நிறமயிர்க்கா னின்றெறிப்ப—நூலன்னத்
தோன்றாத நுண்மருங்கு றோன்றச் சுரிகுழலாள்
ஈன்றாள் குழவி யிரண்டு.

(ப - ரை) சுரி குழலாள் - (அழகாய்ச்) சுருண்ட கூந்தலையுடைய தமயந்தி, கோலம் நிறம் விளர்ப்ப - அழகான தன் மேனி பொன்னிறம் வெளுத்துத் தோன்றவும், கொங்கை முகம் கருக - தன் முலை முகடு கருத்துத் தோன்றவும், நீலம் நிறம் மயிர் கால் நின்று எறிப்ப - நீல நிறமானது மயிர்க்கால்கடோறு நின்று ஒளி வீசவும், நூல் என்ன தோன்றாத நுண்மை மருங்குல் தோன்றவும் - நூல் போலக் கண்ணுக்குத் தோன்றாத நுண்ணிய இடையானது பருத்துத் தோன்றவும் (ஆய்), இரண்டு குழவி ஈன்றாள் - இரண்டு குழந்தைகளைப் பெற்றாள்.

(க - ரை) நிறம் விளர்த்தல், முலை முகம் கறுத்தல் முதலிய குறிகளோடு கருவுற்றிருந்து, தமயந்தி இரண்டு பிள்ளைகளைப் பெற்றெடுத்தாள்.

(வி - ரை) பொன்னிறமா மேனி கருவுற்றிருந்தால் வெண்ணிறமாயிற் றென்பார் கோல நிறம் விளர்ப்ப என்றார். முலை முகங் கறுத்தலும் இடை பருத்தலும் கருக்குறிகளே யாகும். மயிர்க்காலில் நீணிறம் நின்றெறிப்பதூஉம் கருக்குறியே யாம். முதலில் வெளிப்படையாய்த் தோன்றும் நிறத்தையும், பிறகு மறைவிடத்திலுள்ள கொங்கை, மயிர்க்கால், இடை முதலியவைகளையும் இயம்பினமை மரபாம். விளர்ப்ப, கருக, எறிப்ப, தோன்ற முதலிய நான்கும் செயவெனெச்சக் காரியப்பொருளன; கருவுற்றமை காரணம். கருவுற்றிருந்த தமயந்தி, நிறம் விளர்த்தல் முதலிய குறிகளோடிருந்து, இரண்டு குழவி ஈன்றாளென்க. (உஅ)

[பன்னிரண்டு வருஷமாய்க் கலிபுருடன் நளனைக் கவனித்தும் அவனிடத்தில் தவறொன்றும் காணவில்லை யெனல்.]

ஆண்டிரண்டா றெல்லை யளவுந் திரிந்தேயுங்
காண்டகைய வெங்கலியுங் காண்கிலான் — நீண்டபுகழ்ச்
செந்நெறியாற் பார்காத்த செங்கோ னிலவேந்தன்
றன்னெறியால் வேறோர் தவறு.

(ப - ரை) காண் தகைய வெம்மை கலியும் - பிறரிடத் தெளிதிற் குற்றங் காணும் தகுதியை யுடைய கொடுங் கலிபுருடனும், ஆண்டு இரண்டு ஆறு எல்லை அளவும் திரிந்தேயும் - பன்னிரண்டு வருஷ காலமாய்ப் பின்பற்றித் திரிந்தும், நீண்ட புகழ் செம்மை நெறியால் பார் காத்த செம்மை கோல் நிலம் வேந்தன் தன் - பெரும் புகழோடு அற வழியில் பூமியை யாண்ட நீதியை யுடைய நிடத நாட்டரசனாகிய நளனுடைய, நெறியால் - ஒழுக்கத்தில், வேறு ஓர் தவறு காண்கிலான் - பின் செய்யுளிற் கூறியுள்ள ஒரு சிறு குற்றமன்றி மற்றொரு குற்றத்தையும் காணமாட்டாமற் போனான்.

(க - ரை) பன்னிரண்டு வருஷகாலங் கலிபுருடன் நளனைப் பின்பற்றித் திரிந்தும், அவனிடத்தில் யாதோர் ஒழுக்கத்தவறுங் கண்டுபிடிக்காமற் போனான்.

(வி - ரை) ஒழுக்கத் தவறுள்ளவர்களையே சனிபகவான் தொடர்வா னென்பது புராண சித்தாந்தம். இரிக்தேயும் என்பதி லுள்ள ஏகாரம் தேற்றம்; உம்மை சிறப்பு. செந்நெறி-செம்மை நெறி - மன்னுயிரைத் தன்னுயிர்போல் மதிக்கும் அறநெறி. இது பற்றியே நாயனாரும் தமது தெய்வத் தமிழ் மறையில், "வேலன்று வென்றி தருவது மன்னவன் கோலதூஉங் கோடா தெனின்" என் றருளினார். நெறியால் என்பன இரண்டும் கருவிப் பொருளன. ஆயினும் வேற்றுமை மயக்கமாய்ப் பொருட்டால் காண்க. காண் கைய என்பதற்குக் குற்றம் என்னும் செயப்படுபொருள் இசை யெச்சமாய் நின்ற தறிக. (உகூ)

[நளன் கால் கழுவுகையில் மறுவைக் கண்ட கலி, மனமகிழ்ந்து அதன் வழியாய் அவனிடத்துப் புகுந்தா னெனல்.]

சந்திசெயத் தாள்விளக்கத் தாளின்மறுத் தான்கண்டு
புந்தி மகிழப் புகுந்தகலி—சிந்தையெலாம்
தன்வயமே யாக்கித் தமைய னுடனிருந்தான்
பொன்னசல மார்பற் புகைந்து.

(ப - ரை) சந்தி செய்ய தாள் விளக்க - (நளன்) சந்தியா வந்தனம் செய்வதற்குக் காலைக் கழுவுகையில், தாளில் மறு கலி கண்டு - அந்தக் காலலம்புவதில் குற்றத்தைக் கலிபுருடன் பார்த்து, தான் புந்தி மகிழ புகுந்து - தான் மனங் களிக்க அவனிடத்திற் சேர்ந்து, சிந்தை எல்லாம் தன்வயமே ஆக்கி - அவன் எண்ணங் களை யெல்லாம் தன்வசமாகவே செய்துகொண்டு, பொன் அசலம் மார்பன் புகைந்து - பொன் மலை போல் உயர்ந்த மார்புடையவ னாகிய அவனிடத்திற் பகைகொண்டு, தமையனுடன் இருந்தான் - அவனுக்கு அண்ணனாகிய புஷ்கரனோடு சகாயமாயிருந்தான்.

(க - ரை) நளன் சந்தியாவந்தனத்திற்காகக் காலலம்புகை யில் உண்டான மறுவைக் கண்ட கலிபுருடன் மனமகிழ்ந்து அவ னிடத்திற் புகுந்து பகை பாராட்டினான்.

(வி-ரை) சந்தி ஆகுபெயராய் வந்தனத்தைக் குறித்தது. இங்கு மறு என்பது அழுக்குக்கும், நினையாத சிற்றிடத்திற்கும் ஆகுமென்பர். தான் என்பதை அசையாக்குவாருமுளர். கலி மறுகண்டு, தான் புந்தி மகிழப் புகுந்து என்று கூட்டுக. வெயி லெல்லாம் என்பது போலச் சிந்தையெலாம் என்பதைத் தேர்க தமையன்-புஷ்கரன் - இவன் நளனோ டுடன்பிறந்தா னல்லன்; நளனுக்கு மூத்தவனாகையால் தமையன் முறையா யவனுக் கடங்கி யாண்ட ஒரு சிற்றரசன். செய், மகிழ என்னும் எச்சங்கள் காரி யப் பொருளன. (௩௰)

[நாராயணாய நம வென்றுரைத் துன்பந் தொடர்வது போலக் கலிபுருஷன் நளனைச் சேர்ந்தா னெனல்.]

நாராய ணாய நமவென் றவனடியிற்
சேராரை வெந்துயரஞ் சேர்ந்தாற்போல்—பாராளும்
கொற்றவனைப் பார்மடந்தை கோமானை வாய்மைநெறி
கற்றவனைச் சேர்ந்தான் கலி.

(ப-ரை) நாராயணாய நம என்று அவனடியில் சேராரை - ஓம் நமோ நாராயணாய வென்று அக் கடவுளடிகளிற் சேராதவரை, வெம்மை துயரம் சேர்ந்தால் போல் - கொடும் பிறவித் துன்பம் அடைந்தாற் போல, பாராளும் கொற்றவனை - பூமியை ஆட்சி புரியும் வல்லமையுள்ளவனை, பார் மடந்தை கோமானை-பூமாதேவிக்கு நாயகனை, வாய்மை நெறி கற்றவனை-உண்மை நெறி உணர்ந்தவனை, கலி சேர்ந்தான் - கலிபுருடன் அடைந்தான்.

(க-ரை) நாராயணாய நம வென்றுரைப் பிறவித் துன்பம் தொடர்வது போலப் பாராளும் வல்லரசனும் பூதேவிக்கு நாயக னும் உண்மை நெறி யுணர்ந்தவனுமாகிய நளனைக் கலி சேர்ந்தான்.

(வி-ரை) ஓம் நாராயணாய நம என்னும் எட்டெழுத்து மந்திரமே பிறவித் துன்பொழிக்கும் சஞ்சீவி போன்றதாகையால் அம்மந்திர மோதும் தந்திர முணரார் பிறவித்துன்பொழிக்கும் வகை உணராரென்பதனால் "நாராயணாய நமவென் றவனடியிற் சேராரை

வெந்துயரஞ் சேர்ந்தாற்போல்'' என்ருர். சக்கரவர்த்தியாய் வேற்றரசர் திறையளிக்க ஆட்சி புரிந்தானென் ஆகையால் பாராளுங் கொற்றவனென்ருர். இலை முகப்பைம் பூணிறை அனைவர்க்கும் தெய்வம் போன்றவனுகையால், பார் மடந்தை கோமானை யென்ருர். யானைக்கும் அடி சறுக்கு மென்பதனுல் காலலம்புகையில் உண்டான மறுவை யொரு காரணமாக் கொண்டு கலி நளனைப் பற்றிஞனென்பதனுல் உண்மை நெறி கற்ருனை என்ருர். (௩௯)

[புட்கரனை நோக்கிக் கலி, "என்னோடு வா, நளனுடை நகரத்தைச் சூதால் உனக்கு வாங்கித் தருகின்றேன்" என்ருனெனல்.]

நன்னெறியில் சூதா னளனைக் களவியற்றித்
தன்னரசு வாங்கித் தருகின்றேன்—மன்னவனே
போதுவா யென்னுடனே யென்ருன் புலைநரகுக்
கேதுவாய் நின்ருனெடுத்து.

(ப - ரை) புலை நரகுக்கு ஏதுவாய் நின்ருன்-இழி நரக காரணனுகிய கலி, மன்னவனே - புட்கர ராசனே, நன்மை நெறி இல் சூதால் - நல்வழி யில்லாத (அல்வழியாகிய) சூதாட்டத்தால், நளனை களவு இயற்றி - நளனை வஞ்சனை செய்து, தன் அரசு வாங்கி தருகின்றேன் - அவனுடைய ஆட்சியைப் பிடுங்கி (உனக்குக்) கொடுக்கின்றேன் (இது நிச்சயம் ஆகையால்), என்னுடனே போதுவாய் என்ருன் எடுத்து - என்னோடு வா வென் றெடுத்துச் சொன்ஞன்.

(க - ரை) "தகாத வழியாகிய சூதாட்டத்தால் நளனை வஞ்சித்து, அவனுடைய நாடு நகரங்களைப் பறித்து உனக்குத் தருகின்றேன் என்னோடு வா'' என்று புட்கரனைக் கலிபுருடன் அழைத்தான்.

(வி - ரை) இல்+சூது = இற்சூதென்றாகாது. தருவேன் என்பது நிச்சயத்தால் தருகின்றேனென்று நிகழ்கால மாயிற்று கலியின் மகத்துவத்தால் தருமராசனும் சூதாடிக் காடு நண்ணிப் பாடு பட்டான் ஆகையால் நன்னெறியில் சூதால் என்றார். கலி வயப்பட்டார் செய்யாத பாவம் இல்லை ஆகையால் அவனைப் புலைநரகுக் கேதுவாய் நின்ற வென்றார். புலைநரகு - பண்புத் தொகை. கலிபுருடன் உரு மாறிப் போய்ப் புட்கரனை யழைத்தா னென்ப தன்றிப் புராண சித்தாந்தப்படி வேறு கூற வாயாது. இன்மை+சூது - இல் சூது - இன்மையாகிய சூது - பண்பு விதி யேற்றது. புலை நரகுக் கேதுவாய் நின்றான் எடுத்து என்றான் என்று கூட்டுக. (௩௨

[புட்கரன் எருதின்மே லேறிக்கொண்டு நளனோடு சூதாடப் போயினா னெனல்.]

புன்னை நறுமலரின் பூந்தா திடையொதுங்கும்
கன்னி யிளமேதிக் காற்குளம்பு—பொன்னுரைத்த
கல்லேய்க்கு நாடன் கவறாடப் போயினான்
கொல்லேற்றின் மேலேறிக் கொண்டு.

(ப - ரை) புன்னை நறு மலரின் பூந்தா திடை ஒதுங்கும் - புன்னைமரத்தின் மணமாகிய பூக்களினினுடைய அழகாகிய மகரந்தப் பொடிகளின்மேல் நடக்கும், கன்னி இளமை மேதி கால் குளம்பு - அழகான இள வெருமைகளுடைய காலிலுள்ள குளம்புகள், பொன் உரைத்தகல் ஏய்க்கும் நாடன் - பொன்னுரைத்து விட்ட உரை கல்லை ஒத்திருக்கும் நெய்தனாட்டரசனாகிய புட்கரன், கொல் ஏற்றின் மேல் ஏறிக்கொண்டு கவறு ஆட போயினான் - (போரிற் சினந்து) கொல்லுந் திறமுடைய எருதின்மே லேறிக் கொண்டு (நிடத நாட்டை நோக்கிப்) போனான்.

(கு - ரை) புட்கரன் கலியின் மகத்துவத்தால் அவனை தன்னை யொரு எருதாய்த் தாங்க நிடதநாட்டை நோக்கி நளனோடு சூது (சொற்கேட்டான்) ஆடப் போனான்.

(வி - ரை) பூந்தாதிடை என்பதில் பூ வென்பதற்கு அழ
கெனினும் மென்மை எனினும் பொருந்தும். ஒதுங்கும் என்ப
தற்கு நிழலுக் கொதுங்கும் எனினுமாம். கன்னி யிளமேதி - நாகி
ளங் கன்று என்பது போன்ற மீமிசை யென்பதூஉ மொன்று
காற் குளம்பு - வாய்ப்பல் என்பது போன்ற இயற்கைச் சிறப்பு
பொன்னுரைத்த கல் என்றதனால் எருமைகள் புன்னை நிழலில்
ஒதுங்கியிருந்து நடந்துவருகையில அவைகளுடைய குளம்புகளில்
மகரந்தம் படிந்து அவைகள் பொன் வணிகர் பொன்னுரைத்த
கற்களை நிகர்க்கு மெனக் கொள்க - இவ்வுவமையணியி னியற்கை
யழகை உய்த்துணர்க. குளம்பு- உரை கல்லைப் போலக் கார் நிற
மாம்; புன்னை மகரந்தம் - பொன்னைப்போல மஞ்ச ணிறமாம்.
கலியே யெருதாப் புட்கரனைச் சுமந்து சென்றானென்பது புராண
சித்தாந்தம். (௩௩)

[கங்கை பாயுந் தன்னாடு பின்னொழியப் புட்கரன்
நிடத நாட்டிற் புகுந்தா னெனல்.]

வெங்கட் சினவிடையின் மேலேறிக் காலேறிக்
கங்கைத் திரைநீர் கரைமேறிச்—செங்கதிர்ப்பைம்
பொன்னொழியப் போதும் புறம்பணைசூழ் நன்னாடு
பின்னொழியப் போந்தான் பெயர்ந்து.

(ப - ரை) வெம்மை சினம் கண் விடையின் மேல் ஏறி-
கொடுங் கோபக் கண்களையுடைய எருதின் மேலேறிக் கொண்டு,
கங்கை திரை நீர் கல் ஏறி - கங்கை யாற் றலைத்தண்ணீர் வாய்க்
கால்களிற் பாய்ந்தேறி, கரை ஏறி செம்மை கதிர் பசுமை
பொன் ஒழிய போதும் - கரை புரண்டு சிவந்த ஒளியை யுடைய
உயர் பசும் பொன் தங்கி நிற்கும்படி (வேகமாய்) ஓடுகின்ற, புறம்
பணை சூழ் நன்மை நாடு பின் ஒழிய - புற வயல்கள் சூழ்ந்த வள
முள்ள தன்னுடைய நாடு பின்புறமாகும்படி, பெயர்ந்து போந்
தான் - அதைக் கடந்து (புட்கரன் நிடத நாட்டிற்) புகுந்தான்.

(க - ரை) செங்கட் சின விடையோனாகிய புட்கரன் கங்கை பாயும் வயல் வளமுள்ள தன்னாடு பின்னாக, அதைக் கடந்து நள னுடைய நிடத நாட்டிற் புகுந்தான்.

(வி - ரை) உ0சஂ-ஞ் செய்யுளில் புட்கரன் ஏறேறி நிடத நாட்டைநோக்கிப் போனு னென்றுள்ளது; இங்கே நிடத நாட்டிற் புகுந்தான் என்று தொடர்ந்திருக்கிறது. காலேறி = கால் + ஏறி. இங்கே கால் என்பது வாய்க்கால் என்றும் காற்றென்றும் இரு பொருள் படுவதால், காற்று வீசுவதால் கங்கை யாற் றலைநீர், கரைமேலேறி யென்றுபொருள்படு மென்பர் சிலர்; வெள்ளப் பெருக்கால் கரை புரண்டோடு மன்றிக் காற்று வீசுவதால் நதி கரை புரள்வது இல்லை. கதிர் என்பதும் நெற்கதி ரென்றும் ஒளி யென்றும் இரு பொருள் படுவதால் நெற்கதிரெனினுமாம். இங்கு நன்னாடு என்பதற்குத் தன்னாடு என்றும் பாட வேறுபாடுண்டு. பின்னொழிய என்பதற்கும் பிறகு நளனுக் குரிமையாக வென்று குறிப்பிற் கொள்ளலாம். சிலர் நன்னாடு என்பதற்கு நிடத நாடெ ன்று புதுப் பொருள் கூறுவர். பின்னொழிய என்பதற்கும் நிடத நாடொழிய வென்று வேறு விளம்பி மயங்குவர். (௩௪)

[நீ யெடுத்த கொடி யென்ன கொடி யென்று கேட்ட நளனுக் குப் புட்கரன், "சூது வெல்லுங் கொடி" என்றனெனல்.

அடற்கதிர்வேல் மன்ன னவனேற்றின் முன்போய்
எடுத்தகொடி யென்னகொடி யென்ன—மிடற்சூது
வெல்லுங் கொடியென்றான் வெங்கலியா லங்கவன்மேல்
செல்லுங் கொடியோன் றெரிந்து.

(ப - ரை) கதிர் அடல் வேல் மன்னன் - ஒளியும் வலிவு முள்ள வேலேந்திய நளன், அவன் ஏற்றின் முன் போய் - அந்தப் புட்கரனுடைய எருதின் எதிரிற் சென்று, எடுத்த கொடி என்ன கொடி என்ன - நீ தூக்கிய கொடி யெதைக் குறித்த கொடி

யென்று கேட்க, வெம்மை கலியால் அங்கு அவன் மேல் செல்லும் கொடியோன் - கொடுங் கலியால் அவ்விடத்தில் அந் நளனை எதிர்த்துச் செல்லுகின்ற கொடுங்குணமுள்ள புட்கரன், தெரிந்து - அந்நளன் எண்ணத்தை அறிந்து, மிடல் சூது வெல்லும் கொடி என்றான் - (தோலா) வலிவுள்ள சூதாட்டத்திற் (பிறரை) வெல்லுங் கொடி (இது) என்றான்.

(க - ரை) நளமகாராசன் புட்கரனை எதிர்கொண்டு சென்று, நீ யெடுத்த கொடி யென்ன கொடி யென்று கேட்டதற்கு, அவன் பெரும் பணையமுள்ள சூதாட்டத்திற் பிறரை தப்பாமல் வெல்லுங் கொடி யென்றான்.

(வி - ரை) புட்கரன் நளனெண்ணத்தை அறிந்து சூதாட்டத்தில் அவனுக்கு மதிமயக்கம் வரும்படி மிடற்சூது வெல்லுங் கொடி யென்றானுகையால் 'தெரிந்து' என்றார். செல்லும் என்பது கால வழுவமைதி. கலியால் என்பது கலியின் தூண்டுதலால் என்று பொருடாநிற்பதால், மூன்றனேதுப்பொருட்டு. கொடுமை + ஒன் - பண்புச் சூத்திரவிதியான் கொடியோன் என்றாயிற்று. புட்கரன் கலி யெருதேறி நிடத நாட்டுக்குட் புகுந்தான் என்றதனாலேயே மாவிந்தத்தில் நளனைச் சந்தித்தா னென்பது குறிப்பிலுணரத்தக்கதாம். (நடு)

[புட்கரனை நோக்கி நளன், "நீ சொல்வ துண்மையானுல், உன்னோடு சூதாட ஒப்புக்கொண்டோம்" என்று னெனல்.]

என்றே யிதுவாயின் மெய்ம்மையே யெம்மோடு
வான்றோய் மடற்றெங்கின் வான்றேறல்—தான்றேக்கி
மீதாடி வாளைவயல் வீழ்ந்துழக்கு நன்னாடன்
சூதாட வென்றான் துணிந்து.

(ப - ரை) வாளை வான் தோய் மடல் தெங்கின் வான் தேறல் தேக்கி மீது ஆடி - வாளைமீன்கள் ஆகாயத்தை அளாவிய

மடல் (விரிந்துள்ள) தென்னையின் சிறந்த கள்ளைக் குடித்து (அங் கிருந்து) மேலே (தாவிக்குதித்துக்) கூத்தாடி, வயல் வீழ்ந்து உழக்கும் நன்மை நாடன் - வயல்களில் வீழ்ந்து தண்ணீரைக் கலக்குகின்ற வளமுள்ள நிடத நாட்டரசனாகிய நளன், இது மெய்ம் மையே ஆயின் என்றேம் - நீ இப்படிச் சொல்வது உண்மையே யானல் (யாம்) ஏற்றுக்கொண்டாம், எம்மோடு சூது ஆட என்றான் துணிந்து - எம்முடனே நீ சூதாடுக என்று துணிந்து சொன் ஞன்.

(க - ரை) புட்கரற்கு நளன், "ஏ அரசனே! நீ சொல்வ துண்மையானல் யாம் ஒப்புக்கொண்டோம். எம்முடன் நீ சூதாட வருக" என்று தீர்மானமாய்ச் சொன்னன்.

(வி - ரை) 'நீ நன்றுடன், இது மெய்ம்மையேயாயின், என் றேம், எம்மோடு சூதாட வென்றான் றுணிந்து' என்று ஒட்டுக. மெய்ம்மையே யென்பதில் ஏகாரம் தேற்றம். தான் தேக்கி யென்பதில் தான் அசை. வயல் நீரினின்று மேலெழும்பித் தென்னங் கட்குடத்திற் குதித்துக் கள்ளைக் குடித்து வெறித்து அங்கிருந்து தாவி ஆகாயத்திற் பாய்ந்து விளையாடி யெப்போதும் போல வயல் நீரிற் பாய்ந்து வாளைமீன்கள் கலங்கின வென்க; இது நீர்வளச் சிறைக் குறிக்கிறது. ஆட வென்பது அவ்வீற்று வியங் கோள். என்றேம், ஏற்றேம் - ஒரு தொடர். என்றேம் - தனித் தன்மைப் பன்மை; உயர்விஞல் என்றேன் என்பது இப்படி வந்தது.

(ரு௬)

[நளனுக்கு மந்திரிமார், "கள், காமம், சூது முதலிய தீமைகள் தீயோர் நெறி" என்றன ரேனல்.]

காதல் கவறாடல் கள்ளுண்டல் பொய்ம்மொழிதல்
ஈதன் மறுத்த லிவைகண்டாய்—யோதில்
இனியாமை வைகுந் திருநாடா செம்மை
நினியாமை பூண்டார் நெறி.

(ப - ரை) போதில் சினை ஆமை வைகும் திரு நாடா - தாமரை முதலிய பெரு மலர்களில் சூலாமைகள் தங்குகின்ற வளமுள்ள நாட்டை யுடையானே!, காதல், கவறு ஆடல், கள் உண்டல், பொய் மொழிதல், ஈதல் மறுத்தல் இவை - (மறு மாதரை) இச்சித்தலும், சூதாடுதலும், கட் குடித்தலும், பொய் சொல்லுதலும், (ஒருவர்க்கொருவர்) கொடுத்தலைத் தடுத்தலும் ஆகிய இவ்வைந்தும், செம்மை நினையாமை பூண்டார் நெறி - அற வழியை எண்ணாமையை மேற்கொண்டாருடைய பிற வழிகளாம்.

(க - ரை) "ஓ, நளமகாராசனே! மறு மாதராசையும், சூதும், கட்குடியும், பொய்யும், பொறாமையும் ஆகிய இவ்வைந்தும் அறவொழுக்கந் தவறினருடைய பிறவொழுக்கங்களாம்" என்றனர் மந்திரிமார்.

(வி - ரை) காதல் - ஆசை; இங்குப் பெண்ணாசையைக் குறிப்பதால் காமமென்று கொள்க. இவை யென்பதற்கு இவ் வைந்தும் என்று செவ்வெண் தொகையைத் தந்துரை கூறினமை காண்க. கண்டாய் என்பதை அசையாகத் தள்ளினும்; உன் வாழ்நாளில் நீ பார்த்தாய் என்று கொள்ளுநரு முளர்; உனக்கு நன்ருய்த் தெரியுமெனினு மாம். போது செறியும் போது விரியும் பூவை மருவும் பூவை மருவும் என்னும் எல்லப்ப நாவலர் வாக்கானும் போதென்பது மலருக் காகுபெயரென்பது நன்கு விளங்கும். சினையாமை யென்பதை இலக்கணப் போலியாக்கி, ஆமைக்குட்டி யெனினும் அமையும். பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை யென்பதனால் போதில் என்பதற்குத் தாமரை மலரிலென்றே பொருள் கூறுநரு முளர். இது முதல் நான்கு செய்யுளும் மந்திரிமார் கூற்று. (௩௭)

[நளனுக்கு மந்திரிமார், "சூது அறத்தைக் கொல்லும் அருநரகை வெல்லும்" என்று ரேனல்.]

அறத்தைவேர் கல்லும் அருநரகிற் சேர்க்கும்
திறத்தையே கொண்டருளைத் தேய்க்கும்—மறத்தையே
பூண்டுவிரோ தஞ்செய்யும் பொய்ச்சூதை மிக்கோர்கள்
தீண்டுவரோ வென்றார் தெரிந்து.

(ப - ரை) அறத்தை வேர் கல்லும் - புண்ணியத்தை வேரறுக்கும், அருமை நரகில் சேர்க்கும் - மீளா நரகத்துக்களாக்கும், திறத்தையே கொண்டு அருளை தேய்க்கும் - (வெல்லும்) வல்லமையையே (முதன்மையாக்) கொண்டு இரக்கத்தை அழிக்கும், மறத்தையே பூண்டு விரோதம் செய்யும் - கோவ பாவத்தையே மேற்கொண்டு பகை யுண்டாக்கும், பொய் சூதை மிக்கோர்கள் தீண்டுவரோ என்றார் தெரிந்து - (ஆகையால்) பொய்க் காதாரமான சூதாட்டக் கருவிகளை மேலோர் (தம் மனத்தாலும்) தொடுவார்களோ? (தொடார்கள்) என்று (மந்திரிமார்கள்) ஆய்ந்து சொன்னார்கள்.

(க - ரை) பொய்க்குப் பிறப்பிடமாகிய சூதானது அறத்தை அழிக்கும், மறத்தைக் கொழிக்கும்; புண்ணியத்தைப் போக்கும், பாவத்தை ஆக்கும். ஆகையால் அதைப் பெரியோர் மனத்தாலும் தொடா ரென்றார் மந்திரிமார்.

(வி - ரை) அறத்தின் வேரைக் கல்லும் என்பது உமொன்று' அருநர கென்பதில் அருமை யென்பது அதினின்று மீளாமையாகிய உச்ச நிலையை உணர்த்துகிறது. மறம்=பாவம் - அதற்குக் கோவமே முதற்காரண மாகையால் கோவ பாவ மென்றும். பாய்ச்சிகை முதலியவைகளை மிக்கோர் தம் மனத்தானுந் தொடார் என்பதனையே 'மிக்கோர்கள் தீண்டுவரோ' என்று ரென்க.-ஏக்க ளிரண்டும் தேற்றங்கள் - பிரிநிலை என்பாருமுளர். ஓ - எதிர்மறை. மந்திரிமார், "ஐயனே! அறவேரை அறுத்து, அருநா

கிற் புகுத்து, திறமே கொண்டருளைத் திரித்து, மறமே கொள் பகைமை விரிக்குஞ் சூதை மிக்கோர்கள் தீண்டார்கள்'' என்று றென்பதூஉ மற்றொன்று. (ஙஅ)

[நளனுக்கு மந்திரிமார், "சூது, ஆடுவோனுடைய உருவையும் உயர்வையும் திருவையும் சீரையும் மழிக்கும்" என்று ரேனல்.]

உருவழிக்கு முண்மை யுயர்வழிக்கும் வண்மைத்
திருவழிக்கு மானஞ் சிதைக்கும்—மருவும்
ஒருவரோ டன்பழிக்கு மொன்றல்ல சூது
பொருவரோ தக்கோர் புரிந்து.

(க - ரை) சூது உரு அழிக்கும் உண்மை உயர்வு அழிக்கும் வண்மை திரு அழிக்கும் மானம் சிதைக்கும் - சூதானது (ஆடுவோ னுடைய) உருவத்தைக் கெடுக்கும், (அவன்) மெய் பேசும் மேன் மையைக் கெடுக்கும், பிறர்க்கவன் ஈதற் சிறப்பைக்கெடுக்கும், பெரு மையைக் கெடுக்கும்; கூடும் ஒருவரோடு அன்பு அழிக்கும்-கூடி யுள்ள ஒருவர் மேற்கொண்ட அன்பைக் கெடுக்கும், ஒன்றல்ல - (இப்படி அதனால் வருங்கேடு) ஒன்றன்று, (பற்பலவாம்; ஆகையால் அதை) தக்கோர் புரிந்து பொருவரோ - மேலோர் விரும்பி ஆடு வார்களோ? (ஆடார்).

(கு - ரை) "சூது, ஆடுவோனுடைய உருவையும், உண்மை யையும், கொடையையும், பெருமையையும், நட்பையுங் கெடுக்கும். ஆகையால் அதனால் வருங்கேடுகள் பலவாம். நல்லார் அதை நாடார்'' என்றனர் மந்திரிமார்.

(வி - ரை) சூதன் பசியு முணராமல் வெல்வதே நாட்டமாய் பட்டினிகிடந்து உருவழிவானாகையால் உருவழிக்கு மென்று அதுவே நாட்டமாய்ப் பொய் பேச அஞ்சான் ஆகையால் உண்மை யுயர்வழிக்கு மென்றார். சூது வளமான செல்வத்தைத் தோல்வி

யால் இழப்பிக்கும் ; அதனால் சூதன் பிறர்க்கொன்றீயவும் இயலாது ஆகையால் வண்மைத் திருவழிக்குமென்றார் ; 'இரப்பார்க்கொன்றீவார் மேல் நிற்கும் புகழ்' என்றதனால் ஈகையில்லையேல் புகழில்லையாம் ஆதலால் மானம் சிதைக்குமென்றார்; நண்பனென்றும் பாராமல் சூதன் வெல்வதே கருமமாய் வன்மை வளர்ப்பானாகையால் அவனுக்கு ஒருவரோடன்பழிக்குமென்றார்; பொருதல் போர் புரிதலுக்குமாகும் ஆதலால் சூதாட்டத்தை வாதாட்டமாய்ச் சூது பொருவரோ என்றார். (௩௧)

[நளனுக்கு மந்திரிமார், "ஆயம் பிடித்தாரும் வேசியர் நேயம் பிடித்தாரும் வேறல்லர்" என்றனரெனல்.]

ஆயம் பிடித்தாரு மல்லற் பொதுமகளிர்
நேயம் பிடித்தாரு நெஞ்சிடையே—மாயம்
பிடித்தாரின் வேறல்லரென்றுரைப்ப தன்றே
வடித்தாரின் னூலோர் வழக்கு.

(ப - ரை) ஆயம் பிடித்தாரும் - சூதாடு கருவியாகிய பாய்ச்சிகையைப் பிடித்தவர்களும், அல்லல் பொது மகளிர் நேயம் பிடித்தாரும் - துன்பகாரணராகிய விலைமாதருடைய நட்பைக் கொண்டவர்களும், நெஞ்சிடை மாயம் பிடித்தாரின் வேறு அல்லர் - மனத்தில் வஞ்சகங் கொண்டவர்களைக் காட்டிலும் வேறானவரல்லர், என்று உரைப்பது அன்றே வடித்தார் இன் நூலோர் வழக்கு - என்று சொல்வதல்லவோ முற்று முணர்ந்த முனிவர்களுடைய இனிமையான நூல்களைக் கற்றவர்களுடைய ஒழுக்கம்?

(க - ரை) "ஆயம் பிடித்தாரும் விலைமாதர் நேயம் பிடித்தாரும் மனத்தில் மாயம் பிடித்தாரின் வேறல்லரென்பது முனிவர் நூலைக் கற்றுணர்ந்த மூதறிஞர் ஒழுக்கமாம்" என்றனர் மந்திரிமார்.

(வி - ரை) ஆயம் பிடித்தார் வெல்வதே கருமமாய்க் கைப்பொருளை இழப்பர்; அல்லற் பொது மகளிர் நேயம் பிடித்தார்

காமமே கருமமாய்க் கைப்பொருளிழப்பர்: இருவரும் பொருளிழவு பெறுவதில் ஒத்திருப்பதால் நெஞ்சிடையே மாயம் பிடித்தாரின் வேறல்ல ரென்றார். ஞானத் தேர்ச்சி பெற்றாராகலான் முனிவரை வடித்தா ரென்றார். வடித்தல், ஆய்தல், வழக்கு, ஒழுக்கு - ஒரு தொடர், வழக்கு என்பதை வாய் வழக்கென்று கொண்டு பேச்சு என்று பேசுவாருமுளர். 'வலியினிலைமையான் வல்லுருவம் பெற்றம், புலியின்றோல் போர்த்து மேய்ந்தற்று' என்றபடி நெஞ்சிடையே மாயம் பிடித்தார் உலகை மயக்கிப் பொருள் கவர்வ ரென்க. (சo)

[நளன் மந்திரிமாரை நோக்கி, "நீவிர் என்னை விலக்கன்மின்" என்று கனன்று கூறிஞ னெனல்.]

தீது வருக நலம்வருக சிந்தையாற்
சூது பொரவிசைந்து சொல்லினேம்—யாதும்
விலக்கவிர்நீ ரென்றான் வராலேற மேதி
கலக்கலைநீர் நாடன் கனன்று.

(ப - ரை) வரால் ஏற கலக்கு அலை நீர் நாடன் கனன்று-வரான் மீன்கள் தம் முதுகின்மேல் தாவிக்குதிப்பதனுல் எருமைக் கூட்டங்கள் வெருண்டு கலக்குகின்ற அலை பாயும் நீர்வளமுள்ள நிடத நாட்டரசனுகிய நளன் கோபித்துத் (தன் மந்திரி மாரை நோக்கி), தீது வருக நலம் வருக - தீமையே வந்தாலும் வரட்டும் (அதனுல்) நன்மையே வந்தாலும் வரட்டும், சூது பொர சிந்தையால் இசைந்து சொல்லினேம் - சூதாட மன மொப்பிச் சொல்லி விட்டோம், யாதும் நீர் விலக்கலிர் என்றான் - எதையும் நீவிர் விலக்கன்மின் என்றான்.

(க - ரை) நளன் மந்திரிமாரை நோக்கி, "சூதாட இசைந்து சொல்லி விட்டேன். அதனுல் நன்மை வந்தாலும் சரி, தீமையே வந்தாலும் சரி; நீவிர் விலக்கன்மின்" என்றான்.

(வி - ரை.) வயலில் வரால்கள் துள்ளிக் குதித்து எருமைகளின் மேற் பாய்வதனால் அவைகள் வெருண்டசைவதனால் அலை வீசுவதை மேதி கலக்கலை நீர் என்றார். வருக - வியங்கோள். இதைப் பிள்ளைத்தமிழ் வருகைப் பருவத்திற் காண்க. விலக்கலிர்-வ்லக்கு-தனிவினைப் பெயர்; அல்-எதிர்மறை, இர்-முன்னிலைப் பன்மை. மந்திரிமார் நூனயங் கண்டாராகையால், 'சிறுமை பல செய்து சீரழிக்குஞ் சூதின், வறுமை தருவ தொன்றில்' என்றபடி சூது தகாது என்றனர். நளன் சொற் சோர்வு படாமைதலான் தீது வருக நலம் வருக விலக்கலிர் நீ ரென்றானென்க. (சுக)

[நளனை நோக்கிப் புட்கரன் "நீ சூதாட இசைந்தது சரிதான், பணயம் என்ன?" என்றானெனல்.]

நிறையில் கவறாட னீநினைந்தா யாகில்
திறையிற் கதிர்முத்தஞ் சிந்தும்—துறையில்
கரும்பொடியா மள்ளர் கடாவடிக்கு நாடா
பொரும்படியா தென்றானிப் போது.

(ப - ரை) துறையில் திரையின் கதிர் முத்தம் சிந்தும் கரும்பு ஓடியா - நீர்த்துறையில் பகுதி யளிப்பது போல ஒளியுள்ள முத்துகளைச் சிந்துகின்ற கரும்பை ஒடித்து, மள்ளர்கடா அடிக்கும் நாடா - உழவர் உழுகடாக்களை அடித் தோட்டும் வளமுள்ள நிடத நாட்டரசனே!, நிறை இல் கவறு ஆடல் நீ நினைந்தாயாகில் - மன நிலையற்ற சூதாடுதலை நீ நினைத்தால், இப்போது பொரும்படி யாது என்றான் - இப்போது (முதலில் நீ வைக்கும்) பணயம் என்ன வென்று கேட்டான்.

(க - ரை) நளனை நோக்கிப் புட்கரன், "மன்னவனே! சூதாட நீ ஒப்பினது சரிதான். ஆனால் இப்போது முதலில் நீ வைக்கும் பணயம் என்ன?" என்று கேட்டான்.

(வி - ரை) பொரும்படி - ஆடும் பணயப்படி - பந்தயப் பொருட்படி. நிறை - மன நிறைவு - மன நிறைவில்லையேல் நிலை

மில்லை யென்றுணர்க. ஆடல் நினைந்தாய் - இரண்டன் தொகை. நிறையில் எனப் பிரித்து விலையில்லாத என்பாரு முளர். ஒடியா- செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். புட்கரன் கூற்றாக நிறையில் சூது என்றாரேனும் அப்போது அப்படி அவன் சொல்லி யிராமையால் நிறையில் என்பது கவி கூற்றேயாம்—'பொருள் கெடுத்துப் பொய்மேற் கொளீஇ யருள் கெடுத், தல்லலுழப் பிற்கும் சூது' என்றமையால் நிறையில் சூது என்றார். (௬௨)

[நளன் தன் மணியாரத்தைப் பணயமா வைத்தான்; புட்கரன் தன் கோல்லேற்றை வைத்தா னெனல்.]

விட்டொளிர்வில் வீசி விளங்குமணிப் பூணாரம்
ஒட்டினே னுன்பணைய மோதென்ன—மட்டவிழ்தார்
மல்லேற்ற தோளானும் வான்பணைய மாகத்தன்
கோல்லேற்றை வைத்தான் குறித்து.

(ப - ரை) விட்டு ஒளிர் வில் வீசி விளங்கும் மணி பூண் ஆரம் ஒட்டினேன் - விட்டு விட் டொளிர்கின்ற ஒளியை வீசித் தோன்றும் மணிகளிழைத்த பூணாரத்தைப் பணையமாக வைத் தேன், உன் பணையம் ஓது என்ன - உன் பணையம் என்ன சொல் என்று (நளன்) கேட்க, மட்டு அவிழ்தார் மல் ஏற்ற தோளானும்- தேனொழுகும் மலர் மாலை யணிந்த மற்போரைத் தாங்கி உறுதி யான தோட்களையுடையவனாகிய புட்கரனும், தன் கொல் ஏற்றை வான் பணையம் ஆக குறித்து வைத்தான் - தன்னுடைய கொல் லுந் திறம் வாய்ந்த (கலி) யெருதை பெரும் பந்தயமாகச் சொல்லி வைத்தான்.

(க - ரை) மணி மாலையைப் பந்தயமாக வைத்தேன்; உன் பந்தயம் என்ன வென்று நளன் கேட்கப் புட்கரனும் தன் கொல் லேற்றைப் பந்தயமாகக் குறித்து வைத்தான்.

(வி - ரை) பூணாரம்=பூண்+ஆரம்; பூணும் ஆரம்-வினைத் தொகை; பூணுகிய ஆரம்-இருபெயரொட்டு. ஒட்டுதல் — பந்தயமா

வைத்தல். புட்கரன் கலிபுருடன் சங்கேதப்படி கொல்லேற்றை வான்பணயமாக வைத்தானென்று கொள்க. வில்-ஆகுபெயராய் ஒளியைக் குறித்தது. மணிப்பூணாரம்-கல்லிழைத்த கண்ட சரம். விட்டு விட்டொளிர்வது உயர்தர மாணிக்கத்தின் தன்மை. (௬௩)

[தவறுய்ப் புரண்ட புட்கரனோடு கூடிக் கவறுய்ப் புரண்டான் கலி யெனல்.]

காரேயுங் கூந்தலார் காரிகைமேற் காதலித்த
தாரேயுந் தோளான் றனிமனம்போல்—நேரே
தவறுய்ப் புரண்ட தமையனோடுங் கூடிக்
கவறுய்ப் புரண்டான் கலி.

(ப - ரை) கார் ஏயும் கூந்தல் ஆர் காரிகை மேல் காதலித்த மேகத்தை நிகர்த்த தலை மயிர் நிறைந்த தமயந்தியின் மேல் இச்சை வைத்த, தார் ஏயும் தோளான் தனிமை மனம் போல் - மாலை பொருந்திய தோட்களை யுடைய நளனது ஒரே பிடிவாத மான மனம் போல, நேரே தவறு ஆய் புரண்ட தமையனோடும் கூடி - நேராகவே நெறி தப்பி மாறின தமையனாகிய புட்கரனோடு சேர்ந்து, கலி கவறு ஆய் புரண்டான் - கலிபுருடன் பாய்ச்சிகையா யுருண்டான்.

(க-ரை) தமயந்தியைக் காதலித்த நளனுடைய ஒரே பிடிவாத மான மனம் போலவே, தவறுய்ப் புரண்ட புட்கரனோடு கூடி கலி கவறுய்ப் புரண்டான்.

(வி - ரை) காரேயுங் கூந்தலான் கொங்கைமேற் காத லித்த என்று பாடமோதித் தாரேயுந் தோளான் என்பதற்குப் புட்கரனென்றும் அல்லது கலிபுருடனென்றும் பொருள் விரிப்பா ருளர். நளன் ஒரே பிடிவாதமான மனத்தோடு சூதாட இசைந் திருந்தது போலவே, கலிபுருடனும் புட்கரனோடு ஒரே பிடி வாதமாய்க் கூடிக் கவறுய்ப் புரண்டா னென்று கூட்டுக. புட்கரனுக்கும் தமயந்தியின் மேல் மன மூண்டு ஆயினும் இங்கு

தாரேயுந் தோளா னென்பதைப் புட்கர னென்று புகல்வது முற்றும் பொருந்தாமை காண்க. கலிபுருடற்கும் தமயந்தியின்மேற் காதலுண்டு. ஆயினும் தாரேயுந்தோளா னென்பது அவனைக் குறித்த தென்பதூஉம் அதினும் அசாத்தியமாம். தோளான் ......தமைய னென்பவைகள் ஒருவனையே குறித்தன வென்பது உன்மத்தா கொள்கையாம். நளனும் ஒரே பிடியாய்ச் சூதாடுவதை மேற்கொண்டிருந்தான், கலியும் ஒரே பிடியாய்ப் புட்கரனோடு டிக் கவருய்ப் புரண்டனென்க. (சஅ)

[நளன் தன் மணியாரத்தைத் தோற்றதன்றி நிதியையும் நூறு நூருயிரமாகத் தோற்ரு னெனல்.]

வைத்த மணியாரம் வென்றேன் மறுபலகைக்
கொத்த பணைய முரையென்ன—வைத்தநிதி
நூரு யிரத்திரட்டி நூறுநூ ருயிரமும்
வேருகத் தோற்ருனவ் வேந்து.

(ப - ரை) வைத்த மணி ஆரம் வென்றேன் - (நளனை நோக்கிப் புட்கரன்) நீ (பந்தயமாக) வைத்த மாணிக்க மாலையைக் கெலித்தேன், மறு பலகைக்கு ஒத்த பணயம் உரை என்ன - மறு சூதுக்குச் சரியான பந்தயம் சொல்லென்று கேட்க, அ வேந்து - அந் நளமகாராசன், வைத்த நூறு ஆயிரத்து இரட்டி நிதி - (அப்போது பந்தயமாக) வைத்த இரண்டு நூருயிரம் (இலக்ஷணம்) பொன்னையும், நூறு நூறு ஆயிரம் வேறு ஆக தோற்ருன் - (அதற்கப்புறமும்) நூறு நூறு ஆயிரம் (கோடி) பொன்னையும் வெவ்வேறளவாகத் தோற்ருன்.

(க - ரை) தன் மணியாரத்தைத் தோற்ற நளன், நூருயிரமாகவும் நூறு நூருயிரமாகவும் பொன்னைப் பந்தயமாக வெவ்வேரு வைத்துப் புட்கரனுக்குத் தோற்ருன்.

(வி - ரை) இரட்டி நிதி யென்பதை இரட்டித்த நிதி யென்று வினைத்தொகையாக் கொள்வாரு முளர் - இரண்டு என்னும் எண்

ணடியாகப் பிறந்த பெயரோ இரட்டி யென்பது எற்றமா மென்க - இரட்டி நூருயிரம் பொன்னுக்கு நூறு நூருயிர மென்று வெவ் வேறு பொருள் விளம்பி மயங்குவாரு முளர். நூருயிரத்து என் பதையே நூருயிரத்தையும் என்று உம்மைத்தொகை யாக்கு வாரு முண்டு. பலகை - ஆட்டத்துக்கு ஆகுபெயராம், ஆகையால் சூது என்ருெம். இங்குப் பலகை யென்றது சொற் கேட்டான் காய்கள் வைக்கும் அறைகள் கீறிய பலகையை. இப்போதிது பன்னிற ஆடையிற் றைத்திருக்கின்றது. பன்னிறக் கம்பளியிற் பின்னியு மிருக்கிறது. (சுஙு)

[நளன் பல்லாயிரம் பரியுந் தேரும் காலாளும் களிறும் பிடியுந் தோற்ரு னெனல்.]

பல்லா யிரம்பரியும் பத்துநூ ருயிரத்துச்
சொல்லார் மணித்தேருந் தோற்றதற்பின்—வில்லாட்கள்
முன்ரோற்று வானின் முகிரோற்கு மால்யானை
பின்ரோற்றுத் தோற்ருன் பிடி.

(ப - ரை) பன்மை ஆயிரம் பரியும் - எத்தனையோ ஆயிரக் கணக்கான குதிரைகளையும், பத்து நூறு ஆயிரத்து சொல் ஆர் மணி தேரும் தோற்றதன் பின்-பத்திலக்ஷம் என்னும் பெருமை பொருந்திய அழகான தேர்களையும் தோற்றதன் பிறகு, வில் ஆட் கள் முன் தோற்று-வில் வீரராகிய காலாட்களை முதலிற் ரோற்று, வானில் முகில் தோற்கும் மால் யானை பின் தோற்று - ஆகாயத் தில் உலாவுகிற மேகங்கள் தோற்கின்ற பெரிய ஆண் யானை களைப் பிறகு தோற்று, பிடி தோற்ருன் - பெண் யானைகளைத் தோற்ருன் (நளன்).

(க - ரை) பல்லாயிரங் குதிரைகளையும் பத்திலக்ஷம் தேர் களையும் தோற்ற பிறகு காலாட்களை முன்னே தோற்று ஆண் யானைகளைப் பின் தோற்றுப் பெண் யானைகளையும் தோற்ரு னளன்.

(வி - ரை) பன்மை + ஆயிரம் = பல்லாயிரம்-பண்புத்தொகை: பல + ஆயிரம் என்று பிரிக்கினும் பொருந்தும் - பலவாகிய ஆயிர மென்பது பொருள். சொல் - புகழெனினுமாம். மணித்தேர் - கண்டா மணிகள் கட்டிய தேர்-நவமணிகள் இழைத்த தேர் எனி னுமாம். முகில் தோற்பது நிறத்துக் கொவ்வாமல். தோற்று + அதன் + பின் என்றும், தோற்றது + அன் + பின் என்றும் பிரிக்க லாம் - தோற்றதற்குப் பிறகு என்பது பொருள். குதிரை, தேர், காலாள், யானை யென்னும் நால்வகைப் படைகளே இங் குக் குறித்திருப்பன. ஆண் யானையைத் தோற்பதே மரபு; மரபல்லாப் பெண் யானையையும் மதி மயக்கத்தால் தோற்ரு னென்பது தோன்ற தோற்ருன் பிடியென்று இறுதியிலியம்பினர்.

[பெண் யானையைத் தோற்ற நளன் பெண் சேனையாகிய
பணிப்பெண்களையுந் தோற்ரு னெனல்.]

சாதுரங்கம் வென்றேன் தரும்பணைய மேதென்ன
மாதுரங்கம் பூணு மணித்தேரான்—சூதரங்கில்
பாவையரைச் செவ்வழியாழ்ப் பண்ணின்மொழிப்
[பின்னுகுழற்
பூவையரைத் தோற்ருன் பொருது.

(ப - ரை) சாதுரங்கம் வென்றேன் தரும் பணையம் ஏது என்ன - தேர் யானை குதிரை காலாள் என்னும் நால்வகைச் சேனைகளையும் கெலித்துக் கொண்டேன் (இனி நீ) கொடுக்கத் தக்க பந்தயப் பொருள் எது என்று (புட்கரன்) கேட்க, மா துரங்கம் பூணும் மணி தேரான் - பெரிய குதிரைகள் கட்டியிருக்கிற அழகாகிய தேரை யுடையவனாகிய நளன், சூது அரங்கில் - அச் சூதாடுமிடத்தில், பாவையரை செவ்வழியாழ் பண்ணின்மொழி பின்னுகுழல் பூவையரை பொருது தோற்ருன் - பாவை போன்ற உருவத்தை உடையவரை செவ்வழி யென்னும் யாழிசையைப் போன்ற சொல்லையும் பின்னி விட்ட கூந்தலையும் உடைய பூவை

போன்ற பெண்களை(ப் பந்தயமாக வைத்து) சூதாடித் தோற்று விட்டான்.

(க - ரை) நால்வகைச் சேனையோடு பெண் யானையையுந் தோற்ற நளன் தன் பணிப் பெண்களையும் பந்தயமா வைத்துச் சூதாடிப் புட்கரனுக்குத் தோற்றான்.

(வி - ரை) சாதுரங்கம் மாதுரங்கம் என்று ஆரிய மொழி யாண்ட கவி, 'நாற்படைவேன் றேனினிநீ நல்தும் பணையமேது, சாற்றுவாய் என்னத் தடந்தோளான்—கீற்றுவளைப் .........' என்று தமிழ் மொழியே ஆண்டிருப்பின் அழகா மென்பர் தற்போதைய தமிழ்ப்பற்றுடையார். சாதுரங்கம் - சீட்டும் வழி நீண்டது. மா என்பதை மஹா என்பதின் மரூஉ வென்பாரு முளர் - மா வென்ப தைத் தமிழென்று கோடலே மரபு. பாவைபோன்றவராகிய பூவையரை யென்று கூட்டிக்கொள்க. செவ்வழியாழ் - செய்த னிலத்து வீணை. பூவை - நாகணவாய்ப் புள் - மொழிக்குவமை. பாவை, பூவை - பெண்களுக்காகுபெயர்கள். (௭௭)

[குலமகளை விட்டு விலைமகளைச் சேர்ந்த வீணனைப்போலத் திருமகள், நல்லானாகிய நளனை விட்டு அல்லானாகிய புட்கரனைச் சேர்ந்தா ளெனல்.]

கற்பின் மகளிர்பா னின்றுந் தமைக்கவட்டின்
விற்கு மகளிர்பான் மீண்டாற்போல்—நிற்கும்
நெறியானை மெய்ம்மைவாய் நின்றானை நீங்கிச்
சிறியானைச் சேர்ந்தாள் திரு.

(ப - ரை) கற்பின் மகளிர்பால் நின்றும் - கற்புடை மாத ரிடத்திருந்து, தம்மை கவட்டின் விற்கும் மகளிர்பால் மீண் டான் போல் - தங்களை வஞ்சனையால் பணத்துக்கு விலைப்படுத் தும் வேசியரிடத்திற் றிரும்பிச்சென்ற வீணனைப்போல, திரு நிற் கும் நெறியானை மெய்ம்மை வாய் நின்றானை நீங்கி - திருமகள், நல்

வழியிற் பிறழாது நிற்பவனும் உண்மையில் நிலைத்திருப்பவனு மாகிய நளனை விட்டு, சிறியானை சேர்ந்தாள் - கீழ்மகனாகிய புட் கரனை அடைந்தாள்.

(கு - ரை) குலமகள் கூட்டுறவை விட்டு விலைமகள் சேர்க் கையை விரும்பிச் சென்ற வீணனைப் போல, நல்வழியில் நிற்கும் நளனை விட்டுப் பூமகள் அல் வழியில் நிற்கும் புட்கரனைச் சேர்ந்தாள்.

(வி - ரை) கற்பின் மகளிர் - கற்பின் சிறப்பை யுடைய மக ளிர், கற்பையுடைய மகளிர், கற்புடை மகளிர். பால்-இடம். நின்றும் - ஐந்தன் சொல்லுருபு-நீங்கல். கற்பின் மகளிர்பா னின் றுங் கலையல்குல் என்றும் பாட பேத முண்டு. மீண்டாற் போல் என்பதை மீண்டால் போல் - மீண்டது போல என்று பொருள் கொளினுமாம். இப்படியாயின் ஒருவன் என்பதைச் சொல்லெச் சமா வருவித்துக்கொள்க. திரு, நெறியானை விட்டுச் சிறியானைச் சேர்ந்தாள் என்பதனால், நளன் தன் னாடு நகரம் முதலிய செல்வங்க ளெல்லாவற்றையும் புட்கரனுக்குத் தோற்று நெறியா னென்பது போய் வறியானா னென்று குறிப்பிற் கொள்க. "உருளாய மோவாது கூறின் பொருளாயம் போ ஒய்ப்புறமே படும்" என்னும் நாயனார் வாக்கு இங்கு நலந்தருவது காண்க (சஅ)

[நளனை நோக்கிப் புட்கரன், "உன் மனைவியை வைத்தாடு" என்று னெனல்.]

மனைக்குரியா ரன்றே வருந்துயரந் தீர்ப்பார்
சினைச்சங்கின் வெண்டலையைத் தேனால்—கனைக்குங்
குவளைப் பணைப்பைந்தாட் குண்டுநீர் நாடா
இவளைப் பணையந்தா வின்று.

(ப - ரை) சினை சங்கின் வெண்மை தலையை - கருவுற்றி ருக்கும் சங்குப் பூச்சிகளின் வெள்ளைத் தலைகளை, தேனால் கனைக்

கும் குவளை பணை பசுமை தாள் குண்டு நீர் நாடா - (தம்மலர்த்) தேனால் நனைக்கும் நீலோற்பலங்களுடைய பருமையாகிய பசுந் தாட்களை யுடைய ஆழமான நீர்வளமுள்ள நிடத நாட்டரசனே, வரும் துயரம் தீர்ப்பார் மனைக்குரியார் அன்றே - கணவர்க்கு வருகிற துன்பங்களைத் தீர்க்க வேண்டியவர்கள் இல்லறத்துக்குக் குரியாராகிய மனைவிமார்க ளல்லவோ? (ஆகையால் நீ), இவளை இன்று பணயம் தா — இவ்வுன் மனைவியாகிய தமயந்தியை இப் போதுன் பந்தயப் பொருளாக் கொடு (என்றான் புட்கரன்).

(க - ரை) கணவற்கு வருஉம் துன்பத்தை மனைவியே தீர்க்க வேண்டியவளாயிருக்கிறாள். ஆகையால் உன் மனைவியாகிய தமயந்தியை வைத்துச் சூதாடு என்றான் புட்கரன்.

(வி - ரை) மனைக் குரியாரன்றே வருந்துயரந் தீர்ப்பார் என்றதற்குத் தன்னைப் பார்ப்பானுக்கு விற்பித்துக் கணவன் கடன் தீர்த்த சந்திரமதியே சான்றாவாள். குவளைத் தாள் குண்டு நீரளவாய் நீண்டிருப்பது போலக் கணவன் எண்ணத்தளவாய் மனைவி ஒத்திருக்க வேண்டு மென்பதைக் குறிப்பிற் கொள்க. இவளை யென்ற அண்மைச் சுட்டாற் குறித்தமையால், அப் போது தமயந்தியும் நளனருகில் இருந்தா ளென்பது தேற் றம். ஊசியுஞ் சரடும் போல ஒத்திருந்தா ராகலான் நள தமயந்தி யர் எதினும் மனம் வேறுபட்டிலர். வெண் தலையை யென்றது சங் கோட்டை. அன்றே என்பது ஆம் என்னும் உடன்பாட்டுப்பொரு டரல் காண்க. அன்று-எதிர்மறை; ஏ-எதிர்மறை வினா. (௬௧)

[சூதாட்ட மொழிந்தது, "இனி வா, நாம் போவோம்" என்று நளன் தமயந்தியை அழைத்துக் கொண்டு போனா னெனல்.]

இனிச்சூ தொழிந்தோ மினவண்டு கிண்டிக்
கனிச்சூத வார்பொழிலின் கண்ணே—பனிச்சூதப்
பூம்போ தவிழ்க்கும் புனனாடன் பொன்மகளே
நாம்போது மென்றா னளன்.

(ப - ரை) நளன், (தமயந்தியை வைத்துச் சூதாடச் சொன்ன புட்கரனுக்கு ஒன்றுஞ் சொல்லாமல்) கனி சூதம் வார் பொழிலின் கண் - பழங்களை யுடைய மா மரங்களி னீண்ட சோலையில், வண்டு இனம் கிண்டி - வண்டுக் கூட்டம் (காலால்) குடைந்து, பனிச்சு ஊத பூ போது அவிழ்க்கும் புனல் நாடன் பொன் மகளே - அசைந்து (வாயால்) ஊதுவதனுல் அழகான போதுகள் மடல் விரிக்கும் நீர்வளமுள்ள விதர்ப்பநாட்டரசனுடைய அருமையாகிய மகளே, இனி சூது ஒழிந்தோம் (ஆகையால்) நாம் போதும் என்ருன் - இனிமேல் சூதாட்டத்தை விட்டோம் ஆகையால் வா நாம் போவோ மென்ருன்.

(கு - ரை) தமயந்தியை வைத்துச் சூதாடச் சொன்ன புட்கரனுக்கு நளன் விடையொன்றுங் கூருமல், 'இனிச் சூதொழிந்தோம், நாம் போவோம் வா' வென்றவளை அழைத்துக் கொண்டு அப்பாலகன்ருன்.

(வி - ரை) சூது ஒழிந்தோம் - சூது ஒழித்தோம் - சூதை விட்டோம் - சூதினின்றும் நீங்கினேம் என்று கொள்வாருமுளர்; இது பொருந்தாப் பொருள். ஆசை அகன்ருேம் என்பதற்கு ஆசையை அகற்றினேம் மென்பது பொருளன்றி ஆசையினின்று நீங்கினே மென்பது பொருளன்று - இங்குத் தன்வினை பிறவினைப் பொருட்டு. சூதம் இரண்டிற்கும் மாவென்றே பொருள்கூறித் திரியைக் கெடுத்து மயங்குவாருமுளர். இன வண்டு - வண்டினம் - இலக்கணப்போலி; இன வண்டு - இனமாகிய வண்டு; வண்டினம் - வண்டுகளின் கூட்டம். வண்டு (காலால்) கிண்டி, பனிச்சு (வாயால்) ஊதப் பூம் போதவிழ்க்கும் என்று கூட்டுக. பனிச்சு - பனித்து (போலி). வண்டு ஊத, வண்டு பூம் போதை அவிழ்க்கு மென்ற கொள்வது மொன்று - வண்டு ஊதப் பூம்போது(மடல்) அவிழ்க்கும் என்பதே மாண்புடைத்தாம். ஒழிந்தோம் போதும் என்பன உளப்பாட்டுத்தன்மைப் பன்மைகள்.

[அன்னமிருந்த தாமரையைக் காகத்துக்குக் கொடுத்தது போல நளன் தன்னாட்டைப் புட்கரனுக்குக் கொடுத்து விட் டப்பா லகன்ற னெனல்.]

மென்காற் சிறைஅன்னம் வீற்றிருந்த மென்மலரைப்
புன்காகங் கொள்ளத்தான் போனாற்போல்—தன்கா
பொடியாடத் தேவியொடும் போயினா னன்றே
கொடியானுக் கப்பார் கொடுத்து.

(ப - ரை) மென்மை கால் சிறை அன்னம் வீற்றிருந்த மென்மை மலரை - மெல்லிய கால்களையும் சிறகுகளையுமுடைய அன்னப் பறவை அழகா யமர்ந்திருந்த மெல்லிய தாமரைப் பூவை, புன்மை காகம் கொள்ள தான் போனால் போல் - இழிவான காகமானது கைப்பற்றிக் கொள்ளும்படி அது அம்மலரினின்றும் நீங்கினது போல, அ பார் கொடியானுக்கு கொடுத்து - (நளன்) அந்நிடத்து நாட்டாட்சியைக் கொடியவனாகிய புட்கரனுக்குக் கொடுத்து விட்டு, தன் கால் பொடி ஆட தேவியொடும் அன்றே போயினான் - தன் கால்களிற் புழுதி படியும்படி (நடந்து) மனைவியோடு அன்றைக்கே அப்பாலகன்றான்.

(க - ரை) அன்னமிருந்த அத்தாமரை மலரைக் காகத்துக்குக் கொடுத்து அப்பால் அகன்றது போல, நளன் தானாண்டிருந்த நாட்டைப் புட்கரனுக்கு வழங்கி விட்டு மனைவியோடு கூடி அப்பாற் போனான்.

(வி - ரை) மென்மை யென்பதைத் தோலடிப் பாதங்களுக்கும் சிறகு மயிர்க்கும் சேர்த்துக்கொள்க. அன்னத்தின் பெருமித நோக்கி, வீற்றிருந்த என்றார். மென் மலர் என்றதனாலும் அன்னம் வீற்றிருந்த என்றதனாலும் மலர் இங்குத் தாமரைக்காயிற்று- நற்றாமரைக் கயத்தி நல்லன்னஞ் சேர்ந்தாற் போல் என்பது ஆன்றோர் வாக்கு. அன்னம் நளனுக்கும் காகம் புட்கரனுக்கும்

உவமான மாயினமை காண்க. தேவியொடும் என்பதில் உம்மை அசைநிலை. அன்றே என்பதையும் அசையாக்குவாரு முளர். கொடியான் என்பது காகத்தைப் போன்றவ னென்று பொரு டருவதுங் காண்க. கொடி - காகம்-காகத்தைப் போலப் புன்மை நெறி கொண்டவ னென்க. (ங௧)

[தமயந்தியோடு நளன் கானடையாகக் கானகம் போனதனால் விதியைக் கடப்பார் ஒருவருமில ரெனல்.]

கடப்பா ரெவரே கடுவினையை வீமன்
மடப்பாவை தன்னுடனே மன்னன்—நடப்பான்
வனத்தே செலப்பணித்து மாயத்தாற் சூழ்ந்த
தனைத்தே விதியின் வலி.

(ப - ரை) வீமன் மடம் பாவை தன்னுடன் - வீமராசன் மகளாகிய தமயந்தியோடு, மன்னன் நடப்பான் வனத்தே செல்ல பணித்து - நளன் (காலால்) நடப்பவனாகிக் காட்டிற் போம்படி செய்து, விதியின் வலி மாயத்தால் சூழ்ந்தது - ஊழின் வல்லமை யானது வஞ்சனையால் வந்து சுற்றிக்கொண்டது; அனைத்தே - அவ்வளவுதானா? (அதன் கொடுமை இன்னும் பலவுள ஆகையால்). கடுமை வினையை கடப்பார் எவர் - கடுமையாகிய வினைப்பயனைத் தப்பிச் செல்லவல்லவர் யாவர்? (ஒருவருமிலர் என்றபடி).

(க - ரை) கொடுவினைப்பயன் மாயமாய் வந்து சூழ்ந்துகொண் டதனால் தமயந்தியோடு நளன் கானடையனாய்க் கானகம்போனான். ஆகையால் ஊழ்வினையைக் கடப்பா ருலகில் ஒருவரு மிலர்.

(வி - ரை) கடுநவைப்பகழி என்பதற்கு நச்சினார்க்கினியர் நவின்றது போல, கடுவினை யென்பதற்கு வேகமான வினையென் பாருமுளர். அப்போது கடுவென்பதைக் கடி யென்பதன் விகார மாக் கொள்வர் - 'இதை, கடிய சரங்களின் இளைஞருடன்பல கலக விதம்பயில் கண்ணுறே' என்ற எல்லப்ப நாவலர் வாக்கோடொப்

பிட் டுணர்க. கடுமை - கொடுமை-விரைவின் வருத்துதல். மடப் பாவை - மகள்; அறியாமையையுடைய பதுமை போன்றவ ளென்பது வீணுரை. நடப்பான் - நடையிலுலென்று வீண் பொருள் விளம்புவாரு முளர் - நடப்பவனுகி யென்பதே சரி. விதியின் வலி சூழ்ந்தது என்று ஒட்டுக. அனைத்து என்பதற்குப் போன்றது என்று பொருளுரைப்பாரு முளர். முதல் ஏ-அசை; மற்ற ஏக்களை உரைப் பொருத்தம் போல் உகந்துகொள்க. (௫உ)

[நகரத்தார் நளன் பிரிவாற்றுமல் நைந்துருகிப் புலம்பினு ரெனல்.]

*ஆருயிரின் ருயே அறத்தின் பெருந்தவமே*
*பேரருளின் கண்ணே பெருமானே—பாரிடத்தை*
*யார்காக்கப் போவதுநீ யாங்கென்ருர் தங்கண்ணின்*
*நீர்வார்த்துக் கால்கழுவா நின்று*

(ப - ரை) தம் கண்ணின் நீர் வார்த்து கால் கழுவா நின்று- (நகரமாந்தர்) தங்களுடைய கண்ணீரை விட்டு (நளன்) கால்களை அலம்பினபடியே, அருமை உயிரின் தாயே - அருமையாகிய மன்னுயிர்களுக்குத் தாய் போன்றவனே, அறத்தின் பெருமை தவமே- புண்ணியத்தின் சிறந்த தவப்பயனே, பெருமை அருளின் கண்ணே - பெருந்தன்மையான இரக்கத்துக்குக் கண்போன்றவனே, பெருமானே-(நல்லறிவு நற்செய்கையாற்) பெரியோனே, பார் இடத்தை யார் காக்க - இப்பூமியிலுள்ள உன்னிடமாகிய நிடத நாட்டை யாராள விட்டு, நீ போவது யாங்கு என்ருர் - நீ எம்மைப் பிரிந்து போவது எங்கே என்று கேட்டார்கள்.

(க - ரை) நளன் பிரிவாற்று நகரமாந்தர் அழுது புலம்பினபடியே, 'தாயே, தவமே, கண்ணே! இந் நாட்டை யாராள விட்டு நீ எங்கே செல்கின்று' யென்று அன்பாய் வினவினுர்கள்.

(வி - ரை) தாய், தவம், கண் முதலியவைகள் நளனுக்கு ஆகு பெயர்கள். 'தாயொக்கு மன்பிற் றவமொக்கும் நலம் பயப்பில்' என்

ரூர் கம்பரும். அருமை + உயிர் = ஆருயிர், பெருமை + அருள் = பேரருள், கருமை + எருமை = காரெருமை என்புழிப்போல. பெருமான் என்பதில் மான் விகுதி ஆண்பாலைக் காட்டிற்று ; பெருமாட்டி- பெண்பால்; சீமான் சீமாட்டி என்புழிப்போல. போவது யாங்கு என்றுரென்று ஒட்டுக. கண்ணீர் வார்த்துக் கால் கழுவுவது எண்ணிச் செய்வ தன்று: 'அன்பிற்கு முண்டோ அடைக்குந் தாழார்வலர், புன்கணீர் பூசறரும்' என்றபடி நகரத்தார் தம்மையு மறியாமலே ஈளனைப் போகவொட்டாமல் தடுத்தபோது ஒழுக்கிய கண்ணீர் அவன் காலிற் பட்டதென்க. (௫௩)

[கடல்கரை புரண்டாலும் நல்லரசர் சொல்தவரு ரேன்று நகரத்தார் பேசிக்கொண்டன ரேனல்.]

வேலை கரையிழந்தால் வேத நெறிபிறழ்ந்தால்
ஞால முழுது நடுவிழந்தால்—சீலம்
ஒழிவரோ செம்மை யுரைதிறம்பாச் செய்கை
அழிவரோ செங்கோ லவர்.

(ப - ரை) வேலை கரை இழந்தால்-கடல் கரை புரண்டாலும், வேதம் நெறி பிறழ்ந்தால் - வேதவொழுக்கம் பேதமானாலும், ஞாலம் முழுதும் நடு இழந்தால் - பூவுலகோர் அனைவரும் தந் நடுநிலைமையை விட்டாலும், செம்மை கோலவர் சீலம் ஒழிவரோ-நீதி மன்னர் தம் நல்லொழுக்கத்திற் றவறுவரோ, செம்மை உரை திறம்பா செய்கை அழிவரோ - உண்மை மொழி தவறாத காரியங் கெடுவாரோ ? (கெடார்).

(க — ரை) 'கடல்கரை புரண்டாலும் வேதம் பேதமானாலும் செங்கோலரசர் நல்லொழுக்கம் விடார், உண்மை நெறி கெடார்' என்றனர் நகர மாந்தர்.

(வி - ரை) கடற்கரையைக் குறிக்கும் வேலை, கடலுக் காகு பெயர். இழந்தால், பிறழ்ந்தால், இழந்தால் என்பவைகளினீற் றுயர்

சிறப்பும்மைகள் தொக்கு நின்றமை செவ்வண். ஏகார மிரண்டும் எதிர்மறைப் பொருளன - உடன்பாட்டு வினு எதிர்மறைப் பொருடால் காண்க. செம்மை உரை என்பதை உம்மைத் தொகையாக் கொண்டு செம்மையையும் உரையையும் திறம்பாச் செய்கை யென்று புதுப்பொருள் கூறுவாருமுளர். இங்குச் செம்மையென் பதை உரைக்கு அடைமொழியாக்குவதே அறிவின்பாற் படும். செம்மை உரை - செவ்வையாகிய உரை - செந்நெறியிற் செலுந்துமுறை - உண்மையுரை. (துன்னெறியிற் செலுத்துமுறை பொய்யுரை.) செங்கோலவர்-(அரிச்சந்திரனைப் போன்ற உத்தம மன்னர்) ஞால (நாடு) முழுதும் நடுவிலிழந்தால், வேலை கரையிழந்தாலும் ..............சீலம் ஒழிவரோ என்று கூட்டுவது மொன்று. (ருச)

[நகரமாந்தர் நளனடிகளில் வீழ்ந்து, "இன்றிருந்து நாளைக்குப் போகலாம்" என்று வேண்டிக்கொண்டன ரெனல்.]

வடியேறு கூரிலைவேன் மன்னுவோ உன்றன்
அடியேங்கட் காதரவு தீரக்—கொடிநகரில்
இன்றிருந்து நாளை யெழுந்தருள்க வென்றுரைத்தார்
வென்றிருந்த தோளான்றாள் வீழ்ந்து.

(ப -ரை) (பிறகு அவர்கள்) வென்று இருந்த தோளான் தாள் வீழ்ந்து-(பகையரசரை முற்றும்) வென்று (வேறு பகை யின்மையாற் சோம்பி) யிருந்த தோள்வலி யுள்ளவனுகிய நளனடிகளில் விழுந்து (வணங்கி), வடி ஏறு கூர்மை இலை வேல் மன்னுவோ - வடித்தல் மிகுந்த வெற்றிலை போன்ற கூரிய வேலாயுத மேந்திய அரசனே, உன்தன் அடியேங்கட்கு ஆதரவு தீர - உன்னுடைய அடியவர்களாகிய எங்களுக்கு ஆசை தீரும்படி, கொடி நகரில் - இவ்வுனது வெற்றிக்கொடி பறக்கும் பட்டணத்தில், இன்று இருந்து நாளை எழுந்தருள்க என்று உரைத்தார் - இன்றைக்குத் தங்கியிருந்து நாளைக்குப் போகவேண்டு மென்று சொன்னார்கள்.

(க - ரை) அந்நகர மாந்தர் நளனடிகளிற் பணிந்து, "ஐயனே! அடியேங்களுக் காசைதீர இந்நகரில் இன்று நீ தங்கியிருந்து நாளைக் குப் போகலா" மென்று வேண்டினார்கள்.

(வி - ரை) வடிவேல் என்பதற்கு இலை போல் மிகுதியாக வடித்த வேல் என்பது பொருளாயினும் இங்கு வடியே று இலை கூர் வேல் என்று மொழி மாற்றிப் பொருள் கொள்ள வேண்டியிருந்த லால் வடித்தல் மிகுந்த வேல், வெற்றிலை போன்ற தகட்டு வேல், கூர் வேல் என்று பொருள் கொண்டாம். வடி—முதனிலை வினைப் பெயர். மன்னவோ என்பதில், மன்னன் என்பது ஈற்றயல் நீண்டு விளியாகியும், புலம்பலினால் ஓகார மிகுந்தது-இரட்டை விளி. அடி யேங்கள் - விகுதிமேல் விகுதி பெற்ற தன்மைப்பன்மை இடவழு வமைதி. வென்று என்பதை வென்றி, வெற்றீ யென்பாரு முளர்.

[நளன், தமயந்தியின் முகத்தை நோக்கி, "இன்றிங் கிருப்போமா?" என்று கேட்டா னெனல்.]

மன்றலிளங் கோதை முகநோக்கி மாநகர்வாய்
நின்றுருகு வார்கண்ணி னீர்நோக்கி—இன்றிங்
கிருத்துமோ வென்று னிளங்குதலை வாயாள்
வருத்தமோ தன்மனதில் வைத்து.

(ப - ரை) இளமை குதலை வாயாள் வருத்தமோ தன் மன தில் வைத்து - (நளன்) இனிமையாகிய மழலைச் சொற்களைப் பேசும் வாயையுடைய தமயந்தியின் வருத்தத்தையோ (வெளிக்குக் காட்டாமல்) தன் மனதுக்குள்ளேயே (ஒருபுறத்தில்) வைத்துக் கொண்டு, மா நகர்வாய் நின்று உருகுவார் கண்ணின் நீர் நோக்கி - அப்பெரும் பட்டணத்திலிருந்து (தனக்காக மனம்) உருகி வருந்து கின்ற குடிகளினுடைய கண்ணீரை எண்ணி, மன்றல் இளமை கோதை முகம் நோக்கி - இயற்கை மணம் வீசும் மெல்லிய கூந் தலையுடைய அத் தமயந்தியின் முகத்தைப் பார்த்து, இன்று இங்கு

இருத்துமோ என்றான் - இன்றைக்கு இந்நகரத்தில் தங்கியிருப்போமா என்று கேட்டான்.

(க - ரை) தன் மனைவியின் வருத்தம் மனதிலிருந்தும் அதை வெளிக்குக் காட்டாத நளன், குடிகளின் வருத்தத்தை எண்ணி, அவளை நோக்கி, "இன்று நாமிங்கிருப்போமா?" என்று கேட்டான்.

(வி - ரை) வருத்தமோ என்பதில் ஓகாரம் உயர்வு சிறப்பு - அந்த வருத்தமோ ஒரு புறம் வாட்டுகிறது; அப்படி யிருந்தும் அவன் மன்னுயிரைத் தன்னுயிர்போல் மதிப்பவனுகையால் குடிகளின் கண்ணீரை எண்ணி, தன் மனைவியின் முக நோக்கி, "இவர்களுக்காக இன்றிங் கிருத்துமோ?" என்று கேட்டானென்று கூட்டிக்கொள்க. வைத்து என்பதனீற்றில் உம் தொக்கி நிற்பதாகக் கொள்வதே மேலைப்பொருளுக் குகந்ததாம்- வைத்தும், இருத்துமோ என்றானென்று கூட்டுக. இளம் என்பன இரண்டில், முன்னையது மென்மையையும் பின்னையது இனிமையையுங் குறித்ததுணர்க. இருத்துமோ - உளப்பாட்டுத் தன்மைப் பன்மை - இதில் ஓகாரம் வினு - தும் விகுதி யிடத்தையும் காலத்தையும் காட்டுகின்றது. (நிசு)

["நளனைக் கொண்டாடினர் கொலையுண்பார்" என்று புட்கரன் பறையறைவித்தா னெனல்.]

வண்டாடுந் தார்நளனை மாநகரில் யாரேனும்
கொண்டாடி னார்தம்மைக் கொல்லென்று — தண்டா
முரசறைவா யாங்கென்றான் முன்னே முனிந்தாங்
கரசறியா வேந்த னழன்று.

(ப - ரை) அரசு அறியா வேந்தன் - ஆட்சி முறையை அறியாத அரசனாகிய புட்கரன், முன்னே முனிந்தாங்கு அழன்று - முன்பு சூதாடுகையிற் கோபித்தது போலக் கோபித்து, வண்டு

ஆடும் தார் நளனை - வண்டுகள் பறந்து சுற்றுகின்ற மலர்மாலையணிந்த நளனை (க்கண்டு), யார் எனும் கொண்டாடினார் தம்மை கொல் என்று - (நகரமாந்தரில்) யாராயிருப்பினும் (அவனை) வரவேற் றுபசரித்தவர்களைக் கொன்றுவிடென்று (ஒருவனுக்குக் கட்டளையிட்டு), ஆங்கு தண்டா முரசு அறைவாய் என்றான் - அந்நளனுள்ள இடத்தில் ஓயாமற் பறையறைவிப்பா யென்றான்.

(க - ரை) ஆட்சி முறை யின்னதென்றறியாக் கொடுங்கோலரசனாகிய புட்கரன், 'நளனை வரவேற்றுபசரித்த நகரமாந்தர் கொலையுண்பார்' என்று பறையறைவி யென்றொருவனுக்குக் கட்டளையிட்டான்.

(வி - ரை) வண்டுக ளெந்நேரமும் ஆடிக்கொண்டிருக்குமென்றதனால் மலர்வளங் குறித்தபடியாம். ஆடுதல் - பறந்து திரிதல்-கொண்டாடுதல்-அன்பாய் வரவேற்றல். கொண்டாடினாலவரைக் கொல்லென்று என்றும், கொண்டாடி னார்தம்மைக் கோல்வமென்று என்றும் பாடபேதங்களுள. தண்டா - தண்டாமல் - தவறாமல். முரசு அறைவாய்-இங்கு அறைவாய் என்பது தன்வினையேனும் அறைவிப்பாய் என்னும் பிறவினைப்பொருட்டு:அரச கட்டளை நேரே பறையறைவோனுக்குப் பிறக்காது. அரச கட்டளையைப் பெறுங் கொலையாளி பறையறைவோனுக் கதை யறிவிப்பதே மரபாம். ஆங்கு-அசையெனத் தள்ளுவாரு முளர், முன்னே யென்பதற்கு எதிரே என்பாரு முண்டு. முரசறையா யென்பதும் ஒரு பாடபேதம். முனிந்து, அழன்று என்பவை யிரண்டையும் கூறியது கூறலாக்கி உரையைக் கெடுக்குநரு முளர். (௫எ)

[பறை யோசை கேட்ட நளன் பதைத்து,
இந்நகர்க் கென்னா லித்துன்ப நேர்ந்தது,'' என்று னெனல்.]

அறையும் பறைபரவங் கேட்டழிந்து நையும்
பிறை நுதலாள் பேதைமையை நோக்கி—முறுவலியா
இந்நகர்க்கீ தென்பொருட்டா வந்த தெனவுரைத்தான்
மன்னகற் றுங் கூரிலைவேன் மன்.

(ப - ரை) யன் அகற்றும் கூர்மை இலை வேல் மன் - (பகை) யரசரை (ச்சண்டையில்) ஓட்டும் கூர்மையாகிய வெற்றிலை வடி வான வேலாயுதமேந்திய நளன், அறையும் பறை அரவம் கேட்டு அழிந்து - அடிக்கும் பறையோசையைக் கேட்டு மனம் குன்றி, நையும் பிறை நுதலாள் பேதைமையை நோக்கி முறுவலியா- (அதற்காக) வருந்தும் நிலாப்பிறை போன்ற நெற்றியை யுடைய தமயந்தியின் மடமையை யறிந்து நகைத்து, இ நகர்க்கு என் பொருட்டு ஆ ஈது வந்தது என்ன உரைத்தான்-இப்பட்டண மாந் தர்க்கு என் னிமித்தமாக இத் துன்பம் நேரிட்ட தென்று சொன்னான்.

(க - ரை) பறையோசை கேட்ட தமயந்தி படும் பாட்டைக் கண்ட நளன் நகைத்து, "இந்நகர மாந்தர்க்கு என் னிமித்தம் இத் துன்பம் வந்தது" என்று கூறினான்.

(வி - ரை) கேட்டழிந்து நைந்து எனப் பாட மோதுவாரு முண்டு. நளன் நைந்தானென்பது அவனாண்மைக் கழகன்று. ஆகையால் நையும் பிறை நுதலாளென்பதே சரியாம். 'பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்' என்றதனால் பேதைமைக்கு மடமை யென்று பொருள் விரித்தாம். முறுவலித்தல் - சித்திரித்தல் என் பது போல பெயரடி வினைப்பெயர். முறுவலியா-செய்யா என் னும் வாய்பாட்டு வினையெச்சம். அகற்றும்-பிறவினை, அகலும்- தன்வினை. பிறை நுதலாள் பேதைமை, பறையரவங் கேட்டழிந்து நைந்ததனால் வெளியாயிற்றென்க. நளன் கேட்டழிந்து நைந்தா னென்றால் பிறை நுதலாள் பேதைமை வெளியாவ தெங்கே? ஆகையால் நளன் கேட்டு (இரக்கத்தால்) மன மழிந்து, அதற்காக நையும் பிறை நுதலாள் பேதைமையை நோக்கி யெனக் கூட்டுவது மொன்று.

(ருஅ)

[நளன் தன் மனைவி மக்களை இட்டுக்கொண்டு நகரை
விட்டு நீங்கின னெனல்.]

*தன்வாயின் மென்மொழியே தாங்கினான் ஓங்குநகர்ப்*
*பொன்வாயில் பின்னாகப் போயினான்—முன்னாளில்*
*பூமகளைப் பாரினொடும் புல்லினான் றன்மகனைக்*
*கோமகளைத் தேவியொடுங் கொண்டு.*

(ப - ரை) முன் நாளில் பூ மகளை பாரினொடும் புல்லினான் - அதற்கு முந்திய காலத்தில் மலர்மகளாகிய இலக்குமியைப் பூமி தேவி யோடு தழுவி யிருந்தவனாகிய நளன், தன் மகனை கோமகளை தேவியொடும் கொண்டு - (இளவரசனாகிய) தன் மகனையும் இள வரசியாகிய தன் மகளையும் தன் மனைவியாகிய தமயந்தியோடு அழைத்துக்கொண்டு, தன் வாயில் மென்மை மொழியே தாங்கி னான் - தன்னுடைய வாயில் இன்சொல்லையே கொண்டவனாகி, ஓங்கும் நகர் பொன்மை வாயில் பின் ஆக போயினான் - வளமிக்க தன்னகரத்துப் பொன்மயமாகிய கோபுர வாசலானது தனக்குப் பின்னாகும்படி முன்னே நடந்து கடந்துபோனான்.

(க - ரை) நளன் தன் னகர வாயிலைக் கடந்து மனைவி மக்க ளோடு முகமலர்ச்சியாய்ப் போனான்.

(வி - ரை) தான் வாயில் எப்போதும்போல மென்மொழியே தாங்கினவனாகி யென்பதும் ஆம். 'இடுக்கண் வருங்கா னகுக வதனை அடுத்தூர்வ தஃதொப்பில்' என்ற முதுமொழிப்படி முக மலர்ந்து மென்மொழியே தாங்கினானென்று கொள்க. பொன் வாயில் என்பதற்குப்பொன்னாற்செய்த வாயிலென்பாருளராயினும் பொன்முலாம் பூசின வென்பதே பொலிவுடைத்தாம்; ஆகலான் பொன்மயமாகிய வாசலென்றும். இங்கே வாயிலென்றது நகரக் கோபுர வாயிலை யென்க. முன்னாளில் பூமகளைப் பாரினோடும் புல் லினான் என்பதற்கு இராமனைப்போல வென்பாரு முளர். மகளைக் கோமகள் என்றது போலவே மகனுக்குங் கொள்க. ஏகாரம்-பிரி நிலை. வாயில்-இல்வா யென்பத னிலக்கணப்போலி. (ருகூ)

[நளனைப் பிரிந்த நகரம் இழவுபட்ட
இல்லம்போ லாயிற் றெனல்.]

கொற்றவன்பாற் செல்வாரைக் கொல்வான்முரசறைந்து
வெற்றியொடு புட்கரனும் வீற்றிருப்ப—முற்றும்
இழவு படுமாபோ லில்லங்க டோறும்
குழவிபா லுண்டிலவே கொண்டு.

(ப - ரை) கொற்றவன்பால் செல்வாரை கொல்வான் முரசு அறைந்து - நளராசனிடத்திற் போகிறவர்களைக் கொல்லும்படி பறை யடிப்பித்து, வெற்றியோடு புட்கரனும் வீற்றிருப்ப - வெற்றி மிக்கவனாய்ப் புட்கரனும் (அரியாசனத்தில்) அமர்ந்திருக்க, முற்றும் இழவு படும்ஆறு போல் - அந்நகர முழுதும் இழ வெடுத்த விதம் போல, இல்லங்கள் தோறும் குழவி கொண்டு பால் உண்டில - வீடுகள் தோறும் குழந்தைகளும் (தத்தம் தாய் முலையைப்) பிடித்துப் பாலுண்ண வில்லை.

(க - ரை) நளனிடத்திற் செல்வாரைக் கொல்லப் பறை யறைவித்து, புட்கரன் வெற்றியோ டமர்ந்திருக்கையில் அந் நகர முழுதும் இழ வெடுத்தது போலக் குழந்தைகளும் பாலுண்ணா தேங்கின.

(வி - ரை) 'குழவி தாய் முக நோக்க மனைவி யென் முக நோக்க யானும் நின் முக நோக்கி வந்தனன் குமணா!' என்றபடி நளனைப் பிரிந்த நலிவால் நகரத்துக் கணவன்மார் துயரம் மனைவியர்க்காக, தாய்மார் துயரம் குழவிகளுக்காய், அவைகள் பாலுண்ணா தேங்கின வெனக் கொள்க. கொடியவன் ஒருவனைக் குறித்து, 'அவன் பெயரைச் சொன்னாலும் அழுத பிள்ளையும் வாய் மூடும்' என்று வழங்கும் பழமொழியையுங் காண்க. கொல்வான்- எதிர்கால வினையெச்சம். (௫எ)-ம் செய்யுளில் முரசறைவா யென்றதை முரசறைவிப்பா யென்றது போலவே இங்கும் முரசறைந்து என்பதை முரசறைவித்து என்றும் - பிறவினை. குழவியும் பாலுண்டில வென்பதில் உம்மை தொக்கது. (௬0)

[நளன் மக்கள் நடப்பதனால் காலோய்ந்து "வழியெல்லாம் கடந்தோமா?" என்று வினவினா ரெனல்]

சந்தக் கழற்று மரையுஞ் சதங்கையணி
பைந்தளிரு நோவப் பதைத்துருகி—எந்தாய்
வடந்தோய் களிற்றாய் வழியான தெல்லாங்
கடந்தோமோ வென்றார் கலுழ்ந்து.

(ப - ரை) சந்தம் கழல் தாமரையும் - (நளன் மகனுக்கு) அழகான வீர கண்டை யணிந்த தாமரை போன்ற பாதங்களும், சதங்கை அணி பசுமை தளிரும் - (அவன் மகளுக்கு) பாத சரம் அணிந்த இளந்துளிர் போன்ற பாதங்களும், நோவ பதைத்து உருகி கலுழ்ந்து - நொந்ததனால் (அவர்களிருவரும்) துடித்து மனங்கரைந்தழுது, எந்தாய் வடம் தோய் களிற்றாய் - எங்கள் தாயே! அழகான புரசைக் கயிறு கழுத்திற் கட்டிய யானையை யுடைய தந்தையே!, வழியானது எல்லாம் கடந்தோமோ என்றார்- வழி முழுவதையும் தாண்டினோமோ? என்று கேட்டார்கள்.

(க - ரை) நளன் மக்களிருவரும் நடந்து காலோய்ந்ததனால் பதைத்துருகி அழுது, தம் தாய் தந்தையரை நோக்கி, 'வழி யெல் லாம் கடந்து வந்துவிட்டோமா?' என்று கேட்டார்கள்.

(வி - ரை) வீர கண்டை யணிந்த தாமரை என்றதனால் இளவரசனையும், சதங்கை யணி பைந்தளி ரென்றதனால் இளவரசி யையுங் குறித்தமை காண்க. இது போலவே எந்தாய் என்பது தாயையும், வடந்தோய் களிற்றாயென்பது தந்தையையுங் குறித் தமை காண்க. மக்கள் முதலில் தந்தாயையே விளித்துக் கேட்ப தாகலான் எந்தாய் என்பதை முதலிலோதினார். எந்தாய் என் பதே எந்தை யென்பதன் விளியாய்த் தந்தையைக் குறிக்கின்ற தாயினும் பொருந்தாது. தாய்க்கு வழியளவு தெரியாதாகையால் தந்தையையே அவர்கள் விளித்துக் கேட்டார்களென்பாரு முளர். குழந்தைகட் கப் பாகுபாடு தெரியாது. தெரிந்தாலும் அவர்கள்

எதற்கும் தாயையே முதலிற் கேட்பது வழக்கம். களிற்கும்- பொருளடிப்பெயர் - விளியுருபேற்றுக் களிற்றா யென்றாயிற்று. வடம்-மணிக்கயிறு என்பாருமுளர். (௬௧)

[நளன், தன் மக்கள் படும் பாட்டைப் பொறாமல் விதியை நொந்து அசைவற்று நின்று விட்டா னெனல்.]

தூய தன் மக்க டுயர்நோக்கிச் சூழ்கின்ற
மாய விதியின் வலிநோக்கி—யாதுந்
தெரியாது சித்திரம்போ னின்றிட்டான் செம்மை
புரிவான் றுயராற் புலர்ந்து.

(ப - ரை) செம்மை புரிவான் - புண்ணியஞ் செய்பவனாகிய நளன், தூய தன் மக்கள் துயர் நோக்கி-களங்கமற்ற மனமுடைய தன் மக்களுடைய துன்பத்தைப் பார்த்து, சூழ்கின்ற மாயம் விதியின் வலிநோக்கி - தவறாமல் வந்து தொடர்கின்ற வஞ்ச வினையின் வன்மையை யெண்ணி, துயரால் புலர்ந்து - துன்பத்தினால் வாடி, யாதும் தெரியாது சித்திரம் போல் நின்றிட்டான்-எதுவும் தோன்றாமல் எழுது சித்திரம்போல் அசைவற்று நின்றுவிட்டான்.

(க - ரை) நளனுக்குத் தன் மக்கள் படும் துன்பத்தைக் கண்டவுடனே ஊழ் வலியின் உச்ச நிலை விளங்கிற்று. அதனால் அவன் ஒன்றுந் தோன்றாமல் சித்திரப்பாவைபோல் அசைவற்று நின்றுவிட்டான்.

(வி - ரை) தூய்மை-இங்கு மக்களுடைய கவடற்ற குணத்தை விளக்கிற்று. சூழ்தல்-தவறாமல் வந்து தொடர்தல். விதியின் வலியைப்பற்றி 'ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான் முந்துறும்' என்னுந் திருக்குறளை உய்த்துணர்க. பல்லாவுட் செலுத்திவிடினும் குழக்கன்று தன் தாயைக்கண்டு சேர்வதுபோல ஊழும் தனக் குரியவனை விடாது சூழுமென்க. நளன் செம்மை நலம் உணர்ந்தானாகையால் மக்கள் துயர் கண்டும் வெம்மை வழி

யில் நுழைந்து புட்கரனை எதிர்த்தோட்ட எண்ணாமல், எழுது சித்திரம் போல் அசைவற் றிருந்துவிட்டானென்றுணர்க. இப்படியே கோசிகர் கொடுமையைப் பொறுத்திருந்த அரிச்சந்திரனையும் எண்ணித் தெளிக. நின்றிட்டான் என்பதில் இடு சொல்லுருபு, பகுதிப்பொருள் விகுதி, அல்லது அசை யென்பாரு முளர். (௬௨)

தமயந்தியை நோக்கி நளன், ''இவ்விருவரையும் அழைத்துக்கொண் டுன் தந்தை யகத்துக்குப் போ'' என்று னெனல்.]

காத லிருவரையுங் கொண்டு கடுஞ்சுரம்போக்
கேத முடைத்திவரைக் கொண்டுநீ—மாதராய்
வீமன் றிருநகர்க்கே மீளென்றான் விண்ணவர்முன்
தாமம் புனைவாளைத் தான்.

(ப - ரை) விண்ணவர் முன் தாமம் புனைவாளை தான் - தேவர்களுக் கெதிரில் தனக்கு மணமாலை சூட்டினவளாகிய தமயந்தியை நோக்கி நளன், மாதராய் - பெண்ணே, காதல் இருவரையும் கொண்டு கடுமை சுரம் போக்கு ஏதம் உடைத்து - இம் மக்களிருவரையும் நம்முடன் கொண்டு கடுமையாகிய பாலை வனத்திற் போகுதல் துன்புடைத்தாம் (ஆகையால்), நீ இவரைக் கொண்டு வீமன் திருநகர்க்கே மீள் என்றான் - நீ இம்மக்களிருவரையு மழைத்துக்கொண்டு உன் தந்தையாகிய வீமராசனுடைய சிறந்த பட்டணத்துக்கே திரும்பிச் செல்லென்று சொன்னான்.

(க - ரை) ''நம் மக்களிருவரையும் அழைத்துக்கொண் டுன் தந்தை யகத்துக்கே போய்ச்சேர்'' என்றான் நளன்.

(வி - ரை) காதலிருவரையும் என்பதற்கு அன்புள்ள நம் மக்களிருவரையும் என்றும் பொருள் கூறலாம். காதலர் + இருவரையும் என்பதில் அர் விகுதி தொக்கும் வழி தொக்க தென்று கொண்டாம். கடுமை-கொடுமையின் வேகம். 'பொன் போலுங்

கள்ளிப் பொரி பறக்கும் கானலிலை' என்றார் பிறரும். காதல்
என்பது காதலர்க் காகுபெய ரெனினுமாம் - ஊமை என்பதுபோ
லக் காதலென்பதும் பண்பாகுபெயர். மாதர் - மாது என்பது
அர் விகுதி பெற்றது - சுரும்பு சுரும்ப ரென்புழிப்போல.
விகுதிமேல் விகுதியாக இது ஆள் விகுதி பெற்று, அதற்கு
மேல் விளியில், ளகரம் யகரமாய் மாதராய் என்றானதை உய்த்
துணர்க. திருநகர் - செல்வத்திற் சிறந்த நகர். புனைவா னென்ப
தியல்பினா லெதிர்காலமாயிற்று. தான் என்பதை அசையாகத்தள்ளி
நள னென்பதைச் சொல்லெச்சமா வருவித்துரைப்பாரு முளர்.

[“குலமகள், மைந்தரையேனும் பெற்றுக் கொள்ளலாம், கணவனைப் பெறுதல் எளிதன்று” என்றாள் தமயந்தி யெனல்.]

குற்றமில் காட்சிக் குதலைவாய் மைந்தரையும்
பெற்றுக் கொளலாம் பெறலாமோ—கொற்றவனே
கோக்கா தலனைக் குலமகளுக் கென்றுரைத்தாள்
நோக்கான் மழைபொழியா நொந்து.

(ப - ரை) நோக்கால் மழை பொழியா - (அது கேட்ட தமயந்தியின்) கண்களால் நீரைச் சொரிந்தபடியே, கொற்றவனே - அரசனே! குலமகளுக்கு - கற்புடை மாதுக்கு, குற்றம் இல் காட்சி குதலைவாய் மைந்தரையும் பெற்றுக்கொள்ளல் ஆம் - மாசற்ற வுருவத்தையும் மழலை மொழி வாயையுமுடைய மக்களையும் (இழந்தால்) பின்னே பெற்றுக்கொள்ளலாகும், கோ காதலனை பெறல் ஆமோ என்று நொந்து உரைத்தாள் - சிறந்த கணவனை (இழந்தால்) பின்னே பெறுதல் கூடுமோ? (கூடாது என்றபடி) என்று மனம் வருந்திச் சொன்னாள்.

(க - ரை) “பிள்ளைகளை இழந்தாலும் பெற்றுக் கொள்ளலாமென்னும் உறுதியுண்டு, குலமகளுக்குக் கணவனை யிழந்தாற் பெற்றுக் கொள்ளலா மென்னும் உறுதியு முண்டோ?” என்றாள் தமயந்தி.

(வி - ரை) குலமகட்கழகு தன் கொழுநனைப் பேணுதலென்னும் பாண்டியன் மொழிப்படி தமயந்தி கூற்று சால்புடைத்தாம்- சாவித்திரி முதலிய கற்புடை மாதரிற் றமயந்தி தலைசிறந்தாளென்பதற்கு இதுவே சான்றாகும். குற்றமில் காட்சி யென்பதற்கு அறிவு என்பார் அறியாமையாற் சிலர். காட்சி - தோற்றம் - உருப்பொலிவு. மழலை வாய்-மழலை மொழியும் வாய். மைந்தர் = மைந்து + அர் - வலியுடையார் - இது ஆண்மக்களையே குறிக்குமென்பார் அறியாதார். ஆலம் வீழ்துபோலப் பெற்றோரைத் தாங்கும் வலியுடையோரென்பதனால் மைந்தர் இருபாலர்க்குங் காரணக்குறி. ஆரியத்திலும் புத்திரர், குமாரரென்பன இருபாலரையுங் குறிப்பது போல, மைந்தரு மக்களும் தமிழிலிருபாலரையுங் குறிக்குமெனக் கொள்க. உம்மை சிறப்பு. குலமகளுக்கு-முதனிலைப் பொருட்டு.

["தவஞ் செய்வாரு மகப்பெறுரேனின் வானவரூர்க்குப் புகப்பெறார்" என்று னள னெனல்.]

கைதவந்தா னீக்கிக் கருத்திற் கறையகற்றிச்
செய்தவந்தா னெத்தனையுஞ் செய்தாலும்—மைதீர்
மகப்பெறு மானிடர்கள் வானவர்த மூர்க்குப்
புகப்பெறார் மாதராய் போந்து.

(ப - ரை) (அதற்கு நளன்) மாதராய் - பெண்ணே, கைதவம் நீக்கி - வஞ்சனையை ஒழித்து, கருத்தில் கறை அகற்றி- மனத்தில் முக்குற்றங்களையும் நீக்கி, எத்தனை செய்தவம் செய்தாலும் - எவ்வள வதிகமாக (வுயிர்க்குறுதிதரூஉம்) செம்மையாகிய தவத்தையே செய்தாலும், மை தீர் மக பெறு மானிடர்கள் - குற்றமற்ற மக்களைப் பெறாத மாந்தர், வானவர்தம் ஊர்க்கு போந்து புக பெறார் - தேவர்களூராகிய சொர்க்கத்துக்குப் போய் அதில் நுழைய இடம் பெறமாட்டார்கள்.

(க - ரை) கைதவ நீக்கிக் கடுந் தவம் புரிந்தாலும், மகப்பெறு மாந்தர் எந்நாளும் வானவரூர்க்குப் புகப்பெறு ரென்றுனளன்.

(வி - ரை) கைதவ நீக்குவது பேச்சாலும் செய்கையாலும் வாக்காலு முடலாலு மெனினுமாம். கருத்திற் கறையகற்றல் காமம் வெகுளி மயக்க மென்னு முக்குற்றங்களையு மனத்தா லகற் றுதல். இதுபற்றியே நாயனாருந் தமது தெய்வத் தமிழ் மறையில் 'காமம் வெகுளி மயக்கமென் றிம்மூன்றின், நாமங் கெடக் கெடு நோய்' என்றார் - வாக்கு மனங் காய மென்னும் மும்மை வழி யானும் தூய்மையாய்த் தம்முடலை நோய்மை செய்து வாய்மை யுடன் 'அழுக்கா றவா வெகுளி யின்னாச்சொ லான்கும் இழுக்கா வியன்ற தறம்' என்றபடி எத்தனைதான் ஒருவர் செய் தவஞ் செய் தாலும் மகப்பெறா ரெனின் துறக்கம் புகப்பெறா ரென்று கூட்டித் தெளிக. மகப்பெறா ரென்றிவர் பொதுப்பாலிற் பேசினதைச் சிலர் ஆண்மக வென்றே பொருள்கொண்டு மயங்குவர். இத்தகை யார் மதப்பித்த ரென்பதற் கையமில்லை. உம்மைகள் - சிறப்பு. செய்தவம் - செம்மை + தவம் - பதவியலிற் பண்புச் சூத்திர விதி பெற்றது:- இதற்குச் செய்தற்குரிய தவமென்று புதுப்பொருள் கூறுவாரு முளர். மாதராய் என்பதற்கு (௯௩.) ஞ் செய்யுளைக் காண்க. (௯௫)

["மக்களில்லார் பொன்னுடையரேனு மற்றென்னுடைய ரேனு மிலராவார்" என்று னள னெனல்.]

பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனுமற்
றென்னுடைய ரேனு முடையரோ — இன்னடிசில்
புக்களையுந் தாமரைக்கைப் பூநாறுஞ் செய்யவாய்
மக்களையிங் கில்லா தவர்.

(ப - ரை) (இன்னும் நளன்) இனிமை அடிசில் புக்கு அளை யும் தாமரை கை-சுவையுள்ள சோற்றில் நுழைந்து துழாவுந் தாம ரை மலர் போன்ற கைகளையும், பூநாறும் செய்ய வாய் மக்களை இங்கு இல்லாதவர் - பூ மணம் வீசும் சிவந்த வாயையுமுடைய பிள்ளைகளை இவ்வுலகத்திற் பெறாதவர், பொன் உடையர் எனும் - பொருளை யுடையவர்களாயிருப்பினும், புகழ் உடையர் எனும்-புகழையுடைய

வர்களாயிருப்பினும், மற்று என் உடையர் ஏனும் - இன்னும் எதை உடையவர்களாயிருப்பினும், உடையரோ - உடையவர்களா வார்களோ? (ஆகார் என்றான்).

(க - ரை) பொன்னும் புகழும் இன்னும் என்னுடையரே னும் மக்களையில்லார் எதையும் இல்லாரே யாவாரன்றி உடையா ராகார்.

(வி - ரை) பொன்னும் அதை ஈவதாற் புகழும் என்றும், பொருட் செல்வமேயன்றிக் கல்விச்செல்வமாகிய வேறென்னுடை யரேனு மென்றும் விரப்பிக்கொள்க. இன்னடிசில்புக்கு - ஏழன் றொகை—புக்கு இன்னடிசில் என்று முன்பின்னாக மாற்றுவர் பொருணய மோரார். அளைதல்-துழவுதல். பூநாறு மென்பதற்கு பூப்போலு மென்பாரு முளர். மக்களை யென்பதற்குப் பிள்ளைகளை யென்று ஆண் பெண் இருபாற்கும் பொதுப்பாற் பொருள் கொள் வதே மேட்டிமையாம். மக்களை யென்பதற்கு ஆண்மக்களை யென் பார் அறியாதார். இதுபற்றிச் சென்ற செய்யுளின் மகவென்ப தற்குக் கூறியுள்ளதை மதித்துக் காண்க. இன்னடிசில் புக்களை யும் என்பதை, 'அமிழ்தினு மாற்ற வினிதே தம்மக்கள் சிறுகை யளாவிய கூழ்' என்னுங் குறளோ டொப்பிடுக. (௬௬)

["மக்கள் மழலைச் சொற்களைக் கேளாச் செவி, நூற்கேள்வி கேட்டாலும் பயன் பெறாது" என்றானள னெனல்.]

*சொன்ன கலையின் றுறையனைத்துந் தோய்ந்தாலும்*
*என்ன பயனுடைத்தா மின்முகத்து—முன்னங்*
*குறுகுதலைக் கிண்கிணிக்காற் கோமக்கள் பால்வாய்ச்*
*சிறுகுதலைக் கேளாச் செவி.*

(ப - ரை) இனிமை முகத்து முன்னம் குறுகு தலை - அழ கான முகத்தின் முன்பக்கத்திற் குறுகிய தலையையுடைய, கிண் கிணி கால் கோ மக்கள் பால் வாய் - சதங்கை யணிந்த பாதங்க ளுள்ள சிறந்த குழந்தைகளின் பான் மணம் வீசும் வாயிற் பிறக்கும்'

சிறுமை குதலை கேளா செவி - இள மழலை மொழிகளைக் கேளாத காது, சொன்ன கலையின் துறை அனைத்தும் தோய்ந்தாலும் - (அறிவுடையோர் உயர்வாகச்) சொன்ன நூன் முறைகளிற் பயின்றாலும், என்ன பயன் உடைத்து ஆம் - என்ன பலன் உடையதாகும்? (ஒரு பலனும் பெறாது என்றானளன்.)

(க - ரை) "மக்கள் மழலை மொழி கேளாக் காது நூன்முறையிற் பயின்று எப்போதும் கேள்வியால் தோட்கப்பட்டாலும் ஒரு பயனையும் பெறாது" என்றானளன்.

(வி - ரை) சொன்ன - அறிவுடையோர் உயர்வாகச் சொல்லிவைத்த. செவி என்ன பயனுடைத்தா மென்றானள னென்று கூட்டிக் கொள்க. இன்முகம் - இனிமை முகம் - அழகான முகம்; முகத்துக்கு இனிமையாவது அழகு; மின்முக மெனப் பிரித்து விளக்கமான முக மெனினுமாம். முன்னங் குறுகுதல் - நெற்றி குறுகியிருத்தல். கோமக்கள் - அருமை மக்களெனினுமாம். பால் வாய் - பான்மணமுறு வாய். சிறுமை குதலை - இள மழலை - பாச்சி சோச்சி யென்பன - "குழலினிது யாழினி தென்பதம் மக்கள், மழலைச் சொற்கேளா தவர்" என்னும் பொய்யா மொழியை இதனோ டொப்பிட்டுணர்க. உம்மைகளில் முன்னையது முற்று, பின்னையது சிறப்பு. கிண்கிணி - கிண்கிண் ணென்னும் ஒலிக்குறிப்புப்பெயர்; இதையே ஆரியர், கிங்கிணி யென்றெடுத்துக் கொண்டார்கள். (சுஎ)

["நாடு நகரந் தோற்றமை யார்க்குந் தோன்றுதபடி நீர் என் பிறந்தகத்துக்கு வாரும்" என்று நளனை வேண்டினாள் தமயந்தி யெனல்.]

போற்றரிய செல்வம் புனநாட் டொடும்போகத்
தோற்றமையும் யாவர்க்குந் தோற்றுதே—ஆற்றலாய்
எம்பதிக்கே போந்தருளு கென்றா ளெழிற்கமலச்
செம்பதிக்கே வீற்றிருந்த தேன்.

(ப - ரை) எழில் செம்மை கமலம் பதிக்கு வீற்றிருந்த தேன்- அழகாகிய செந்தாமரை வீட்டி லெழுந்தருளிய திருமகளுக்கு ஒப் பாகிய தமயந்தி, ஆற்றலாய் - பகையரசரை வெல்லும் வல்லமை யுடையோய்!, போற்று அரிய செல்வம் புனல் நாட்டொடு போக தோற்றமை யாவர்க்கும் தோற்றாதே - காப்பதற் கருமையாகிய செல்வங்கள், நீர்வளமுள்ள நிடத நாட்டோடு (புட்கரனுக்கு) உரி மையாய்ப் போய்விடும்படி (நாம்) தோற்றது (முதலிய யாவும்) எல்லார்க்குந் தெரியாமல் (இருக்கும்படி), எம் பதிக்கே போந்தரு ளுக என்றாள்-எங்களுடைய பட்டணமாகிய குண்டினபுரத்துக்கே வந்தருளுக என்று வேண்டினாள்.

(க - ரை) "காப்பதற் கருமையாகிய நமது பெருஞ் செல்வங் களை நாட்டோடு புட்கரனுக்கு நாம் தோற்றது முதலியவைகள் எல்லார்க்குந் தெரியாதபடி எங்கள் குண்டினபுரத்துக்கு வாரும் போகலாம்" என்றாள் தமயந்தி.

(வி - ரை) போற்றரிய என்பது செல்வங்களின் மிகுதியைக் காட்டுகிறது. தோற்றமையும் என்பதில் உம்மை எச்சவும்மை- இழிவிற் சிறப்பெனினுமாம். எம்பதிக்கே என்பதில் ஏகா ரம் பிரிநிலை - தேற்ற மென்பாரு முளர். போந்தருளு கென் றாள்=போந்தருளக+என்றாள். அகரந் தொகுத்தல். எம்ப திக்கே, செம்பதிக்கே என்பவைகளிற் குவ்வுரு பிடப்பொருளில் வந்தது. தேன் போன்றவளைத் தேனென்ற தாகுபெயர். யாவர்க் கும் என்பதற்கு, இதுவரையில் தெரிந்தார் போக மற்று முள்ள பலர்க்கும் என்று பொருள்கொளலா மன்றி, நம்மெல்லார்க்கு மென்று சிலர் கொள்வது போலக் கொள்ளலாகாது; யார்க்கும், எவர்க்கும், ஒருவர்க்கும் என்று பொருள்கோடலு மொற்று மாறும்- யாவர்க்கும் என்பதிலுள்ள முற்றும்மையால் வினைப்பொருள் போய்ப் படர்க்கைப் பொருளாயிற்று. தோற்றாதே என்பதை முற் றாக்கி இடரெய்துவாரு முளர். (௬அ)

["செல்வரிடத்திற் சென்று ஈ! யென் றிரப்பது மானத்தைக் கொல்லும் வாள்" என்று னள னெனல்.]

சினக்கதிர்வேற் கண்மடவாய் செல்வர்பாற் சென்றீ
எனக்கென்னு மிம்மாற்றங் கண்டாய்—தனக்குரிய
தானந் துடைத்துத் தருமத்தை வேர்பறித்து
மானந் துடைப்பதோர் வாள்.

(ப - ரை) சினம் கதிர் வேல் கண் மடவாய் - கோபத்திற் பாயும் ஒளியுடைய வேலாயுதம் போன்ற கண்களையுடைய பெண்ணே!, செல்வர்பால் சென்று எனக்கு ஈ என்னும் இ மாற்றம் - பணமுடையாரிடத்திற் போய் (இல்லை, எனக்குக்) கொடு என்னும் இச் சொல் (லொன்றே), தனக்கு உரிய தானம் துடைத்து - ஒருவனுக் குரிமையாகிய ஈதற் புகழை அழித்து, தருமத்தை வேர் பறித்து - அறத்தை அடியோடு களைந்து, மானம் துடைப்பது ஓர் வாள் - பெருமையை அழிக்கவல்லதாகிய ஒருவிதக் கத்தியாகும் (என்று னளன்).

(க - ரை) பொன்னுடையாரிடத்திற் சென்று 'இல்லை, ஈ' என்று பல்லைக்காட்டி யிரப்பது ஒருவனுக்குப் புகழை யழித்து அறத்தைக் கழித்து மானத்தை ஒழித்துவிடக் கூடியதாகிய ஓர் வாளாகும்.

(வி - ரை) சினம் - உடையானுக் குள்ளது உடைமையாகிய வேலின்மேலேறியது: 'இது மிகவும் கொடுமையாகிய வெட்டு' என்று வெட்டினவன் கொடுமையை வெட்டின்மேலேற்றி ஜூலியஸ் ஸீஸரென்னும் நாடகத்தில் அங்கிலக் கவிமணியாகிய ஷேக்ஸ்பியரென்பாரும் செப்பியுள்ளார்; இதை மரபுத் தப்பேனும் ஒப்பென்று கொள்வர் தமிழ் நூலார்; அங்கிலத்தில் இஃதோர் அணியென்பர். என்றுனளன் என்பதைச் சொல்லெச்ச மாக்குக. இழிந்தோன் - இரப்புரை யாகலான் 'ஈ' என்றார். 'தானமது விரும்பு, அறஞ்செய விரும்பு' என்பவைகளிற் போலத் தான தரு

மம் என்றார். தருமம் - இல்லற துறவறங்கள். அறஞ் செய விரும்பு என்றதையும் 'இல்லற மல்லது நல்லற மன்று' என்பதனோ டொப்பிட்டுக் காண்ப ராவோர். துடைப்பது - வினையாலணையும் பெயர். கண்டாய் - அசை - நீ தெரிந்துகொண்டையா? எனினுமாம். (௬௯)

[மன்னராயிருந்தும் மறு மன்னரிடத்திற் சேர்ந்து வயிறு வளர்ப்பரேல் அவர் பேடியரல்லது பித்தராவாரென்று ணளன் எனல்.]

மன்னராய் மன்னர் தமையடைந்து வாழ்வெய்தி
இன்னமுதந் தேக்கி யிருப்பரேல்—சொன்ன
பெரும் பேடிகளலரேற் பித்தரே யன்றே
அரும்பேடை மானே யவர்.

(ப - ரை) அருமை பேடை மானே - அழகான பெண்மான் போன்றவளே!, மன்னர் ஆய் மன்னர்தமை அடைந்துவாழ்வு எய்தி- அரசராயிருந்தும் (ஒருவர், தம்மைப் போன்ற பிற) அரசரைச் சேர்ந்து வாழ்ந்து, இனிமை அமுதம் தேக்கி இருப்பரேல் - நாவுக் குரியதாகிய உண்டியை நிரம்ப வுண்டு இருப்பாராஞல், அவர்-அப் படிப்பட்டவர், சொன்ன பெருமை பேடிகள் - பெரியோர் சொல்லி யுள்ள முழுப் பேடிகளாவார், அல்லரேல் பித்தரே அன்றோ - அப்படி அல்லாதவராஞல் பித்தம் பிடித்தவரே யாவாரல்லவோ?

(க - ரை) மன்னராயிருந்தும் ஒருவர் தாம் பிற மன்னரிடத் திற் சேர்ந்து வயிறு வளர்த்து வாழ்வாராஞல் அவரினும் பெரும் பேடியரும் பித்தரும் உலகில் வேறில ரென்று ணளன்.

(வி - ரை) பெரும் பேடிகளென்றது பேட்டிலக்கண முற்று மமைந்த முழுப்பேடிகளை. ஏகாரம்-துணிவு; ஓகாரம் - எதிர்மறை- உடன்பாட்டுப் பொருட்டு. பேடை மான் - பெட்டை மான். சிங்கம், குதிரை, கழுதை, ஒட்டை முதலிய பெண்ணுக்கும்பேடை,

பெட்டை யென்பன மரபுப் பெயர்கள். அமுதந்தேக்கி யிருத்தல்=வயிறு நிரம்ப நாவுக்குரிசியான வுண வருந்தி வாழ்தல். பேடிகள்=பேடு+இ+கள் - பேட்டுத்தன்மை யுடையவர்கள். இகர விகுதி ஆண் பெண் இருபாலார்க்கும் பொது. 'காவாது வந்தியுங் கண்ணன்னார் கண்ணும் இரவாமை கோடியுறும்' என்றமறை மொழிப்படி நளன் தன் மாமனார் தன்னைக் காவின்றி வரவேற்றுப சரிப்பா ரென்பது தனக்குத் தெரிந்திருந்தும், அங்ஙனம் மனைவி சொன்னதைத் தடுத்துப் பிறரை யடுத்துச்சோறுண்டு பிழைத்தல் பெரும்பேடிகள் அன்றி அரும் பித்தர் செய்கை யென்று பேசினன். அரும்பேடை யென்பதில் அருமை அழகி னருமையைக் குறித்தது. (எ0)

["ஆனல், நம் மக்களையேனுங் குண்டினபுரிக்கு அனுப்பி விடுங்கள்" என்ருள் தமயந்தி யெனல்.]

செங்கோலா யுன்றன் றிருவுள்ள மீதாயின்
எங்கோன் விதர்ப்ப னெழினகர்க்கே—நங்கோலக்
காதலரைப் போக்கி யருளென்ருள் காதலருக்
கேதிலரைப் போல வெடுத்து.

(ப - ரை) (அதற்குத் தமயந்தி) காதலர்க்கு ஏதிலரைபோல - தன் மக்களுக்கு ஏதும் பற்றற்றவரைப் போல (நின்று), செம்மை கோலாய்-நீதிநெறி வேந்தே!, உன்தன் திரு உள்ளம் ஈது ஆயின்- உன் எண்ணம் இதுவானல், நம் கோலம் காதலரை - நம்முடைய அழகுள்ள மக்களை (யேனும்), எம் கோன் விதர்ப்பன் எழில் நகர்க்கே-எங்கள் அரசனுகிய விதர்ப்பனுடைய அழகான பட்டணமாகிய குண்டினபுரிக்கே, போக்கி அருள் என்ருள் எடுத்து - அனுப்பியருளுக என்று குறித்துச் சொன்னுள்.

(க - ரை) நளனை நோக்கித் தமயந்தி, "செங்கோல் வேந்தே! நின் திருவுள்ள மிதுவானல் எங்கள் தந்தை நகரமாகிய குண்டின புரிக்கு நமது மக்களையேனும் அனுப்பியருள்க" என்ருள்.

(வி - ரை) காதலர்க்கு என்பது காதலரிடத்தில் என்று பொருள்தருவதால் இங்குக் குவ்வுருபு இடப்பொருட்டு. ஏதிலார் என்பதற்குப் பகைவ ரென்பாரு முளர்; ஏது + இன்மை + ஆர் என்று பிரிவதால் இதற்குப் பகைமையும் உறவின் தகைமையு மில்லா தொதுமலரென்பதே திரண்டபொருள் - ஏதும் பற்றற்றவர். கோல்-ஆகுபெயராய் நீதியை உணர்த்திற்று. திருவுள்ளம்-இதில் திருவென்ப துயர்வைக் குறிக்கும் உரிமை பெற்றிருக்கிறது- உயர்வாகிய கருத்து. இது நீட்டும் வழி நீண்டு ஈது என்று யிற்று. எம் விதர்ப்பர்கோன் என்பது எங்கோன் விதர்ப்பனென இலக்கணப்போலியாயிற்று - ஏகாரம் தேற்ற மென்பதும் பிரிநிலை யென்பதும் பொருந்தாது - அசையாகத் தள்ளுவதே சரியாம். எம் என்பது தாய் தந்தையர் முதலிய நெருங்கிய அன்புள்ள சுற்றத்தைக் குறிக்கவரும் இயல்புப்பன்மை, நம் என்பதூஉம் இப்படியே. (எக)

[நளன் தன்னோடுகூட வந்த ஓர் அந்தணனைப் பார்த்து, "என் மக்களைக் கொண்டுபோய் விதர்ப்ப ராசனிடத்தில் விடு" என்றுனெனல்.]

பேதை பிரியப் பிரியாத பேரன்பின்
காதலரைக் கொண்டுபோய்க் காதலிதன்—தாதைக்குக்
காட்டுநீ யென்றான் கலங்காத வுள்ளத்தை
வாட்டுநீர் கண்ணிலே வைத்து.

(ப - ரை) கலங்காத உள்ளத்தை வாட்டும் நீர் கண்ணில் வைத்து - எதற்கும் கலங்குதலில்லாத (தன்) மனத்தை (மக்கட் பிரிவானது) வருத்துவதனு (லுண்டாகிய) நீரைக் கண்களில் ததும்ப வைத்தபடியே (நளன்), பேதை பிரிய பிரியாத பெருமை அன்பின் காதலரை கொண்டுபோய் - (இவ்வென் மனைவியாகிய) தமயந்தி (தம்மைப்) பிரிய மன மொப்பியும், (இவளைத்) தாம் பிரிந்துபோக மனம் வராத மிக்க அன்புள்ள இம்மக்களை அழைத் துக்கொண்டுபோய், காதலிதன் தாதைக்கு நீ காட்டு என்றான் -

இவளுடைய தந்தையாகிய வீமராசனுக்கு நீ காண்பியென்று (தன்னோடு வந்த ஓர் அந்தணனை நோக்கிச்) சொன்னான்.

(க - ரை) நளன் கண்களில் நீர்த் ததும்பினபடியே தன்னோடு வந்த ஓர் அந்தணனைப் பார்த்து, "ஐயரே, என் மனைவி பிரிய மனமொப்பியும் தாம் பிரிய மனமொவ்வாத இம்மக்களைக் கொண்டு போய் ராசனிடத்தில் விடு" என்றனன்.

(வி - ரை) பேதை-தமயந்திக்கு ஆகுபெயர். பிரியாத - பிரிய மாட்டாத. இங்குப் பேதை யென்பது இவ்வென் மனைவியாகிய தமயந்திப் பெண்ணென்னுஞ் சுட்டுப்பொருட்டு. வாட்டும் நீர் என்பதற்கு வெதும்பச் செய்கிற நீர் என்று பொருந்தாப் பொருள் புகல்வாருமுளர்-வாட்டும் என்பதற்கு மக்கட் பிரிவென்பதை எழுவாயாக்கினும் - மக்கட்பிரிவு வாட்டுவதனாலுண்டாகும் நீர் என்று கொள்க. கலங்காத வுள்ளம்-என்றும் சலியாத மனம்-என்றும் சலியாத மனம் அன்று சலித்ததெனக் கொள்க. காதலி- பொன்னி என்புழிப்போல இகரவிகுதி பெற்ற பெண்பால். ஏகாரம் - அசை. வாட்டு நீர் - வாட்டும் நீர் - வினைத்தொகை. (எஉ)

[மக்கள், தந் தந்தை தாயாரை நோக்கி, "எங்களை வேறு பிரித்து அனுப்பிவிடுகிறீர்களோ?" என்று கேட்டார்கள் எனல்.]

தந்தை திருமுகத்தை நோக்கித் தமைப்பயந்தாள்
இந்து முகத்தை யெதிர்நோக்கி—எந்தம்மை
வேறாகப் போக்குதிரோ வென்றார் விழிவழியே
ஆறாகக் கண்ணீ ரழுது.

(ப - ரை) (பிள்ளைகளிருவரும்) விழிவழியே கண் நீர் ஆறு ஆக அழுது-தத்தம் கண்களின் வழியாகக் கண்ணீரானது ஆறு போலப் பெருகும்படி அழுதுகொண்டு, தந்தை திரு முகத்தை நோக்கி-தகப்பனாருடைய அழகான முகத்தைப் பார்த்து, தம்மை

பயந்தாள் இந்து முகத்தை எதிர்நோக்கி - தங்களைப் பெற்றவளது சந்திரனைப் போன்ற முகத்தை ஏறெடுத்துப் பார்த்து, எம்தம்மை வேறு ஆக போக்குதிரோ என்றார் - எங்களை வேற்றுமையாக (எண்ணி) அனுப்பிவிடுகிறீர்களோ? என்று கேட்டார்கள்.

(க - ரை) மக்களிருவரும் பெற்றோரை நோக்கி, "எங்களை நீங்கள் வேற்றுமையாக எண்ணி அனுப்பிவிடுகிறீர்களோ?" என்று அழுதுகொண்டே கேட்டார்கள்.

(வி - ரை) தம்மை அழைத்துக்கொண்டு போம்படி அந்தணனுக்குக் கட்டளை யிட்டவன் தந்தை யாகையால் மக்களிருவரும் அக்கட்டளையை வியந்து முதலிற் றந்தையை நோக்கினார்கள் என்பது தோன்ற, தந்தை திருமுகத்தை நோக்கி என்று முதலிலும் தமைப்பயந்தாள் இந்து முகத்தை எதிர்நோக்கி யென்பதைப் பிறகும் வைத்தோதினார். வேறு ஆக - பிரிவினை ஆக எனினுமாம் - ஒற்றுமை யின்றி என்பது பொருள்-வேறு என்பதே முதனீண்டு வேறு என்றாயிற் றென்றால் வெறுப்பாக எனினுமாம். பெற்றோர் வெறுப்பாகப் பிள்ளைகளைப் போக்காரேனும் பிள்ளைக ளங்ஙனம் எண்ணிக்கொள்வது உலக இயற்கை. போக்குதிரோ - பிறவினை, போகுதிரோ - தன்வினை - போகச் செய்கிறீர்களோ எனினுமாம் - போக்கு + த் + இர் - முன்னிலைப் பன்மை வினைமுற்று ; ஓகாரம் - வினா. 'ஆறாகக் கண்ணீரழுது' என்பதை ஆறாகத் தண்ணீர் அழுது என்று பாட மோதுவாரு முளர். (எ௩)

[தமயந்தி கண்ணீரால் தம் மக்களை யலம்பினபடியே தழுவி விட்டு வாடி நின்றாளெனல்.]

அஞ்சனந்தோய் கண்ணி லருவிநீ ராங்கவர்க்கு
மஞ்சனநீ ராக வழிந்தோட—நெஞ்சுருகி
வல்லிவிடா மெல்லிடையாள் மக்களைத்தன் மார்போடும்
புல்லிவிடா நின்றாள் புலர்ந்து.

(ப - ரை) வல்லி விடா மென்மை இடையாள் - பூங்கொடியின் ஒப்பைத் தப்பவிடாத (பூங்கொடி போன்ற) மென்மையாகிய

இடையையுடைய தமயந்தியானவள், அஞ்சனம் தோய் கண்ணில் அருவி நீர்-தன்மை நீட்டிய கண்களினின்றும் வடிகின்ற மலையருவி போன்ற நீரானது, ஆங்கு அவர்க்கு மஞ்சனம் நீர் ஆக வழிந்தோட அங்கே தன் பிள்ளைகளுக்குக் குளிப்பாட்டு நீர்போல அவர்கள் (உடலில்) வழிந்து ஓடும்படி, நெஞ்சு உருகி மக்களை தன் மார்போடு புல்லி விடா புலர்ந்து நின்றாள் - மனங்கரைந்து அப்பிள்ளைகளைத் தன் மார்போடு இறுகத்தழுவி விட்டு வாடி இருந்தாள்.

(க - ரை) தமயந்தி தன் கண்களில் மலையருவிபோற் பாயும் நீரால் மக்களைக் குளிப்பாட்டினபடியே இறுகத் தழுவி விட்டுவாடி ஒருபுறம் இருந்தாள்.

(வி - ரை) வல்லி விடா மெல்லிடையா ளென்பதற்கு பூங் கொடியானது தன்னட்பை விடாத மெல்லிடையாளென்றும் பூங் கொடித் தன்மையை விடாத மெல்லிடையாளென்றும் பொருள் கூறுவர். பூங்கொடியானது தனக் குவமை யாதலைத் தவறாது என்பதே திரண்டபொருள். புல்லிவிடாநின்றாள் என்பதை ஒரு மொழியாக் கொண்டு தழுவிக்கொண்டாள் என்பதூஉ மொன்று. முதலடியில் அவர்க்கு எனறிருப்பதை மக்களுக்கு என்றும் மூன்றாமடியில் மக்களை யென்றிருப்பதை அவர்களை யென்று மாற்றிவைத்துப் பொருள் கூறிவாரு முளர். உம்மை - அசை. முதல் விடா, ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்ச வினை; இரண் டாம் விடா, இறந்தகால வினையெச்ச வினைச்சொல். (௭௪)

[நள தமயந்திய ருயிர்களைக் கொண்டுபோவதுபோல அவ் விரு மக்களையும் அந்தண னழைத்துக்கொண்டு போனா னெனல்.]

இருவ ருயிரு மிருகையால் வாங்கி
ஒருவன்கொண் டேகுவா னொத்து—வருமறையோன்
கோமைந்த னோடிளைய கோதையைக்கொண் டேகினான்
வீம னகர்க்கே விரைந்து.

(ப - ரை) வரும் மறையோன் - தம்மோடு வந்த அந்தணன் இருவர் உயிரும் இரண்டு கையால் வாங்கிக்கொண்டு -(நளதமயந்தி

யாகிய) இருவ ருயிர்களையும் தன் இரண்டு கைகளாலும் வாங்கிக் கொண்டு, எகுவான் ஒருவனை ஒத்து - போவானாகிய ஒருவனைப் போன்று. கோ மைந்தனோடு கோதையை கொண்டு - இளவரசனோடு இளவரசியையும் இட்டுக்கொண்டு, வீமன் நகர்க்கே விரைந்து ஏகினான்-வீமராசனுடைய நகரமாகிய குண்டினபுரிக்கே விரைவாகப் போனான்.

(க - ரை) நள தமயந்தியராகிய இருவ ருயிர்களையும் இரண்டு கைகளால் வாங்கிக்கொண்டு போகும் ஒருவனைப்போல, அவர்களோடு வந்த அந்தணன், மக்களிருவரையும் அழைத்துக்கொண்டு குண்டினபுரத்துக்குப் போனான்.

(வி - ரை) நளனுக்குயிர், கோமைந்த னென்றும், தமயந்திக்குயிர், இளையகோதை யென்றும் குறிப்பிற் கொள்க. அந்தணன் அந்தகன் (எமன்) போலானான்: அந்தகன் ஒருகையால் ஒருமுறையில் ஒருயிர் கொண்டுபோவான்; ஆனால் இவ்வந்தண வந்தகன் தன்னிரு கைகளால் ஈருயிர்களை ஒருமுறையில் கொண்டுபோன திறம்பூதுடைத்தென்பது போலப் புகழ்ந்தி புகழ் வந்திப் புகழ்ந்துள்ளார். பெற்றோரிருவரும் மக்களைப் போக்கினதால் உயிர்நீத்த உடல்களென வானார்கள். வாங்கி என்றதனால் பெற்றோர் மக்களைப் பிடித்துத் தர வாங்கிக்கொண்டென்று கொள்க. வருமறையோன்-வினைத்தொகை-இம்மறையோன் இவர்களை விடாது பின்றொடர்ந்தானாகவேண்டும். ஏகாரம் - பிரிநிலை-தேற்ற மென்பதை விட அசையென லமையும். இருகையாலும் என்பதில் முற்றும்மை தொக்கது. (எ௫)

[நளன் தன் மக்களைப் பார்த்தபடியே பெருமூச்செறிந்து ஒன்றும் பேசாமல் ஒடுங்கியிருந்தா னெனல்.]

காத லவர்மேலே கண்ணோட விண்ணோடும்
ஊதை யெனநின் றுயிர்ப்போட—யாதும்
உரையாடா துள்ள மொடுங்கினான் வண்டு
விரையாடுந் தாரான் மெலிந்து.

(ப - ரை) வண்டு விரை ஆடும் தாரான் - வண்டுகள் மண மூள்ள தேனிற் குளித்துக் களிக்கு மலர் மாலை யணிந்த நளன், காதலவர் மேலே கண்ணோட - மக்கள் மேலே பார்வையானது செல்லவும், விண் ஓடும் ஊதை என்ன உயிர்ப்பு நின்று ஓட - ஆகாயத்திற் பாய்ந்தோடுகின்ற காற்றைப்போல மூச்சுத் தடைபட்டு ஓடவும், யாதும் உரையாடாது உள்ளம் ஒடுங்கினான் - எதுவும் பேசாமல் மனமொடுங்கி யிருந்தான்.

(க - ரை) நளன் தன் மக்களைப் பார்த்தபடியே பெருமூச்சு விட்டுக்கொண்டு ஒன்றும் பேசாத ஊமைபோல மனமொடுங்கி யிருந்தான்.

(வி - ரை) நின்று என்பதை அசையாத் தள்ளுவாருமுளர். விசன மிகுதியால் மூச்சு நின்று நின்று வருமாகையால் ஊதை நின்றோட என்றார். அப்படி வரினு மது பெருமூச்சாமாகலான் விண்ணோடும் ஊதை யென வென்றார். அந்தச் சமயத்தில் நளனுக்குத் தொட்டாலும் தெரியாது; கண்ணு மக்களைப் பார்த்தது பார்த்தபடி யிருந்ததன்றி மற்றொன்றையுங் காணாது; மூக்கு மூச்சொழுங்கின்றிப் பெருமூச்செறிந்தது; வாயும் பேச்சொடுங்கி மூகை யெனலாயிற்று; காதும் எதையுங் கேளாது செவிடுபட்டது; ஆகையால் உள்ளமொடுங்கி உயிர்ப்பிணமானா னளன் சென்ற செய்யுளில் அந்தண வந்தக னிவனுயிர் போன்ற மக்களைக் கொடுபோனானென்றதை யிச்செய்யுளில் விளக்குகின்றார் புகழேந்தியர். யாதும் என்பதில் உம்மை முற்று. நளனைப் போலவே தமயந்தியும் செயற்கையற்று விசனத்தா லொடுங்கி யிருந்த ளென்பதைக் குறிப்பிற் கொள்க. ஏ-பிரிநிலை. விரையுங் கண்ணு மாறு பெயர்கள். (எ௬

[நளன் தமயந்தியோடு தன் னிடத நாட்டைக் கடந்து பாலைவனத்தை நெருங்கினா னெனல்.]

சேனுற்ற வாவித் திருநாடு பின்னொழியக் [சே
காலிற்போய்த் தேவியொடுங் கண்ணுற்றான்—ஞாலஞ்
சுள்ளிவே கத்தரவின் கண்மணிக டாம்பொடியாய்த்
துள்ளிவே கின்ற சுரம்.

(ப - ரை) (பிறகு நளன்) சேல் உற்ற வாவி திருநாடு பின் ஒழிய - சேல் மீன்களைப் பொருந்தின குளங்களுள்ள வளமிகுந்த நிடதநாடு தனக்குப் பின்னாக, தேவியொடும் காலின் போய்-மனைவியாகிய தமயந்தியோடு கானடையாகச்சென்று; ஞாலம் சேர் கள்ளி வேகத்து அரவின் கண் (அரவின்) மணி பொடியா - பூமியில் முளைத்துள்ள கள்ளிச்செடிகளும் (வெப்பம் பொறுமல்) வேகமாயோடும் பாம்புகளின் கண்களும் (அவைகளிடத்திற் பிறக்கு மாணிக்க) மணிகளும் (வெந்து) சம்பராம்படி, துள்ளி வேகின்ற சுரம் கண்ணுற்றான்-நெருப்புப் பொறி பறந்து வேதற்கிடமாகிய பாலை நிலத்தைப் பார்த்தான்.

(க - ரை) நளன் தன் னிடத நாடு பின்னாகத் தமயந்தியோடு கானடையாகச் சென்று பாலைவனத்தைக் கண்டான்.

(வி - ரை) திருநாடு நீர்வளச் சீர்நாடு பின்னொழியா என்று பாடம் படிப்பாருமுண்டு. காலிற்போய் என்பதற்குக் காற்றைப் போலக் கடுகிச்சென்றெனினுமாம். ஞாலம் சேர் கள்ளி - பூமியில் முளைத்து அசையாதிருக்கும் கள்ளி-ஞாலம் சேர்வேகத் தரவு எனினுமாம் - பூமி முழையிற் சேர்ந்து அசைந்தோடும் பாம்பு எனக் கொள்க. கள்ளியும் வேம், பாம்பின் கண்ணும் வேம், அதன் மணியாகிய மாணிக்கமும் வேமென்று கொள்க: பொன் போலுங் கள்ளிப் பொறி பறக்குங் கானமென்றார் பிறரும்; விழுந்த துளி அந்தரத்தே வேமென்றா ரின்னொருவர். காருமோடாது நீடாது-குருமோடாது-சூரியன் தேருமோடாது-காருமோடா தென்றார் கம்பரும். ஞாலம் - பூமி அந்தரத்திற் றூங்குவதென்னும் பொருட்டு - நாலுதல் ஞாலுதல் தொங்குதல்-கள்ளி வேகின்ற வேகத்தால் பாம்பினிடத்துள்ள மணிகள் வேகின்ற சுர மென் றுரை கூறுவாருமுளர். பொடியாய் என்பதை பொடியாவென்று பாடமோதினுமாம். பொடியாக-பொடியாகும்படி என்று பொருள் கொள்க (என)

[நள தமயந்தியரை வஞ்சிக்க வெண்ணிக் கலிபுருடன் பறவையா வடிவெடுத்து அவர்களுக்கெதிரில் வந்திருந்தா னெனல்.]

கன்னிறத்த சிந்தைக் கலியுமவன் முன்பாகப்
பொன்னிறத்த புள்வடிவாய்ப் போந்திருந்தான்—நன்
[னெறிக்கே
அஞ்சிப்பா ரீந்த வரசனையுந் தேவியையும்
வஞ்சிப்பான் வேண்டி வனத்து.

(ப - ரை) நன்மை நெறிக்கே அஞ்சி பார் ஈந்த அரசனையும் தேவியையும் - நல்லொழுக்க வழியொன்றுக்காகவே அஞ்சித் தந் நாடு நகரங்களைக் கொடுத்துவிட்ட நளனையும் அவன் மனைவியாகிய தமயந்தியையும், வனத்து வஞ்சிப்பான் வேண்டி-அவ்வனத்தில் வஞ்சிக்க விரும்பி, கல் நிறத்த சிந்தை கலியும்-கல் போலுங் குணமுள்ள மனங்கொண்ட கலி புருடனும், அவன் முன்பு ஆக - அந்நளனுக் கெதிரில், பொன்மை நிறத்த புள் வடிவு ஆய் போந்து இருந்தான் - பொன்னிறமான பறவை யுருவங்கொண்டு வந்திருந்தான்.

(க - ரை) நன்னெறிக் கஞ்சித் தந்நாடு நகரங்களைக் கொடுத்து விட்ட நள தமயந்தியரை வஞ்சிக்க அவர்கட் கெதிரிற் கலிபுருட னொரு பறவையா வடிவெடுத்து வனத்தில் வந்திருந்தான்.

(வி - ரை) கல் + நிறத்த = கன்னிறத்த - கல்லின் வன்மைத் தன்மையுள்ள, கல்லைப்போலும் வன்மைத்தன்மையுள்ள எனினு மாம். கன்னிறத்த சிந்தை - கன் மனம். பொன்னிறத்த என்பதும் பொன்மை நிறமுள்ள என்றாகும். உம்மை - எச்சம். ஆக என்பதை அசையாகத் தள்ளுவாரு முளர். ஏகாரம்-தேற்றம்-பிரிநிலை யெனினும் இழுக்காது. போந்து என்பதை, புகுந்து என்பதன் விகாரமாக்காமல், போ யென்பாரு முளர். கலியு மவர் முன்பாக என்றும் பாட வேறுபா டுண்டு. நல்லொழுக்க நெறிதவறின் இம்மையிற் பழியாய்ப் போழியும், பேரொழியு மாகையால்

நன்னெறிக்கே அஞ்சி யென்றார் - நன்னெறி விலக்குக்கே அஞ்சி யெனினுமாம். அறுவகையில் நாட்டிற் சூழ்ந்ததே பற்றாதென்று காட்டிலும் அவர்களுக்குக் கேடு சூழ வந்தான் கலி யென்பது தோன்றக் கன்னிறத்த சிந்தைக் கலியு மென்றார். கலியும் என்பதி லுள்ள உம்மையை வனத்து என்பதனோடு சேர்த்து வாசித்துப் பொருள்கொளினு நன்று. (எஅ)

[இராமனை மான் பிடிக்கச் சொன்ன சீதையைப்போல நளனைப் பறவை பிடிக்கச் சொன்னாள் தமயந்தி யெனல்.]

*தேன்பிடிக்குந் தண்டுழாய்ச் செங்கட் கருமுகிலை*
*மான்பிடிக்கச் சொன்ன மயிலேபோல்—தான்பிடிக்கப்*
*பொற்புள்ளைப் பற்றித்தா வென்றாள் புதுமழலைச்*
*சொற்கிள்ளை வாயா டொழுது.*

(ப - ரை) தேன் பிடிக்கும் தண்மை துழாய் செம்மை கண் கருமை முகிலை - தேன்பொருந்தி யிருக்கின்ற குளிர்ச்சியான துளசிமாலை யணிந்த சிவந்த கண்களையுடைய கார்மேக வண்ணனாகிய ஸ்ரீராமபிரானை, மான்பிடிக்க சொன்ன மயிலே போல் - மானைப் பிடித்துத் தரச்சொன்ன மயில்போலுஞ் சாயலையுடைய சீதாதேவியைப் போல, புதுமை மழலை சொல் கிள்ளை வாயாள் தொழுது-கேட்பார்க்கு வியப்பைத் தரூஉம் மழலைச் சொற்களைப் பேசுகின்ற கிளிபோன்ற வாயையுடைய தமயந்தி (கைகூப்பிக் கணவனைக்) கும்பிட்டபடியே, தான் பிடிக்க பொன்மை புள்ளை பற்றி தா என்றாள்-தான் கையிற் பிடித்து வைத்துக்கொண்டிருக்க அந்தப் பொன்மயமான பறவையைப் பிடித்துக் கொடு என்று வேண்டினாள்.

(கு - ரை) வனத்தில் இராமனை மான் பிடித்துத் தரச்சொன்ன சீதையைப்போல, நளனைப் பறவை பிடித்துத் தரச்சொல்லி வேண்டினாள் தமயந்தி.

(வி - ரை) தேன் பிடிக்கும் என்பதற்கு, வண்டுகள் பற்று கின்ற என்று பொருள் கூறுவாரு முளர். மாரீசனாகிய மாய மானை உண்மை மானென்றெண்ணி அதைப் பற்றித்தா என்று இராமனை வேண்டின சீதையைப்போலவே, கலியாகிய பொற்புள்ளை நற்புள் ளென்றெண்ணி அதைப் பற்றித்தா என்று நளனை வேண்டினாள் தமயந்தி; ஆகையால், மயிலேபோ லென்று தொழிலுவமத்தாற் கூறினார். மயில் - சீதைக் காகுபெயர். ஏகாரம் - தேற்றம், பிரி நிலை யெனி னாகாது. புதுமையாகிய மழலைச் சொற்களைப் பேசு கின்ற கிளிபோற் பேசுகின்ற சொல்லையுடைய தமயந்தி யென்று உரையை வளர்த்துவது வீண். கிளியையும் வாயையும் சொல்லுக் காகுபெயர்க ளாக்குவது உலக வழக்கு. (எக)

[பறவை நளன் கைக் ககப்படா தோடியதால் அதை அவன் வளைத்துப் பிடிக்க எண்ணினா னெனல்.]

பொற்புள் ளதனைப் பிடிப்பா னளன்புகுதக்
கைக்குள்வரு மாபோற் கழன்றோடி—யெய்க்கும்
இளைக்குமா போல விருந்ததுகண் டன்றே
வளைக்குமா றெண்ணினான் மன்.

(ப - ரை) நளன் பொன்மை புள் அதனை பிடிப்பான் புகுத-நளன் பொன்மயமான பறவையாகிய அதைப் பிடிக்கப் போகை யில், (அது) கைக்கு உள் வரும் ஆறுபோல் கழன்று ஓடி - (அது) அவன் கையில் அகப்படும் விதம்போல (க்காட்டித்) தப்பி ஓடி, எய்க்கும் (ஆறுபோல) இளைக்கும் ஆறுபோல இருந்தது கண்டு - ஏய்க்கும் விதம் போலவும் இளைக்கும் விதம் போலவும் இருந்ததைப் பார்த்து, மன் வளைக்கும் ஆறு எண்ணினான் - அரசன் (அதை) வளைத்துப் பிடிக்கும் வகையை எண்ணினான்.

(க - ரை) நளன் அந்தப் பொற் பறவையைப் பிடிக்கப் போகையில், அது அகப்படுவதுபோலக் காட்டித் தப்பியோடி ஏமாற்றியதால், அதை அவன் வளைத்துப் பிடிக்க எண்ணினான்.

(வி - ரை) கையாற் பிடிக்க முடியாதது கண்டு வளைத்துப் பிடிக்க எண்ணினானென்று கொள்க. பிடிப்பான் - எதிர்கால வினையெச்சம். புள்ளதனை என்பதை ஒருமொழியாக்கி, அ-சாரியை, து-பகுதிப்பொருள் விகுதி யென்பாருமுளர். புகுத என்பதற்குவர வென்றுரைவகுப்பாருமுளர். கைக்குள் என்பதற்குக் கையினுக்கு உள்ளே யென்று இருமொழியாக உரையியம்புநருமுளர்; கைக்குள் = கை + கு + உள்-ஏழன்விரி-குகரச் சாரியையாக் கொள்க. வருமா போல் கழன்றோடி எய்க்கும்-கையில் அகப்படுவதுபோல (க்காட்டித்) தப்பியோடி ஏமாற்றும் என்பதே சிறந்த பொருள்; எய்க்கும் என்பது குறுகும் வழி குறுகிற்று; கழன்றோடி எய்க்கும் என்பதை முற்றாக்கி இளைப்படையு மென்றும், பிறகு இளைக்குமாபோல வென்பதற்கு அப்படி இளைப்படைந்திருக்கும் விதம் போல என்றும் பொருள் வகுப்பாருமுளர். அன்றே - அசை, சிலரிதற்கு அன்றைக்கே, அப்போதே என்றும், அல்லவா என்றும் உரை கூறி ஏயை முறையே பிரிநிலையும் வினாவுமாக்குவர். (அ௦)

[தமயந்தியை நோக்கி நளன், "நாமிருவேமும் ஓராடை புனைந்து மாறுடையால் இதை வளைப்பேம்" என்றுரைத்தனனெனல்.]

கொற்றக் கயற்கட் கொடியே இருவோரும்
ஒற்றைத் துகிலா லுடைபுனைந்து—மற்றிந்தப்
பொற்றுகிலாற் புள்வளைக்கப் போதுவோ மென்றுரைத் [தான
பற்றகலா வுள்ளம் பரிந்து.

(ப - ரை) பற்று அகலா உள்ளம் பரிந்து - (நளன் தன்) மனைவிமேல் ஆசை நீங்காத மனத்தில் அன்பு கூர்ந்து, கொற்றம் கயல் கண் கொடியே - கண்ணழகில் வெற்றிபெற்ற (சிறந்த) சேல் மீன்போன்ற கண்களையுடைய பூங்கொடி போல்வாளே!, இருவோரும் ஒற்றை துகிலால் உடை புனைந்து-நாம் இருவரும் (உன்) ஓராடையால் உடுத்துக்கொண்டு, இந்த பொன்மை துகிலால் புள்

வளைக்க போதுவோம் என்று உரைத்தான்-இவ் (வெணது) பொன்னிறமான மாருடையால் பறவையை வளைத்துப் பிடிக்கப் போவோம் (வா) என்றான்.

(க - ரை) தமயந்தியை நோக்கி நளன், "பெண்ணே! நாம் இருவேமும் உன் ஓராடையை உடுத்துக்கொண்டு என் மாருடையால் பறவை பிடிக்கப் போவோம், வா" என்றான்.

(வி ரை) கயலுக்குக் கொற்றம்-கண்ணழகில் வெற்றியெனக் கொள்க கொடி - தமயந்திக் காகுபெயர். இருவோரும் என்பதை இருவேமும் என்பதற்குவழுவமைதியாக் கொள்ளவேண்டும். ஒன்று + ஐ = ஒற்றை; ஐகாரம்-சாரியை. கொற்றம் என்பதைக் கண்ணோடு பொருத்துவாரு முளர். மற்று என்பதை அசையாகத் தள்ளினும், மற்றுபிரிதுஎன்றுபொருள்கொள்ளினுமாம். பொன் துகில்-அழகான துகில் என்பது சாதாரணப்பொருள்-பொற் சரிகைத்துயில் பீதாம்பரமெனினுமாம். போதுவோம் என்பதற்குப் புகுவோ மென்பாருமுண்டு. போந்து என்பதற்குப் போய் என்றும் வந்தென்றும் பொருளுள்ளவாறு, போதுவோ மென்பதற்கும் போவோம் புகுவோமென்றிரு பொருளுள. பற்றகலா வுள்ளமானது பரிந்தென்றும் பொருட்கோளுண்டு. (அக)

[நளனப் பொற்பறவையைத் தன்னுடையால் வளைத்தா னெனல்.]

எற்றித் திரைபொரநொந் தேறி யிளமணலிற்
பற்றிப் பவளம் படர்நிழற்கீழ் — முத்தீன்று
வெள்வளைத்தா யோடுநீர் வேலைத் திருநாடன்
புள்வளைத்தா னுடையாற் போந்து.

(ப - ரை) திரை எற்றி பொர நொந்து இளமை மணலில் எறி பற்றி - அலைகள் வீசிக் கரையை மோத (அதனால்) வருந்திச் சிறு மணலில் நகர்ந்து சென்று (அதைப்) பிடித்துக்கொண்டு, பவ

ளம் படர் நிழல் கீழ் - பவளக்கொடிகள் படர்வதாலுண்டாகிய நிழலின் கீழே, வெண்மை வளை தாய் முத்து ஈன்று ஓடும் நீர் வேலை திரு நாடன் - வெள்ளைச் சங்காகிய தாய் முத்துக் குழந்தைகளைப் பெற்று வைத்து (த் திருமி) ஓடுகின்ற நீர்வளங் கொண்ட கடற் கரையைச்சார்ந்த சிறப்புள்ள நிடதநாட்டரசனாகிய நளன், போந்து ஆடையால் புள் வளைத்தான் - போய்த் தன் பொன்னாடையால் பறவையை வளைத்துக்கொண்டான்.

(க - ரை) கடலைச் சார்ந்த நிடதநாட்டரசனாகிய நளன் தன் பொன்னாடையை வீசி யந்தப் பொற்புள்ளை வளைத்தான்.

(வி - ரை) பற்றி யென்பது செயப்படுபொருள் பெற்று வரும் வினையாகையால் தாழையைப் பற்றி யென்று பொருத்த மில்லாத செயப்படுபொருளைப் பெய்து உரை விரிப்பாரு முளர். அலைவீசும் அத்தனை அருகில் தாழையிருப்பது அரிது. இளமணல்-பூமணல் எனினும் பொருந்தும் - பூ நாய் யென்று சிறு நாய்க்கு வழங்குவதுங் காண்க. பவழம் என்னும் தமிழே பவளமென்றாயிற்று-பிரவாள மென்னு மாரியத்திரி யென்ப ரறியாதார். படர் நிழல் - படர்ந்த நிழலெனினுமாம். வளை - சங்குக் காகுபெயர். வேலையுங் கடலுக் கதுவேயாகும். நிடதநாடு வடக்கே நடு நாடாயினும் கடலும் அதற்கோ ரெல்லையாமாகையால் நீர் வேலைத் திருநா டென்றார்.

[அவ்வாடையை அடித்துக்கொண் டந்தரத்திற்போ யப் பறவை நளனை நோக்கி, "நான்தான் உன்னாட்டைத் தோற்பித்தவன்" என்ற தெனல்.]

கூந்த லிளங்குயிலுங் கோமானுங் கொண்டணைத்த
பூந்துகில்கொண் டந்தரத்தே போய்நின்று—வேந்தனை
நன்னாடு தோற்பித்தோ னானேகா ணென்றதே
பொன்னாடு மாநிறத்த புள்.

(ப - ரை) பொன் ஆடும் மா நிறத்த புள்-பொன்போ லொளி வீசும் சிறந்த நிறத்தையுடைய அந்தப் பறவை, கூந்தல் இளமை

குயிலும் கோமானும் கொண்டு அணைத்த - (அழகான) தலைமயிரையுடைய இளமையாகிய குயில் போன்ற தமயந்தியும் நளனுங் கொண்டுபோய் வளைத்த, பூ துகில் கொண்டு அந்தரத்தே போய் நின்று - (பூவேலைதீர்ந்த) அழகான ஆடையை அடித்துக்கொண்டு ஆகாயத்திற் போய் நின்று, வேந்தனே - ஓ, நளராசனே! நன்மை நாடு தோற்பித்தோன் நானே காண் என்றது-உன் வளமான நாட்டைச் சூதாட்டத்திற் (புட்கரனுக்குத்) தோற்கும்படி செய்தவன் நான்தானென்று தெரிந்துகொள் என்றது.

(க - ரை) நள தமயந்தியர் தன்னை வளைக்க வீசிய பூவாடையை அடித்துக்கொண்டு ஆகாயத்திற்போய் நின்றப்பறவை நளனை நோக்கி, "நான்தான் உன்னாட்டைத் தோற்பித்தவன்" என்றது.

(வி - ரை) குயிலென்றதற் கொப்பக் கூந்தலைக் கூறினார்: குயினிறங்கருமை கூந்தனிறமுங் கருமை; குயிலின் குரல் தமயந்தியின் குரலுக்குவமையானாலும் அதனிற மவள் கூந்தலுக் குவமையாதலை யறிக. கொண்டு அணைத்த என்பதற்குப் பற்றி நெருங்கியவென்று பொருந்தாப் பொருள் புகல்வாரு முண்டு. பூதுகில்-பூவேலை தீர்ந்ததனால் அழகான ஆடை. அந்தரத்தே என்பதில் ஏகாரம் அசை; பிரிநிலை யெனினுமாம். என்றதே என்பதில் ஏகாரம் அசை. தோற்பித்தேன் எனினும் பொருந்தும். காண் என்பதை அசையாகத் தள்ளினுமாம். நானே என்பதில் ஏ தேற்றம்; பிரிநிலை யெனினுமாம். பொன்னும் என்பதற்குப் பொன்னனது விரும்பும் என்றுரை கூறுநரு முளர். பொன்னுடு மானிறத்த புள்ளென்றோதி பொன்மால் நிறத்ததாய் அந்தரத்தில் ஆடும் புள்ளென்றும் புகல்வாரு முளர். (அ௩)

[புள் வேட்டை யாடியதால் நள தமயந்தியர்க்கு, உயிர் ஒன்றுயிருந்தது போல உடையு மொன்றுயிற் றெனல்.]

*காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கும்*
*ஆவிபோ லாடையுமொன் றானதே—பூவிரியக்*
*கள்வேட்டு வண்டுழலுங் கானத் திடைகனகப்*
*புள்வேட்டை யாதரித்த போது.*

(ப - ரை) பூ விரிய கள் வேட்டு வண்டு உழலும் கானத்திடை கனகம் புள் வேட்டை ஆதரித்த போது - பூ மலர (அதில்) தேனை விரும்பி வண்டுகள் திரிகின்ற காட்டில் பொற்பறவை வேட்டையை விரும்பி ஆடினபோது, காவி போல் கண்ணிக்கும் கண்ணி அம் தோள் காளைக்கும்-நீலமலர்போன்ற கண்களையுடைய தமயந்திக்கும் பூமாலையணிந்த அழகிய தோள்களையுடைய நளனுக்கும், ஆவிபோல் ஆடையும் ஒன்று ஆனது-(தமக்குள் ஒற்றுமையால்) உயிர் (ஒன்று யிருந்தது) போல உடையும் ஒன்றுயிற்று.

(க - ரை) புள் வேட்டையாடின நள தமயந்தியர்க்கு உயிர் ஒன்றுயிருந்தது போலவே உடலும் ஒன்றுயிற்று.

(வி - ரை) காவி-நீலோற்பலம் (நீல) மலர். போல் கண்ணி-வினைத்தொகை; கண்ணி - இகரவீற்றுப் பெண்பால், காளை நள னுக் காகுபெயர். வேட்டை-வினைப்பெயராயினும் தனிவினைப் பெயரின்றி வழங்குவ தறிக. போதுமான் தேன் கிடையாமை யால் பாலைவனத்தில் வண்டுகள் தேனை விரும்பியபடியே யிருக்கு மென்பதனுல் கள் வேட்டு என்றும், போதுமான மலர்கள் நெருங்கி யில்லாமையால் வண்டுகள் தேனுக்காக அலைந்து திரியுமென்பத னுல் வண்டுழலு மென்றுங் கூறினுர். ஆடையும் என்பதில் உம்மை எச்சம். வேட்டு - இறந்தகால வினையெச்சம். வேள்-தனிவினைப் பெயர். இருவர்க்கும் அன்பால உயிர் ஒன்றுனது போல உட லும் ஒன்றுய்ப் புள் வேட்டையால் உடையும் ஒன்றுயிற்றென் றெட்டுக. (அ௯)

[தமயந்தி தன் விதியை நினைந்து, "ஏ, கலீ! நீ நரகவேதனை அனுபவிப்பாய்" என்று சொல்லி மனம் வருந்தினள் எனல்.]

அறம்பிழைத்தார் பொய்த்தார் அருள்சிதைத்தார் மானத்
திறம்பிழைத்தார் தெய்வ மிகழ்ந்தார்—புறங்கடையில்
சென்றார் புகுநரகஞ் சேர்வாய்கொ லென்றழியா
நின்றாள் விதியை நினைந்து.

(ப - ரை) (தமயந்தி கலியை நோக்கி) அறம் பிழைத்தார் - அற நெறி தப்பினவரும், பொய்த்தார் — பொய் பேசினவரும், அருள் சிதைத்தார் - இரக்க மற்றவரும், மானம் திறம் பிழைத்தார் - மானத்தின் மேன்மை கெட்டவரும், தெய்வம் இகழ்ந்தார் - கடவுள் நிந்தை செய்தவர்களும் (ஆகிய இவர்களுடைய), புறங் கடையில் சென்றார் புகும் நரகம் சேர்வாய் என்று - தலைவாசலில் (அவர்களுடைய நட்பு முதலியவற்றை விரும்பி) போனவர்கள் போகும் நரகத்தில் (நீ) சேர்வாயென்று, அழியாவிதியை நினைந்து நின்றாள் - மனம் வருந்தித் தன் விதியை நினைந்து (அசைவற்று) நின்றாள்.

(க - ரை) தமயந்தி கலியை நோக்கி, "ஏ, கலியே! அற நெறி தப்பிப் பொய் பேசினவர் முதலியோரைச் சேர்ந்தவர் சேரும் பாழ் நரகம் உனக்குத் தப்பாது" என்று மனம் வருந்திக் கூறி விதியை எண்ணி அசைவற்றிருந்தாள்.

(வி - ரை) அருள் சிதைத்தார் என்பதற்குத் தயையைக் கெடுத்தா ரென்பாரு முளர். இயற்கையாய்த் தம்மனத் தகத் திருக்க வேண்டி இரக்கத்தைக் கிடந்தாமலதைக் கெடுத்தவ ரென் பதே திரண்டபொருள். திறம்-தன்மை அல்லது மேன்மை. 'கூறு போட்டவர் ,கொன்றவர் தின்றவர் கூடநின்றவர் சொன்னவர் கேட்டவர், ஆறுபேர்க்கு மெமலோகமே கதி' என்றபடி. அறம் பிழைத்தார் முதலியோர் நரகம் நண்ணுவதே யன்றி அவரைச் சேர்ந்தாரும் நரக நண்ணுவது சாதமென்று கொள்க. அவரைச்

சேர்ந்தாரே நரக நண்ணுவரென்றால் அவர்க்கு நரகவரவு சொல் லாமலே அமையுமென்க. என்று விதியை நினைந்து அழியா நின் றாள் என்பதூஉம் ஒன்று; அழியா நின்றாள்-வருந்திக் கொண்டிருந் தாள். கொல்-அசைநிலை. (அ௫)

[நளனை நோக்கித் தமயந்தி, "தெய்வமே கேடு சூழ்ந்தால் நம்மாலாவ தென்ன? போவோம் வாரும்" என்று ளேனல்.]

வையத் துயருழப்ப மாயம் பலசூழ்ந்து
தெய்வங் கெடுத்தாற் செயலுண்டோ—மெய்வகையே
சேர்ந்தருளி நின்றதனிச் செங்கோலா யிங்கொழியப்
போந்தருளு கென்றாள் புலர்ந்து.

(ப - ரை) (தமயந்தி) புலர்ந்து - வருந்தி (நளனை நோக்கி), மெய்ம்மை வகையே சேர்ந்து அருளி நின்ற தனிமை செம்மை கோலாய் - உண்மை நெறியையே சார்ந்து (உயிர்களுக்கு) இரங்கி உறுதியாய் நின்ற ஒப்பற்ற நீதியை யுடையோய்!, வையம் துயர் உழப்ப பல மாயம் சூழ்ந்து - உலகத்தார் வருந்தும்படி பல வஞ் சனைகளை எண்ணி, தெய்வம் கெடுத்தால் செயல் உண்டோ? - தெய்வமே கெடுக்கப் புகுந்தால் (அதைத்) தடுக்கத் தக்க முயற்சியு முண்டோ? (இல்லை; ஆகையால்), இங்கு ஒழியப்போந்தருளுக என் றாள்-இவ்விடத்தினின்றும் (நாம்) நீங்கும்படி வரக்கடவா யென்று வேண்டினாள்.

(க - ரை) தமயந்தி வருந்தி நளனை நோக்கி, "உண்மை நெறி தவறாமல் உயிர்களுக்கு உறுதி செய்த உத்தம அரசனே! தெய்வங் கெடுத்தால் தடுப்பாருமுண்டோ? இதை விட்டு நாம் போவோம் வருக" வென்று வேண்டினாள்.

(வி - ரை) வையம் - அதிலுள்ளார்க் காகுபெயர். ஓ - உடன் பாட்டு வினா - எதிர்மறைப் பொருட்டு. ஏ - தேற் றம், பிரிநிலை யன்று. 'கெடுப்பாரைத் தெய்வங் கெடாதா'

என்பது போய், 'தெய்வமே கெடுத்தால் அதைத் தடுப்பாரெவர்?' என்பது தோன்ற தெய்வங் கெடுத்தாற் செயலுண்டோ? என்றாள். "ஊழிற் பெருவலியாவுள மற்றொன்று, சூழினுந் தான் முந்துறும் என்பது மறை மொழி. "இவ்விடத்தினின்று நாம் நீங்கிப் போய் விடும்படி, வா போவோம்" என்று நளனை வேண்டித் தூண்டினா ளென்க. "அறவரசனாகிய வுன்னைத் தெய்வஞ் சோதித்தால் நாம் என்ன செய்யல் ஆம்? இனி இங்கிருத்தலாகா, வா, போவோம்" என்றாள் தமயந்தி யென்க. போந்தருளுக + என்றாள் என்பதில் அகரந் தொகுத்தலாய், போந்தருளுகென்றா ளென்றாயிற்று. (அகூ)

[சூரியன் பாலைவனத்தின் வெப்பத்தை ஆற்றிக்கோள்பவன் போலவும் பூமியைக் காருறையில் மூடிவைப்பவன் போலவு மேலைக்கடலின் மறைந்தா னெனல்.]

அந்த நெடுஞ்சுரத்தின் மீதேக வாங்கழலும்
வெந்தழலை யாற்றுவான் மேல்கடற்கே—எந்தை
குளிப்பான்போற் சென்றடைந்தான் கூரிருளாற் பாரை
யொளிப்பான்போற் பொற்றே ருடன்.

(ப - ரை) எந்தை அந்த நெடுமை சுரத்தின் மீது ஏக-(உயிர்களுக்குத்) தந்தைபோன்ற சூரியபகவான் அந்நெடிய பாலைவனத்திற்கு மேலே செல்லுகையில், ஆங்கு அழலும் வெம்மை தழலை ஆற்றுவான் - அவ்விடத்திற் (கொதித் தெழுந்து தன்னுடலைச் சுடும் கொடிய சூட்டை ஆற்றிக்கொள்ளும்படி, மேல் கடற்கே குளிப்பான் போல் - மேற்குக் கடலிற் குளிப்பவனைப் போலவும், கூர் இருளால் பாரை ஒளிப்பான் போல் - மிகுந்த இருளாகிய (கவசத்தால்) பூமியை மறைத்து வைப்பவன் போலவும், பொன்மை தேருடன் சென்று அடைந்தான் - (பூமியை இருள் மூடிக் கொள்ளும்படித்) தன் பொன்மயமான தேரோடு போய் (மேற்குப் பக்கத்தைச்) சேர்ந்தான்.

(க - ரை) சூரியன் அப் பாலைவனத்திற்கு மேலே செல்லுகையில் தன்மேற் படும் கொடிய வெப்பத்தைத் ஆற்றிக்கொள்பவன் போலவும் பூமியை இருளுறையில் மூடிவைப்பவன் போலவும் மேற்குக் கடலிற் குளித்து மறைந்தான்.

(வி - ரை) 'சூரியன் தேருமோடாது' என்ற கம்பருரை இங்குப் பொருந்துதலறிக. அந்த என்பது சுட்டுத்திரிபு ; இந்த எந்த என்பவைகளையு மிப்படியே கொள்க. ஏக - முக்காலப் பொருட்டு நிகழ்காலம். எந்தை அந்த நெடுஞ் சுரத்தின் மீது ஏகுவதனால் எனினுமாம். ஆங்கு தன்னை நாடோறும் அழலும் வெந்தழலை என்று கூட்டுக. சூரியனை எந்தை என்றது இந்த வூர் வழக்கு. சூரியன் சூட்டாலேயே உலகுயிரோங்கி நிற்பதால் சூரியனை எந்தை யென்றார். பூமியை யிருளுறையில் மூடிவைப்பது, தான் இல்லாமையால் அதற் கெய்தும் கெடுதியைத் தடுப்பதற்கென்க. நளனுக்குக் கேடு விளைவித்த பூமியை இருள் மயமாக்கி விட்டா னெனினுமாம். குவ்வுருபு இல்லுருபுக்கு மயங்கி வந்தது. (௮௭)

[சூரியன் மறைந்தபிறகு தமயந்தியோடு நளன் இளம் பேய்க்குங் கண் தெரியாத இருளிற் போனானெனல்.]

பானு நெடுந்தேர் படுகடலிற் பாய்ந்ததற்பின்
கான மடம்பின் கவட்டிலைகள்—மானின்
குளம்பேய்க்கு நன்னாடன் கோதையொடுஞ் சென்றான்
இளம்பேய்க்குந் தோன்றா விருள்.

(ப - ரை) கானம் அடம்பின் கவடு இலைகள் - காட்டடம்பங் கொடியின் பிளவாகிய இலைகள், மானின் குளம்பு ஏய்க்கும் நன்மை நாடன் - மான் குளம்புகளை ஒத்திருக்கும் வளமுள்ள நிடத நாட்டரசனாகிய நளன், பானு நெடுமை தேர் படுகடலில் பாய்ந்ததன் பின் - சூரியனுடைய நீண்ட தேர் ஒலிக்கின்ற மேல் கடலிற் புகுந்து ஒளித்த பிறகு, இளமை பேய்க்கும் தோன்றா இருள் கோதையொடும் சென்றான் - இள வயதுள்ள பேய்க்கும் கண் தெரியாத இரவிருளில் தமயந்தியோடு நடந்து போனான்.

(க - ரை) சூரியனுடைய தேர் மேல் கடலிற் குளித்த பிறகு, தமயந்தியோடு நளன் இளம் பேய்க்குங் கண் தெரியாத இரவிருளிற் கானடையாகக் கானகத்திற் சென்றான்.

(வி - ரை) கானலடம்பு-கான வடம்பு என்றும்பாட பேதங்களுள. அடம்பின் கவட்டிலைகளுக்கு மானின் கவட்டுக் குளம்புகள் உவமை யாயினமை காண்க. நாட்டுக்கு நன்மை, வளமை. கானலடம்பு-நெய்தனிலக் கருப்பொருள்; மான்-முல்லைநிலக் கருப்பொருள்; இரு நிலவளங்களும் பொருந்திய நாடு, நிடத நாடென்றபடி. இளம் பேய்க்கும் என்றதில் உம்மை, சிறப்பு: இளமையின் வளமையால் நன்றாய்க் கண் காணக்கூடிய பேய்க்கும் தோன்றா இருளென்றதனால் இருளின் உச்சநிலை உரைத்தபடியாம். படுகடலென்றதற்கு ஒலிபடு கடல் அல்லது ஓசைபடு கடலென்றுகொள்க. கோதை - தமயந்திக்கு ஆகுபெயர். கோதை யொடும் என்பதில் உம்மை சாரியையன்றி யசை யெனினுமாம். படுகடல் - வினைத்தொகை. பானு நெடுந்தேர் படுகடலிற் பாய்தல்-சூரியன் மறைதலென்க. (அஅ)

[தங்குமிட மெங்கென்று தவித்த நளன் கண்ணுக்குப் பாழ்மண்டப மொன்று தென்பட்ட தெனல்.]

எங்காம் புகலிடமென் றெண்ணி யிருள்வழிபோய்
வெங்கா னகந்திரியும் வேலைதனில்—அங்கேயோர்
பாழ்மண் டபங்கண்டான் பால்வெண் குடைநிழற்கீழ்
வாழ்மண் டபங்கண்டான் வந்து.

(ப - ரை) பால் வெண்மை குடை நிழல் கீழ் - (தன்னுடைய) பால்போல் வெளுத்த குடை நிழலின்கீழ், வாழ் மண் தபங் கண்டான் - வாழு மண்ணுலக மாந்தரது தவமானதோங்கக் கண்ட செங்கோலரசனாகிய நளன், புகல் இடம் எங்கு ஆம் என்று எண்ணி-தங்கு மிடம் எங்குக் கிடைக்கு மென்று நினைத்துக் கொண்டு, இருள் வழி போய் வெம்மை கானகம் திரியும் வேலைதன்

னில் இருணிறைந்த வழியாகவே போய்க் கடுங்காட்டில் அலைந்து திரிகின்ற காலத்தில், அங்கே வந்து ஓர் பாழ் மண்டபம் கண்டான்—அங்கோரிடத்தில் வந்து ஒரு பாழான மண்டபத்தைப் பார்த்தான்.

(க - ரை) தங்குமிடம் எங்குக் கிடைக்குமென்று நளன் இருள்வழியாகவே தமயந்தியோடு நடந்தலைந்து திரிகின்றகாலத்தில் அங்கோரிடத்தில் வந்தொரு பாழ் மண்டபத்தைப் பார்த்தான்.

(வி - ரை) பாழ் மண்டபம்—இடிந்து பாழான மண்டபம். மன்னர் குடைகள் வெண்பட்டாலாவது மரபாகலான் பால் வெண்குடை யென்றார்; இதனாலேயே அவர்கள் குடையை மதிக்குடையென்று சந்திரனுக் குவமையாக்குவது உலகவழக்கம்: பால் நிறத்தினால் மட்டும் அன்று, வட்ட வடிவத்தாலும், தண்மைக் குணத்தாலும் சந்திரன் குடைக் குவமையாவதாலேயே தண்ணளி வெண்மதி வட்டக் குடையுடையான் என்றார் சேக்கிழாரும். இங்குக் குடையென்றது நீதியை யாகையால் நளனீதியின் இனிமை நன்கு விளங்குகிறது. அவன் தனது நீதியாட்சியின்கீழ் வாழ்ந்த மண்ணுலக மாந்தர் தவமோங்கக் கண்டான். மண்—மாந்தர்க் கிடவாகு பெயர். தபம்-தவம், பாபம்-பாவம், கோபம்-கோவம் என்புழிப் போல. மண் + தபம் = மண்டபம் என்றாகுமன்றி, மட்டபமென்றாகாது. (அக)

["சிற்றிருள் முற்றிருளாயிற்று. இனி நாம் இம் மண்டபத்திற் படுத்துறங்குவோம் வா" என்று தமயந்தியை யழைத்தா நள னெனல்.]

மூரி யிரவும்போய் முற்றிருளாய் மூண்டதால்
சாரு மிடமற்றுத் தானில்லை—சோர்கூந்தல்
மாதராய் நாமிந்த மண்டபத்தே கண்டுயிலப்
போதரா யென்றான் புலர்ந்து.

(ப - ரை) (நளன் தமயந்தியை நோக்கி) சோர் கூந்தல் மாதராய் - அவிழ்ந்து (நீண்டு அழகாய்) விழுங் கூந்தலையுடைய பெண்ணே, மூரி இரவும் போய் முற்று இருளாய் மூண்டதால் - சிற்றிருளான இரவும் மாறி முற்றிருளான இரவாய்த் திரும்பியதால், நாம் சாரும் இடம் மற்று இல்லை - நாம் தங்கு மிடமும் வேறொன் றில்லை, (ஆகையால்) இந்த மண்டபத்தே கண் துயில போதராய்-இந்த மண்டபத்திலேயே (படுத்துக்) கண்ணுறங்க வா, என்றான் புலர்ந்து - என்று மனவருத்தத்தோடு சொன்னான்.

(கு - ரை) தமயந்தியை நோக்கி நளன், "பெண்ணே! சிற்றிருள் போய் முற்றிருளான இவ்விரவில் நாம் போகுமிடம் வேறில்லை. ஆகையால் இம்மண்டபத்திலேயே படுத்துறங்குவோம், வா" என்றான்.

(வி - ரை) போது வைகிற்றுப் போமிடம் வேறில்லை யென்றார் பிறரும் ஆகையால், 'முற்றிருளாய் மூண்டதால் சாருமிட மற்றுத்தானில்லை' என்றார். முற்றிருள் என்பதில் இருள் இரவுக்காகுபெயர் - உடைமையின் பெயர் உடையதுக்காயிற்று. மூரி-சாம்பல் - மந்தம் - சிறுமை. மூரியிருள் - சிற்றிருளென்றும் - முற்றிருளை நோக்கி யிது சிற்றிருளாயிற்று - இதையே முன்னிருள் பின்னிரு ளென்பாரு முளர் - காலிருள் அரையிருள் முற்றிருளெனினு மொன்றாய்ப் பொருந்தும். மூண்டதால் என்பதில் ஆல் மூன்றன் காரணப்பொருட்டு - அன்றி, மூண்டது என்பதை வினைப்பெயராக்காமல் முற்றாக்கி முடித்து, ஆல் என்பதை அசையாக் கழிப்பாரு முளர். போதராய் — போதா - பகுதி போ வோடு தாவுந் துணையாயிற்று. தான் - அசை. மண்டபத்தே என்பதில் ஏகாரத்தை அசையாக்குநரு முண்டு. இரவும் என்பதில் உம்மை எச்சம். சோர் கூந்தல், வார் கூந்தலாய் அதன் நீட்சியைக் குறித்தது. (௩௦)

[தமயந்தி, "ஆஹா! கேட்டேன் யாழோசை கேட்குமென் காதலர் செவியிற் கொசுவோசை கேட்கலாயிற்றே!" என்றழுதா ளெனல்.]

வையமுடையான் மகரயாழ் கேட்டருளுந்
தெய்வச் செவிகொசுகின் சில்பாடல்—இவ்விரவில்
கேட்டவா வென்றழுதாள் கெண்டையங் கணீர்சோரத்
தோட்டவார் கோதையாள் சோர்ந்து.

(ப - ரை) தோட்ட வார் கூந்தலாள் - பூ முடித்த நீண்ட கூந்தலையுடைய தமயந்தி, வையம் உடையான் மகர யாழ் கேட்டருளும் தெய்வம் செவி - பூவுலகாட்சிக் குரியானாகிய மன்னனது மகரவீணையின் (அருமையாகிய) ஓசையைக் கேட்டுக் களிக்கின்ற சிறந்த காதுகள், இ இரவில் கொசுகின் சில் பாடல் கேட்ட ஆ என்று சோர்ந்து - இவ்வரை யிரவிற் கொசுக்களின் எளிமையாகிய ஓசைப்பாட்டைக் கேட்கும்படி யிருந்தன, ஆஹா! (கொடியதி) தென்று தளர்ந்து, கெண்டை அம் கண் நீர் சோர அழுதாள் - சேல்மீன் போன்ற கண்களினின்று நீர் வடிய அழுதாள்.

(க - ரை) "ஆஹா! பூவுலக மன்னனது மகர யாழோசை மாந்தும் திருச் செவிகள் கொசுப் பாட்டைக் கேட்கின்றனவே! இது கொடுமையிற் கொடுமை!" என்று மனந்தளர்ந் தழுதாள் தமயந்தி.

(வி - ரை) வையம் - ஆட்சிக் காகுபெயர். மகர யாழ்-சுறு வடிவான வீணை. கேட்டு அருளுதல் - கேட்டுக் கிளுகிளுத்துக் களித்தல். தெய்வச் செவி - சீரிய கூரிய செவி. யாழ்-ஓசைக் காகுபெயர். சில் பாடல் - எளிமையாகிய பாடல் - பண்புத் தொகை. ஆ - இரக்கப்பொருட்டு. ஆ என்பது ஆறு என்பதன் குறையெனக் கொண்டு வகை யென்பாரு முளர். கேட்ட-கேட்டன - முற்று; கேட்டவா - கேட்டனவா! என்பாரு முளர். கெண்டை - கண்டை, ஞமலி, ஞெமலி என்புழிப்போல. தோட்ட =தோடு+அ - பூத்தோடு - பூவிதழ் - பூவுக்காகுபெயர், (கக)

[தமயந்தியை நோக்கி நளன், "விதியை வெல்வார் யாவர்? நீ அழாதே" என்று தேற்றினனெனல்.]

பண்டை வினைப்பயனைப் பாரிடத்தி லார்கடப்பார்
கொண்ட னிழலிற் குழைதட வுங்—கெண்டை
வழியனீ ரென்றான் மனநடுங்கி வெய்துற்
றழியனீ யென்றா னரசு.

(ப - ரை) (தமயந்தியை நோக்கி) அரசு - அரசனாகிய நளன், பார் இடத்தில் பண்டை வினை பயனை கடப்பார் ஆர் - இப்பூவுலகில் (நுகரவேண்டிய) பழைய தீவினையின் பலனாகிய துன்பத்தைத் தப்பவல்லவர் யார்? (ஒருவருமில்லை), கொண்டல் நிழலில் குழை தடவும் கெண்டை நீர் (நீ) வழியல என்றான்-கூந்தலாகிய மேக நிழலிலே காதைத் தடவிப் பாய்கின்ற கட்கெண்டை மீன்களின் வழியாக நீரை (நீ) பெருகவிடாதே என்று சொன்னான்; மனம் நடுங்கி வெய்து உற்று நீ அழியல் என்றான்-மனம் பதைத்து வெதும்பி நீ தளராதே என்று தேற்றினான்.

(க - ரை) "முன் வினைப்பயனைத் தப்புவார் ஒருவருமிலர் ஆகையால் ஏ, காதலீ! என்னதான் துன்பம் வந்தாலும் மனந்தளராதே, கண்களினீர்பெருக விடாதே" என்று தேற்றினானளன்.

(வி - ரை) பண்டை வினை-முன்செய்த தீவினை: 'முன்செய்த தீவினையோ இங்ஙனே வந்து மூண்டதுவே!' என்றாரொருவர்; 'செய் தீவினையிருக்கத் தெய்வத்தை நொந்தக்கால் எய்த வருமோ இருநிதியம்!' என்றார் இன்னொருவர், 'நன்றாங்கால் நல்லவாக் காண்பவர், அன்றாங்கா, லல்லற் படுவதெவன்' என்றார் மற்றொருவர். யார்-எதிர்மறைப் பொருட்டு வினா - ஆரென்று மருவிவந்தது; யானை-ஆனை என்புழிப்போல. கூந்தன் மேகநிழலிற் செவிக் குழையைத் தாவி விழிக் கெண்டை மகிழ்ந்திருப்பது போல நீயும் இருக்கக்கடவா யென்பது குறிப்பணி. குழை யென்பதற்கு காதணி யென்பாருமுளர். 'காதளவோடிய செவி' என்பதே ஆன்றோர்

ழக்காகலான் குழையைச் செவி யென்றும். கொண்டல், ;ழை, கெண்டை யென்பன முறையே கூந்தற்கும் செவிக்கும் ிழிக்கு மாகுபெயர்கள். என்றான் என்பதை என் + தான் எனப் ிரித்து எத்தனை தான் துன்பம் வரினும் என்று பொருள் கொளினு ாம். அழியல், வழியல்-எதிர்மறை யேவல்கள். (௬௨)

[தமயந்தி வருந்தி, "அரசே! பள்ளியறையுங் காணேன், பரிசனமுங் காணேன்" என்று வருந்தினு ளெனல்.]

விரைமலர்ப்பூ மெல்லணையு மெய்காவல் பூண்ட
பரிசனமும் பள்ளி யறையும்—அரசேநான்
காணேனிங் கென்னுக் கலங்கினாள் கண்பனிப்பப்
பூணேர் முலையாள் புலர்ந்து.

(ப - ரை) பூண் நேர் முலையாள் - ஆபரணம் போலும் அழகான) முலைகளை யுடைய தமயந்தி, அரசே - அரசனே! விரை மலர் பூ மென்மை அணையும் - மணமுள்ள மலர்களாலாகிய அழகும் மென்மையுமான படுக்கையையும், மெய் காவல் பூண்ட பரிசனமும் - (உன்) உடலைக் காக்கும் தொழிலை மேற்கொண்ட ஏவலாட்களையும், பள்ளி அறையும் - படுக்கை வீட்டையும், இங்கு நான் காணேன் என்னு - இங்கே நான் பார்க்கின்றே னில்லையே யென்று சொல்லி, கண் பனிப்ப புலர்ந்து கலங்கினன் - கண்ணீர் துளிக்க வாடிக் கலங்கினாள்.

(க - ரை) "அரசே! மலரமளி யெங்கே! மெய் காவல ரெங்கே! பள்ளி யறை யெங்கே! இங்கு நான் எதையுங் காண வில்லையே!" என்று தமயந்தி கண்ணீர் பொழிய மனங் கலங்கினாள்.

(வி - ரை) விரை மலர் பூ மெல்லணை யென்பதற்கு வாசனை -யாடு மலர்ந்த பூக்களா லமைத்த மென்மையாகிய படுக்கை யெனி னுமாம். இதற்கு விரை மலர் பூ மெல்லணை யென்று பகர மிகாமற் பாடங்கொள்க. மெய்காவ லென்பதிற் சுகரமி கின், உண்

மையாகிய காவலென்று பொருள்படுமே யன்றி உடலைக் காக்குங் காவலென்றாகாது, ஆகையால் மெய்காவலென்பதே சரியான பாடமாம்; சிலரிதை ஆறன்தொகையாக்கி மெய்க்காவலென்றே ககரமிகக் கொள்வர். கண்பனிப்ப என்பதற்குக் கண்ணீர் வடியவென்பாருமுளர். கண்ணுனது நீரைத் துளிக்கவென்பதே சரியாம். பூண் + ஏர் + முலையாள் எனப் பிரித்து, ஆபரணம் போல அழகையுடைய முலையாளென்பாருமுளர்; பூணை நேரு முலையாளென்பதே பொலிவுடைத்தாம். பூணுக்குப் பூண் வேண்டா வென்பது போல் பூண் போன்ற முலைக்கு வேறு பூண் அணிவதில்லை. (௯௫)

[தமயந்தியை நோக்கி நளன், “இரவு நெடுநேரமாய்க் காடும் பேயு முறங்குகின்றன; நீயு முறங்கு” என்று னள னெனல்.]

தீய வனமுந் துயின்று திசைதுயின்று
பேயுந் துயின்றதாற் பேர்யாமம் — நீயுமினிக்
கண்மேற் றுயில்கை கடனென்றான் கையொடுத்து
மண்மேற் றிருமேனி வைத்து.

(ப - ரை) (நளன்) மண் மேல் திருமேனி வைத்து - பூமியிற் றன்னுடலைக் கிடத்தி, கை ஒடுத்து - (தமயந்திக்குத் தலைக் கணையாகத் தன்) கையை மடக்கிக் கொடுத்து, தீய வனமும் துயின்று திசை துயின்று - கொடிய காடு (மனிதரும் விலங்குகளும்) தூங்கித் திக்கிலுள்ளவர்களுந் தூங்கி, பேயும் துயின்றது - பிசாசுந் தூங்கிற்று, (ஆகையால்) பெருமை யாமம் - இவ் வரையிரவில், நீயும் இனி கண்மேல் துயில்கை கடன் என்றான் - நீயும் இனிமேற் கண்களில் உறக்கங் கொள்ளுதலுன் கடமையா யிருக்கிறதென்று சொன்னான்.

(க - ரை) “இவ் வரையிரவில் வனசரரும் தூங்கினார்கள், வன விலங்குகளும் தூங்கின, பேயுமுறங்கிற்று, நீயுமுறங்குவதுன் கடமையா யிருக்கிறது” என்றானளன்.

(வி - ரை) துயின்று என்பதைச் செயவெனச்சத் திரிபெனினுமாம். துயில - துயின்றதனால் என்பது பொருள். வண மூந்திசையும் - ஆகுபெயர்கள். ஆல் - அசை நிலை. துயின்றதால் - துயின்றதனால் (நடுச்சாமமாயிற்று) எனினுமாம். நீயு மினிமேல் கண்டுயில்கை கடனென்று மொழி மாற்றுவாரு முளர். உம்மைகள் மூன்றின் முன்னைய விரண்டும் சிறப்பு, பின்னைய தெச்சம். பேர் யாமம் என்றது நடுநிசி அல்லது அரையிரவை; பேரிருள் செறிந்த இரவெனினுமாம். பெருமை + யாமம் - பேர் யாமம் - பண்பு விதி பெற்றது. எனனைச் சொல்லெச்சமாக்கிக் கொள்க. துயில்-கைவினைப்பெயர். (௬௪)

[தரையி லுறங்குந் தமயந்தியை நோக்கி நளன், "என் கண் சாம்பலாக வில்லையே! உயிர்போகவில்லையே!" என்று வருந்தி னனெனல்.]

புன்கண்கூர் யாமத்துப் பூமிமேற் றான்படுத்துத்
தன்கண் டுயில்வாளைத் தான்கண்டு—மென்கண்
பொடியாதா லுள்ளாவி போகாதா னெஞ்சம்
வெடியாதா லென்றான் விழுந்து.

(ப - ரை) (நளன் எழுந்து) விழுந்து - (மறுபடியும் கீழே) விழுந்து, புன்மை கண் கூர் யாமத்து-துன்பமிகு மிவ்விரவில், தான் பூமிமேல் படுத்து - தான் தரையின்மேல் படுத்துக்கொண்டு, தன் கண் துயில்வாளை - தன் கண்களுறங்குகின்ற (என் மனைவியாகிய) இவளை, என் கண் பார்த்தும் தான் பொடியாது - என் கண்ணானது (நேரிற்) கண்டும் தான் வெந்து சம்பலாகாதிருக்கின்றதே, (என்) உள் ஆவி போகாது-என் உடலுக்குள்ள உயிரானது போகாதிருக்கின்றதே, (என்) நெஞ்சம் வெடியாது - என் மனம் பிளவாதிருக்கின்றதே, என்றான் - என்று சொல்லி வருந்தினான்.

(க - ரை) தமயந்தியை நோக்கி நளன், "ஆஹா! இதோ புழுதியிற் படுத்துறங்குமென் மனைவியாகிய இவளைக் கண்டும் என் கண்கள் வெந்து சாம்பராகவில்லையே, உயிர் இறக்கவில்லையே, மனம் வெடிக்கவில்லையே!" என்று வருந்தினான்.

(வி - ரை) ஆல்கள் மூன்றும் அசைகள். முதற்றானையு மசை யென வொதுக்குவாரு முளர். துயில்வானை யென்பதில் வகர விடைநிலை நிகழ்காலப் பொருட்டு. என் கண் தான் கண்டும் பொடி யாது எனினுமாம் - என் கண் (நேரிற்) கண்டும் தான் பொடியா தென்பதே சரியான மொழி மாற்று. விழுந்து என்று னென்பதை என்று விழுந்தானென்று மாற்றுவாரு முளர். என் என்பதைக் கண்ணே டியற்கைப் பொருட் பொருத்தமாக்காது, இவறு பிரித்து (இது) என்னென்று அதிசய வினவாக்கி மயங்குவாரு முளர். ()

[தரையி லுறங்கு நளனை நோக்கித் தமயந்தி, "ஆஹ! இம் முன்றிலி லுறங்க முன்றானையு மின்றி யிறையவனுக் கென் கையுங் காலும் படுக்கை யாயினவே!" என்று வருந்தின ளெனல்.]

முன்றிறனின் மேற்படுக்க முன்றானையு மின்றி
இன்று துயில விறைவனுக்கே—என்றனது
கைபுகுந்த தென்னுடைய கால்புகுந்த தென்றழுதாள்
மைபுகுந்த கண்ணீர் வர.

(ப - ரை) (தமயந்தி விழித்தெழுந்து) இறைவனுக்கு - அர சனுக்கு, இன்று துயில - இன்றைக் குறங்குவதற்கு, முன்றில் தன்னில் மேல் படுக்க - இம் மண்டபத்தின் முன்னிடத்தின் மேலே பரப்புதற்கு, முன் தானையும் இன்றி - ஆடையின் முன் புறமு மில்லாமல், என்தனது கை புகுந்தது - என்னுடையகைகள் (படுக்கையாய்) உதவின, கால் புகுந்தது - கால்கள் படுக்கையாய் உதவின, என்று மை புகுந்த கண் நீர் வர அழுதாள் - என்று மை தீட்டிய கண்களினீர் சோர அழுதாள்.

(க - ரை) நளனை நோக்கித் தமயந்தி, "ஆஹ! இதோ புழுதி யிற் றுயிலு மென் னிறைவனுக்குப் படுத் துறங்க முன்றானையு மின்றி யென் கைகளுங் கால்களும் படுக்கை யாயினவே!" என்று புலம்பினன்.

(வி - ரை) மூன்றில், மூன்றுனே - இரண்டும் இலக்கணப் போலிகள். நளன் தன் கைம்மேற் றலைவைத்துத் தமயந்தியைப் படுக்கச் சொன்னபடி, தானும் அவள் கைம்மேலுங் கான்மேலும் படுத்துறங்கினு னென்பதனுல் கைபுகுந்த தென்னுடைய கால் புகுந்ததென்றூர். இப்போது நளனுக்கு ஆடையின்றித் தமயந்தி யின் ஓராடையே இருவர்க்கும் பொதுவாயிருந்தது. இதற்கு முன் செய்யுளில் நளன் வருந்தினன், தமயந்தி யுறங்கினு ளென்றபடி, இச்செய்யுளில் தமயந்தி வருந்தினள் நள னுறங்கினு னென்றூர்; அடுத்த செய்யுளில் தமயந்தி யுறங்கினுள் நளன் வருந்தினு னென்கி றூர். ஆகையால் இருவரும் கவலை மிகுதியால் தூங்கித் தூங்கி விழித்தேங்கியபடியே யிருந்தனரென்று கொள்க. படுத்தல் - பரப்பல். (௬௯)

[தமயந்தியை நோக்கி நளன், "ஆஹா! வீமராச குமாரி புழுதிப் படுக்கையி லுறங்குகின்றுளே!" என் றேங்கினு னெனல்.]

*வீமன் றிருமடந்தை விண்ணவரும் பெற்றிலாத்*
*தாம மெனக்களித்த தையலாள்—யாமத்துப்*
*பாரே யணையாப் படைக்கண் டுயின்றுண்மற்*
*றூரே துயரடையா ராங்கு.*

(ப - ரை) (நளன்) வீமன் திரு மடந்தை - வீமராசனுடைய செல்வ மகள், விண்ணவரும் பெற்றிலா தாமம் எனக்கு அளித்த தையலாள் - தேவரும் (எளிதிற்) பெருத திருமண மாலையை எனக்கே சூட்டிய காதற் சிறப்புடையாள், யாமத்து - இந்த அரையிரவில் (தன் காதலனுகிய என் கண்ணெதிரிலேயே), பாரே அணை ஆக படை கண் துயின்றுள் - தரையே படுக்கையாக வேற் கண் ணுறங்குகின்றுள், (ஆகையால்) ஆங்கு மற்று ஆர் துயர் அடை யார் - (இதுபோலு) முன் வினைப்பயன் விளைவினுல் வேறு யார் (இவ்வுலகில்) துன்புறவடையாதவர்கள் (இருக்கிறூர்கள்).

(க - ரை) உறங்கும் தமயந்தியை நோக்கி நளன், "ஆஹா! இப்பேர்ப்பட்ட வீமராசன் மகள்! நானே வல்லவனென்று எனக்கே மாலை சூட்டினவள்! என்னெதிரிலேயே தரைமே லுறங்குகின்றாளே! வினைப்பயனை வெல்வார் யார்?'' என்று வருந்தினான்.

(வி - ரை) உம்மை - உயர்வு சிறப்பு. எனக்கே என்பதில் பிரிநிலை ஏகாரந் தொக்கது. தையலாள் என்பதற்கு அழகுடையாளென்பதும் பொருளெனினும் இங்கு அதன் பயனாகிய காதலென்றே பொருளுரைத்தாம். முன்னுள்ள ஏ-தேற்றம்-பிரிநிலையெனினுமாம்; பின்னுள்ள ஏ - அசை; அன்றி, வினாவெனினுமாம். மற்று - பிறிது - அசையாக்குவாரு முளர். அங்குவி னீட்சி ஆங்கு - வினைப்பயன் விளையுமிடத்தில், அல்லது வினைப் பயன் விளையும் போதில் என்று கொள்க. 'அடையார் ஆர்?' என்னும் வினா ஒருவரு மில ரென்னும் விடை தருவது காண்க. 'வீமராசன் மகள் நளராசன் மனைவியாகிய தமயந்தியே தரையிற் படுத் துறங்கினால் வினைப் பயன் யாரை விட்டது? என்று பொருள் கொள்க. (௬௭)

[தமயந்தியைப் பிரிக்க, நளன் மனதை வேருக்கிக் கலக்கினான் கலி யெனல்.]

பெய்ம்மலர்ப்பூங் கோதை பிரியப் பிரியாத
செம்மை யுடைமனத்தான் செங்கோலான்—பொய்ம்மை
விலக்கினா னெஞ்சத்தை வேறாக்கி நின்று
கலக்கினான் வஞ்சக் கலி.

(ப ரை) வஞ்சம் கலி - வஞ்சனை செய்வதில் வல்லவனாகிய கலிபுருடன், பிரியாத செம்மை உடைய மனத்தான்-மாறாத உறுதியுள்ள மனமுடையவனும்; செம்மை கோலான் - நீதி நெறியாட்சி யுடையவனும், பொய்ம்மை விலக்கினான்-நெஞ்சத்தை பொய்யைத் தள்ளி மெய்யைத் தழுவினவனுமாகிய நளனுடைய மனதை, மலர்

பெய்பூ கோதை பிரிய - பூ முடித்த அழகான கூந்தலையுடைய தமயந்தியை (அவன்) பிரியும்படி, வேறு ஆகி நின்று கலக்கினான் - வேறுபடுத்தி (ஒரே உறுதியாய்) நின்று கலங்கச் செய்தான்.

(கு - ரை) நிலை யுறுதி யாசார மென்னும் நற்குணவானாகிய நளன் மனதைத் தமயந்தியைப் பிரிந்து போம்படி ஒரே உறுதியாய் நின்று கலிபுருடன் கலக்கினான்.

(வி-ரை) தமயந்தியைப் பிரிந்துபோம்படி, நற்குணவானாகிய நளன் மனதைக் கலிபுருடன் கலக்கினா னெனினுமாம். பெய்மலர்-வினைத்தொகை. கோதை பிரிய எனபதற்குக் கோதையானவள் பிரிய வென்று பொருள் கொள்வாரு முளர்; அப்போது பிரிய வென்பதற்கு வேறாக என்று பொருள் கொள்க. செம்மை யென்பதற்கு நற்குணமென்று பொருள் கொள்வாரு முளர். இதுவே இந்நூலில் 40-ஆம் செய்யுளிலும் வந்திருக்கிறது; ஆங்கு அதற்கு நடுநிலைமை உண்மை யுறுதி யென்றே பொருளுரைத்தார். வஞ்சக் கலி, நளன் தன் கோதையைப் பிரிய, அவன் நெஞ்சத்தை வேறாக்கிக் கலக்கினான் என்று கூட்டுக (௧௮)

[இராகுவால் செஞ்சூரியன் கருஞ்சூரியனாவது போல, கலியால் நளன் மனமாறி, அதில் ஓர் எண்ணம் உதித்த தெனல்.]

வஞ்சக் கலிவலியான் மாகத் தரவனைக்குஞ்
செஞ்சுடரின் வந்த கருஞ்சுடர்போல்—விஞ்ச
மதிக்குமேதேர்த் தானை வயவேந்த னெஞ்சத்
துதித்ததே வேறோ ருணர்வு.

(ப - ரை) மாகத்து அரா வளைக்கும் செம்மை சுடரின் வந்த கருமை சுடர் போல் - ஆகாயத்தில் இராகு வென்னும் பாம்பு சூழ்ந்து பற்றுகின்ற செஞ் சூரியனிற் றோன்றிய காரொளி போல, விஞ்ச மதித்த தேர் தானை வயம் வேந்தன் நெஞ்சத்து

(பிற வீரர்) மேன்மையாக எண்ணின தேர்ப்படையின் வெற்றியை யுடைய நளராசன் மனதில், வஞ்சம் கலி வலியால் ஓர் உணர்வு உதித்தது - வஞ்சகத்தில் வல்லவனாகிய கலிபுருடன் வல்லமையால் ஒரு (வேறுமாறான) எண்ணம் தோன்றிற்று.

(க - ரை) கலியின் வலியால் நளன் மனதில், இராகுப் பாம்பின் வல்லமையால் செஞ்சூரியன் கருஞ்சூரியனாவது போல, ஓர் வேறுமாறான எண்ணம் தோன்றிற்று.

(வி - ரை) செஞ்சூரியன் கருஞ்சூரியனாவது போல நளனுடைய நல்ல மனம் கெட்ட மனமாய் அதில் ஓர் வேறுமாறான எண்ணம் பிறந்ததென்க. அராவளைக்கும் - எழுவாய்த் தொடர்- இதை மூன்றன்தொகையாக்கி அராவால் வளைக்கப்படு மென்று பொருள் கொண்டு செய்வினையைச் செயப்பாட்டு வினையாக்கிப் பொருட் சுவையைக் கெடுப்பாரு முளர். செஞ்சுடரின் வந்த- ஐந்தன் விரி - நீங்கற்பொருட்டு. முதற் சுடர், சூரியற் காகு பெயர்; கிரகண காலத்திற் சூரியனைப் பற்றுகிறதென் றெண்ணும் இராகுவே இங்குக் கலி புருடனுக் குவமையாயிற்று; நளன் சூரியனானான்; சூரியனைச் சின்னாழிகை பற்றி விட்டு விடும் இராகுவைப் போலவே, கலியும் நளனைச் சில்லாண்டு பற்றி விட்டு விடுவா னென்பதும், சூரியனையும் விதி விடாமல் வருத்து மாறு நளனையும் விதி விடாமல் வருத்திற் றென்பதும் விளக்கிய வாறு காண்க.

(கூக)

[நளன் தமயந்தியைப் பிரிந்து போவதற்காக அவள் ஆடையை அரிந்துகொள்ள எண்ணினு னெனல்.]

காரிகைதன் வெந்துயரங் காணாம னீத்தந்தக்
கூரிருளிற் போவான் குறித்தெழுந்து—நேரே
இருவர்க்கு மோருயிர்போ லெய்தியதோ ராடை
அரிதற் கவனினைந்தா னங்கு.

(ப - ரை) அவன்—அந்த நளன், காரிகைதன் வெம்மை துயரம் காணாமல் - தமயந்தியின் கொடுந் துன்பத்தைப் பார்க்கப் பொறு

மல், அந்த கூர் இருளில் நீத்து போவான் குறித்து எழுந்து - அந் தப் பேரிருட்டில் (அவளை) விட்டுப் போக எண்ணி எழுந்து, இரு வர்க்கும் ஓர் உயிர்போல் எய்தியது ஓர் ஆடை - தங்களிருவர்க்கும் ஒன்றாயிருக்கும் உயிரைப்போலவே பொருந்தியதாகிய ஓரே புடை வையை, ஆங்கு அவன் நேரே அரிதற்கு நினைந்தான்-அங்கே அவன் சரிபாதியாக அரிந்துகொள்ள எண்ணினான்.

(க - ரை) நளன் தமயந்தியின் கொடுந்துன்பத்தைக் காணப் பொறாமல், அந்தக் காரிருளில் அவளை விட்டுப் போக எண்ணி இரு வர்க்கும் உயிர்போல ஒன்றாயிருந்த ஆடையை அரிந்துகொள்ள எண்ணினான்.

(வி - ரை) காரிகை—தமயந்திக்கு ஆகுபெயர். காணாமல் காணமாட்டாம லெனினுமாம். போவான் என்பதில் வான் எதிர் கால வினையெச்ச விகுதி. உம்மை-முற்று. எய்தியது-வினையாலணை யும் பெயர். எய்தியதோராடை-இருபெயரொட்டு. கலியின் வஞ் சனைச் சிறப்பைச் சென்ற செய்யுளிற் கூறியபடி, அன்னான் வயப் பட்ட நளன் இப்படித் தகாக் காரியங்களாகிய ஆடை அரிதலையும் ஆருமற்ற அடவியில் ஒன்றியாக ஓர் அரிவையை விட்டுப் பிரிதலை யும் உகந்தன வென்று உருற்ற உன்னினா னென்க. இருவர்க்கும் உயிர் ஒன்றா யிருந்தது போலவே ஆடையும் ஒன்றா யிருந்ததென்க. ஆங்கு என்பதை அசையென் றகற்றுவாரு முளர். வெந்துயரமென் பதில் வெம்மை கொடுமையின் உச்சநிலையைக் குறித்தது. தண்டுய ரம் என்ப தொன்றில்லாமையால் வெந்துயர மென்பதற்கு மிக்க துயர மென்றும் பொருள்கொள்ளலாம். (௬௦௦)

[நளன் எண்ணத்துக் குதவியாகக் கலி ஒரு கத்தியா யவனன்டையிற் கிடந்தா னெனல்.]

எண்ணிய வெண்ண முடிப்ப விகல்வேந்தன்
கண்ணி யதையறிந்து காய்கலியும்—பண்ணினுக்குக்
கேளான மென்மொழியை நீக்கக் கிளரொளிசேர்
வாளாய் மருங்கிருந்தான் வந்து.

(ப - ரை) இகல் வேந்தன் எண்ணியத்தை அறிந்து - வல்லரசனாகிய நளன் எண்ணியதைத் தெரிந்துகொண்டு, காய் கலியும் - நள தமயந்தியரை வெறுக்குங் கலிபுருடனும், பண்ணினுக்கு கேள் ஆன தேன் மொழியை நீக்க - இசைக் குறவான இன்மொழியைப் பேசுந் தமயந்தியை வேறு பிரிக்கும்படி, எண்ணிய எண்ணம் முடிப்ப - தான் (ஆதியிலிருந்து) எண்ணியுள்ள எண்ணத்தை நிறைவேற்றுவதற்கு, கிளர் ஒளி சேர் வாளாய் வந்து மருங்கு இருந்தான் - விளங்கும் ஒளியை உடைய ஒரு கத்தி யுருவாய் வந்து (அவன்) பக்கத்திலிருந்தான்.

(க - ரை) நளனெண்ணத்தை யறிந்த கலி புருடன், தன் எண்ணத்தை முடிக்க அதுதான் சமயமென்றவனைத் தமயந்தியினின்றும் வேறு பிரிக்க, அவன் பக்கத்தி லொரு வாளாய் வந்திருந்தான்.

(வி - ரை) நளனெண்ண முணர்ந்த கலி, அவ்விருவரையும் பிரிக்கவேண்டு மென்று நெடுநாளாய் தான் எண்ணி யிருந்த எண்ணத்தை முடிப்பதற்கு அதுதான் சமயமென்று, அவன் பக்கத்தி லொரு வாளாய் வடிவெடுத்து வந்திருந்தா னென்று கூட்டுக. இகல் - வலி. காய்கலி - வினைத்தொகை. பண்ணினுக்குக் கேளாதல் - பண்ணோடு இசைவாய்ப் பொருந்துதல். கிளரொளி - வினைத்தொகை; கிளர் - ஒளியின் மிகுதியைக் காட்டுகிறது. வாளாய் மருங்கு வந்திருந்தா னெனினுமாம். 'செருக்கதிர் வேற் கண்ணியுடன் தேர்வேந்தன் கூடி இருக்கத் தரியே னிவரைப்— பிரிக்க,உடனாக...என்னும் 162-ம் செய்யுளிற் கண்டதே கலிபுருடன் எண்ணிய எண்ண மென்றறிக. (௩௦௧)

[நளன் ஆடையை யரிந்து, மனந் திகைத்திருந்தா னெனல்.]

ஒற்றைத் துகிலு முயிரு மிரண்டாக
முற்றுந்தன் வெவ்வினையை முன்னிட்டும்—பற்றி
அரிந்தா னரிந்திட் டவனிலைமை நெஞ்சில்
தெரிந்தா னிருந்தான் றிகைத்து.

(ப - ரை) (நளன்) ஒற்றை துகிலும் (ஒற்றை) உயிரும் இரண்டு ஆக - ஓராடையும் ஒருயிரும ஈராடையும் ஈருயிருமாகும்படி, முற்றும் தன் அன்பை முதலோடும் பற்றி அரிந்தான் - முதிர்கின்ற தன் அன்பை அடியோடு பிடித்தறுத்தான், அரிந்திட்டு அவள் நிலைமை நெஞ்சில் தெரிந்தான் - அறுவிட்டு (ப்பிறகு) அந்தத் தமயந்தியின் (தனித்திருக்கும்) நிலைமையைத் (தன்)மனதில் எண்ணி, திகைத்து இருந்தான் - (ஒன்றுந் தோன்றாமல்) மயங்கி யிருந்தான்.

(க - ரை) நளன், தமயந்திக்கும் தனக்குமுள்ள ஒற்றுமையாலிருந்த ஓராடையையும் ஒருயிரையும், அன்பை அடியோடறுக்கிறபடி அறுத்துவிட்டுப் பிறகு தமயந்தியின் தனி நிலைக்கு வருந்தினான்.

(வி - ரை) 84-ம் செய்யுளிற் "காவிபோற் கண்ணிக்குங் கண்ணியந்தோட் காளைக்கும், ஆவிபோலாடையு மொன்றானதே" என்றபடி ஒற்றைத்துகிலு முயிரு மென்றார்; ஒற்றை யென்பதை உயிரோடுங் கூட்டுக. முற்று மென்பதற்கு முழுவது மென்பாருமுளர். முதலோடும் என்பதற்கு வேரோடு மெனினுமாம். துகிலும் உயிரும் ஒன்றியிருப்பது அன்புக்கயிற்றாலாகையால், 'அன்பை முதலோடும் பற்றி அரிந்தான், என்றார்.' அவள் நிலைமை யென்பதற்கு மக்களையு மறந்து வாழ்விலுந் தாழ்விலும் கணவனே கதி யென்று தன்னை நம்பி வந்திருக்கும் ஒப்பற்ற கற்பினிலைமை யெனினுமாம். 'கொண்டானிற்றுன்னிய கேளிர் பிறரில்லை' என்பது சங்கவாக்கு. தெரிந்தான்-முற்றெச்சம். (க0உ)

[தயிர் கடைவார் கைபோல, நளன் மனம் தமயந்தியிடத்தில் மாறி மாறிப் போவதும் வருவதுமாயிற் றெனல்.]

போயொருகாற் மீளும் புகுந்தொருகால் மீண்டேகும்
ஆயர் கொணர்ந்த வபோலின்—தோயல்
கடைவார்தங் கைபோலு மாயிற்றே காலன்
வடிவாய வேலான் மனம்.

(ப - ரை) காலன் வடிவு ஆய வேலான் மனம்-எமனுருவமே தன்னுருவமாகிய வேலை யேந்தின நளனது மனம், ஒரு கால் போய் மீளும் - ஒரு முறை (தமயந்தியினிடத்திற்) போய்த் திரும்பி வரும், ஒரு கால் புகுந்து மீண்டு எகும் - ஒரு முறை (நளனிடத்திற்) றிரும்பி வந்து மறுபடியும் தமயந்தியினிடத்திற் செல்லும், (இப்படி யது) ஆயர் கொணர்ந்த அடு பாலின் - இடையர் கொண்டுவந்த காய்ச்சிய பாலினது, தோயல் கடைவார் தம்கை போல் ஆயிற்று - தயிர் கடையும் ஆய்ச்சிமார் கையைப்போலாயிற்று

(க - ரை) வேலாயுதனுகிய நளன் மனம் தமயந்தி யிடத்திற் போவதும் வருவதுமாய்த் தயிர் கடைவார் கை போலாயிற்று.

(வி - ரை) தோயல் - தொழி லாகுபெயர். மந்தையிற் கறந்து இடையர் கொண்டுவரும் பாலை, 'ஆயர் கொணர்ந்த பாலை' யென்றார். அடுபால்-வினைத்தொகை. நளன் வேல் எமன் போல் பகைவரைத் தப்பாமற் கொல்லவல்ல தென்பார், காலன் வடிவான வேலென்றார். ஒரு கால் போய்த் திரும்பும், அப்படி ஒரு கால் திரும்பிவந்து மறு காற் போகும் என்று கூட்டிக் கொள்க. கொணர்ந்த என்பதிற் கொணு பகுதி. உம் சாரியை. ஏகாரம் அசை. திருமணமாய் இத்தனைநாள் இருவரும் ஒரு மனதாய் ஒருவரை விட்டொருவர் பிரிந்தறியார் ஆகலான் நளன் மனம் அலைபாய்ந்து கொண்டிருந்த தெனக் கொள்க, உறங்குபவளை அதிலும் உள்ளன்புடையாளை அதிலும் உத்தமியை அதிலும் தன்னையே நம்பி யிருப்பவளைப் பிரிவதெனின் நளன் மனமூசலாடிற் றென்க. (௧௦௩)

[கலியின் மயக்கத்தால் நளன் மனங் கருங்கல்போற் கடினமாயிற் றெனல்.]

சிந்துரத்தாட் டெய்வமுனி சீராய்த் தெரிந்துரைத்த
மந்திரத்தாற் றம்பித்த மாநதிபோல்—முந்த
ஒலித்ததேர்த் தானை யுயர்வேந்த னெஞ்சம்
வலித்ததே தீக்கலியால் வந்து.

(ப - ரை) சிந்தூரம் தான் தெய்வம் முனி-யானைமுகக் கடவுளுடைய திருவடிகளுக் கன்புடைய கடவுண்மாமுனிவராகிய நாரத முனிவர், சீர் ஆய் தெரிந்து உரைத்த - சிறப்பாகத் தெரிந்து உச்சரித்த மந்திரத்தால் தம்பித்த மா நதி போல் - மந்திரமகிமையால் அசைவற்று நின்ற பெரிய கங்காநதி போல, முந்த ஒலித்த தேர்தானை உயர் வேந்தன் நெஞ்சம் - முன்னணியில் முழங்குந் தேர்ப்படையிற் சிறந்த நள மகாராசனது மனமானது, தீ கலியால் வந்து வலித்தது - கொடுமைக்குணமுள்ள கலிபுருடனால் (தமயந்தியினிடத்திலிருந்து திரும்பி) வந்து கல்லைப்போற் கடினமாயிற்று.

(க - ரை) நாரத முனிவர் மந்திரத்தா லிறுகிய கங்கையாறு போல, கலிபுருடன் மகத்துவத்தால் நளன் மனம் தமயந்தியினிடத்திலிருந்து கடைசியாகத் திரும்பி வந்து கல்லைப்போன்ற கடினமாயிற்று.

(வி - ரை) சென்ற செய்யுளிற் செப்பியபடி தமயந்திபாற் போவதும் வருவதுமா யுருகியிருந்த நளன் மனம் கடைசியாக அதினிடத்தில் வந்து கருங்கல் போலிறுகி நின்றுவிட்டது. சிலர் இச்செய்யுளை, 'சிந்துரத்தாற் றெய்வ முனிவர் தெரிந்துரைத்த, மந்திரத்தாற் றம்பித்த மாநீர் போல்' என்று பாடமோதி, சிந்துரத்தா லென்பதற்கு ஐராவத மென்னும் தெய்வயானையா லென்று பொருளுரைப்பர். ஐராவதம் வந்து தும்பிக்கையால் நீர் தெளித்து நாரதரை விழிப்பித்ததாம். அதனால், அவர் விழித்து ஜலத்தம்பன மந்திரோச்சாடனத்தாற் கங்கை நீரை யிறுக்கி விட்டாராம். நாரதர்தம் விநாயக பூசைக்குக் குறுக்கிட்டுத் தடையாய் வெள்ளம் பாய்ந்திருந்த கங்கையைத் தலத்தம்பன மந்திரத்தாலிறுக்கி யநாயாசமாய் அதைக் கடந்துபோய்க் காலந்தவறாமற் கணபதி பூசையை நிறைவேற்றினரென்னுங் கதையே யிங்குக் குறித்திருப்பது. (௧௦௮)

["வன தேவதைகாள்! வீமன் மகளை ஒன்றியாய் விட்டுப் போகின்றேன், காமின்" என்று நளனெனல்.]

*தீக்கா னகத்துறையுந் தெய்வங்காள் வீமன்றன்*
*கோக்கா தலியைக் குறிக்கொண்மின் — நீக்காத*
*காதலன்பு மிக்காளைக் காரிருளிற் கைவிட்டின்*
*றேதிலன்போற் போகின்றேன் யான்.*

(ப - ரை) (நளன்) தீ கானகத்து உறையும் தெய்வங்காள் கொடுங் காட்டில் வாழும் சிறு தெய்வங்களே!, நீக்காத காதல் அன்பு மிக்காளை-யாராலும் பிரித்தற்கரிய ஆசையும் அன்பு மிகுந்த வளை, இன்று கருமை இருளில் கைவிட்டு - இப்போது இந்தக் கறுத்த இருளில் (ஒன்றியாய்த்) தூங்கவிட்டு, யான் ஏதிலன் போல் போகின்றேன் — நான் ஒரு புது மனிதன்போலப் போய்க்கொண் டிருக்கின்றேன், (ஆகையால் நீவிர்) வீமன்தன் கோ காதலியை குறிக்கொண்மின் - வீமராசனுடைய செல்வ மகளாகிய இவளை (உங்கள் காவலுக்கு) இலக்காக்கிக் கொள்ளுங்கள்.

(க - ரை) "என் ஆசை நாயகியாகிய தமயந்தியை இவ்வி விருளில் ஒன்றியாய் உறங்கவிட்டு நான் அயலான்போலப் போய்க் கொண்டிருக்கிறேன். ஏ, வனதேவதைகளே! வீமன் மகளாகிய இவ ளைக் காப்பாற்றுங்கள்" என்று நளன்.

(வி - ரை) தீக்கானகம் - நெருப்பைப்போற் சுடுங் கானகம்; புலி முதலிய வன மிருகங்களும், மூங்கில் முதலியவைகளால் உண் டாகும் நெருப்புக்களும் நிரம்பியுள்ளதாதலால் தீக்கானகம் என் றார். தெய்வங்காள்-விளி; காட்டிற் சிறு தெய்வங்களுளவென்பது நெடுநாளைய மூடக்கொள்கை. கோ - சிறப்பு - செல்வம்போ லரு மையானது. காதலி - மனைவி - மகள் - தோழியைக் குறிக்குமே னும் இங்கு மகளுக்காயிற்று. குறிக்கொள்ளல் - பார்வையிற் கொள்ளுதல். காதலன்பு - காதலாகிய அன்பெனினுமாம்; கணவ னிடத்திற் செலுத்தும் இடையறா அன்பெனக் கொள்க. காரிருள்-

கருமை இருள்-மைபோலக் கறுத்த இருள் எனினுமாம். ஏதிலன் - பகைவனென்பாருமுளர்; யான் அன்புமிக்காளைக் கைவிட்டு ஏதிலன் போற் போகின்றேனென்று கூட்டுக. நம்மவர்களுக்குள்ள எண்ணிறந்த தெய்வங்களில் காட்டுத் தெய்வங்கள் ஒரு வகுப்பு; நாட்டுத் தெய்வங்கள் வீட்டுத் தெய்வங்கள் என்னும் எட்டுத்தெய்வங்களும் எத்தனையோ உள. (௧௦௫)

[நளன் தன் தேவியை இருளில் ஒன்றியா யுறங்கவிட்டுப் போயினானெனல்.]

ஏந்து மிளமுலையா ளின்னுயிருந் தன்னருளும்
பூந்துகிலும் வேறாகப் போயினான்—தீந்தேன்
தொடைவிரவு நாண்மாலை சூட்டினா டன்னை
இடையிருளிற் கானகத்தே யிட்டு.

(ப - ரை) (நளன்) தீ தேன் தொடை விரவு நாள் மாலை சூட்டினாள் தன்னை - தித்திக்குந் தேனையுடைய மலர்களிற் பொருந்திய புதிய (சுயம்வர மண) மாலையைத் (தனக்கே) சூட்டினவளாகிய தமயந்தியை, இடை இருளில் கானகத்தே இட்டு - அரையிரவிற் காட்டில் (ஒன்றியா யுறங்க) வைத்து, ஏந்தும் இளமை முலையாள் இனிமை உயிரும் - சுமக்கின்ற இளமையாகிய முலைகளையுடையவளாகிய அவளுடைய இனிமையாகிய உயிரும், தன் அருளும் பூ துகிலும் வேறு ஆக போயினான் - தன்னுடை இரக்கமும் அழகான ஆடையும் வெவ்வேறாகும்படி போனான்.

(க - ரை) நளன் சற்றேனும் இரக்கமின்றி, தனக்கே சுயம்வர மணமாலையைச் சூட்டினவளாகிய தமயந்தியை அவ்வரையிரவில் ஒன்றியா யுறங்கவைத்து அப்பா லகன்றான்.

(வி - ரை) ஏந்தும் - தாங்கும்-பளுவான வெனினுமாம். மூத்துச் சாய்ந்த முலையாளெனினும் இருளில் ஒன்றியாய்த் தரித்திருப்பாள்; இவளங்ஙனம் இராளென்பது தோன்றவே ஏந்து மிளமுலையா

ளென்றார். ஏந்தும் என்பதை உயிரோடு கூட்டுவாருமுளர். அவளுயிரே தன்னுயிராகையால் அதையும் நோக்காமல் நளன் பிரிந்தானென்பது தோன்ற இன்னுயி ரென்றார். கொஞ்சமேனும் "இவள் இளையாளாயிற்றே! இல்லாளாயிற்றே! இன்னுயிராயிற்றே!" என்றெண்ணி யிரங்காமற் சென்றானாகையால் தன்னருளு மென்றார். இருவர்க்கிடையிலும் ஓராடையாயிருந்தது ஈராடையா யரியுண்டதாகலான் பூந்துகிலும் என்றார். (௧0௬)

[சந்திரன் சுவர்க்கியின் பகைவர்போல நளன்தன் மனைவியை ஒன்றியாய்க் காட்டில் விட்டுப் போனானெனல்.]

தாருவெனப் பார்மேல் தருசந்திரன் சுவர்க்கி
மேருவரைத் தோளான் விரவார்போல்—கூரிருளில்
செங்கா னகஞ்சிதையத் தேவியைவிட் டேகினான்
வெங்கா னகத்தனிலே வேந்து.

(ப - ரை) வேந்து - நளமகாராசன், பார் மேல் தாரு என்ன தரு சந்திரன் சுவர்க்கி - மண்ணுலகிற் கற்பக மரம்போல (வரையாது) கொடுக்கும் (வள்ளலாம்) சந்திரன் சுவர்க்கி (யென்னும் பெயரையுடைய), மேருவரை தோளான் விரவார்போல்-மேரு மலை போன்ற தோள்வலி யுள்ளவனுடைய பகையரசரைப்போல, வெம்மை கானகம்தன்னிலே - கொடிய காட்டிடத்திலே, கூர் இருளில் தேவியைவிட்டு - மிகுந்த இருளில் (தன்) மனைவியை (ஒன்றியாயுறங்க) விட்டு, செம்மை கால் நகம் சிதைய ஏகினான்-(தன்னுடைய) சிவந்த பாதங்களின் நகமானது தேயும்படி (நடந்து) போனான்.

(க - ரை) சந்திரன் சுவர்க்கி யென்பவனுடைய பகையாசர் போல, நளன் தன் மனைவியைக் காட்டிற் காரிருளில் ஒன்றியாய் விட்டுத் தன் கா னகந் தேய நடந்து போனான்.

(வி - ரை) தரு-தாருவென முதனீண்டது. விண் தரு கற்பகம், மண் தரு, சந்திரன் சுவர்க்கி யெனக் கொள்க. தரு சந்திரன் சுவர்க்கி - வினைத்தொகை. சந்திரன் சுவர்க்கி யென்பான் புகழேந்தியாரை யாதரித்த வொரு குறுநில மன்னன். அவனுடைய

பகையரசர் அவனுக்குத் தோற்றுத் தம் பெண்டுபிள்ளையாளடிமைகளை விட்டு ஓடுவதுபோலவே, நளன் தன் மனைவியை விட்டுப் போனனென்று கொள்க. கால் + நகம் = கானகம் - என்றும் நடந்தறியாதுகையால் நளன் தன் கானகந் தேயக் கானகத்தில் நடந்தானென்க. (கoஎ)

[தமயந்தி விழித்து நளனைக் காணமல், "எங்கே போனுய்?" என்று தடவிஞளெனல்.]

நீல மளவே நெகிழ நிரைமுத்தின்
கோல மலரின் கொடியிடையாள்—வேல்வேந்தே
எங்குற்று யென்னு வினவளைக்கை நீட்டினள்
அங்குத்தான் காணு தயர்ந்து.

(ப - ரை) மலரின் கொடி இடையாள் - பூங்கொடிபோன்ற இடையையுடைய தமயந்தி, (விழித்து) அங்கு தான் காணது அயர்ந்து-தன் பக்கத்தில் (நளனைக்) காணமல் வருந்தி, நிரை முத்தின் கோலம் நீலம் அளவே நெகிழ-வரிசையா(க் கோத்த) முத்துப்போன்ற (கண்ணீர்த் துளி யொழுக்கின்) அழகானது நீலமலர் போன்ற (தன் கண்களின்) அளவாய்ப் பெருக, வேல் வேந்தே எங்கு உற்ருய் என்னு - வேலேந்திய அரசனே! நீ எங்குப் போனுயென்று, இன வளை கை நீட்டினள்-ஓரினமாகிய வளைகளை யணிந்த கைகளை நீட்டித் தடவினள்.

(க - ரை) தமயந்தி விழித்து நளனைக் காணமையால் கண்ணீர் சொரிந்தபடியே, "அரசனே! எங்கு போனுய்?" என்று கைகளை நீட்டித் தடவிபார்த்தாள்.

(வி - ரை) நிரைமுத்தின் கோலம் என்பதை இடைக்கடையாக்கிவிட்டு, நீலம் அளவே நெகிழ என்பதற்குக் கண்கள் அப்போதே விழிக்க வென்று பொருள் கூறுநருமுளர்; அது பொருந்தாப் பொருள். நீலம் - கண்களுக்கும், முத்து - கண்ணீர்த் துளிக்கும்

ஆகுபெயர்கள். இருளில் இவருரு மறைந்திருக்கின்றதோ! என்று ஐயுற்றுத் தன் கைகளை நீட்டித் தடவினாளென்க. கோல மலரின் கொடியிடையாள் முத்தின் நிரை (நிறை) நீல மளவே நெகிபூ வெண்பாரு மூளர் - அழகான பூங்கொடிபோன்ற இடையுடையா ளுடைய கண்ணீர்த் துளிகள் நிறைந்த கண்கள் அப்போதே விழிக்க என்பதூஉம் ஒன்று - எப்போதும் அவள் கண்களில் நீர்த் ததும்பினபடியே யிருந்ததென்க. (௧௦௮)

[ஆடை யரியுண்டிருப்ப தறிந்த தமயந்தி, "ஆஹா! இது வென்ன?" என் றேங்கினா ளெனல்.]

உடுத்த துகிலரிந்த தொண்டொடியாள் கண்டு
மடுத்த துயிலான் மறுகி—யடுத்தடுத்து
மன்னே யெனவழைப்பாண் மற்றுமவ னைக்காணா
தென்னேயிஃ தென்னென் றெழுந்து.

(ப - ரை) மடுத்த துயில்லான் உடுத்த துகில் அரிந்தது ஒண் மை தொடியாள் கண்டு மறுகி - (தன்னைத் தனக்குள்) ஒடுக்கிய தூக்கத்தின் உதவியால் தான் கட்டியிருந்த ஆடையை (நளன்) அரிந்துகொண்டு சென்றதை அழகான வளையலணிந்த தமயந்தி பார்த்து வருந்தி, மற்றும் அவனை காணாது- அஃதன்றியும் தன்னாய கனாகிய அவனைக் காணாமல், இஃது என்னே என்னே என்று எழுந்து - இது என்ன காரணம்? இது என்ன காரணம்? என்று எழுந்து, அடுத்து அடுத்து மன்னே என அழைப்பாள் - அடிக்கடி அரசனே என்றழைப்பாளாயினாள்.

(க - ரை) ஆடை யரியுண்டிருப்பதைக் கண்டு வருந்தின தமயந்தி நளனைக் காணாமையால், "இது என்னே, இது என்னே?" என்று எழுந்து, "மன்னே, மன்னே!" என்று அழைப்பாளாயினாள்.

(வி - ரை) மடுத்த - தன்னை விழுங்கின எனினுமாம்; தூக்கத்தால் தன்னை மறந்திருந்ததனால் தமயந்தியின் ஆடையை நள

னரிதற்கு அனுகூலமாயிருந்தது. அழைப்பாள் - அழைத்தாளென்பதின் காலவழுவமைதி. ஒண்டொடியாள் மடுத்த துயிலான் உடுத்த துகில் (நளன்) அரிந்தது கண்டு மறுகி, மற்று மவனைக் காணாது, இஃது என்னே என்னே என்று எழுந்து, அடுத்தடுத்து மன்னே என அழைப்பாளென்று கூட்டிக்கொள்க. என்னே என்பதில் ஏகாரம் தொகுத்தல். உயிர்களுக்கு எய்ப்பில் வைப்பாய் நிலைத்துக் காத்து நிற்பதனால் மன்னனென்னுங் காரணப்பெயர் பெற்ற நீ இப்படியும் உன் மனைவியை நித்திரையில் விட்டு நீப்பது சரியா ? என்பது தோன்ற 'மன்னே' என்றார். இச் செய்யுள் சில பிரதிகளிலில்லை.

(௧௦௯)

[தமயந்தி தரையைத் தடவித் தேடி நளனைக் காணாமையால் ஐயகோ என்றலறி வீழ்ந்தா ளெனல்.]

வெய்ய தரையென்னு மெல்லமளி யைத்தடவிக்
கையரிக்கொண் டெவ்விடத்துங் காணாமல்—ஐயகோ!
என்னப்போய் வீழ்ந்தாள் இனமேதி மென்கரும்பைத்
தின்னப்போ நாடன் றிரு.

(ப - ரை) மேதி இனம் மென்மை கரும்பை தின்ன போம் நாடன் திரு - எருமைக் கூட்டங்கள் மெல்லிய கரும்புகளை மெல்லச்செல்லும் வயல்வளமுள்ள நிடத நாட்டரசனாகிய நளனது செல்வ மனைவியாகிய தமயந்தி, வெய்ய தரை என்னும் மென்மை அமளியை தடவி - காடுமுரடான கட்டாந்தரை யென்னும் மென்மையாகிய படுக்கையைக் கையால் தடவி, கையரிக்கொண்டு எ இடத்தும் காணாமல் - நளனைத் தேடித்தேடி யெங்கும் காணாமையால், ஐயகோ என்ன போய் வீழ்ந்தாள் - ஐயோ என்றலறி யப்பாற் போய்க் கீழே விழுந்தாள்.

(க - ரை) தரை யென்னும் படுக்கையைத் தன்கையாற் றடவித் தேடின தமயந்தி நளனைக் காணாமையால் ஐயோ வென்றலறி யப்பாற் போய் நிலமேல் விழுந்தாள்.

(வி - ரை) வெய்ய - வெப்பமாகிய என்பாருமுளர்; இங்கே வெய்ய என்பது உடற் கினிமையா யிராத என்னும் பொருட்டு. வல்லமளியை மெல்லமளி யென்றது, வனவாசத்தார்க்குக் காலத்துக் குகந்தபடி வன்மையு மென்மையா யிருந்ததனு லெனினுமாம். வெய்யதரை, மெல்லமளி-முரண்டொடை; அமளிக்கு மென்மை, வெண்ணிலா என்புழிப்போல மரபடை யென்க. நாடன் திரு என்பதை விதர்ப்ப நாடன் செல்வ மகளெனினுமாம். ஐயகோ என்பதை ஐய + கோ என் றிரு மொழியாக்கி ஐயனே அரசனே என்று புதுப்பொருள் புகல்வாருமுளர். இனமேதி - இலக்கணப் போலி. திரு - தமயந்திக் காகுபெயர். (௧௧0)

[வேடன் விட்ட அம்புக்காற்ருத மயில்போலத் தமயந்தி கண்ணீர் வழிந்தோட வோடி விழுந்தா ளெனல்.]

அழல்வெஞ் சிலைவேட னம்புருவ வாற்ரு
துழலுங் களிமயில்போ லோடிக்—குழல்வண்
டெழுந்தோட வீழ்ந்தா ளிருகுழைமேற் கண்ணீர்க்
கொழுந்தோட வீமன் கொடி.

(ப-ரை) வீமன் கொடி - வீமராசன் மகளாகிய தமயந்தி, வெம்மை சிலை வேடன் அழல் அம்பு உருவ-கொடுஞ்சிலை யேந்திய வேடனது நெருப்புக் கொப்பான அம்பு பாய்ந்ததனுல், ஆற்ருது உழலும் களி மயில்போல் ஓடி - பொருமற் பறந்தோடி அலையும் இளம்பருவ மயிலேபோல ஓரிடத்திற் றரியா தோடி, குழல் வண்டு எழுந்து ஓட - கூந்தலிலுள்ள வண்டுகள் அதை விட்டு நீங்கி ஓடவும், இரு குழைமேல் கண் நீர் கொழுந்து ஓட வீழ்ந்தாள்-இரண்டு காதுகளின் மேலும் கண்ணீர்த்தாரை பெருகி யோடவும் கீழே தொப் தொப் பென்று விழுந்தாள்.

(க - ரை) வேடன் விட்ட அம்பு பாய்ந்ததனுல் ஆற்ருதோடி விழும் மயிலே போல, வீமராச குமாரியாகிய தமயந்தி தன் இரு காதுகளிலும் கண்ணீர்த்தாரை வடிய விழுந்தாள்.

(வி - ரை) அழல் + அம்பு = அழலுமம்பெனப் பொருள் கொண்டால் வினைத்தொகையாம்-இங்கிது உவமத்தொகையாம். களிமயில்-களிச்சையிற் களித்துத் திரியும் இளம்பருவ மயில்; இங்குக் களியென்றது இளம் பருவத்தைக் குறிக்கிறது. தான் அலைந்தோடும் வேகத்தால், தமயந்தியின் தலைமயிரிலுள்ள வண்டுகள் இரிந்து பிரிந்தோடின வெனக் கொள்க. காதளவோடிய கண்களாகையால், கண்ணீர்த்தாரை காதுகளிற் பாய்ந்தோடின வென்க. பூங்கொடி வீழ்வது போல் வீழ்ந்ததனால், இங்குக் கொடி தமயந்திக்கு ஆகு பெயர். (கககக)

[மின்னலு மேகமும் போலத் தானுங் குழலுந் தனியே
தரைமேல் வீழ்ந்தாள் தமயந்தி யெனல்.]

வான்முகிலு மின்னும் வறுநிலத்து வீழ்ந்ததுபோல்
தானுங் குழலுந் தனிவீழ்ந்தாள்—ஏனம்
குளம்பான் மணிகிளைக்குங் குண்டுநீர் நாடன்
இளம்பாவை கைத்தலைமே லிட்டு.

(ப - ரை) ஏனம் குளம்பால் மணி கிளைக்கும் குண்டு நீர் நாடன் இளமை பாவை - பன்றிகள் தங் குளம்புகளான மாணிக்கங்களைக் கிண்டுகின்ற ஆழமாகிய நீர்வளமுள்ள விதர்ப்ப நாட்டு வீமராசன் இளமகளாகிய தமயந்தி, கை தலை மேல் இட்டு-தன் கைகளைத் தலைமேல் வைத்தபடியே, வான் முகிலும் மின்னும் வறுமை நிலத்து வீழ்ந்தது போல்-ஆகாயத்திலுள்ள கார்மேகமும் மின்னலும் கட்டாந்தரையில் விழுந்ததுபோல, குழலும் தானும் தனியே வீழ்ந்தாள்-விரிந்தடர்ந்து நீண்ட தலை மயிருந் தானுந் துணையொருவரு மில்லாமல் தரைமேல் விழுந்தாள்.

(கு - ரை) கார்மேகமும் மின்னலும் கட்டாந்தரையில் விழுந்ததுபோலத் தமயந்தி தன் தலைமயிருந் தானும் தரைமேல் விழுந்தாள்.

(வி - ரை) வான்முகில், வெண்முகிலுமாம் ஆனாலும் இ குக் கூந்தலுக் குவமையாதலால் கார்முகிலென்று கொள்க. வா முகிலோடு மின்னலும் வீழ்ந்தது போலத் தலைமயிரோடு தானு வீழ்ந்தா ளென்க. வறுமை நிலம் - பயிர்பச்சையற்ற பாழ்நில வெறுந்தரை - கட்டாந்தரை. தனி-ஒன்றி. ஏனம் தன் கொம்ப லுழுது குளம்பால் பணி கிளைக்கு மெனக் கொள்க. குண்டு-வட்ட ஆழம் இரண்டுங் கொள்க. கையைத் தலைமேல் வைத்தல், ஆ மற்ற அறுதைக் கடையாளம். 'தானும் குழலுந் தனி வீழ்ந்தாள் என்று ஒருமை முடிபு கொண்டது தமிழ்நடை ஒழுங்கு. இத பற்றி இருபத்தேழாம் நன்னூற் பொதுவியற் சூத்திரம் வகுத்திரு பது காணக. குழலுந் தானும் எனற்பாலது தானுங் குழலு மெ ிருப்பது எதிர்நிரனிறை. (கக உ

[தமயந்தியின் துயரத்தைச் சகியாததுபோலக் கோழிக்குல தஞ் சிறகால வயிற்றி லடித்துக்கொண்டு கூவின வெனல்.]

தையல் றுயர்க்குத் தரியாது தஞ்சிறகாங்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோற்
கூவினவே கோழிக் குலம்.

(ப - ரை) கோழி குலம் தையல் துயர்க்கு தரியாது-கோழிக் கூட்டங்கள் தமயந்தியின் துன்பத்தை ஆற்றாமல், தம் சிறகு ஆ கையால்வயிறு அலைத்து-தங்கள் இரக்கைகளாகிய கைகளால் வயி றிலடித்துக்கொண்டு, வாவு, பரிதேர் ஏறிவா என்று வெய்யோனை அழைப்பன போல்-தாவிச் செல்லும் குதிரைகள்பூட்டிய தேர்மே லேறிக்கொண்டு வாவென்று சூரியனைக் கூப்பிடுகின்றவைகளைப் போல, கருமை இருள்வாய்கூவின-கருமையாகிய இருளில்கூவின

(க - ரை) தமயந்தி படுந் துயரத்தைப் பொறாத கோழிக்கூட டங்கள் தஞ் சிறகாகிய கைகளால் வர்யிறி லடித்துக்கொண்டு சூரிய னைத் தேரேறிப் புறப்பட்டு வா வென்றழைப்பன போலக் கூவி

(வி - ரை) துக்கங் கொண்டாடு மங்கையர் தங் கரங்களான் மார்பிலடித்துக்கொண்டு புலம்புந் தொழிலுவமமே இங்குக் கோழி மேலேற்றிக் கூறியிருப்பது. கோழிகள் கூவுகையில் சிறகா லடித்துக் கொள்வது உலகறிந்தது. அவைகள் இயற்கையாய்க் கூவுவதைத் தமயந்திக்காகப்புலம்பின வென்னுங் குறிப்பணியைக் கூர்ந்து தெளிக. சூரியன் புறப்பட்டால் இருள் ஓட்டெடுக்கும். இருள் மாய்ந்தால் தமயந்தியின் மருள் சிறிது தேயும் என்பதே கோழிகளின் கொள்கை யெனக் குறித்தார். துயரைத் தரியாதென்பது துயர்க்குத் தரியாதென வந்தது தமிழ் மொழி ஒழுங்கு-வேற்றுமை மயக்கு. தையல்-தமயந்திக் காகுபெயர். தையல் + துயர் = தையருயர்-தகரம் றகரமானபோது லகரங் கெட்டது. (௧௧௩)

[நளன் போன வழியைத் தமயந்திக்குக் காட்டுவான் போலச் சூரியன் தன்கிரணங்களை நீட்டித் தோன்றினனெனல்.]

வான நெடுவீதி செல்லு மணித்தேரோன்
தான மடந்தைக்குத் தார்வேந்தன்—போனநெறி
காட்டுவான் போலிருள்போய்க் கைவாங்கக் கானூடே
நீட்டுவான் செங்கரத்தை நின்று.

(ப - ரை) வானம் நெடுமை வீதி செல்லும் மணி தேரோன் தான் நின்று-ஆகாயமாகிய நீண்ட வீதியிற் போகின்ற அழகான தேரையுடைய சூரியன் உதயகிரியில் தோன்றி நின்று, அ மடந்தைக்கு தார் வேந்தன் போன நெறி காட்டுவான் போல் - அத்தையலாகிய தமயந்திக்கு மலர்மாலை யணிந்த நளமகாராசன் போன வழியைக் காட்டுகிறவன்போல, இருள் போய் கைவாங்க—இருளானது நீங்கி ஒதுங்கும்படி, கானூடு (ஏ) செம்மை கரத்தை நீட்டுவான் - அந்தக் காட்டினிடத்திலே தன் சிவந்த கிரணங்களாகிய கைகளை நீட்டுவானாயினன்.

(க - ரை) ஆகாய வழியே செல்லும் சூரியன், தமயந்திக்கு நளன் போன வழியைக் காட்டுகிறவன் போல, காட்டிருள் பின் வாங்கி யோடும்படித் தன் கரங்களை நீட்டுவானாயினான்.

(வி - ரை) சூரியன் இயற்கையாகக் கரங்களை நீட்டி யுதிப்பதைத் தமயந்திக்கு வழிகாட்டுவதாகக் கூறுங் குறிப்பணியைக் குறித்துக் கொள்க. கரம்-கை; கரம்-கிரணம் - வடசொல் - இது இருபொருளணி நீட்டுவான்-நீட்டத் தொடங்கினான்: இயல்பினுணிறந்தகால மெதிர்கால மாயிற்று. அம்மடந்தை, மகரந்தொக்கு அமடந்தை யென்றாயிற்று. காட்டுவான்-காட்டுகிறவன் - இங்கு வகரம் நிகழ்காலங் காட்டிற் றெனலாம். இருள் கைவாங்கிப் போய் என்று பொருள் கொளினுமாம். ஏகாரம் அசைநிலை. (௧௧௯)

[தமயந்தி துயர மிகுதியால், "அரசே! அடியேன் செய்த பிழை யென்ன?" என்று ஏங்கின ளெனல்.]

செய்தபிழை யேதென்னுந் தேர்வேந்தே யென்றழைக்கும்
எய்துதுய ரக்கரைகா ணேனென்னும்—பையவே
என்னென்ன தென்னென்னு மிக்கானின் விட்டேகு
மன்னென்னு வாடு மயர்ந்து.

(ப - ரை) (தமயந்தி துயர மிகுதியால் நளனை நேரிற் கேட்பவள் போல) செய்த பிழை ஏது என்னும் - நான் செய்த குற்றமென்னவென்று கேட்பாள், தேர் வேந்தே என்று அழைக்கும் - மாரதத் தேரூரும் மாராசனே என்று கூப்பிடுவாள், எய்து துயரம் கரை காணேன் என்னும்-நான் அடைந்திருக்கின்ற துன்பக்கடலின் முடிவைக் கண்டிலேன் என்பாள், பையவே என் என்னது என் என்னும்-(அன்பால்) மெள்ள (வாய்திறந்து என்னை) ஏன் என்று கேளாமை என்ன காரணம் என்று கேட்பாள், இ கானில் விட்டு ஏகும் மன் என்னு அயர்ந்து வாடும் இந்தக் கொடுங்காட்டில் என்னை ஒன்றியாய்த் தவிக்கவிட்டுச் செல்லுகின்ற அரசனே என்று சோகமுற்று வாடுவாள்.

(க - ரை) தமயந்தி துயர மிகுதியால் நளனை நோக்கிப் பற்பல கேள்விகள் நேரிற் கேள்பவள்போலக் கேட்டுச் சோகமுற்று வாடினாள்.

(வி - ரை) தேர்-இங்கு மாரதத்தைக் குறிக்கும். துயரம்+கரை என்றாவது, துயர்+அக்கரை என்றாவது பிரிக்கலாம்; பின்னையதற்கு துயரத்தின் அந்தக் கரை யென்று பொருள் கொள்க. இ+கானில்-இங்கே இகரச் சுட்டு கானகத்தின் கடுமையைக் குறிக்கிறது. என்னும்-இடையடி முற்று; இது இருதிணை ஒருமைப்பாற் பொது. எகு+மன் என்று வினைத்தொகை யாக்குநரு முளர். ()

[நளன் காலடிச் சுவடு கண்ட தமயந்தி ''வேந்தே'' என்றரற்றி விழுந்தா ளெனல்.]

அல்லியந்தார் மார்ப னடித்தா மரையவடன்
நல்லுயிரு மாசையும்போ னாறுதலும்—மல்லுறுதோள்
வேந்தனே என்று விழுந்தாள் விழிவேலை
சாய்ந்தநீர் வெள்ளத்தே தான்.

(ப - ரை) அல்லி அம் தார் மார்பன் அடி தாமரை - அல்லி மலராகிய அழகிய மாலை யணிந்த மார்பையுடைய நளனுடைய பாதங்களாகிய தாமரை மலர்கள், அவள் தன் நன்மை உயிரும் ஆசையும் போல் நாறுதலும் - அந்தத் தமயந்தியினுடைய இன்னுயிரும் காதலும் போலத் தோன்றினவுடனே (மணம் வீசினவுடனே), மல் உறு தோள் வேந்தனே என்று - மல்லுப்போரிற் சிறந்த தோள்களையுடைய அரசனே என்று சொல்லி, விழி வேலை சாய்ந்த நீர் வெள்ளத்து (ஏ) விழுந்தாள் - கட்கடலி னின்றும் பெருகிய நீர்ப் பெருக்கில் விழுந்தாள்.

(க - ரை) நளனுடைய அடிச் சுவடுகளைக் கண்டவுடனே தமயந்தி, 'மன்னவோ!' என்று சொல்லித் தன் கண்ணீர் வெள்ளத்தில் விழுந்தாள்.

(வி - ரை) அல்லி - பூவினகவிதழ் என்பாருமுளர். அம் என்பதை அசையெனினுமாம். அல்லியுந் தாமரையும் ஆகுபெயர்கள். நல்லுயிர்-நல்லாள் என்பது போல இனிமையைக் காட்டுகின்றது; ஆருயி ரெனினுமாம்; ஆசையென்று பொதுப்பட வந்தேனும் இங்குக் காதலைக் காட்டுகிறது. நாறுதல்-மணத்தலென்று தாமரைக்கேற்கப் பொருடருமாயினும் தோன்றலென்பதே சரியென்று கொள்க. கடை யேகாரம் அசை. நள னடிச் சுவடுகளைத் தமயந்தி தன் உயிரைக் கண்டபடியும் உண்மைக் காதலுருவைக் கண்டபடியுங் கண்டாளென்று கொள்க. தான் - அசை - அடிச்சுவட்டுக்காகுபெயர். (௧௧௬)

[தமயந்தி,வனத்தில் மானையு மயிலையு நோக்கி, "போனரைக் காட்டுதிரோ?" என்று புலம்பின ளெனல்.]

வெறித்த விளமான்காள் மென்மயில்கா ளிந்த
நெறிக்க ணெடிதூழி வாழ்வீர் — பிறிந்தெம்மைப்
போனரைக் காட்டுதிரோ வென்னாப் புலம்பினாள்
வானாடர் பெற்றிலா மான்.

(ப - ரை) வான் நாடர் பெற்றிலா மான் - விண்ணாட்டுத் தேவேந்திரன் முதலியோரும் பெறாத மான்போலும் தமயந்தியானவள், வெறித்த இளமை மான்காள் மென்மை மயில்காள் - மருண்ட இளமையான மான் கூட்டங்களே! மெல்லிய (இறகுள்ள) மயிலினங்களே!, நெறிக்கண் நெடிது ஊழி வாழ்வீர் - இக்காட்டு வழியில் பல்லூழிகாலம் வாழ்ந்திருப்பீர்கள் (ஆகையால்), எம்மை பிறிந்து போனரைக் காட்டுதிரோ என்னா புலம்பினாள் - எங்களை வேறாக நீக்கிப் போன அரசரைக் காட்டுவீரோ! என்று சொல்லி அழுதாள்.

(க - ரை) தமயந்தி, மானையும் மயிலையும் விளித்து, அவைகளை வாழ்த்தி, 'எங்களை வேறாக நீக்கிவிட்டுப்போன மன்னரைக் காட்டுவீரோ!' வென்று சொல்லி அழுதாள்.

(வி - ரை) வெறித்த-தமயந்தியைக் கண்டு வெருண்ட எனி னுமாம்; இளமான்களுக்குத்தாம் ஓட்டமும் நாட்டமும் ஒழுங்கா யிருக்கு மாதலால், வெறித்த இளமான்காள் என்றார். ஊழி நெடிது வாழ்வீர் என்பாருமுளர்; ஊழி யென்ப திங்குப் பல்லா ண்டுகளைக் குறிக்கும்; மான்களிடத்தும் மயில்களிடத்தும் தனக்கு வேண்டிய சேதியை வினவி யறிந்துகொள்ளவேண்டு மாதலால், அவைகளை முதலில் 'நீவிர் நெறிக்கண் நீடூழிவாழ்வீர்' என்று வாழ்த்தினள். காட்டுதிரோ என்பதில் ஓகாரத்தை அசை யென்பாருமுளர்; இரங்க லென்பதே சரி. மானு மயிலு முறையே தமயந்தியின் கண்ணையுஞ் சாயலையுங் கண்டு மயங்கின வென்க. பிறித்து-வினையெச்சம்; பிறி-பகுதி. (கக௭)

[தமயந்தி, மலைப்பாம் பிருப்பது தெரியாமல் அதனருகே சென்றுளேனல்.]

வேட்ட கரியை விழுங்கிப் பெரும்பசியால்
மோட்டு வயிற்றரவு முன்றோன்ற—மீட்டதனை
ஓரா தருகணைந்தா ளுண்டே னறற்கூந்தற்
போரார் விழியாள் புலர்ந்து.

(ப - ரை) உண் தேன் அறல் கூந்தல் போரார் விழியாள் புலர்ந்து - தேனுண்ணும் வண்டுகள் மொய்த்த கருமணலை யொத்த கூந்தலையும் காதோடிகலும் போரிற் றிகழும் கண்களையு முடைய தமயந்தி வாட்டமாய், பெருமை பசியால் வேட்ட கரியை விழுங்கி மிக்க பசியினால் தான் விரும்பிய யானையை விழுங்கி, மோட்டு வயிறு அரவு முன் தோன்ற - உப்பின வயிற்றையுடைய மலைப் பாம்பு தனக்கெதிரில் வர, அதனை மீட்டு ஓராது அருகு அணைந்தாள் - அதைத் தன் மனதிற் கொண்டு (கவனித்து) அறியாமல் அதனருகிற் சேர்ந்தாள்.

(க - ரை) தமயந்தி வாட்டமாய் நளன் மேலேயே நாட்டமாய்த் தன்னாடி நடந்து செல்கையில் தனக்கெதிரில் வந்த மலைப் பாம்பைக் கவனியாமல் அதனருகிற் சேர்ந்தாள்.

(வி - ரை) வேட்ட=வேள்+ட்+அ. மோடு+வயிறு=மோட்டுவயிறு. மீட்டு என்பதனை வினைமாற்றிடைச்சொல் லெனினுமாம். உண் தேன்-வினைத்தொகை; மலர் முடித்ததனால் வண்டுகள் உண்ணுந் தேனொழுகும் அறற்கூந்த லெனினுமாம். போரார் விழியாள் - சண்டை செய்யும் வேற் கண்ண ளெனினுமாம். கூந்தலாள் விழியாள் எனப் பிரித்து உம்மைத் தொகையாக்குக. உண் தேன்-அன்மொழித்தொகை என்பாரு முளர். மீட்டு என்பதற்குத் திரும்பி யென்று பொருள் கூறுவாரு முண்டு; மீண்டு, மீட்டு என்பதன் வலித்தல். (கக௮)

[தமயந்தியை மலைப்பாம்பு, மார்புக்கு மேலெல்லாம் தோன்ற விழுங்கிற் றெனல்.]

அங்கண் விசும்பி னவிர்மதிமேற் சென்றடையும்
வெங்க ணரவுபோன் மெல்லியலைக்—கொங்கைக்கு
மேலெல்லாந் தோன்ற விழுங்கியதே வெங்கானின்
பாலெல்லாந் தீயுமிழும் பாம்பு.

(ப - ரை) அம் கண் விசும்பின் அவிர் மதி மேல் சென்று அடையும் வெம்மை கண் அரவுபோல் — அழகான இடமகன்ற ஆகாயத்தில் ஒளி வீசும் முழு நிலவின்மேற் பாய்ந் ததனை விழுங்கும் கொடுங் கண்ணுள்ள இராகுவென்னும் பாம்புபோல, வெம்மை கானின்பால் எல்லாம் தீ உமிழும் பாம்பு - அக்கடுங் காட்டிடமெங்கும் நெருப்பைக் கக்கும் மலைப்பாம்பு, மென்மை இயலை கொங்கைக்கு மேல் எல்லாம் தோன்ற விழுங்கியது - மெல்லி ஸல்லாளாகிய தமயந்தியை மார்க்கு மேற்புறமெல்லாந் தெரியும் படி விழுங்கிற்று.

(க - ரை) காட்டிட மெல்லாம் நெருப்பைக் கக்கு மலைப் பாம்பு, தமயந்தியைப் பற்றிக் கொங்கைக்கு மேலெல்லாம் தெரி யும்படி விழுங்கிற்று.

(வி - ரை) அவிர்மதி – வினைத்தொகை-கிரகண காலத்திற் சந்திரனைப் பற்றி இராகு வென்னும் பாம்பு விழுங்கி யுமிழ்கிற தென்பது ஈந்நாட்டார் கொள்கை; அதுவே இங்குக் குறித்திருப் பது. மலைப்பாம்பே இராகு, மதியே தமயந்தி யென்றறிக. மெல் லிய லாகையால், அவளைப் பாம்பு பற்றி விழுங்குகையில் எலும்பு முறியாமல் இலேசாய் அதன் வயிற்றுக்குட் சென்றாளென்க. பா லெல்லாம்-பக்கமெல்லாம் - பக்கத்திட மெல்லாம்; எல்லாம் - ஒரு மையிற் பன்மை. மதுவை யுடையதாகலான் மதி காரணப்பெயர். முதன் மேல், ஏழனுருபு; இரண்டா மேல், இடத்துக் காகுபெயர்.

[நளனை விளித்துத் தமயந்தி, "அடியேனை இவ்வரவின் வாயிலிருந்து காவாயோ" வென்றழுதா ளெனல்.]

வாளரவின் வாய்ப்பட்டு மாயாமுன் மன்னவநின்
தாளடைந்து வாழுந் தமியேனைத்—தோளால்
விலக்காயோ வென்றழுதாள் வெவ்வரவின் வாய்க்கிங்
கிலக்காகி நின்றா ளெடுத்து.

(ப – ரை) இங்கு வெம்மை அரவின் வாய்க்கு இலக்கு ஆகி நின்றாள் – இக்காட்டி லிந்த கொடும் பாம்பின் வாய்க்குக் குறி யாய் நின்ற தமயந்தி, மன்னவ-அரசனே!, வாள் அரவின் வாய்பட்டு மாயாமுன்-அடியே னிவ் விடப் பாம்பின் வாயில் வீழ்ந்து இறவாத முன்பு, நின் தாள் அடைந்து வாழும் தமியேனை-உன் திருவடிகளே தஞ்சமென்று உயிர் தாங்கி நிற்கும் அனாதையான என்னை, தோ ளால் விலக்காயோ என்று எடுத்து அழுதாள் - நின் தோள்வலி யால் மீட்டுக் காவாயோ என்று குரலெடுத்துச்சொல்லி அழுதாள்.

(க - ரை) பாம்பின் வாய்ப்பட்ட தமயந்தி நளனை விளித்து' "அடியேனை இவ்வரவின் வாயிலிருந்து நின் தோள் வலியான் மீட்டுக் காவாயோ!" என்று புலம்பினாள்.

(வி - ரை) வாள் + அரவு - ஒளி வீசும் பாம்பென்பதே பொருளாயினும், அதற்கு நஞ்சொளி தவிர வேறொளி யின்மையால் விடப்பாம்பென்றும். மாயால்-ஈறுகெட்ட எதிர்மறை. தமியேன் - தனியேன் - தனிமை என்னும் பண்பட்டிப் பெயர். தோள் இங்கு ஆண்மைக் காகுபெயர். ஓகாரம்-வினா. வெம்மை + அரவு = வெவ்வரவு. இலக்கு-இரைக்குறி. ஓகாரம்-இரங்கலெனினுமாம். வெவ்வரவின் வாய்க்கு இலக்காகி நின்றாள் அழுதாள் என்று முடிக்க. நின்றாள்-வினையாலணையும் பெயர் - இங்கு அசை யெனினுமாம். வயிற்றுக் கிரையை வாய்க்கிரை யென்றது இலக்கணை. (௧௨௦)

[தமயந்தி நளனை விளித்து, "அரவின் வாய்ப்பட் டழிகின்றேன் இப்போதேனும் உன்னைக் காண்கின்றேனில்லையே!" என்று விசனமுற் றழுதா ளெனல்.]

வென்றிச் சினவரவின் வெவ்வா யிடைப்பட்டு
வன்றுயராற் போயாவி மாள்கின்றேன்—இன்றுன்
திருமுகநான் காண்கிலேன் றேர்வேந்தே யென்றாள்
பொருமுகவேற் கண்ணாள் புலர்ந்து.

(ப - ரை) பொரு முக வேல் கண்ணாள் புலர்ந்து — சண்டை செய்யும் (கூரிய) முனையுள்ள வேல் போலுங் கண்களையுடைய தமயந்தி வாடி, தேர் வேந்தே-தேரூரும் அரசனே!, வென்றி சினம் அரவின் வெம்மை வாயிடை பட்டு - வெற்றி மிகுந்த கோபமுள்ள பாம்பின் விட வாயிலகப்பட்டு, வன்மை துயரான் ஆவி போய் மாள்கின்றேன் - கொடுந் துன்பத்தால் உயிர் போய்ச் சாகின்றேன், இன்று உன் திரு முகம் நான் காண்கிலேன் என்றாள் - இப்போதும் உன்னுடைய அழகான முகத்தை நான் காணப் பெற்றிலேன் என்று புலம்பினாள்.

(க - ரை) நளனை விளித்துத் தமயந்தி, "அரவின்வாய்ப் பட்டழிகின்றேன் இப்போதும் உன் திருமுகங் காணக் கொடுத்து வைத்தே னில்லையே" என்று புலம்பினாள்.

(வி - ரை) வென்றிச் சினம்-சினத்தால் அடையும் வெற்றி; இம் மலைப்பாம்பு தன் பகை யுயிர்மேற் கோபித்து அதைத் தப்பாமற் பற்றி விழுங்கும் வெற்றியே இங்குக் கூறியதாம். வாய்க்கு அடை வெம்மை யென்பது வெவ்விடம் என்று கொள்க; வெம்மை விடத்துக்கு ஆகுபெயர். வன்மை துயர் - தீராத் துன்பம்; துயரம் வலுத்திருப்பதனால் தீர்வதரி தாகையால் தீராத்துயர் வன்றுய ரென்றார். இன்று என்பத னிறுதியில் உம்மை தொக்கது. வென்றி = வெல் + தி - இது வெற்றி யென்றும் விகாரமின்றியும் வரும் காண்கிலேன் - எதிர்மறை வினைமுற்று - காண் + கு + இல் + என். பொரு முகம் - வினைத்தொகை. கற்புடை நங்கைக்குக் கணவனைப் பிரிந்த துயரினும் பெருந் துய ரில்லை யென்பதனால் வன்றுய ரென்றார். (௧௨௧)

[தமயந்தி தன் மக்களை நினைந்துருகி, "மக்காள்! நீரேனு மன்னவனைக் காண்பீரோ?" என்று புலம்பினா ளெனல்.]

மற்றொடுத்த தோள்பிரிந்து மாயாத வல்வினையேன்
பெற்றெடுத்த மக்காள் பிரிந்தேகுங்—கொற்றவனை
நீரேனுங் காண்குதிரோ வென்றழுதா ணீள்குழற்குக்
காரேனு மொவ்வாள் கலுழ்ந்து.

(ப - ரை) நீள் குழற்கு கார் எனும் ஒவ்வாள் - தனது நீண்ட தலை மயிர்க்குமேகமாயினுஞ் சமானமாகாத தமயந்தி, மல்தொடுத்த தோள் பிரிந்தும் மாயாத வல்வினையேன் பெற்றெடுத்த மக்காள்- மற்போர்வல்ல உங்கள் (தந்தையின்) தோளைப் பிரிந்தும் இன்னும் இறவாமலிருக்கின்ற தீவினையேனாகிய நான்பெற்றுவளர்த்தபிள்ளைகளே!, பிரிந்து ஏகும் கொற்றவனை நீர் எனும் காண்குதிரோ என்று

கலுழ்ந்து அழுதாள் - என்னைப் பிரிந்து போய்க்கொண்டிருக்கும் (அவ்வுமது தந்தையாகிய) அரசனை நீங்களாயினும் காண்பீர்களோ என்று மனங்கலங்கி அழுதாள்.

(க - ரை) தமயந்தி தம்மக்களை எண்ணி மனங்கலங்கி, "ஏ, மக்காள்! உங்கள் தந்தையைப் பிரிந்தும் இன்னும் நான் இறவாம லிருக்கிறேன்; நான் பெற்று வளர்த்த நீவிரேனும் அவரைக் காண் பீரோ" என்றழுதாள்.

(வி - ரை) மற்றொடுத்த தோள் என்பதற்கு மற்றொடுத்த தோளையுடைய உந்தந்தையாகிய நளராசன் எனினுமாம்; தோள்-ஆளுக்கு ஆகுபெயர் வல்வினை, நல்வினைக் கெதிர்மொழி. மக்காள்-மக்களென்பதின் விளி. காண்குதிர் - முன்னிலை பன்மை முற்று. கார் - மேகத்துக்குப் பண்பாகுபெயர். ஒவ்வாள் - எதிர்மறை வினை யாலணையும் பெயர்; ஒப்பாள் - (உடன்பாடு). நாரேனும் நீரேனும் என்பவைகளில் உம்மைகள், உயர்வு சிறப்புக்கள். (௧௨௨)

[தமயந்தி நளனை யெண்ணி, "நாயகனே! பாம்புக் கிரை யாயிறக்கின்றேன் விடையளிக்கவேண்டும்"
என்று கும்பிட்டா ளெனல்.]

அடையுங் கடுங்கானி லாடரவின் வாய்ப்பட்
டுடையுமுயிர் நாயகனே யோகோ—விடையெனக்குத்
தந்தருள்வா யென்றுதன் றாமரைக்கை கூப்பினாள்
செந்துவர்வாய் மென்மொழியா டேர்ந்து.

(ப - ரை) செம்மை துவர் வாய் மென்மை மொழியாள் தேர்ந்து-செம்பவளம் போன்ற வாயையும் இனிமையாகிய சொல் லையுமுடைய தமயந்தி தன் இறப்பைத் துணிந்து, நாயகனே - தலைவனே!, அடையும் கடுமை கானில் ஆடு அரவின் வாய்ப்பட்டு உயிர் உடையும். ஓகோ-நாம் புகுந்த இந்தக் கடுமையாகிய காட்டில்

ஆடுகின்ற பாம்பின் வாயி லகப்பட்டதனால் (என்) உயிர் தளர்கின்றது, அந்தோ! எனக்கு விடை தந்தருள்வாய் என்று தன் தாமரைகை கூப்பினாள்-அடியேனுக்குச் செலவு கொடுத்தருள்க என்று தன் செந்தாமரை போன்ற கைகளைக் குவித்துத் தொழுதாள்.

(க - ரை) "நாம் புகுந்த இக்கானகத்தில் பாம்பின் வாயிலகப் பட்டதனால் என் உயிர் தளர்கின்றது, அந்தோ! நான் என் செய்வேன்? நாயகனே! அடியேனுக்குக் கடைசி விடை தருக" என்று நளனை எண்ணிக் கும்பிட்டாள் தமயந்தி.

(வி - ரை) கடுங்கான் - கடிய கானகம்; கடி யென்பதன் திரிபே கடு எனினும் உரிச்சொல்லாம், கடுமை யென்பதன் விகாரமெனின் பண்பாம்; கடுமை-கொடுமை. ஓகோ இரங்கற் குறி. ஆடரவு-இங்கு மலைப்பாம்புக் காயிற்று-ஏனை அரவுபோல் இதுவும் ஆடாதேனும், மரபுச் சிறப்பாய் ஆடரவென்றார்; ஆடரவு - வினைத்தொகை-அக்காலத்திருந்த உண்மைக் காதலொழுக்கின்படி, கற்புடை நங்கையாம் தமயந்தி தன்னாயகனை வேறொன்றும் வெறுத்துரையாது, 'நாயகனே கடை விடை தா' என்று கைதொழுதமை கவனித்தற்பாற்று. (கஉ௩)

[வேடனொருவன் வனத்திலழு குரல் கேட்டு வந்து
தமயந்தியைக் கண்டானெனல்.]

உண்டோ ரழுகுரலென் றொற்றி வருகின்ற
வெண்டோடன் செம்பங்கி வில்வேடன் — கண்டான்
கழுகுவாழ் கானகத்துக் காரரவின் வாயின்
முழுகுவா டெய்வ முகம்.

(ப - ரை) ஓர் அழு குரல் உண்டு என்று ஒற்றி வருகின்ற வெண்மை தோடன் செம்மை பங்கி வில் வேடன்-என்று மில்லாததோர் அழுகை ஓசை கேட்கின்றதென்று உற்றுக்கேட்டு வரு

டம் வெண்மையாகிய சங்கக் குழையை யுடையவனும் சிவந்த தலை மயிரையும் வில்லையுமுடையவனுமாகிய வேடனொருவன், கழுகு வாழ் கானகத்து கருமை அரவின் வாயில் மூழ்குவாள் தெய்வம் முகம் கண்டான் - கூளிகள் வாழ்கின்ற காட்டிற் பெரும் பாம்பின் வாயில் அகப்பட்டு மறைகின்றவளுடைய திருமுகத்தைப் பார்த்தான்.

(க - ரை) கானகத்தில் வேடனொருவன், பாம்பின் வாயில் அகப்பட்டு மறையுந் தமயந்தியின் திருமுகத்தைப் பார்த்தான்.

(வி - ரை) உண்டு என்பது கேட்கின்ற வென்னும் பொருட்டு. ஒற்றுதல்-ஒன்றியிருந்து கேட்டல் - ஒற்றி யென்பது ஒன்றி யென்றும் வரும். வெண்மை தோடன் - வெள்ளெலும்பாகிய தோடன் என்பாருமுளர் - களாப்பூ அல்லது நுணைப்பூத் தோடன் எனினு மாம். செம்பங்கி யென்பதைப் பற்றி யெரியும் நெருப்புக் கொழுந் தனைய தலைமயிரென்பாருமுளர் - இதையே பெரியார் எரிகுச்சி யென்றுங் கூறுவர். கழுகு என்பது இங்குப் பிண முண்ணுங் கூளியைக் குறிக்கும். கருமை அரவு, பெருமை அரவைக் குறிக் கும் - கருந்தனம் பெருந்தனமாவது போலக் கரும் பாம்பு இங்குப் பெரும் பாம்புக் காய்வந்தது. வேடன் தெய்வ முகங் கண்டா னென்று கூட்டுக. வேடனுக்குப் புதுமையாய் வன தெய்வமுகம் போலத் தோன்றிற் றென்பார் தெய்வ முக மென்றார். (கஉச)

[“ஐயன்மீர்! உங்களுக்கு அபயம்; அடியேனைக் காத் தருள்க” என்றாள் தமயந்தி யெனல்.]

வெய்ய வரவின் விடவாயி னுட்பட்டேன்
ஐயன்மீ ருங்கட் கபயம்யான்—உய்ய
அருளீரோ வென்னு வரற்றினா ளஞ்சி
இருளீரும் பூணா ளெடுத்து.

(ப - ரை) இருள் ஈரும் பூணாள் அஞ்சி-இருட்டை வெருட் டும் ஒளிவீசும் நகைகளணிந்த தமயந்தி பயந்து, ஐயன்மீர் -

ஐயமாரே!, வெய்ய அரவின் விடம் வாயினுள் பட்டேன் - இக்கொடும் பாம்பின் நச்சுப்பல்லுள்ள வாய்க்குள் அகப்பட்டுக் கொண்டேன், யான் உங்கட்கு அபயம் - அடியேன் உங்களுக்கு அடைக்கலமாகின்றேன், உய்ய அருளீரோ என்று எடுத்து அரற்றினாள் - (இதன் வாயினின்றும்) தப்பும்படி இரங்கமாட்டீர்களா என்று குரலெடுத்துக் கூவினாள்.

(க - ரை) "ஐயமாரே! அடியேன் உங்களுக் கடைக்கலம்; இக் கொடும் பாம்பின் விடவாயிலிருந்து என்னை விடுவிக்க மாட்டீர்களா!" என்று தமயந்தி குரலெடுத்துக் கூறிக் கதறினாள்.

(வி - ரை) விடவாய் என்று மரபு வழாமற் கூறியதனால் மலைப்பாம்புக்கும் நச்சுப்பல்லென்றும். ஐயன்மீர் - விளி; ஐயன்மார்-முதல் வேற்றுமை - இதுவே ஐயமாரென்று மாகும். இங்குத் தமயந்தி ஒருவனைப் பார்த்து ஐயன்மீர் என்றதனால் இது பால்வழுவானாலும் சிறப்பினால் அமைதியா மென்க - ஐயன்மார் என்பதில் ஒருமை விகுதியாகிய அன் என்பதின்மேல் மார் என்னும் பன்மை விகுதியும் வந்திருப்பதறிக - அன் ஆன் என்னும் சூத்திரத்திறுதியில் பெயரினுஞ் சிலவே என்பதைக் கவனித்துக் கொள்க. விளியில் ஈற்றயல் ஆகாரம் ஈகாரமாவதுந் தமிழ்மொழி ஒழுங்கு. யான் உங்கட் கடைக்கல மடைந்தவளாகின்றேன் எனினுமாம். ஓகாரம்-இரங்கல். ஈர்தல் - இங்கு ஓட்டுதற்காயிற்று. (கஉ௫)

[தமயந்தியை வேடன் பாம்பின்வாய் நின்று மீட்டா னெனல்.]

சங்க நிதிபோற் றருசந் திரன்சுவர்க்கி
வெங்கலிவாய் நின்றுலக மீட்டாற்போல்—மங்கையை
பாம்பின்வாய் நின்று பறித்தான் பகைகடிந்த [வெம்
காம்பின்வாய் வில்வேடன் கண்டு.

(ப - ரை) சங்கம் நிதிபோல் தரு சந்திரன் சுவர்க்கி - (விண்ணுலகத்திற்) சங்கு வடிவாயமைந்து (வேண்டினார்க்கு வேண்டிய

படி குறைவற வழங்கும்) புதையல் போல, (யார் வரினும் அவர்க் கில்லை யென்னுமற் குறைவற) வழங்கும் சந்திரன் சுவர்க்கியென்னு மரசன், வெம்மைகலி வாய்நின்று உலகம் மீட்டால் போல்-கொடிய வறுமை (ப் பாம்பின்) வாயினின்று இவ்வுலகத்தாரை (த்தன் கொடையால்) மீட்டு (ச்செல்வர்களாக்கினது)போல, பகை கடிந்த காம்பின் வாய் வில் வேடன் மங்கையை கண்டு - (சிங்கம் புலி கரடி முதலிய) பகை யுயிர்களைக் கொன்ற மூங்கிலினுற் பொருந்திய வில்லையுடைய வேடன் தமயந்தியைக் கண்டு, வெம்மை பாம்பின் வாய் நின்று பறித்தான் - (அவளை) அக்கொடும் பாம்பின் வாயிலி ருந்து மீட்டான்.

(க - ரை) சிங்க முதலிய வன விலங்குப் பகை வென்ற வில் வேடன் தமயந்தியைக் கண்டு, அவளை அப்பாம்பின் வாயிலிருந்து மீட்டான்.

(வி - ரை) சங்கநிதி பதுமநிதி யென்பன முறையே சங்கு வடி வாயுந் தாமரை மலர் வடிவாயும் விண்ணுலகத்திற் பொருந்தியுள்ள புதையல்க ளென்பது இம்மண்ணுலகத்தோரின் பேராசைக் கொள்கை. இப்புதையல்க ளிரண்டும் வேண்டினுர் வேண்டியபடி வேண்டுமளவு கொடுக்கக் கொடுக்க வளர்வனவாம். கலிவாய்-இலக் கணை - இதைப்பற்றி (கஉ0)ம் செய்யுளின் (வி - ரை)யினுங் காண்க. பகை-யுயிர்களுக் காகுபெயர்-பகு, பகுதி; ஐ, வினைப் பெயர் விகுதி. காம்பின்வாய் - மூங்கிலிற்பொருந்திய எனினுமாம். (கஉ௯)

[பாம்பின் வாயிலிருந்து தன்னைவிடுவித்த வேடனை நோக் கித் தமயந்தி, “ஐயா! உனக்கு நான் என்ன உபகா ரஞ் செய்வேன்?” என்று ளெனல்.]

ஆருயிரு நானு மழியாம லையாவிப்
பேரரவின் வாயிற் பிழைப்பித்தாய்—தேரில்
இதற்குண்டோ கைம்மா றெனவுரைத்தாள் வென்றி
விதர்ப்பன்றன் பெற்ற விளக்கு.

(ப - ரை) வென்றி விதர்ப்பன் பெற்ற விளக்கு - போரில் வெற்றி மிக்க விதர்ப்ப ராசன் பெற்றெடுத்த விளக்கனைய தமயந்தி யானவள், ஐயா! அருமை உயிரும் ஊனும் அழியாமல் - (தன்னை மீட்ட வனவேடனை நோக்கி) ஐயனே! என் அருமையாகிய உயிரும் ஊனும் இறந்தழியாமல், இ பெருமை அரவின் வாயில் பிழைப்பித் தாய் - இந்த மலைப் பாம்பின் வாயிலிருந்து என்னைத் தப்புவித் தாய், தேரில் இதற்கு கைமாறு உண்டோ என்ன உரைத்தாள் - ஆராய்ந்து பார்க்கின் இவ்வுதவிக்கு மாறுதவி வேறுதவி யுளதோ (இல்லை) என்று பணிவாகக் கூறினாள்.

(க - ரை) தமயந்தி வேடனை நோக்கி, "ஐயனே! இம்மலைப் பாம்பின் வாயிலிருந்து என்னை நீ மீட்ட இவ்வுதவிக்கு மாறுதவி வேறுதவி யென்ன இருக்கிறது?" என்றெடுத்துக் கூறினாள்.

(வி - ரை) அருமை + உயிர், பெருமை + அரவு, இரண்டு மூத னீண்டன. பிழைப்பித்தாய்-பிறவினை; பிழைத்தாய் - தன்வினை. விளக்கு - ஆகுபெயராய்த் தமயந்தியை உணர்த்திற்று - பாவை. காளை என்புழிப்போல. உயிரழிதல்-உடலை விட்டு நீங்குதல்-ஊனும் என்பது இங்கு உடலுக்காய் வந்தது. உடலழிதல்-பாம்பின்வாய்க் கிரையாய் மறைதல். கை + மாறு = கைம்மாறு என்று மகரமிகுவ 'ஐ' முன் மிகலுமா மென்றார் நன்னூலார். தான்-அசை. கைம் மாறு-மாறுகை-இலக்கணப் போலி; கை என்பது உதவிக்கு ஆகு பெயர். மாறுதவி-பதில் நன்றி. விளக்கு - எழுவாய், என்றான் - பயனிலை. (௧௨௭)

[தமயந்தியின் அழகைக் கண்டேன் அவளைத் தன்னோடு வா வென்றழைத்தா னெனல்.]

இந்து நுதலி யெழிநோக்கி யேதாதன்
சிந்தை கருதிச் சிலைவேடன்—பைந்தொடிநீ
போதுவா யென்னுடனே யென்றான் புலைநாகுக்
கேதுவாய் நின்றா னெடுத்து.

(ப - ரை) புலை நரகுக்கு ஏதுவாய் நின்றான் சிலை வேடன் - இழி நரகக்குழியி லிழிதற்குக் காரணனாய் நின்றவனாகிய வில் வேடன், இந்து நுதலி எழில் நோக்கி-பிறை நிலாப் போன்ற நெற்றியை யுடையவளாகிய தமயந்தியின் அழகைப் பார்த்ததனால், ஏதோ தன் சிந்தை கருதி-எதையோ தன் மனத்தில் எண்ணிக்கொண்டு, பசுமை தொடி நீ என்னுடனே போதுவாய் என்றான் எடுத்து - பசும்பொன் வளையலை அணிந்த மாதே! நீ என்னோடு வா என்றெடுத்துச் சொன்னான்.

(க - ரை) தமயந்தியின் பேரழகைக் கண்டு மயங்கிய வன வேடன், "ஏ, பைந்தொடீ! நீ என்னோடு வா" என்று எடுத்துக் கட்டளை யிடுவதுபோற் கூறினான்.

(வி - ரை) நுதல் + இ - சினைப்பெயர் - மூக்கி, நாக்கி என்புழிப்போல. பைந்தொடி-அன்மொழித்தொகை-துடியிடை, கருங்குழல் என்புழிப்போல. போதுவாய் - முன்னிலை ஏவலொருமை புலை நரகு-பண்புத்தொகை-புலை நரக காரணமாகிய கெடுவினைப்புக் கானானென்பது கருத்து—'கற்புடைய நங்கைதனைக் கருதவேண்டாம்' என்றதனால் புலை நரகுக் கேதுவாய் நின்றானென்றார். இவன் செய்த பேருபகாரத்துக்கு மாறுபகாரம் இவன் குறிப்பறிந்து செய்தல் தமயந்தியின் கடமை ஆகையால், அவளவன் மனதின்படி இசைய மனமில்லா திருந்திருந்தால், அவன் செய்யுதவியை ஏற்றுக்கொண் டிருந்திருக்கப் படாது. வன வேடனுக்குப் பிறன் மனை நயவாத நீதிநெறி தெரியுமா? (௧௨௮)

[தமயந்தி தன்னை வேடனழைக்க வெருண்டு, அழுதபடியே புதர்களி னுழைந்தோடினா ளெனல்.]

வேட னழைப்ப விழிபதைத்து வெய்துயிரா
ஆடன் மயில்போ லலமரா — ஓடினாள்,
தூறெலா மாகச் சுரிகுழல்வேற் கண்ணிநீர்
ஆறெலா மாக வழுது.

(ப - ரை) வேடன் அழைப்ப விழி பதைத்து வெய்து உயிரா- வேடன் தன்னோடு வா வென்றழைத்ததனால் (தமயந்தி) கண்கள் துடித்துச் சூடெழ மூச்செறிந்து, ஆடல் மயில் போல் அலமரா- ஆடு மயில் போற் சுழன்று, வேல் கண்ணில் நீர் ஆறு எல்லாம் ஆக அழுது - வேலாயுதம் போன்ற கண்களில் நீர் வழியெல்லாம் ஒழு குமபடி அழுதுகொண்டே, சுரி குழல் தூறு எல்லாம் ஆக ஓடி னாள் - சுழிந்த கூந்தல் புதர்களிலெல்லாம் சிக்கிக்கொள்ளும்படி (அவன் கைக் ககப்படாமல்) ஓடினாள்.

(க - ரை) தமயந்தி தன்னை வேட னழைத்தனா லஞ்சி அழுதுகொண்டே ஆடல் மயில்போற் சுழன்று புதர்களிற் றன் தலைமயிர் சிக்கிக்கொள்ளும்படி ஓடினாள்.

(வி - ரை) வெய்து + உயிரா—சூடாக மூச்சுவிட்டு. அலமரா- அலமந்து - சுழன்று. தமயந்தி ஓடினாளென்று கூட்டுக. அலமரா, அலமரு - பகுதி - செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். மயில் போற் சாயலுடையாள் மயில் போற் சுழன்றோடினாள். சுரி குழல்-வினைத்தொகை. வேற்கண்-உவமைத் தொகை - விழி பதைத்தல் கண் துடித்தல் புருவம் நொடித்தல். இரண்டாம் ஆக அசை யென்பாருமுளர். கபீர்தாசர் மனைவி வர்த்தகனுக்கு மனை வியாக உடன்பட்டு மாறுதவி செய்தது போலத் தமயந்தியும் தன் னைக் காத்த வேடன் குறிப்பின் வழி நிற்றலே நன்றிமறவாமைக் கடையாளமாம். ஓடினா ளென்பது நிறை காக்குந் தலைக் காப்புக் கொழுங்கன் றெனக. [கஉக]

[தன்னை விடாது தொடர்ந்த வேடனை விழித்தெரித்தாள் தமயந்தி யெனல்.]

தீக்கட் புலிதொடரச் செல்லுஞ் சிறுமான்போல்
ஆக்கை தளர வலமந்து—போக்கற்றுச்
சீறு விழித்தாள் சிலைவேட னவ்வளவில்
நீறாய் விழுந்தா னிலத்து.

(ப - ரை) தீ கண் புலி தொடர செல்லும் சிறுமை மான் போல் - நெருப்புப்போ லொளிவீசுங் கண்களையுடைய புலியானது பின்பற்றி வர அதைக் கண்டு வெருண்டோடும் மான் கன்றுபோல ஆக்கை தளர அலமந்து - உடல் ஓய்ந்து போகச் சுற்றிச் சுழன்று போக்கு அற்று சீறு விழித்தாள் - வேறு புகலிடம் இன்றித் தமயந்தி கோபித்து விழித்துப் பார்த்தாள், அ அளவில் சிலை வேடன் நிலத்து நீறு ஆய் விழுந்தான் - அப்படி அவள் பார்த்தவுடனே வில் வேடன் நிலமேற் சாம்பராய் (எரிந்து) வீழ்ந்தான்.

(க - ரை) மானைத் துரத்தும் புலியைப் போலத் தன்னைத் துரத்திவரும் வேடனைத் தமயந்தி திரும்பி விழித்துப் பார்த்ததனால், அவனெரிந்து நீறாய் நிலமேல் விழுந்தான்.

(வி - ரை) தீக்கண் - கொடுங் கண்ணெனினுமாம். தமயந்தி மடந்தையாகையால் அதற் குடந்தையாகச் சிறுமா னென்றார். யாக்கை - ஆக்கை, யானை - ஆனை, யாறு - ஆறு என்புழிப்போல. அலமந்து - வினையெச்சம், இறந்த காலம்; அலமா - பகுதி. போக்கு - புகலிடம் - அடைக்கலமடையு மிடம். சீறு - சீறி - செய்யாவென்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். அ + அளவில் - அப்போதே - அவ் விழித்தவுடனே. போக்கு - தொழிலாகுபெயர் - புதைய லென் புழிப்போல. உபகாரிக் கபகாரஞ்செய்த தமயந்தியைக் கற்புடையாளெனக் கொண்டாடுவார் தெரியாதார். வேடனைத் தமயந்தி யெரித்த தன்மையாயின், அவனை அவள் கொன்றதைவிடத் தன்னை அவன் கண்ணுக் ககப்படாமல் கற்பின் பெருமையால் மறைத்துக் கொண்டிருக்கலாம்.

(௧௩௦)

[பற்றி யெரியும் பாலைவனத்தில் தமயந்தி தன் விதியை நொந் தழுதா ளெனல்.]

வண்டமிழ்வா ணர்ப்பிழைத்தவான்குடிபோற் றீத்தழன்மீற்
மண்டு கொடுஞ்சுரத்தோர் மாடிருந்து — பண்டையுள
வாழ்வெல்லாந் தானினைந்து மற்றழுதாண் மன்னிழைத்த
தாழ்வெல்லாந் தன்றலைமேல் தந்து.

(ப - ரை) தீ தழல் மீ மண்டு கொடுமை சுரத்து ஓர் மாடு இருந்து - நெருப்புப்போன்ற வெப்பம் மேலே நெருங்கி எழுகின்ற கொடுமையாகிய பாலைவனத்தில் ஒரு பக்கத்திலிருந்து, மன் இழைத்த தாழ்வு எல்லாம் தன் தலைமேல் தந்து - (தனக்கு) நளன் செய்த குற்றங்களெல்லாம் தன் தலைவிதிப் பயனென்று மனதிற் கொண்டு (அவனை நிந்தியாமல்), வண்மை தமிழ் வாணர் பிழைத்த வான் குடிபோல் - சொல்வளமுள்ள செந்தமிழ்ச் செல்வர்க்குக் குற்றஞ்செய்த உயர்குடியிற் பிறந்தோர் (வறுமையால் வாடி அழுவது) போல, பண்டை உள்ள வாழ்வு எல்லாம் தான் நினைந்து அழுதாள் முன்னிருந்த செல்வங்களை யெல்லாம் தான் எண்ணி அழுதாள்.

(க - ரை) தமிழ் வாணர்க்குத் தப்பிழைத்த குடி வறுமையுற்று வாடி அழுவதுபோலத் தமயந்தி தன் கணவன் செய்த குற்றத்திற்காக அவனை நிந்தியாமல் எல்லாந் தன் தலைவிதிப் பயனென்று சொல்லி அழுதாள்.

(வி - ரை) தீத்தழல் - உவமத்தொகை. மீ - மேல் அல்லது ஆகாயம். பாலைவனத்தின் வெப்பத்தைப்பற்றி மற்றொரு புலவர், 'விழுந்ததுளி அந்தரத்தேவே மென்றார். வண்டமிழ் வாணர்ப்பிழைத்த வான்குடி அழுவதுபோலத் தமயந்தி தன் கணவனை வெறுக்காமல் விதியை வெறுத்தழுதாளென்று கூட்டுக. மற்று - அசைநிலை. வாணர்ப்பிழைத்த - இரண்டன்றொகை. வான் குடி-பண்புத்தொகை, யல்ல துவமைத்தொகை யெனக் கொள்க. தாழ்வைத்தன் தலைமேல் தருதலாவது, தான் படும் பாட்டுக்கு நளனை வெறுக்காமல் தன் தலைவிதியை நோதல் கற்புடை மங்கை யிலக்கணம். 'தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும்' என்பதற் கிலக்காகாமை யென்க. (௧௩௪)

[சேதிநகர்க்குச் செல்லும் பெரு வழியில் தமயந்தியைக் கண்ட வணிக ஞெருவன், "இவள் திருமகளோ!" என் றையுற்று ஞெனல்.]

அவ்வளவி லாதிப் பெருவழியி லாய்வணிகன்
இவ்வளவுத் தீவினையே னென்பாடன்—மெய்வடிவைக்
கண்டானை யுற்றான் கமலமயி லேயென்றான்
உண்டாய தெல்லா முணர்ந்து.

(ப - ரை) அ அளவில் ஆதி பெருமை வழியில் ஆய் வணிகன்-அந்தச் சமயத்தில் (சேதி நகர்க்குச் செல்லும்) முதன்மையான பெரிய வழியில் ஆராயு (அறிவுள்ள) வர்த்தக ஞெருவன், இ அளவு தீ வினையேன் என்பான்தன் மெய்மை வடிவை கண்டான் ஐயுற்றான் - இத்தனை (கேட்டுக் காளான) பாவி நான் என்று சொல்லிக்கொண் டிருப்பவளுடைய உடலழகை உற்றுப் பார்த்துச் சந்தேகித்தான், உண்டாயது எல்லாம் உணர்ந்து - அவளுக்கு நேரிட்ட துன்பங்களை யெல்லாம் தெரிந்துகொண்டு, கமலம் மயிலே என்றான் - இவள் தாமரை மலரில் வீற்றிருக்கும் திருமகளே யாவ ளென்று சொன்ஞன்.

(க - ரை) சேதிநகர் ஆதிப்பெருவழியில் வர்த்தக ஞெருவன் தமயந்தியின் உடலழகைக் கண்டு ஐயுற்று, உண்மை உணர்ந்தபின் இவள் திருமகளே என்று சொன்ஞன்.

(வி - ரை) ஆதிவழி-நேர்வழி யென்பாரு முளர். பெருவழி-பெரிய சாலை. ஆய் வணிகன்—வினைத்தொகை. இவ்வளவுத் தீவினையேன் - பண்புத்தொகை. வீமராசன் மகள் நளராசன் மனைவியாயிருந்தும் வன நண்ணிக் கணவஞே டிரண்டறவொராடையுடுத் துறங்குகையில், அவன் அவ்வோராடையை அரையாடையா யரிந்தெடுத்துத் தன்னைத் தன்னந்தனியே தவிக்கவிட் டேகினது முதலிய இத்தனை தீவினைகள் கண்டானை யுற்றான் - கண்டையுற்றான் - வினை

முற்றே யெச்சமாயிற்று. ஏகாரம்-தேற்றம். உண்டாயதெல்லாம் - ஒருமையிற் புன்மைவந்த பால்வழுவமைதி. மயில் - திருமகளுக் காகுபெயர். (௩௩ உ)

[அவ்வணிகன் தமயந்தியை நோக்கி, "அம்மே! நீ யார் மகள்? ஊர் எது? பேர் எது?" என்று வினவினு னெனல்.]

எக்குலத்தா யார்மடந்தை யாதுன்னூர் யாதுன்பேர்
நெக்குருகி நீயழுதற் கென்னிமித்தம்—மைக்குழலாய்
கட்டுரைத்துக் காணென்றான் கார்வண்டு காந்தாரம்
விட்டுரைக்குந் தார்வணிகர் வேந்து.

(ப - ரை) கருமை வண்டு காந்தாரம் விட்டு உரைக்கும் தார் வணிகர் வேந்து-கருவண்டுகள் காந்தார ராகத்தைத் தம் வாய்விட் டுப் பாடுகின்ற மலர்மாலையணிந்த வணிகர் தலைவன், மை குழலாய்-கருமையாகிய கூந்தலையுடையவளே!, எ குலத்தாய்? யார் மடந்தை? உன் ஊர் யாது?உன் பேர் யாது?-(நீ)எந்தக் குலத்திற் பிறந்தவள்? யாருடைய மகள்? உன்னுடைய ஊர் எது? உன்னுடைய பேர் என்ன?, நீ நெக்கு உருகி அழுதற்கு நிமித்தம் என்-நீ மனமிளகிக் கரைந்தழுவதற்குக் காரணம் என்ன?, கட்டுரைத்து காண் என் றான் - உண்மையாகச் சொல் என்று கேட்டான்.

(க - ரை) அவ்வணிகன் தமயந்தியை நோக்கி, "உன் குல மென்ன? ஊர் என்ன? பேர் என்ன? உன்னைப் பெற்றோர் யார்? நீ அழுங் காரணமென்ன? சொல்" என்று கேட்டான்.

(வி ரை) யாது - வினாப் பயனின்றி-இதையே வினாவடிக் குறிப்பு முற்றென்பர். மை என்பதை மேகத்துக்குப் பண்பாகு பெயராக்கி மேகம்போன்ற கூந்தலென்பது பொருந்தாமை அறிக. கட்டுரைத்தல் - ஒளியாமற் கூறல். காண் என்பதை அசையாகத் தன்ளுக; இதையே ஏவலொருமைச் சொல் விகுதி யென்பாரு

மூளர். காண் என்பதைத் தனிமொழியாக்கி, (என் உதவியை எதிர்) நோக்கு எனினுமாம். நீ உள்ளது சொல்லி என்னுதவியை எதிர்நோக்கு—நீ உள்ளது சொல்வதின்றேல், என்னுதவியு மின்றா மென்று குறிப்பிற் கொள்க. குழலாள் என்பதில் ளகரம் யகரமாய் விளியாயிற்று. பெற்றோரைத் தெரிந்துகொள்வதனாலேயே மற்றோரை அறிந்துகொள்ளலா மாகலான் கணவன் யார் என்று அவன் வினவவில்லை.

(௧௫௫)

[அதற்குத் தமயந்தி, ''எங்களரசன் என்னைப் பிரிந்ததனால் அழுகிறேன்'' என்றாளெனல்.]

முன்னை வினையின் வலியான் முடிமன்னன்
என்னைப் பிரிய விருங்கானில்—அன்னவனைக்
காணா தழுகின்றே னென்றாள் கதிரிமைக்கும்
பூணார் முலையாள் புலர்ந்து.

(ப - ரை) கதிர் இமைக்கும் பூண் ஆர் முலையாள் - கிரணங்கள் விட்டுவிட் டொளிவீசும் ஆபரணங்கள் பொருந்திய முலைகளையுடைய தமயந்தி, முன்னை வினையின் வலியால் - நான் முற்பிறப்பிற் செய்த தீவினையின் பலத்தால், இரு கானில் முடிமன்னன் என்னை பிரிய இப்பெருங் காட்டகத்தில் (எங்கள்) முடி சூடிய அரசன் என்னைத் தனியே விட்டு நீங்கினதனால், அன்னவனைகாணாது அழுகின்றேன் என்றாள் புலர்ந்து - அவ்வரசனைக் காணாமல் அழுது கொண்டிருக்கின்றேன் என்று மனங் குன்றிக் கூறினாள்.

(க - ரை) அதற்குத் தமயந்தி, ''ஏ வணிகர் தலைவ! முன் செய்வினைப் பயனால் எங்கள் அரசன் இக்காட்டிலென்னை ஒன்றியாய் விட்டுப் போனதனால் நான் அழுகின்றேன்'' என்றாள்.

(வி - ரை) 'முன்செய்த தீவினையோ இங்ஙனே வந்து மூண்டதுவே' என்றதனால் 'முன்னை வினையின் வலியால்' என்றார். தன்னாயகன் பேரைச் சொல்லப்படாதாகையால் முடி மன்ன

னென்றாள். பிறந்தகத்துக்கும் புக்ககத்துக்கும் புகழ் கெடப்படா தென்றெண்ணியே அவள் அவ்வணிகன் கேட்ட ஐ வினாக்களுக்கும் தனித்தனி விடைகூறாமல் பொதுவாக முன்னை வினையின் பயனால் முடிமன்ன னென்னை இவ்விருங் கானிற் பிரிய அழுகின்றே னென்றாள். இதனால் அவளை அவன் அரசி யென்றும் வனத்தில் கணவனைப் பிரிந்தழுகின்றாளென்றுங் கண்டுகொண்டமை காண்க. ஏனையவற்றை அவன் கூறாதொளித்தமை 'ஒப்புரவொழுகு' என்றபடி உலகநடைக் கிணங்கினமையா லென்க. இதுவே புகழேந்தியார் கொள்கை. (௬௫ ௨)

[தமயந்தியை யவ்வணிகன் சேதி நகர்க்குச் செல்ல விட்டுப் போனா னெனல்.]

சேதி நகர்க்கே திருவைச் செலவிட்டப்
போதிற் கொடைவணிகன் போயினான் — நீதி
கிடத்துவான் மன்னவர்தங் கீர்த்தியினைப் பார்மேல்
நடத்துவான் வட்டை நடந்து.

(ப - ரை) நீதி கிடத்துவான்-ஒழுக்கத்தை நிலைநிறுத்துபவனும், மன்னவர்தம் கீர்த்தியினை பார்மேல் நடத்துவான் - அரசர்களுடைய புகழை இந்நிலவுலகில் பரவச் செய்பவனுமாகிய, கொடை வணிகன்-ஈவிரக்கமுள்ள அவ்வர்த்தகன், திருவை சேதி நகர்க்கு ஏ செல்லவிட்டு-திருமகள் போன்ற தமயந்தியைச் சேதி நாட்டுத் தலைநகரத்துக்குப் அபோதில்வட்டைநடந்துபோயினான்-பிறகு (தன் வாணிபங் கருதி) வழிநடந்து போனான்.

(க - ரை) தமயந்தியை அவ்வணிகன் அருமையாய் அழைத்துக்கொண்டுபோய்ச் சேதி நகர்க்குச் செலுத்திப் பிறகு தன் வாணிபங் கருதி வழி நடந்து போனான்.

(வி - ரை) சேதி நகர் - சேதியின்நகர் - சேதி நாட்டுத் தலைநகர்; இங்குத் தமயந்தியின் சிற்றன்னை வாழ்ந்திருந்தாள். திரு-

தமயந்திக் காகுபெயர். அப்போதில் என்பதை தமயந்தி தன் வரலாற்றைச் சொன்ன அக்காலத்தில் என்பாரு முளர்; அப்போதில் என்பதற்கு அப்படிச் சொன்னபிறகு அல்லது அப்படி விட்ட பிறகு என்பதே சரியான பொருளாம்; அப்படி விட்டவுடனே எனினுமாம். கொடை யென்ப திங்கு ஈவிரக்க முதலிய உயர் குணங்களைக் காட்ட வெழுந்தது. கிடத்துவான் - தவறாமல் நிலை நிறுத்துவான். நீதிமான்-ஆங்காங்குச் சென்று பண்டமாற்றுவானுகையால் அவ்வவ்வரசர் புகழையும் போற்றுவா னென்க. வட்டையென்பது வாட்டை அல்லது பாட்டையின் குறுக லென்க. வாணிகஞ் செய்வார்க்கு வாணிபம் பேணிப் பிறவுந் தமபோற்கொளின என்றதனல் நீதி-கிடத்துவா னென்றார். (௩௩௫)

[சேதி அரசிக்குச் சேடியர், "யாரோ ஒருத்தி அரையில் அரையாடையோடு அழுதபடியே நிற்கின்றாள்" என்று ரேனல்.]

அற்ற துகிலும் அறாதொழுகு கண்ணீரும்
உற்ற துயரு முடையாளாய்—மற்றொருத்தி
நின்றாளைக் கண்டே நிலவேந்தன் பொற்றேவி
என்றார் மடவா ரெடுத்து.

(ப - ரை) மடவார் - சேடியர், நிலம் வேந்தன் பொன் தேவி-சேதி நாட்டரசனுக்கு அருமையான நாயகியே!, அற்ற துகிலும் அறாது ஒழுகும் கண் நீரும் - குறையாடையும் குறையாது வடிகின்ற கண்ணீரும், உள்ள துயரும் உடையாளாய் - பொருந்திய துன்பமும் உடையவளாகி, நின்றாள் ஒருத்தியை கண்டேம் என்றார் - நின்றவளாகிய ஒருத்தியை (இந்நகர்க் கேடியிற்) பார்த்து வந்தோம் என்றெடுத்துச் சொன்னார்கள்.

(க - ரை) சேடியர், சேதி அரசியை நோக்கி, "அம்மணி! இந் நகர்க் கோடியி லொருத்தியைக் கண்டோம். அவள் குறைந்த ஆடையும் குறையா தொழுகுங் கண்ணீருமாய் நிற்கிறாள்," என்றார்கள்.

(வி-ரை) மற்று-அசை நிலை. அற்ற துகில்-அறுத்த ஆடை. றை கூறை. அருது-இடையருது எனினுமாம். உற்ற-நேரிட்ட, டையி லெய்திய நிலம்-இங்கு சேதிநாட்டுக் காகுபெயர். பொன்-பான்போற்சிறந்த-அருமையாகிய. தேவி-மாதேவி-அரசனில்லும் டவுளில்லும் கோயிலாம்படி அரசன் மனைவியும் கடவுள் மனைவி ம் தேவிய ராவர். தேவி-மனைவி-நாயகி. மடம்+ஆர்-மடவார் - ணப்பெயர்-கற்படக்க முடையார்-இங்குச் சேடியர்க் காயிற்று. டுத்துக் கூறுதல் - வியப்பாக விண்ணப்பித்தல்-இறம்பூ தாவியம் ல். 'துணையிலான்-தமியன்-பேரழகி-இளையாள்-குறை கூறையள்-ழுத கண்ணள்-புதியள் - எவளோ அறிகிலேம்' என்றெடுத் தியம் னை ரென்க. ஒருத்தி நின்றனை என்பதற்கு நின்ற ளொருத்தியை ன மொழி மாற்றி இரண்டனுருபேற்றிப் பொருள்கோடலை யத்துணர்க. (௩௩௬)

சேதி யரசி, சேடியைநோக்கி, "அப்பேர்ப்பட்டவளைஅழைத் துக்கொண்டுவா" என்று ளேனல். 7

போயகலா முன்னம் புனையிழையாய் பூங்குயிலை
ஆய மயிலை யறியவே—நீயேகிக்
கொண்டுவா வென்றுடன் கொவ்வைக் கனிதிறந்து
வண்டுவாழ் கூந்தன் மயில்.

(ப-ரை) வண்டு வாழ் கூந்தல் மயில்-வண்டுகள் தங்கும் (பூ முடித்த) தலைமயிரை யுடைய பெண் (ணரசியாகிய சேதிராசன் மனைவி, தனக் கருகிருந்த தோழி யொருத்தியை நோக்கி), கொவ்வை கனி திறந்து-தன் கோவைப்பழம் போன்ற வாயைத் திறந்து, புனை இழையாய்-அலங்கரிக்கும் ஆபரணம் அணிந்தவளே!, பூ குயிலை ஆய-அவ்வழகான குயிற் குரலுடையாளை (க்கேட்டுத்) தேரவும், மயிலை அறிய-(அவ்வழகான) மயிற்சாய லுடையாளை(ப்பார்த்துத்) தேறவும், போய் அகலாத முன்னம் நீ ஏகி கொண்டுவா என்றுள்-(அவள்) போய் விடுவதற்கு முன்னமே நீ போய் (அவளை யிங்கு அழைத்துக்) கொண்டுவா என்று கட்டளையிட்டாள்.

(க - ரை) சேதியரசி சேடியை நோக்கி, "ஏ தோழி! அவளை நான் இன்றென்று தெரிந்துகொள்ளவேண்டும். ஆகையால் அவளை நீ இப்போதே போ யழைத்துக்கொண்டுவா" என்று கட்டளை யிட்டாள்.

(வி - ரை) 'அவள் போய்விடு முன்னே நீ விரைந்து சென்று அவளை அழைத்துக்கொண்டு வா' என்றுளென்பது தோன்றவே 'போயகலா முன்னம்' என்றார். புனையிழையாய்-அணியிழையாய் - ஆபரணம் அணிந்தவளே எனினுமா. பூங்குயிலை ஆய்என்றதனால், குயிற் குரலிற்பேசும் அவள் வாய்மொழியைக் கேட்டுத் தேரவென்றும், மயிலை அறியஎன்றதனால், மயிற் சாயலையுடைய அவளழகை நேரிற் கண்டு தேற (தெளிய)வென்றும் கொள்க. முறையே காதிற் கேட்டுங் கண்ணிற் கண்டுந் தேர்ந்து தெளிகலே இங்குக் குறித்த படியாம். கொவ்வைக்கனி- இங்கு வாய்க் கிருபெயரொட் டாகு பெயர். குயில்மயில் என்பனவும் ஆகுபெயர்களேயாம். புனையிழை - அன்மொழித்தொகை. ஆயமயிலை என்பதற்கு அப்படிப்பட்ட பெண்ணை யென்பாருமுளர். (கஙௌ)

[தமயந்தியைக் கண்ட சேதி யரசி, ஏ மாதரசி! உள்ளதை உரை" என்று உசாவினு ளெனல்.]

அந்தா மரையி லவளேயென் றையுற்றுச்
சிந்தா குலமெனக்குத் தீராதால்—பைந்தொடியே
உள்ளவா றெல்லா முரையென்று ளொண்மலரின்
கள்ளவார் கூந்தலாள் கண்டு.

(ப - ரை) ஒண்மை மலரின் கள்ள வார் கூந்தலாள்கண்டு-அழகான பூத்தே னொழுகும் நீண்ட தலைமயிரையுடைய சேதியரசி (தமயந்தியைப்) பார்த்து (அவள் பேரழகியாயிருந்தமையால்), அம் தாமரை மலரில் அவளே (இவள்) என்று-அழகான தாமரைமலரில் வீற்றிருக்குஞ் சீதேவியே இவளென்று துணிந்து, (பிறகு அவள் கண்ணிமைத்தல் முதலிய குறிகளை உற்று நோக்கி) ஐயுற்று - (மனிடப்

பெண்தானோ என்று) மனங்கலங்கி, பசுமை தொடியே! - பசும் பொன் வளைகளை யணிந்தவளே!,(நீ உண்மை உரையாயாயின்) சிந்தாகுலம் எனக்கு தீராது-மனக்கலக்கம் என்னைவிட்டு நீங்காது,(ஆகையால்) உள்ள ஆறு எல்லாம் உரை என்றாள்-உள்ளது உள்ளபடி (உன் வரலாறெல்லாவற்றையும் ஒளியாமல்) சொல் என்று கேட்டாள்.

(க-ரை) தமயந்தியைக் கண்ட சேதியரசி அவளழகின் மயங்கித் திருமகளோ என்றையுற்று, "ஏ மாதரசி! உள்ளதை ஒளியாமல் உள்ளபடி உரை" என்று உசாவினாள்.

(வி-ரை) அந்தாமரையிலவளே யென்பதற்கு அந்தாமரையிலவளோ என் றைய வினாவாக்கிப் பொருள் கோடலுமாம்; அந்தாமரையிலவள்தானோ இவள் என்று மனங்கலங்கி என்பது பொருள். சிந்தாகுலம்-வடமொழி நீட்சி : சிந்தா+ஆகுலம். சிந்தை - தமிழ் மொழி. ஆல்-அசை. முதலேகாரம் தேற்றம், இரண்டாவது விளி. கள்ள, உள்ள முறையே பொருளடியாகவும் பண்படியாகவும் பிறந்த குறிப்புப் பெயரெச்ச வினைகள். கள்ள-கள்ளையுடைய-கள்ளொழுகும்-தேனொழுகும். பைந்தொடி-அன்மொழித்தொகை. (கடு)

[அதற்குத் தமயந்தி, "காட்டி லென்னைத் தனியே விட்டுச் சென்ற தலைவனைத் தேடி இங்கு வந்தேன்" என்றனள்.]

என்னைத் தனிவனத்திட் டெங்கோன் பிரிந்தேக
அன்னவனைக் காணு தலமருவேன்—இந்நகர்க்கே
வந்தே னிதுவென் வரவென்றாள் வாய்புலராச்
செந்தேன் மொழிபதறச் சேர்ந்து.

(ப-ரை) (சேதியரசியை நோக்கித் தமயந்தி) வாய் புலரா செம்மை தேன் மொழி பதற சேர்ந்து-வாயுலர்ந்து சிவந்த தேன் போலும் சொற் றவறி நெருங்கி, என்னை தனி வனத்து இட்டு எம் கோன் பிரிந்து ஏக-என்னை ஒன்றியாகக் காட்டில் விட்டு எந்தலைவன்

பிரிந்து போனதனால், அன்னவனை காணாது அலமருவேன்-அவ னைக் காணாமல் அலையும் நான், இநகர்க்கு வந்தேன்-இப்பட்டண துக்கு வந்தேன், இது என் வரவு என்றாள்-இதுதான் நான் இங்கு வந்த வரலாறு என்று சொன்னாள்.

(கு - ரை) "காட்டில் என்னை ஒன்றியாய் விட்டு எந்தலைவன் பிரிந்துபோனதனால், அவனைக் காணாமல் அலையும் நான் இங்கு வந் தேன்; இதுதான் என் வரலாறு" என்றாள் தமயந்தி.

(வி - ரை) எம்+கோன் - எங்கோன். இங்கு எம் என்றது தன்னையு மக்களையுங் கூட்டி. அலமரல்-தவித்தல், திரிதலெனினு மாம். அன்னவன்-இடைச்சொற் குறிப்பு வினைப்பெயர். அலமரு வேன் - அலமந்துகொண் டிருக்கின்றேன் என்னும் பொருட்டு இன்னும் காரியம் முற்றவில்லை - நிகழ்ந்துகொண்டிருக்கின்றது அலைந்துகொண்டிருப்பவளாகிய நான் என்று பொருள்படுவதால் வினையாலணையும் பெயர், எதிர்காலத்தது; இதற்கு அலமா, பகுதி, தா - தரு வென்றாவதுபோல, அலமா, அலமரு வென்று மாகும். வரவு-வரலாற்றுக் காகுபெயர். சேதியரசியைத் தமயந்திக்குத்தெ ரியுமாயினும், இவள்உருக் குலைந் திருந்ததால் இவளை அவளுக் கின் னாளெனத் தெரியவில்லை, இவளு நிலை தவறி யிருந்தா ளாகையால் தன்பிறந்தகம் புக்ககங்களைத் தெரிவிக்கவில்லை. 141,144-ஞ்செய்யுட் களின்படி புரோகிதனால் பிறகெல்லாம் விளங்கின வெனக் கொண் டது கவிநயம். (௧௩௧)

["உன் தலைவனை நாங்கள் தேடித் தருமளவும் நீ இங்கேயே இரு" என்றாள் சேதியரசி யெனல்.]

உன்றலைவன் றன்னை யொருவகையா னாடியே
தந்து விடுமளவுந் தாழ்குழலாய்—என்றனுடன்
இங்கே யிருக்க வினிதென்றா ளேந்திழையைக்
கொங்கையுந் தாராள் குறித்து.

(ப - ரை) கொங்கையுந் தாராள் ஏந்து இழையை குறித்து-மணந் தங்கும் மலர்மாலை பூண்ட சேதி நகரத் தரசி தமயந்தியை

நோக்கி, தாழ் குழலாய்-நீண்டு தொங்குகின்ற கூந்தலையுடையவளே! உன் தலைவன் தன்னை ஒருவகையால் நாடி தந்து விடும் அளவும் - உன் நாயகனை (நாங்கள்) ஒருவிதத்தில் தேடிக் கொண்டுவந்து உன்னிடத்திற் சேர்க்கும் வரையில், என்தனுடன் இங்கே இனிது இருக்க என்றாள் - என்னோடுகூட இம்மாளிகையிலேயே இன்பமாயிருக்கக் கடவா யென்று வேண்டினாள்.

(க - ரை) சேதியரசி தமயந்தியை நோக்கி, "அம்மே! உன் நாயகனை நாங்கள் ஒருவாறு தேடிக் கொண்டுவந்து உன்னிடத்திற் சேர்க்கும் வரையில் இங்கேயே நீ தங்கியிரு'' என்றாள்.

(வி - ரை) ஒருவகை + யான் + நாடியே எனப் பிரித்து ஒருவாறு நான் தேடி எனப் பொருள் கொள்ளுவாரு முளர்; இது பொருந்தாது. தந்து விடுதல்-கொண்டுவந்து சேர்த்தல். தாழ்குழல்-வினைத்தொகையடி யன்மொழி; குழற்குத்தாழ்ச்சி. நீட்சியென்க. நாடியே என்பதில் ஏகாரம் அசை; உன்னைப்போலவே நாங்களும் நாடித்தான் உன் கணவனைக் கொண்டுவந்து விடவேண்டும் என்று பொருள் கொளின் தேற்றமுமாம். அப்படி நாங்கள் நாடுவதற்கு நாளாகும்; அதுவரையில் நீ இங்குத் தங்கித்தான் ஆகவேண்டும் என்றாளென்பதைக் குறிப்பிற் கொள்க. இங்கே யென்பதில் ஏ தேற்றம் - பிரிநிலை யெனினுமாம். இருக்க இனிது என்பதற்கு நீ இருந்தால் அஃதெனக்கு நல்லது என்பதூஉ மொன்று கொங்குதேன் மணமென்க. இனிது இருக்க என்பதில், இனிது குறிப்பு முற்றெச்சம்; வினைக்குரிமை பூண்டது. ஏந்திழை-அன்மொழித் தொகை; இழை ஏந்தி-நகை தாங்கி-அணிகளைச் சுமப்பவள். (கசO)

[வீமராசன் நள தமயந்தியரைத் தேட வேதியனை விடுத்தானெனல்.]

சங்கிவளிவ் வாறிருப்ப வின்னலுழந் தேயேகிப்<br>
பூங்குயிலும் போர்வேற் புரவலனும்—யாங்குற்றார்<br>
சென்றுணர்கி யென்று செலவிட்டான் வேதியனைக்<br>
குன்றுறழ்தோள் வீமன் குறித்து.

(ப - ரை) ஈங்கு இவள் இ ஆறு இருப்ப-இந்தச் சேதியம் பதியில் தமயந்தியின் சேதி இப்படி இருக்க, குன்று உறழ் தோள் வீமன் குறித்து-மலையொக்க தோள்வலியுள்ள வீமராசன் (நள தமயந்தியரைச்) தன் மனதில் நினைத்து, பூ சுயிலும் போர் வேல் புரவலனும் இன்னல் உழந்து எங்கு யாங்கு உற்றார்!-அழகான குயிற் குரற் றமயந்தியும் சண்டையிற் சிறந்த வேலேந்தும் அரசனாகிய நளனும் துன்ப நுகர்ச்சபடியே போய் எங்குச் சேர்ந்தார்கள், சென்று உணர்தி என்ற வேதியனை செல்லவிட்டான்-போய்த் தெரிந்துவா வென்று பார்ப்பா னொருவனைப் போக்கினான்.

(கு - ரை) "நள தமயந்தியர் துன்ப நுகர்ந்தபடியே தூரத்தில் எங்குற்றார்கள்! நீ போய்த்தருவிவா" என்று வீமராசன் வேதிய னொருவனைச் செலுத்தினான்.

(வி - ரை) இங்கி னீட்சி ஈங்காகும்; அங்கு உங்கு என்பனவற்றையும் இங்ஙனமே கொள்க. இருப்ப, இருக்க-வினையெச்சம்; இருப்ப என்பதில் அகரவிகுதி நிகழ்காலப் பொருட்டு புரவல்+அன்-தொழிலடிப்பெயர்-காத்தலையுடையவன் - வேறுபிரித்துக் காத்தலில் வல்லவ னென்பாரு முளர். யாங்கு-எங்கு, யாவினா. உணர்தி-ஏவலொருமை. இவ்விகுதி எதிர்காலப் பொருட்டு. புரவலன் நளதமயந்தியரைச் சென்றுணர்தி யென்று வேதியனைச் செல்லவிட்டானென்று ஒட்டுக. இங்குத் தமயந்தி இருக்கை சேதியரசிக்குத் தெரியாது. இவளே அவள், வேறெவளோ வேந்தன் மனைவி யென்றெண்ணியிருந்தா ளென்பதே கவியின் கொள்கை. இக்கவி சில பிரதிகளிலில்லை. உண்மை வரலாற்றை உரைக்குக் கூசுபவரை வற்புறுத்திக் கேளாமையே உயர்குடிப் பிறந்தார்க் கொழுங்காம். (௧௪௪)

[நள தமயந்தியரை எங்குந் தேடிக் காணுத வேதியன் சேதி நாட்டைச் சேர்ந்த னெனல்.]

ஓடும் புரவித்தேர் வெய்யோ னொளிசென்று
நாடு மிடமெல்லா நாடிப்போய்க்—கூடினான்
போதிற் றிருநாடும் பொய்கைத் திருநாடாஞ்
சேதித் திருநாடு சென்று.

(ப - ரை) (வேதியன்) ஓடும் புரவி தேர் வெய்யோன் ஒளி சென்று நாடும் இடம் எல்லாம் நாடி போய்-விரைந்தோடுகின்ற குதிரைகள் பூட்டிய தேரையுடைய சூரிய வெளிச்சம் போய் நுழையுமிட மெங்கெங்குந் தேடிக்கொண்டே வழிகடந்து, போதில் திருநாடும் பொய்கை திரு நாடுஆம் சேதி திருநாடு சென்று கூடினான் - தாமரை மலரில் வாழும் திருமகள் விரும்புங்குளங்களையுடைய செல்வஞ் சிறந்த நாடாகிய சேதி யென்னும் அழகான நாட்டிற் போய்ச் சேர்ந்தான்.

(க-ரை) நள தமயந்தியரைச் சூரிய னொளி நுழையுமிட மெங்கெங்குந் தேடிக் காணாத வேதியன் கடைசியாகச் சேதி நாட்டைச் சேர்ந்தான்.

(வி - ரை) ஓடும்—வாவும் - வேகமாய் அந்தரத்திற் பாயும். பொய்கை-அத்தனை அழகாய்த் தனக்குகந்த தாமரைத் தவிசுகள் நிரைந்து நிறைந்திருப்பதால் திருமகள் அதிலேயே நாட்டமாயிருப்பாளென்க. வெம்மை + ஓன்-வெய்யோன்; ஓன்-விகுதி. ஆன் -விகுதியின் திரிபு. கண்டார்-கண்டோ ரென்புழிப்போல. போய் என்பதற்கு வழிநடந்து கடந்து எனப்பொருள்கோடலு மொன்று. சேதித்திருநாடு சென்று கூடினான் என்பதற்குச் சேதித் திருநாட்டைப் போய்ச்சேர்ந்தான் என்றுபொருள்கொளினுமாம். நாட்டிற் போய்ச் சேர்ந்தானென்பதற்கு நாட்டில் போய் அதனகரத்தைச் சேர்ந்தானென்க. போதின் திருநாடும் என்பதற்கு (ப்பொய்கையிலுள்ள) தாமரை மலரைத் திருநாடு மென்பர் தெரியாதார் - இயற்கையாகவேதான் இருக்குந் தாமரை மலர் இப்பொய்கை மலர்களுக்கிணையாகா தென்று அதை விடுத் திவைகளை நாடி வீற்றிருப்பா ளென்க. உயர்வுநவிற்சியை உய்த்துணர்க. (௧௨௨)

[அங்நின்ற தமயந்தியை அவளென் றறிந்த வேதியன் அழ, அவளும் அழுதா ளெனல்.]

தாமஞ்சே ரோதித் தமயந்தி நின்றாளை
ஆமென் றறியா வருமறையோன்—வீமன்
கொடிமேல் விழுந்தழுதான் கொம்புமவன் செம்பொன்
அடிமேல் விழுந்தா ளழுது.

(ப - ரை) அருமை மறையோன்-(தேடிச்சென்ற உயர்)மறை யுணர்ந்தவேதியன், நின்றாளை தாமம் சேர்ஓதி தமயந்தி ஆம் என்று அறியா-அரண்மனையில் நின்றுகொண்டிருந்தவளை மலர்மாலை சூடிய கூந்தலழகியாகிய தமயந்தியேயா மென் றறிந்துகொண்டு, வீமன் கொடிமேல் விழுந்து அழுதான்-வீமராசன் மகளாகிய பூங்கொடி போன்ற அந்த தமயந்தியின்மேல் (இரக்கமாய்)கீழேவிழுந்து புலம் பினான்,கொம்பும் அவன் செம்மை பொன் அடிமேல் அழுது விழுந் தாள்-அப் பூங்கொம்புபோல்வாளும் அவனுடைய சிவந்த பொன் போன்ற பாதங்களில் அழுதபடியே விழுந்தாள்.

(க - ரை) அங்நின்ற தமயந்தியை அவளே யென்றறிந்த வேதி யன் அவன்மேல் இரங்கிக் கீழே விழுந்தழுதான். அவளும் அழுது கொண்டே அவனடிகளில் விழுந்தாள்.

(வி - ரை) நின்றாளை-வினையாலணையும் பெயர். 'தமயந்தி ஆம்' என்பதற்குத் தமயந்தியேயாவாளென னுமாம். அறியா - செய்யா வென்னும் வாய்பாட்டது. அருமை - உணர்தற் கருமையானது; உணர்தற் கருமையான மறைப் பொருளை உணரும் உரவுடையோ னாகையால், சிற்றன்னையினாலும் இன்னளென அறிந்துகொள்ள லாகாத் தமயந்தியைக் கண்டமாத்திரையிலேயே அவளேயா மென் றிந்துகொண்டனென்பது தோன்றவே அருமறையோ னென்றார். கொடி கொம்புகள் - ஆகுபெயர்கள். விழுந்தழுதா னென்பதை அழுதுவிழுந்தா னென மாற்றுவர்சிலர். விழுந்தாளழுது என்பதை இயும் விழுந்தழுதா ளென்பர் வேறு சிலர். கடையடியை அடிமேல் விழுந்தழுதா ளாங்கு என்ற பாட மோதுவாருமுளர். (௩௬௩)

[வேதியனுந் தமயந்தியும் விசனமுற்றுப் புலம்புகையில் நகர மாந்தர் செயலற்று ரேனல்.]

மங்கை விழிநீர் மறையோன் கழல்கழுவ
அங்கவனறன் கண்ணீ ரவளுடன்மேற்—பொங்கக்
கடல்போலுங் காதலார் கையற்றார் தங்கள்
உடல்போலு மொத்தா ருயிர்.

(ப - ரை) மங்கை விழிநீர் மறையோன் கழல் கழுவ-தமயந்தியின் கண்ணீர் அந்த வேதியனடிகளை யலம்பவும், அங்கு அவன் தன் கண் ீர் அவள் உடல்மேல் பொங்க—அப்போது அவனுடைய கண்ணீரும அவளுடலின்மேற் பெருகி ஓடவும், கடல் போலும் காதலார் கையற்றார் - கடல்போல் அளவற்ற சுற்றத்தாரும் (அது கண்டு ஒன்று கூடி) செயற்கையற்று நின்றார்கள், தங்கள் உடல் போலும் உயிர் ஒத்தார் - (அசையாப் பொருள்களாகிய) தத்தம் உடம்புகளைப் போலவே உயிர்களும் (அசைவறப்) பொருந்தி யிருந்தார்கள்.

(க - ரை) தமயந்தியும் வேதியனும் புலம்புகையில் அளவற்ற உற்றார் ஒன்று கூடி உடலைப் போலவே உயிரும அசைவறப் பொருந்திச் செயறகையற்றிருந்தார்கள்.

(வி - ரை) அங்கு என்பதை அசை யென விலக்குவாரு முளர்; இங்கது இடத்தைக் குறியாது காலத்தைக் காட்டுவதைக் காண்க. கணணீர்க் கிறுதியில் எச்சவும்மை தொக்கது. காதலார் என்பதற்கு நகரமாந்த ரென்பாரு முளர்; உற்றார் என்பதே உசிதமாம். கை யறுதல் - செயற்கை யறுதல். உயாறுதல் - உயிரற்ற உடலுடையா ரென வாதல். உடல்போலும என்பதிற் போலும் என்பதை அசை யென வகற்றுவாரு முளர்; அகற்றி, 'தங்களுடலை உயிரொப்பாகித் துன்பமுற்றார்க'ளென்பர். இதினும் "தங்கள் உயிரானது (அசையாப்பொருளாகிய) உடலைப்போலவே செயற்கை யற நின்றார்கள்" என்பது ஏற்றமா மென்க. வேதியன் இன்னு

னென அறிவராகலான் சேதி நகரத்தார், அவன் சேதி தெரிந்த வுடன் உண்மையுணர்ந்து ஒன்றுகூடி ஒன்றுந் தோன்றாமல் செயற்கையற்று நின்றாரென்ற படியாம். (௧௬௩)

[வேதியன் சேதி யரசியை நோக்கி, "அம்மணீ! உன் மகள் பட்ட பாட்டைப் பார்த்தையா!" என்று னெனல்.]

மாரி பொருகூந்தன் மாதராய் நீபயந்த
காரிகைதான் பட்டதுயர் கண்டாயோ—சோர்குழலும்
வேணியாய் வெண்டுகிலும் பாதியாய் வெந்துயருக்
காணியாய் நின்றா ளயர்ந்து.

(ப - ரை) (வேதியன்) மாரி பொரு கூந்தல் மாதராய்-மேகம் போற் கரிய கூந்தலையுடைய பெண்ணரசீ!, நீ பயந்த காரிகை பட்ட துயர் கண்டாயோ-நீ பெற்ற பெண்ணாகிய இவள் பட்ட துன்பத்தைப் பார்த்தாயோ?, சோர் குழலும் வேணி ஆய்-அவிழ்ந்து தொங்குங் கூந்தலுஞ் சடையாகி, வெண்மை துகிலும் பாதி ஆய்-(அரையிலுடுத்த) வெள்ளாடையும் அரையாடையாகி, வெம்மை துயர்க்கு ஆணி ஆய் அயர்ந்து நின்றாள்-கொடுந் துன்பத்துக்கு ஆதாரமாகி வருந்தி நின்றாள்.

(க - ரை) பார்ப்பான் சேதி நகரத்துப் பட்டத் தரசியை நோக்கி, "அம்மணீ! உன் மகள் பட்ட பாட்டைப் பார்த்தையா! கூந்தல் வேணியானாள்; அரையாடை யரையாடை யானாள்; அல்லலுக் காணியானாள்" என்றான்.

(வி - ரை) சேதியரசி தமயந்திக்குச் சிற்றன்னை யென முன்னமே தெரிவித்துள்ளோம். விதர்ப்ப தேச வேதியனைச் சேதி நகரத்தார் இன்னானென அறிவராகலான், அவன் வந்தசேதி தெரிந்த வுடனே அவர்களனைவரும் தமயந்தியைத் தமயந்தி யெனத் தெரிந்து கொண்டார்கள். அதற்கு முந்தி சேதி யரசியும் அவளை அவளென அறியாமல் யாரோவென் றெண்ணி யிருந்தா

னென்பது கவியின் கருத்து; இதுவே நாடகாலங்கார நய மென்பர் இதை வேறெண்ணிக் குற்றங் கூறுதல் கவி நய முணராக் கயவரிய ற்கை. தான்-அசைநிலை. வெண்மை - அரசிக்குத் தகாத ஆடை; கேவலமான கூறை. ஆணி யென்பதை உரையாணி யென்பர் சிலர்; அச்சாணி யென்பர் மற்றுஞ் சிலர்; வேர் என்பர் வேறு சிலர்; ஆதாரமென்பதே பொருத்தமாம். சுமைதாங்கி என்பது போலத் துயர்தாங்கி எனினுமமையும். (கசடு)

[சேதி யரசி தமயந்தியின் சேதி தேரிந்து, அவள்மேல் விழுந் தாதழுதா ளெனல்.]

தன்மக ளாவ தறியாத் தடுமாறுப் [மலரைக்
பொன்வடிவின் மேலழுது போய்வீழ்ந்தாள்—மென்
கோதிப் போய் மேதி குருகெழுப்புந் தண்பணைசூழ்
சேதிக்கோன் தேவி திகைத்து.

(ப - ரை) மேதி - எருமைக் கூட்டங்கள், மென்மை மலரை கோதி போய் குருகு எழுப்பும் தண்மை பனை சூழ் சேதி கோன் தேவி - மெல்லிய தாமரை மலர்களைத் தங் கொம்பாற் கொத்திக் கொண்டே போய் நாரைகளை யெழுப்பி யோட்டுகின்ற குளிர் வயல் சூழ்ந்த சேதி நாட்டரசனுடைய மனைவி, தன் மகள் ஆவது அறியா தடுமாறு திகைத்து - (அவ்வுரு) தன் மகளாகிய தமயந்தியா யிருத்தலை யறிந்து தத்தளித்துத் தியங்கி, பொன்மை வடிவின் மேல் அழுது போய் வீழ்ந்தாள் - அவளுடைய பொன் மயமாகிய உடலின் மேல் அழுதுகொண்டே போய் விழுந்தாள்.

(க - ரை) சேதியரசி தமயந்தியின் சேதி கேட்டு, அவளை அவளென் றறிந்து தத்தளித்துத் தயங்கி அழுதுகொண்டேபோய் வள்மேல் விழுந்தாள்.

(வி - ரை) அறியா, தடுமாறு இரண்டும் செய்யா வென் னும் வாய்பாட்டன, வடிவு - ஆகு பெயராய் உடலை உணர்த்திற்று

அழுது வீழ்ந்தா ளென்பதை வீழ்ந் தழுதா ளென மாற்றுவாரு முளர். கோதுதல்-கொந்துதல். குருகு நாரை முதலிய வெண் பறவைப் பொது; வெள் ளைக்கும் பெயர். ஆவது என்பது ஆகிறதென் றிருக்கவேண்டு மாயினும் தமிழ் வழக்கு; முக்கா லத்து மொத்தியல்வதை நிகழ்விற் செப்புவது தமிழ் மொழி யொழுங்கு. பொன் போலும் வடி வெனினும் பொருந்தும். பொன்வடி வென்பதை தமயந்திக்கு அன்மொழித்தொகையாக்கு வாரு முளர். (௧௪௬)

[மக்களைக் கண்டாயினுந் தமயந்தி மனந் தேறட்டுமேன் றவளைப் பிறந்தகம் போக்கினான் சேதி யரச னெனல்.]

கந்தனையுங் கன்னியையுங் கண்டா யினுஞ்சிறிது
தன் றுயரந் தீர்ந்து தணியாறத்—தந்தை
பதியிலே போக்கினான் சேதியர்கோன் பண்டை
விதியிலே போந்தாளை மீண்டு.

(ப - ரை) சேதியர் கோன் - சேதி நாட்டரசன், பண்டை வீதியில் போந்தாளை - முன்செய் தீவினையால் (தம்மிடத்து)வந்த தமயந்தியை, கந்தனையும் கன்னியையும் கண்டாயினும் - மகனையு மகளையும் பார்த்தாவது, தன் தனி துயரம் தீர்ந்து சிறிது ஆற - (அவள்) தன்னுடைய தனிமையின் துன்ப நீங்கிக் கொஞ்சந் தேறுதலடையும்படி, தந்தை பதியில் மீண்டு போக்கினான் - அவ ளுடைய தகப்பன் பட்டணமாகிய குண்டினபுரத்திற்குத் திரும் பிப் போகச் செய்தான்.

(க - ரை) தமயந்தி தன் மக்களைக் கண்டேனும் தனிமை யின் துயரந் தீரட்டுமென்று, சேதியர்கோ னவளை அவன் தந்தை நகரத்திற்குச் செலுத்தினான்.

(வி - ரை) மக்களி னிளமை நோக்கி அவர்களைக் கந்தன் கன்னி யென்றனர்; கந்தன் - இளையான். மூன்றாலதும்மை,

சிறப்பு. தன் துயர் தீர்ந்து தனி சிறிது ஆற என்பதூஉ மொன்று. தனி - தனிமை - ஒன்றி. ஏகார மிரண்டும் அசைநிலைகள். மீண்டு கந்தனையுங் கன்னியையுங் கண்டாயினு மென்று கூட்டினும் பொருந்தும். விதியிலே என்பது ஐந்தாவதன் ஏதுப்பொருட்டு; மூன்றாவதற்கு மயங்கிய தெனினுமாம. சேதி நாட்டரசன் தமயந்திக்குச் சிற்றன்னை கணவன் ஆகையால் சிற்றப்பன். கணவனைக் காணுமுன் தமயந்தியின் துயரம் முற்று மாறாதாகையால் 'கந்தனையுங் கன்னியையுங் கண்டாயினுஞ் சிறிது தன் துயரம் ஆற' என்றார்.

(௧௪௭)

[மக்களையுங் கைவிட்டு வனம்போன தமயந்தி வந்தபோது வீம னகர மயங்கிற் றெனல்.]

கோயிலு மந்தப் புரமுங் கொடிநுடங்கும்
வாயிலு நின்று மயங்கியதே—தீயகொடுங்
கானாள மக்களையுங் கைவிட்டுக் காதலன்பின்
போனாள் புகுந்த பொழுது.

(ப - ரை) தீய கொடுமை கான் ஆள மக்களையும் கைவிட்டு - தீமையாகிய கொடிய காட்டில் உழலத் தன் மகனையு மகளையும் பற்றறவிட்டு, போனாள் புகுந்த பொழுது - (கணவனோடு) போனவள் (தனியே) திரும்பி வந்து நுழைந்த காலத்தில், கோயிலும் அந்தப்புரமும் கொடி நுடங்கும் வாயிலும்-(வீமன்) அரண்மனையிலுள்ளவர்களும் அந்தப்புரத்தி லுள்ளவர்களும் கொடி பறக்கும் வாயிலிலுள்ளவர்களும், நின்று மயங்கியது - செயற்கையற நின்று திகைத்தார்கள்.

(க - ரை) மக்களையும் பிரிந்து தன் கணவனோடு தீக்கானகஞ் சென்ற தமயந்தி திரும்பிவந்து நுழைந்தபோது வீமன் அந்தப்புரம் அரண்மனை முதலிய இடங்களி லிருந்தார் திகைத்து நின்றார்கள்.

(வி - ரை) கோயில் — கோன் வாழு மிடம் - அரண்மனை இங்கிது இடவாகுபெயராய் அதி லுள்ளாரைக் குறித்தது. அந்தப்புரமும் வாயிலும் இப்படியேயா மென்றறிக. மயங்கினவே எனற்பாலது மயங்கியதே என வழுவமைதியாய்ப் பன்மையிலொருமை வந்தது. ஏகாரம் அசைநிலை. தீய என்பதற்கு நெருப்புப் போற் சுடு மெனினுமாம். கான் + ஆர் - காட்டில் தன்னெண்ணம் போலுழன்று திரிய. மக்களையும் என்பதில் உம்மை சிறப்பு. காதலன் - கணவன் இங்கு நளனுக்கு வந்தது. போனான் - இறந்தகால வினையாலணையும் பெயர். கொண்டானின் றுணையிய கேளிர் பிறரில்லை யென்றபடி உறுதிகொண்டு கணவனோடு கானகஞ் சென்றவளாகையால் தமயந்தியைக் காண வீமனரண்மனையார் பலரும் இறும்பூதெய்தித் திரண்டனர் என்று கொள்க.

[அன்புடையா ரனைவரும் கடல்நீர்போ லிரைந்து வந்து தமயந்தியைச் சூழ்ந்துகொண்டா ரெனல்.]

அழுவார் விழுவா ரயிர்ப்பா ருயிர்ப்பார்
தொழுவார் தமரெங்குஞ் சூழ்வார்—வழுவாத
காமநீ ரோதக் கடல்கிளர்ந்தா லொத்ததே
நாமவேல் வீம னகர்.

(ப - ரை) தமர் - (தமயந்தியின்) உற்றார் உறவினர், அழுவார் விழுவார் அயிர்ப்பார் உயிர்ப்பார் தொழுவார் எங்கும் சூழ்வார் - அழுகின்றவர்களாகியும் விழுகின்றவர்களாகியும் அனுமானிக்கின்றவர்களாகியும் பெருமூச் செறிகின்றவர்களாகியும் தொழுகின்றவர்களாகியும் நாற்புறமும் வந்து சுற்றிக் கொள்பவ ரானார்கள், (அப்படி யானதனால்) நாமம் வேல் வீமன் நகர் - பகைவர்க் கச்சந்தரும் வீர வேலேந்திய வீமராசனது குண்டினபுரம், வழுவாத காமம் நீர் ஓதம் கடல் கிளர்ந்தால் ஒத்தது - தவறாத அன்பு நீர் வெள்ளம் நிறைந்த கடல் பொங்கி யெழுந்ததுபோ லிருந்தது.

(க - ரை) சுற்றத்தார்களிற் சிலர் தமயந்தியைச் சூழ்ந்து அழுகிறார்கள்; சிலர் பெருமூச்சு விடுகிறார்கள்; சிலர் தொழுகிறார்கள்; சிலர் எழுகிறார்கள். இப்படி அன்பு நீர்க்கடல்பொங்கியதுபோலிருந்தது வீம னகரம்.

(வி - ரை) அழுதல், அவள் நிலை கண்டு; விழுதல், விசனந் தாளாமல்; அயிர்த்தல், அவளுரு மாறித் தோன்றியதால்; உயிர்த்தல், இவளுக்கும் இப்படி வருமா! என்று; தொழுதல், கடவுளே இவளைக் கா வென்று; சூழ்தல், அவள் போய்விடப் போகிறாளெ ன்று கொள்க: இயல்பினால் அழுவார் முதலியவைக ளெதிர்கால மாயின. வழுவாத - குறையாத வெனினுமாம். காமம் + நீர் - இரு பெயரொட்டு. நாம் - அச்சம். நாம் + அ - நாம; அகரம் சாரியை. தமர் என்பதை ஏழாம் வேற்றுமையாக்கிச்சுற்றத்தாரிற் சிலர் அழுவார், சிலர் விழுவார், சிலர் அயிர்ப்பார், சிலர் உயிர்ப்பார் எனினுமாம். உம்மை முற்றும்மை. தாம் + அர் - தமர்; முற்குறுகி, அர் விகுதி யேற்றது. (௧௭௩)

[தந்தையைக் கண்ட தமயந்தி யவன் தாமரை யடிகளில் வீழ்ந் தழுதா ளெனல்.]

தந்தையைமுன் காண்டலுமே தாமரைக்கண்ணீர் [சொரியச்
சிந்தை கலங்கித் திகைத்தலமந்—தெந்தாயான்
பட்டதே யென்னப்போய் வீழ்ந்தாள் படைநெடுங்கண்
விட்டநீர் மேலே விழ.

(ப - ரை) (தமயந்தியின்) தந்தையை முன் காண்டலும் - தகப்பனை யெதிரிற் கண்டவுடனே, தாமரை கண் நீர் சொரிய - தாமரை மலர் போன்ற கண்கள் நீரைப் பொழிய, சிந்தை கலங்கி திகைத்து அலமந்து - மனங் கலங்கித் திக்பிரமையாய் மயங்கி, எந்தாய் - என்னப்பனே!, யான் பட்டதே என்ன - அடியேன் பட்ட பாட்டைப் பார்த்தீர்களா என்று சொல்லி, படை நெடுமை

கண் விட்ட நீர் மேலே விழ போய் வீழ்ந்தாள் - வேலாயுதம் போன்ற நீண்ட கண்கள் விட்ட நீர் அவன் மேல் விழும்படி பிரலாபித்துக்கொண்டே போய் (அவனடிகளில்) விழுந்தழுதாள்.

(க - ரை) தன் தந்தையை யெதிரிற் கண்ட தமயந்தி, "ஐயனே! யான் பட்ட பாட்டைப் பார்த்தையா?" என்று பிரலாபித்துக் கொண்டே போய், அவனடிகளில் விழுந்தழுதாள்.

(வி - ரை) கண்டலும் - இறந்தகால வினையெச்சம். தாரைக்கண்-உவமைத்தொகை. பட்டதே என்பதற்குப் பட்ட இதைப் பார்த்தீரா? அல்லது யான் பட்ட பாடு இப்படிய இருந்ததல்லவா? என் பாடு இப்படியும் ஆய்விட்டதல்லவா? என்று பொருடாலாம் ஏகாரம் இரக்கற்பொருட்டு. யான் பட்டது இது-இத் துன்பமென் பாரு முளர். அவள் அழுத அவசரத்தில் அவன் அடிகளிற் கண்ணீர் விழுந்த தென்க. கூட்டமா யிருந்ததால் தாய் வர நாணித் தாழ்த்திருக்கத் தந்தையை முதலிற் கண்டாள் தமயந்தி யென்று பொருள்கொளுவோர், முன் னென்பதற்கு முதலி லென்று பொருள் வகுப்பர். எந்தாய்-எந்தை என்பதன் விளி. (கூ0)

[தமயந்தியைக் கண்ட தாய் தந்தையர் நா வறண்டு உடலோய்ந்து தவித்தா ரெனல்.]

செவ்வண்ண வாயாளுந் தேர்வேந் தனுமகளை
அவ்வண்ணங் கண்டக்கா லாற்றுவரோ—மெய்வண்ணம்
ஓய்ந்துநா நீர்போ யுலர்கின்ற தொத்ததமர்
நீந்தினார் கண்ணீரி னின்று.

(ப — ரை) செம்மை வண்ணம் வாயாளும் தேர் வேந்தனும்- செந்நிறமாகிய வாயையுடைய வீமன் மனைவியும் தேருரும் அரசனாகிய வீமனும், மகளை அ வண்ணம் கண்டால் ஆற்றுவரோ?-தம் மகளாகிய தமயந்தியை அந்நிலைமையிற் கண்டால் பொறுப்பார்களோ?, மெய் வண்ணம் ஓய்ந்து நா நீர் போய் உலர்கின்றது -

(அவர்களுடைய) உடல் நிலை தளர்ந்து நாக்கு நீர்சுண்டி வறள்கிறது, ஒத்த தமர் கண் நீரில் நின்று நீந்தினார் - அவர்களுக்கு அன்பின் மன மொத்த உறவினர் அவ்விருவருடைய கண்ணீர் வெள்ளத்தில் நிலைத்துப் பின் நீந்திக்கொண்டிருந்தார்கள்.

(க - ரை) தமயந்தியைக் கண்ட தாய் தந்தையர் உடலோய்ந்து நா வறண்டு ஏங்கினார். அவர்களுடைய சுற்றத்தார், அவர்களுடைய கண்ணீரில் நிலைத்து நின்று, பிறகது பெருகி நிலையாமையால் அதில் நீந்திக்கொண்டிருந்தார்கள்.

(வி - ரை) அன்பிற்றாய் சிறந்தவளாகையால், செவ்வண்ண வாயாளும் என்று முதலிற்கூறினார். அரையாடையரை யாடையாய் உடலின் மாசேறித் தலைமயிர் சடையாயிருந்தாள் தமயந்தி யென்று முன்னே கூறியவண்ண மென்பார் அவ்வண்ண மென்றார். நாவில் நீரூறுதலின்றி அது வறள்கின்ற தெனினுமாம். ஒத்த தமர் - மன மொத்த அன்புடையாராகிய உறவினர். கண்ணீர்க் கடலில் முதலில் நிலைத்துப் பிறகு நிலையாமல் நீந்தினரெனினுமாம். உலர்கின்ற தென்னும் நிகழ்காலக் கூற்று, வினை நிகழ்ந்து கொண்டேயிருப்பதைக் குறிக்கின்றது; உலர்கின்றார் எனற்பாலது உலர்கின்ற தென்று வந்தது வழுவமைதியா மென்க. (௧௫௧)

[தமயந்தியின் தாய், "ஐயோ மகளே! பாழ் மண்டபத்தில் பாதி ராத்திரியி லெப்படி யலைந்தாயோ?" என்றேங்கினா ளெனல்.]

பனியிருளிற் பாழ்மண் டபத்திலே யுன்னை
நினையாது நீத்தகன்ற போது — தனிமையின்
றென்னினைந்தா யென்செய்தா யென்னாப் புலம்பினாள்
பொன்னினைத்தாய் நோக்கிப் புலர்ந்து.

(ப - ரை) தாய் - தமயந்தியின் தாயானவள், பொன்னினை நோக்கி - திருமகள் போன்ற அவளைப் பார்த்து, பனி இருளில் பாழ் மண்டபத்தில் உன்னை நினையாது நீத்து அகன்ற போது -

அஞ்சி நடுங்கு மிருட்டிற் பாழான மண்டபத்தில் (உன் கணவன்) உன்னை (ச் சற்றேனும் பெண்ணென்று) எண்ணியிரங்காமல் ஒன்றியாய்) விட்டு நீங்கினபோது, என் நினைத்தாய் என் செய்தாய் என்று புலர்ந்து புலம்பினாள் - என்னென்ன எண்ணிக்கொண்டாயோ! என்னென்ன செய்து தவித்தாயோ! என்று சொல்லி வாடி வருந்தி (க்கண்ணீர் விட்டு அழுதாள்.)

(க - ரை) தமயந்தியின் தாய், "மகளே! அரையிரவில் அந்தப் பாழ் மண்டபத்தில் உன்னை உன் கணவன் ஒன்றியாய் விட்டுச் சென்றபோது நீ என்னென்ன எண்ணிக்கொண்டெப்படி தவித்தாயோ!" என்றாள்.

(வி - ரை) பனி யென்பதற்குக் குளிரென்பாரு முளர். பனி + இருள் - வினைத்தொகை யென்பதே சிறப்பு. எப்போதும் நடுநிசி குளிர்ச்சியாகவே யிருக்கு மென்பதனால், குளிர்ச்சியாகிய இருளென்று பண்புத்தொகை யாக்குவது பொருந்தாது. சூடாகிய இருள் இல்லையாகையால் குளிர்ச்சியாகிய இருளு மில்லாகும் பனியிலு மிருளிலும் என் றும்மைத்தொகை யாக்கினுமா மன்றி பண்புத்தொகை பொருந்தாது முதல் ஏ, அசைநிலை; மற்றொன்று தேற்றம் - பிரிநிலை யென்பாரு முளர். உன்னை யென்பதை முதலாகுபெயராக்கி, உன் பெண் தன்மையின் அருமையையும் பெருமையையும் என்பது மொன்று. என்ற, செய்யாவென்னு மெச்சம். என்னினைத்தையோ, என் செய்தையோ எனப் பொருள் பட நிற்பதால் அவைகளினீற் றிரக்க வோகாரங்களைத் தொக்கன வாக்கொள்க.

(கஙெ)

# (ரு) கலி நீங்கு காண்டம்

[கலி + நீங்கு + காண்டம்-கலிபுருடன் (நளனை விட்டு) நீங்கும் (சரித்திரப் பாக) கூட்டமென்பது பொருள். கலி + நீங்கு - எழுவாய்த்தொடர்; நீங்கு + காண்டம் - வினைத் தொகைநிலைத் தொடர்; கலி நீங்கு காண்டம் - அன்மொழித் தொகையாய்ப் படலத்தை யுணர்த்துகிறது.]

கடவுள் வணக்கம்

[திருமால்]

*மூலப் பழமறைக்கு முன்னேயுங் காணலாங்*
*காலிக்குப் பின்னேயுங் காணலாம்—மால்யானை*
*முந்தருளும் வேத முதலே யெனவழைப்ப*
*வந்தருளுஞ் செந்தா மரை.*

(ப — ரை) *மால் யானை* - பெரிய கஜேந்திர னென்னும் யானையானது, *முந்து அருளும் வேதம் முதலே என்ன அழைப்ப* - (அடியார்கள் வேண்டு) முன்னேயே (அவர்களுக்குத்) திருவருள்புரிகின்ற வேத முதற் காரணனே என்றழைக்கையில், *வந்து அருளும் செம்மை தாமரை* - (மடுக்கரையில் வந்து) அதற்குத் திரு

வருள்செய்த (திருவடியாகிய) செந்தாமரை மலர்களை, மூலம் பழமைமறைக்கு முன்னேயும் காணலாம்-எல்லா நூல்களுக்கு முத னூலாகிய வேதத்துக்கு முன்னணியிலுங் காணலாம், காலிக்கு பின்னேயும் காணலாம் - பசுக்கூட்டத்துக்குப் பின்னணியிலும் பார்க்கலாம்.

(க - ரை) கஜேந்திர னென்னும் யானைக்கு விரைந்தோடி வந்தருள்புரிந்த திருமால் திருவடிகளைப் பிரணவ மென்னும் வேதத்துக்கு முன்னுங் காணலாம் பசுக்கூட்டத்துக்குப் பின்னுங் காணலாம். அப்படிப்பட்டவைகளை வணங்குவாம்.

(வி - ரை) மூன் னென்பதை முன்னிட மாகிய பிரணவ மென்பாரு முளர். கிருஷ்ணாவதாரத்திற் றிருநெடுமால் மேய்த்த பசுக்களையே இங்குக் காலி யென்றதென்க. மூலமே யென்ற கரி முன் வந்திடர் தொலைத்து நீலமேகம் போல நின்றானாகலான், 'மால்யானை முதலே என வழைப்ப வந்தருளுஞ் செந்தாமரை' யென்றார்; முதலைவாய்ப்பட்ட கஜேந்திரனை விடுத்தமையே இங் குக் குறித்திருப்பது. 'பெரியதினும் பெரியதுமாய்ச் சிறியதி னுஞ் சிறியதுமாய்' என்றபடி மூலப் பழமறைக்கு முன்னுமாவான் காலிப் பசுநிரைக்குப் பின்னுமாவா னென்றதென்க. அடியார்க் கெளிய னென்பது தோன்றவே மால்யானை யழைப்ப வந்தருளுஞ் செந்தா மரையென்றார்.

## [சிவபெருமான்]

போதுவார் நீறணிந்து பொய்யாத வைந்தெழுத்தை
ஓதுவா ருள்ள மெனவுரைப்பார்—நீதியார்
பெம்மா னமரர் பெருமா னொருமான்கை
அம்மானின் றாடு மரங்கு.

(ப - ரை) போது வார் நீறு அணிந்து - (காலை மாலை யென் னும் இரு) காலங்களிலும் (ஓளவாய்) நீண்ட (திரிபுண்டர மென் னும்) திருநீற்றுக் காப்புகளைத் தரித்துக்கொண்டு, பொய்யாத

ஐந்து எழுத்தை ஓதுவார் உள்ளம் - உண்மை மந்திரமாகிய நமசிவாய வென்னும் ஐந்தெழுத்தைத் தவறாமற் சொல்லுவோருடைய மனமானது, நீதியார் பெம்மான்-நீதி நெறி யென்னும் பூதி நெறியிற் செல்வோர்க்கு முதல்வனும், அமரர் பெருமான் - தேவர்கள் தேவனும், ஒருகை மான் அம்மான் - வலக் கரத்தில் மானேந்தும் பெரியோனுமாகிய சிவபெருமான், நின்று ஆடும் அரங்கு என உரைப்பார் - வீற்றிருந்து திருநடனம் புரியும் அம்பல மென்று (பெரியோர்) பேசுவார்கள்.

(க - ரை) திருநீறணிந்து திருவைந் தெழுத்தை ஓதுவாருள்ளமானது சிவபெருமான் வீற்றிருந்து திருநடனம்புரியும் நாடகசாலை யென்று பெரியோர் பேசுவார்கள்.

(வி - ரை) போதுவார் என்பதற்குப் புகுதுவார் அல்லது நுழைவாரெனக் கொண்டு, திருநீறணிந்து திருக் கோயிலிற் புகுவா ரென்பாரு முளர், மந்திரமாவது நீறு வானவர் மேலது நீறு என்பதனால் "போதுவார் நீறணிந்து" என்றார். 'முந்தைமுதல் மந்திரங்க ளெல்லாந் தோன்று முதலாகு முதல்வனு யெழுத் தஞ்சு' என்றதனால் 'அஞ்செழுத்தை ஓதுவாருள்ளம்' என்றார். மெய்யெலாம் வெண்ணீறு சண்ணித்த மேனியான் என்றதனால், பூதி நெறியே நீதிநெறி யென்றாம். அந்நெறியிற் படர்வாரே நன்னெறியிற் படர்வா ரென்பதனால் நீதியார் பெம்மான் என்றார். தேவர்கள் தேவன் வந்தா னென்பதனால் அமரர் பெருமா னென்றார். மானங் கொன்றை வலன் வைத்தமைமா மானிடம் வைத்தா ரென்பதனால் ஒருமான் கை அம்மா னென்றார். அரங்குமையற்கு வெள்ளி யரங்கமே, ஆலயம் பிற வெள்ளி யரங்கமே என்றதனால் அம்மானின் றாடுமரங்கு என்றார். திருநெடுமால் காத்தற் கடவுளாகையால் முதலிலும் சிவபெருமான் வழிபடு கடவுளாகையால் பிறகும் வைத்துத் துதித்தார். இதுபற்றியே திருமாலுக் கடிமை செய் யென்ற ஔவையார், சிவத்தைப் பேணிற் றவத்துக் கழகு என் றருளிச்செய்தா ரென்க. நீதியார் என்பதை நீதி + ஆர் எனப் பிரித்துப் பெம்மானுக் கடையாக்குவாரு முளர்.

[வனத் தீயிற் பட்ட பாம்போன் றழைத்த மொழி வழியே
சென்று னள னெனல்.]

மன்ன வுனக்கபய மென்று வனத்தீயிற்
பன்னக வேந்தன் பதைத்துருகிச் — சொன்ன
மொழிவழியே சென்றான் முரட்கலியின் வஞ்சப்
பழிவழியே செல்கின்றான் பார்த்து.

(ப - ரை) முரண் கலியின் வஞ்ச பழி வழியே செல்கின்றான் - தன்னோடு பகை கொண்ட கலிபுருடனுடைய வஞ்சனையாகிய நிந்தை நிறைந்த வழியிலே நடக்கின்றவனாகிய நளமகாராசன், வனம் தீயில் பன்னகம் வேந்தன் பதைத்து உருகி-காட்டு நெருப்பி லொரு பாம் பாசன் அகப்பட்டுத் துடித்து மனங் குழைந்து, மன்ன உனக்கு அபயம் என்று - அரசனே! அடியேன் உனக்கு அடைக்கலம் என்று, சொன்ன மொழி வழியே பார்த்து சென்றான் - சொல்லக் கேட்ட சொல்லோசை பிறந்த (இடத்துக்குச் செல்லும் வழியையே நோக்கிப் போனான்.

(க - ரை) வஞ்சக் கலியின் நிந்தையான வழியிற் செல்பவனாகிய நளன், காட்டு நெருப்பி லகப்பட்ட பாம்பொன்று, 'அரசனே!-உனக் கபயம்' என்ற சொல்லைக் கேட் டவ்வழியே போனான்.

(வி - ரை) பன்னகம்-பன்னகத்தின் நீட்சி; இவ்வடமொழியைப் பல்+நாகம் எனப் பிரித்துத் தமிழ் மொழி யாக்குவாரு முளர். வஞ்சனையும் பழியு மாகிய வழி யெனினுமாம். மொழி-அதன் ஓசைக் காகுபெயர். தீ நடுவிற் பாம்பு திகைத் திருந்ததால் அதன் உருத் தோன்றாமல் நளனுக்கு ஓசை மட்டுங் கேட்டது; ஆகையால் ஓசை பிறந்த இடத்தை நோக்கிச் சென்றான், ஏகாரங்கள் தேற்றங்கள்; பிரிநிலைக ளென்பாரு முளர். அபயமானவனாகின்றே னென்னின் அபயம் காரண வாகுபெயர். பழி-முதனிலை வினைப்பெயர். பழிவழி-வினைத்தொகை யெனினுமாம். (௯)

[காட் டெரியிற் பட்டு வாடும் பாம்பை, நளன் தன்னெதி ரிற் காண்டா னெனல்.]

ஆருந் திரியா வரையிருளி னங்ஙனே
சோர்குழலை நீத்த துயரோடும்—வீரன்
திரிவானத் தீக்கானிற் செந்தீயின் வாய்ப்பட்
டெரிவானைக் கண்டா னெதிர்.

(ப - ரை) ஆரும் திரியாத அரை இருளின் அங்ஙனமே-தேவர் முதல் யாவரும் துணிந்து செல்லக் கூடாத நடுவிரவில் (பாழ் மண்டபத்திலிருந்து) வந்தபடியே, சோர் குழலை நீத்த துயரோடும் திரிவான் வீரன் - அவிழ்ந்து தொங்கும் கூந்தலையுடைய தமயந்தியைப் பிரிந்த துன்பத்தோடு திரிபவனும் போர் வீரனுமாகிய நளன், தீ கானில் செம்மை தீயின் வாய்பட்டு எரிவானை எதிர் கண்டான் - அக்கொடிய பாலைவனத்தில் செந் நெருப்புத் தணலில் அகப்பட்டு எரிந்துகொண்டிருப்பவனாகிய பாம்பரசனைத் தன் கண்ணெதிரிற் பார்த்தான்.

(க - ரை) பாழ் மண்டபத்தில் தன் மனைவியை விட்டுப் பிரிந்துவந்த கோலத்தோடேயே திரிந்துகொண்டிருந்த நளன், அக் கடுங் காட்டில் நெருப்பி லெரிந்துகொண்டிருந்த அரவரசனை நேரிற் பார்த்தான்.

(வி - ரை) முதலும்மை சிறப்பு, இரண்டாவது அசை யெனினும் சிறப்பெனினுமாம். இருள் - இரவுக் காகுபெயர்; இதை வழுவமைதி யென்பாரு முளர். 'தங்குறை தீர்வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம் வெங்குறை தீர்க்கிற்பார் விழுமியோர்' என்றபடி தன் மனதி லெரிந்துகொண் டிருந்த துயரத் தீயைக் கவனி யாமல், தன் னெதிரி லெரிந்துகொண் டிருக்குங் காட்டுத் தீயில் வேகும் பாம்பரசனைக் காக்க விரைந்து சென்றா னள னென்றபடி. ஆர் - யார் என்பதன் மரூஉ; ஆனை - யானைகளும், ஆடு-

யாட்டுக்கும் மருவி வருவது போல. இருளின் என்பதில் இன் உருபு இல்லுக்கு மயங்கி வந்தது. அ + ஙனம் + ஏ - அங்ஙனே? அம்-கடைக்குறை, அங்ஙனமே - அப்படியே எனலு மன்றி அவ் விடத்திலேயே என்பாரு முளர். சோர் குழல் - அன்மொழித் தொகையாத் தமயந்தியைக் குறிப்பது தெரிக. (உ)

[அக்கினி தேவன் தந்த வரத்தால், ஆரழலுக் கஞ்சாமல் அதனருகிற் சென்று னள னெனல்.]

தீக்கடவு டந்த வரத்தைத் திருமனத்தில்
ஆக்கி யருளா லரவரசை—நோக்கி
அடைந்தா னடைதலுமே யாரழலோ னஞ்சி
உடைந்தான்போய்ப் புக்கா னுவந்து.

(ப - ரை) தீ கடவுள் தந்த வரத்தை திரு மனத்தில் ஆக்கி- (தனக்கு) அக்கினி தேவன் தந்த வரத்தை (தன்) பரிசுத்தமான மனத்தகத்திற் சிந்தித்து, அரவு அரசை அருளால் நோக்கி அடைந்தான் - பாம்பரசனை இரக்கத்தோடு பார்த்தபடியே நெருப் பருகிற் சென்று னளன், அடைதலும் ஏ ஆரழலோன் அஞ்சி உடைந்தான் - இவன் சென்றவுடனே அக்கினி தேவன் பய ந்து பின்வாங்கிப் போனான், (ஆகையால் இவன்) உவந்து போய் புக்கான் - அவ்விடத்தில் மகிழ்ந்து போய் நுழைந்தான்.

(க - ரை) அக்கினி தேவன் தந்த வர பலத்தால் நளன் அஞ் சாமல் நெருப்பருகிற் சென்றான். இவனைக் கண்டவுடன் அது தணிந்து போயிற்று. ஆகையால் அவ்விடத்தி லிவன் மகிழ்ந்து நுழைந்தான்.

(வி - ரை) தமயந்தியின் சுயம்வரத்தின்போது தேவேந்தி ரன் இயமன் வருணன் அக்கினி தேவன் முதலியோர்க்கு நளன் தமயந்தி யிடத்திற் றூதுசென்று அவர்களி லொருவனுக் கவளை இணக்க உண்மையில் உழைத்து வேண்டினான் என்பதனால் சால்

வரும் அவனுக்கு வர மளித்தார்கள். அப்போது அவனுக்கு அக்கினி தேவன் அளித்த வரம், நினைத்த இடத்தில் நெருப் பைப் பெறுதலாம். ஆகையால் அக்கினிதேவன் அவனைக் கஞ்சினன்; அவனைச் சுடக் கூசிப் பின்னிடைந்தா னென்க. ஏகாரம் ஈற்றசை யெனினுமாம். அரசு - அரசனுக் காகுபெயர். தான் கொடுத்த வரத்திற் கழிவின்றி அது பலிக்க எண்ணின னாகையால் ஆரழலோ னஞ்சினன் என்க. 'உடைந்தான் போய்ப் புக்கா னுவந்து' என்பதை ஆரழலோனுக்கே ஒரு முடி பாக்கி உரை கூறுநரு முளர். அப்போது உடைந்தா னென் பதை முற்றெச்சமா மொழிவர். போய்ப்புக்கான் என்றிருப்பத னால் அது பொருந்தா தென்க. அருளால் என்பது இரக்கத்தால் இரக்கங் காரணமாக எனப் பொருள் கொளினும் பொருந்தும்; இங்கிது ஒடுருபிற்கு மங்கிற் றென்பதே மாண்புடைத்து. திரு மனம் என்பதற்கு அழகான மன மென்பர் சிலர்; மனத்திற் கழகு தூய்மையே யாகும். (ரு)

[வேத முனிவன் சாபத்தால் நெருப்பி லகப்பட் டழியு மென் னைக் கா வென்று னரவரச னெனல்.]

வேத முனியொருவன் சாபத்தால் வெங்கானில்
ஆதபத்தின் வாய்ப்பட் டழிகின்றேன்—காதலால்
வந்தெடுத்துக் காவென்றான் மாலை மணிவண்டு
சந்தெடுத்த தோளானைத் தான்.

(ப - ரை) (அவ்வரசன்) மாலை மணி வண்டு சந்து எடுத்த தோளானை - பூமாலையிலுள்ள அழகான வண்டுகள் கீதம் பாடு கின்ற தோள்களையுடைய நளனை நோக்கி, வேதம் முனி ஒருவன் சாபத்தால் - வேத மோது முனிவனொருவ னிட்ட சாபத்தால், வெம்மை கானில் ஆதபத்தின் வாய்பட்டு அழிகின்றேன் - இக் கொடுங் காட்டில் நெருப்பி லகப்பட்டு நலிகின்றேன், காதலால் வந்து எடுத்து கா என்றான் - (என்பால்) அன்பால் (அருகில்) வந்து (என்னை) எடுத்துக் காப்பாற்று என்று வேண்டினான்.

(க - ரை) அரவரசன் நளனை நோக்கி, "ஐயனே! அடியேன் ஒரு வேதமுனியின் சாபத்தால் தீயிலகப்பட்டுத் திகைக்கின்றேன்; சற்றே என்னருகில் வந்து என்னை யெடுத்துக் காப்பாற்று" என்று வேண்டினான்.

(வி - ரை) வேதபாராயணம் பண்ணு முனி வேதியமுனி; முனிவரினும் க்ஷத்திரிய முனி, வசிய முனி, சூத்திர முனி யென்னும் பாகுபா டுண்டென அறிக; வசிட்டர் வேத முனி, கோசிகர் க்ஷத்திரிய முனி. ஆதபம் - வெப்பம் ஆதபம்; வடமொழி. வெப்பம் - நெருப்புக் காகுபெயர். அழிதல்--மெலிதல் - நைதல் - நலிதல் - வருந்துதல். காதலாய் என்றும் பாடமுண்டு; காதலால் - ஏதுப் பொருட்டு. "மாதர் முலைக் கவட்டின், சந்தெடுத்த தோளானைத் தான்" என்றும் பாடபேத முண்டு. தான்-அசைநிலை யெனினும் அரவரச னெனினுமாம். மணிவண்டு-ஒரு-சாதி வண்டெனினுமாம். சந்து-சந்தம் - பாட்டுக் காகுபெயர். மணிவண்டு சந்தெடுத்த மாலைத்தோளா னென் றொட்டிக் காண்க இச்செய்யுள் சில பிரதிகளிலில்லை. (சு)

["நீ தோட்டா லென் சாபந் தீரும்; ஆகையா லென்னை யெடுத்துக் கொண்டுபோய் நிலமேல் விடு" என் றரவரசன் வேண்டினா னெனல்.]

சீரியாய் நீயெடுப்பத் தீமை கெடுகின்றேன்
கூருந் தழலவித்துக் கொண்டுபோய்—பாரில்
விடுகென்றான் மற்றந்த வெந்தழலால் வெம்மைப்
படுகின்றான் வேல்வேந்தைப் பார்த்து.

(ப - ரை) அந்த வெம்மை தழலால் வெம்மை படுகின்றான் வேல் வேந்தை பார்த்து — அக்கொடுங் காட்டெரியால் வேகின்றவனாகிய அரவரசன் வேலேந்து (அரவரசனாகிய) நளனை நோக்கி, சீரியாய் நீ எடுப்ப தீமை கெடுகின்றேன் - மேன்மைக் குணமுடையோய்! (அன்பால் என்னருகில்) நீ (வந்தென்னைத் தொட்டு) எடு

ப்பதனால் சாப நீக்க மடைவேன், கூருந் தழல்; அவித்து கொண்டு போய் பாரில் விடுக என்றான் - (ஆகையால்) மிகு நெருப்பைத் தணித்து (என்னை) எடுத்துக்கொண் டப்பாற் போய் நிலமேல் விடக் கடவா யென்று வேண்டினான்.

(க - ரை) அரவரசன் நளனை நோக்கி, "மேலோய்! நீ வந் தென்னைத் தொட் டெடுப்பதனால் சாப நீக்கம் பெறுவே னாகை யால், என்னை யெடுத்துக்கொண்டு போய் நிலமேல் விடு" என்றான்.

(வி - ரை) சீரியன்—விளியால் ஆய் விகுதி பெற்றது. எடுப்ப-தொழிலெச்சம். கெடுகின்றேன் - ஆணியினால் கெடுவே னென் னும் எதிர்காலம் நிகழ்கால மாயிற்று. விடுக + என்றான் விடுகென் றான்-வியங்கோள்-அகரந் தொகுத்த லாயிற்று. மற்று-அசைநிலை. வெம்மைப் படுகின்றான்—புழுங்குகின்றா னெனினுமாம். பருமையை க்கொண்டது பாரென்பதனால் பண்பாகுபெயர். வேல் வேந்தென்ற தனால் பகைவரை வெல்ல வல்லா னவ னென்ப தாயிற்று. தீயா ரைக் கொன்று நல்லாரை நன்று காப்பா னவ னென்பது தோன் றவே சீரியாய் என்றும், வேல் வேந்தென்றும் நளனைக் குறித்து வந்திருப்பது தெரிக. அரவசேன் நளனை அறவரச னென் றறிந்தே அங்ஙனம் விளித்தா னென்றபடியாம். (ரு)

[அர வரசன் வேண்டிக்கொண்டபடியே அவனையெடுத் தப்பா லகன்று னள னெனல்.]

என்றுரைத்த வவ்வளவி லேழுலகுஞ் சூழ்கடலுங்
குன்றுஞ் சுமந்த குலப்புயத்தான்—வென்றி
அரவரசைக் கொண்டகன்று னாணியந் தன்னில்
இரவரசை வென்றா னெடுத்து.

(ப - ரை) (அரவரசன்) என்று உரைத்த அ அளவில்-என்று சொன்ன (வுடனே) அப்போதே, ஏழு உலகும் சூழ் கடலும் குன் றும் சுமந்த குலம் புயத்தான் - ஏழு தீவுகளையும் (அவற்றைச்)

சூழ்ந்த கடல்களையும் மலைகளையும் (ஆட்சி முறையால்) தாங்கின சிறந்த புயவலி யுடையானும், ஆரணியம் தன்னில் இரவு அரசை வென்றான் - வனத்தில் இரவிருளென்னும் அரசனை (அஞ்சாமல் அனுயாசமாய்) ;வென்று திரிபவனுமாகிய நளராசன், வெற்றி அரவு அரசை எடுத்து கொண்டு அகன்றான் - வெற்றி மிகுந்த பாம்பரசனை யெடுத்துக்கொண்டு (அப்பாற்) போனான்.

(க - ரை) அரவரசன் அப்படிச் சொன்னவுடனே அறவரசனாகிய நளன் அவனைத் தன் கையாற் றூக்கியெடுத்துக் கொண்டப்பாற் போனான்.

(வி - ரை) அ + அளவில் - அந்தச் சமயத்தில்-இங்குக் காலமுணர்த்திற்று. அம்மட்டில்-அம்மாத்திரையி லெனினுங் காலவளவேயாம். ஏழ் என்பதைக் கடலுக்குங் கூட்டிக் கொள்வாருமுளர். இங்கு உலகென்பது தீவுக் காகுபெயர்; கீழேழ் மேலே ழுலகமென்ப தன்று. குன் றென்பதற்கு மேரு முதலியவைகளைக் கொள்க-புயத்தான் என்பதை மூன்றாவதாக்கிப் புயத்தினால், புயவலியா லெனக் கொள்ளுநருமுளர். பாம்பைத் தூக்குவதற்குப் புயவலி அவசியமாம். இரவரசை யெப்படி அஞ்சாமல் திரிந்து வென்றானோ அப்படி அரவரசை அஞ்சாமல் எடுத்தா னெனக் கொள்க. இரவரசு என்பதற்கு மன்மதன் என்பாரும், மதியென்பாரு மதிவாணருளர். (௬)

[அரவரசன் நளனை நோக்கி "ஒன்றுமுத லெண்ணப் பத்தடி வைத்துத் தச வென்று என்னைக் கீழே விடு" என்று னெனல்.]

மண்ணின்மீ தென்றனைநின் வன்றாளா லொன்றுமுதல்
எண்ணித் தசவென் றிடுகென்றான்—நண்ணிப்போர்
மாவலான் செய்த வுதவிக்கு மாறாக
ஏவலாற் றீங்கிழைப்ப னென்று.

(ப - ரை) (அரவரசன்) போர் மா வல்லான் நண்ணி செய்த உதவிக்கு மாறு ஆக - சண்டைக் குதிரை யேற்றத்தில் வல்லவன்

னாகிய நளமகாராசன் நெருங்கிவந்து தனக்குச் செய்த நன்றிக்கு மறு நன்றியாகிய, ஏவலால் தீங்கு இழைப்பேன் என்று - அவன் கட்டளையாலேயே அவனுக்கு (நன்மை விளைக்கும்) தீமையைச் செய்வே னென்று துணிந்து, மண்ணின் மீது நின் வன்மை தாளால் ஒன்று முதல் தச வென்று எண்ணி என்னை இடுக என்றான் - நிலமேல் உன்னுடைய பலம் பொருந்திய பாதத்தால் (அடி வைத்து வட மொழியில் ஏகம் என்னும்) ஒன்று முதல் தசவென்னும் பத்து வரையிலும் தவறாம லெண்ணி யென்னை விடக் கடவா யென்றான்.

(க - ரை) நளன் செய்த நன்மைக்கு மாறாகத் தீமை செய்ய எண்ணின அரவரசன் அவனை நோக்கி, ''அரசே! நிலமேல் பத்தடி உன் காலா லெண்ணி வைத்துத் தச வென்று சொல்லி என்னைக் கீழே விடு'' என்றான்.

(வி - ரை) இங்கு அரவரசன் செய்வது பின்னடியில் நளனுக்கு நன்மை தருவதேயாம்; ஆனாலும் அரவங் கடிப்ப தென்றால் தீமை பயப்ப தென்பதே உலகோர் துணிபாகலான், நளன் கட்டளையிலேயே அங்ஙனஞ் செய்யத் துணிந்தா னரவரச னென்பது தோன்றவே 'ஏவலாற் றீங்கிழைப்பே னென்று' என்றார். தனக்குச் செய்த வுதவிக்கு மாறாக அரவரசன் நளனை கடித்து, அவனுக்குச் செய்யும் உதவி அவன் உருமாறித் திரிவதற் கனுகூல மாவதால் பேருதவியா மென்க. அக்கால வழக்கப்படி ஏகம்த்வயம் என்று எண்ணவே நளனை அரவரசன் வேண்டினான் ''கடைசியாக நளன் தசவென்று சொல்லுவான்; தச வென்றால் வடமொழியிற் பெயராக எண்ணையும், வினையாகக் கடி யென்னுந் தொழிலையுங் குறிப்பதால் அவனைக் கடிக்கலாம்'' என்றெண்ணியே அரவரசன் அங்ஙனங் கூறியதாகக் கவி கூறி யிருக்கிறார். கடி யென்று அவன் வாயாலேயே அவன் கட்டளை யிட்டபடியும் இவன் கடித்தபடியுமாம். இது மேலுக்குத் தீமை போன்றதானாலும் உண்மையில் நளனுக்கு நன்மை செய்தபடியா மென்பது பின்னடியில் விளங்கும்.

[அரவரசன் வேண்டியபடியே நளன் தன் காலால் பத்தடி வைத்தெண்ணித் தச வென்று னெனல்.]

ஆங்கவன்று னவ்வா றுரைப்ப வதுகேட்டுத்
தீங்கலியாற் செற்ற திருமனத்தான்—பூங்கழலை
மண்ணின்மேல் வைத்துத் தசவென்று வாய்மையால்
எண்ணினான் வைத்தா னெயிறு.

(ப - ரை) ஆங்கு அவன் அ ஆறு உரைப்ப - அவ்விடத்தில் அவ்வரவரசன் அப்படிச் சொல்ல, அது தீமை கலியால் செற்ற திரு மனத்தான் கேட்டு - அதைத் தீமை விளைப்பவனாகிய கலி புருடன் வயப்பட்ட மேன்மைக் குணமுடையவனாகிய நளமகாராசன் கேட்டு, வாய்மையால் - அதை உண்மை யென்று நம்பியதால், பூ கழலை மண்ணின்மேல் வைத்து - தன்னழகான பாதங்களை நிலமேல் வைத்து, தச என்று எண்ணினான் - (ஏகம் என்று தொடங்கி) தச என றெண்ணிக் கணக்கிட்டான், எயிறு வைத்தான் - (உடனே பாம்பரசன் தன்) நச்சுப் பல்லை வைத்து (நளன் பாதத்தில்) தீண்டினான் (கடித்தான்).

(க - ரை) அவன் சொல்லைக் கலியின் மயக்கத்தால் உண்மை யென் றெண்ணின நளன், தன் பாதங்களால் ஒன்று முதல் பத்தடி வரையில் எண்ணித் தச வென்றான். அவன் பாதங்களிற் பல்லை வைத்துக் கடித்தான் பாம்பரசன்.

(வி- ரை) தீக்கலி-தீங்கலி - மெலித்தல். செற்ற-வென்ற - தன்வசமாக்கின. திருமனத்தான் - உயர்குண முடையான்-இங்கு மனம் குணத்துக் காகுபெயர். தச வென்பது இரு பொருள் படுவதென்பதை நள னறிவா னாயினும் கலியின் மகத்துவத்தால் மயங்கி னென்றபடியாம். செற்ற என்பது செயப்பாட்டுப் பொருட்டு-வெல்லப்பட்ட என்று பொருள் கொளினுமாம். எயிறு வைத்தான் என்பது காரணம் காரியமாக வந்தது-கண் வைத்தான் என்பதிற்போல-செவி சாய்த்தான் இச்சை வைத்தா னென்புழிவகை

ங் கொள்க. கலியின் வயப்பட்டவனேனும் நளன் தன் உயர் குண மாறு உத்தம குணமுடையா னென்பது தோன்றவே திருமன தா. னென்றார்-வாய்மையால் என்பதூஉம் இப்படியேயா மென் றிக. அது என்பது உரையைச் சுட்டி நின்றது. (அ)

[விட வேகத்தால் நளன் திருமேனி வெந்து, ஈயாரகவளம் போ லவன் தோள்கள் குறுகின வெனல்.]

வீமன் மடந்தை விழி முடியக் கண்டறியா
வாம நெடுந்தோள் வறியோருக்—கேமங்
கொடாதா ரகம்போற் குறுகிற்றே மெய்ம்மை
விடாதான் றிருமேனி வெந்து.

(ப - ரை) மெய்ம்மை விடாதான் திருமேனி வெந்து-உண் மைப் பற்றில் உறுதியுள்ளவனாகிய நளமகாராசனுடைய அழகான டலந் தீய்ந்து, வீமன் மடந்தை விழி முடிய கண்டு அறியாத ாமம் நெடுமை தோள் - வீமராசன் மகளாகிய தமயந்தியின் கண் ள் முழுவதும் பார்த்தறிய மாட்டாத அழகான நீண்ட தோள் ள், வறியோருக்கு ஏமம் கொடாதார் அகம் போல் குறுகிற்று - ரப் போர்க்குப் பொருளைக் கொடாத உலோபியர் வீட்டு வளம் பால் சுருங்கின.

(க - ரை) நளன் உடல் தீய்ந்து கருகினதுமன்றி, அவன் தாள்களும் இட்டுண்ணாத உலோபியர் வீட்டு வளம் போற் ருங்கின.

(வி - ரை) விழிகளால் கண்டறியப்படாத என்பது உமொ றது; அறியா-அறியாத வென்பதனீறு கெடுதல். வாமம் என்ப ற்கு இடத்தோள் என்பாருமுளர்; குறுகிற்று என்னும் ஒருமைக் கேற்ப, இடத்தோ ளென்பதே இயைபுடைத் தென்பர்; தோள் என்னும் இனவொருமைக் கேற்ப, குறுகிற் றென்றாராயினும் குறு கின வென்பதே தகுதியாம். ஏகார மசை யெனினும் இரங்கலெ

னினுமாம். உலோபிய ரகத்தில் ஏராளமாய்ப் பொன்னிருப்பினும் தாராளமாய் வழங்குத லின்மையால் அது பொலிவிழந்திருக்கு மென்பதால் உவமானமாயிற்று; நளன் தோள்கள் பொலிவிழந்து குறுகின என்றபடியாம். தோள்கள் விசாலமாய் நீண்டிருப்பன வாகலான் வீமன் மடந்தை விழி முடியக் கண்டறியா, வாம நெடும் புய மென்றார். (க)

[நளன், "அரவரசே! நின் பல்லாற் கடித்தென் னுருவத்தை மாற்றுங் காரணம் என்?" என்று கேட்டா னெனல்.]

*ஆற்ற லரவரசே ஆங்கென் னுருவத்தைச்*
*சீற்ற மொன்றின்றிச் சினவெயிற்றால்—மாற்றுதற்கின்*
*றென்கா ரணமென்றா னேற்றமரிற் கூற்றழைக்கு*
*மின்கா லயின்முகவேல் வேந்து.*

(ப - ரை) ஏற்று அமரில் கூற்று அழைக்கும் மின் கால் அயில் முகம் வேல் வேந்து - பகையரசரை எதிர்த்துப் போர் முகத்தில் (அவர்களைக் கொல்ல) இயமனை (வா, வாவென்று) கூப் பிடுகின்ற ஒளி வீசும் கூரிய முகமுள்ள வேலாயுத மேந்திய நளரா சன், ஆற்றல் அரவு அரசே இன்று சீற்றம் ஒன்று இன்றி - வல்ல மையுள்ள பாம்பரசனே! சற்று முந்தி (என்னன்றியைப் பெற்ற வுனக்கு என்மேல்) கோபம் (வரக் காரணம்) ஒன்றுமே யில்லா மல், ஆங்கு என் உருவத்தை சினம் எயிற்றால் மாற்றுதற்கு கார ணம் என் என்றான் - பழைய நிலையி லிருந்து என்னுடைய திரு மேனி நிறத்தை உன் கோபமுள்ள பல்லால் வேறுபடுத்தியதற்குக் காரணம் என்ன என்று கேட்டான்.

(க - ரை) நள மகாராசன் அரவரசனை நோக்கி, "சற்று முந்தி உனக்கு உதவி செய்த என்மேல் கோபம் வரக் காரணமே இல்லையே! என்ன காரணத்தால் என்னை நீ கடித்து, என், உரு வத்தை மாற்றினாய்?" என்றான்.

(வி - ரை) ஆற்றல், யாவரையும் தந்திரமாய்க் கடித்துக் கொல்லும் வல்லமை. ஆங்கு என்பதை அசையாக அகற்றுநருமுளர். இங்கு உருவம் நிறத்துக் காகுபெயர். சீற்றம்- அதன் காரணத்துக் காகுபெயர். ஒன்றும் என்பதில் உம்மை தொக்கது; ஒன்றும் என்பதற்கு ஒரு குற்றமு மெனினுமாம். பாம்பின் கோபத்தை யதன் பல்லின்மே லேற்றிச் சீஎவெயி றென்றார் சீறு+ அம் - சீற்றம். தொழிற்பெயர் - நாற்றம் என்புழிப்போல். என்-எவனென்னுங் குறிப்பு முற்றி னிடை குறைந்தது. கூற்றமைக்கு மென்ற குறிப்பால் நளன் வேல் பகைவரைத் தப்பாது கொல்லவல்ல தென்பது குறிப்பெச்சம். நளன் வாயாலாயே கடி யென்று பொருள் படும் தச வென்று சொல்லுவித்தபடியே அவனைக் கடித்த அரவரசன் வல்லமை வியக்கற்பாற்று. (௬௦)

["என் பேர் கார்க்கோடகன். நீ யுன்னு ருவத்தை மாற்றித் திரிவதற் குதவியாகவே உன்னை நான் கடித்தேன்" என்று னர வரச னெனல்.]

காயுங் கடக்களிற்றாய் கார்க்கோடக னென்பேர்
நீயிங்கு வந்த தியானினைந்து—காயத்தை
மாறாக்கிக் கொண்டு மறைந்துறைதல் காரணமா
வேறாக்கிற் றென்றான் விரைந்து.

(ப - ரை) (அரவரசன்) காயும் கடம் களிற்றாய் - கோபிக்கும் இயல்புடைய மதப்பட்ட யானை யுடையவனே!, என் பேர் கார்க்கோடகன் - என் பெயர் கார்க்கோடக (னென்று சொல்லுவார்கள்), யான் இங்கு நீ வந்தது உணர்ந்து - நான் இக்காட்டில் நீ வந்தது தெரிந்துகொண்டு, காயத்தை மாறு ஆக்கிக் கொண்டு மறைந்து உறைதல் காரணம் ஆக - உன்னுடலை வேற்றுருவாக்கி (அது) கொண்டு நீ மறைந்து வாழ்வது காரணம் ஆக, வேறு ஆக்கிற்று என்றான் விரைந்து - (அதை நான் உரு) மாற்றியதாகும் என்று விரைவாகச் சொன்னான்.

(க - ரை) "அரசே! என் பேர் கார்க்கோடன்; நீ இக்காட்டில் வந்தது தெரிந்து உன்னுருவத்தை மாற்றிக்கொண்டு திரிவதற்காகவே உன்னை நான் கடித்துதவி புரிந்தேன்" னென்றான் அரவரசன்.

(வி - ரை) காயும் என்றதனால் இயல்பாகவே கந்து சுளிக்கும் கடாக் களி றென்பது பெற்றாம். கடம்-மும்மதம். களிறு (ஆண்); பிடி (பெண்). வந்தது + யான்-வந்தியான்-குற்றியலுகரம் குற்றியலிகரமாயிற்று. வேறாக்கிற்று - வேறாக்கினது. காலங் காட்டும் வினைப்பெயர், ஆக்கிக்கொண்டு, ஒரு சொல்லாக் கொண்டு, ஆக்கிக்கொள் பகுதி யென்பாரு முளர். யான் நினைந்து, நீ மறைந் துறைதல் காரணமா, வேறாக்கிற்று (வேறாக்கியது) ஆகும். யானுக்குப் பெயர்ப் பயனிலை வேறாக்கிற்று; வேறாக்கிற்று என்பதற்கு ஆகும் பயனிலை; வேறாக்கு-பகுதி; இன் இறந்தகால இடைநிலை; றவ்வி-குதி. அகரச் சாரியை பெற்று வேறாக்கினது என்றுமாகும். என்றான் என்பதற்கு அரவரசன் தோன்றா எழுவாய். அரவரசன் நன்றி மறந்தவ னல்லனென்பது தோன்றவே விரைந்து என்றார். (கக)

[கார்க்கோடகன், நளனுக் கோராடை வழங்கினானெனல்.]

கூனிறால் பாயக் குவளை தவளைவாய்த்
தேனிறால் பாயுந் திருநாடா—கானில்
தணியாத வெங்கனலைத் தாங்கினா யிந்த
அணியாடை கொள்கென்றா னங்கு.

(ப - ரை) (கார்க்கோடகன் நளனை நோக்கி) கூன் இறால் பாய் குவளை தேன் இறால் தவளை வாய் பாயும் திருநாடா-வளைவாகிய இறால் மீன்கள் பாய்வதனால் குவளை மலரிலிருந்து தேனானது தேன் கூட்டி லிருந்து (பெருகி யொழுகுவது போலத்) தவளை வயில் ஒழுகும் வளமுள்ள நிடத நாட்டரசனே!, கானில் தணி

யாத வெம்மை கனலை தாங்கினாய்-காட்டில் ஆறாத கொடுந் தீயை (எனக்காகப்) பொறுத்துக்கொண்டாய், (அதற்கு மாறாக) இந்த அணி ஆடை கொள்க என்றான் - இந்த அழகான ஆடையைப் பெற்றுக்கொள்க என்று வேண்டினான்.

(க - ரை) "எனக்காகக் கொடிய காட்டு நெருப்பைப் பொறுத்துக்கொண்டு என்னைக் காப்பாற்றினாய். ஆகையால் அதற்கு ஈடாக இவ்வாடையைப் பெற்றுக் கொள்" என்றான் கார்க்கோடகன்.

(வி - ரை) ஆங்கு - அசை நிலை; ஆங்கு என்பதற்கு அப்படியே விரைந்து என்று பொருள் கூறுவாரு முளர். கூன் + இறால்- கூனாகிய இறால் என்று பண்புத்தொகையாக் கொள்க - கூனிய இறா லென்று கொண்டு வினைத்தொகை யாக்குவாரு முளர். குவளையை எழன்தொகை யாக்குவாரு முளர்-குவளைத் தேன், இறால் (தேன்) போலத் தவளை வாயிற் பாயுந் திருநாட னென்று கூட்டிக் கொள்க. கனலை யென்பதை, கனலின் என்று வேற்றுமை மயக்கமாக் கொள்ளினுமாம்-கனலி னின்று மென்னைத் தாங்கி யெடுத்தாய் என்பது பொருள். பாய - செயவ னெச்சம் காரணப் பொருட்டு. (கஉ)

["இவ் வாடையை நீ அணிந்துகொண்டால் இவ்வுரு மாறும்" என்றான் கார்க்கோடக னெனல்.]

சாதி மணித்தகினீ சாத்திறாற் றண்கழுநீர்ப்
போதின்கீழ் மேயும் புதுவரால்—தாதின்
துளிக்குநா டீட்டுந் துறைநாடர் கோவே
ஒளிக்குநா ணீங்கு முரு

(ப - ரை) (கார்க்கோடகன் நளனை நோக்கி) தண்மை கழுநீர் போதின் கீழ் மேயும் புதுமை வரால் தாதின் துளிக்கு நா நீட்டும் துறை நாடர் கோவே - குளிர்ச்சியாகிய செங்கழுநீர் மல

ரின் மேழ மேய்கின்ற இள வரால் மீனைத்து அம்மலரின் தேன் துளிக்கு நாக்கை நீட்டுகின்ற நீர்வளத் துறை யுள்ள நிடத நாட்டார்க் கரசனே!, ஒளிக்கும் நான் சாதி மணி துகில் நீ சாத்திநல் உரு நீங்கும் - வெளிப்படவேண்டும் நாளில் இந்தச் சாதி மாணிக்கம் போன்ற ஆடையை நீ அணிந்துகொண்டால் இவ் வேற்றுருவம் போகும் (உன் இயற்கை யுருவம் வரும் என்றபடி).

(க - ரை) "நீர் வளமுள்ள நிடத நாட்டாசனே! நீ வெளிப்பட வேண்டும்போது இவ்வழகான ஆடையை அணிந்து கொண்டால் உன் உண்மையான உருவம் வரும்" என்றான் கார்க்கோடகன்.

(வி - ரை) சாதி-உயர்வாகிய எனினுமாம்; சாதி மணிகளிழைத்த ஆடை யென்பதூஉ மொன்று. மணித் துகில்-உவமைத் தொகை. நாடர்கோவே என்பது நாடருடைய கோவே யென்று ஆறும் வேற்றுமையிலும் விரியும்-நான்கன் தகுதிப் பொருட்டா. நிடத நாட்டார்க்கரசனே என விரித்தாம். ஒளிக்கும்-அருளும் என்பது போல பெயரடிப் பெயரெச்ச வினை; ஒளிக்கும் - விளங்கும் - வெளியாகும்-இதுவே வினையடியாயின் மறைக்கு மென்றாகும். தாது-அதி லூறுந் தேனுக் காகுபெயரென்க. (கஉ)

["உன் பெயர் வாகுக னென்றாக; நீ தேர்ச்சாரதியாய்ச் சிறக்க" என்றான் கார்க்கோடக னெனல்.]

வாகு குறைந்தமையால் வாகுகனென் றுன்னாமம்
ஆக வயோத்தி நகரடைந்து—மாகனகத்
தேர்த்தொழிற்கு மிக்கானீ யாகென்றான் செம்மனத்தாற்
பார்த்தொழிற்கு மிக்கானைப் பார்த்து.

(ப - ரை) (கார்க்கோடகன்) செம்மை மனத்தால் பார் தொழில்கு மிக்கானை பார்த்து - நடு நிலைமையான மன முடைமையால் பூமியை யாளுந் தொழிலிற் சிறந்தவனாகிய நளனை

நோக்கி, வாகு குறைந்தமையால் வாகுகன் என்று உன் நாமம் ஆக - உன் தோள்கள் சுருங்கின காரணத்தால் வாகுகன் (குட்டைக் கையன்) என்று உன் பெயர் ஆகக் கடவது, நீ அயோத்தி நகர் அடைந்து - நீ அயோத்தியா பட்டணத்தைச் சேர்ந்து, மாகனகம் தேர் தொழிற்கு மிக்கான் ஆகு என்றான் - பெரிய செம்பொற் றேரோட்டுந் தொழிலிற் சிறந்தவன் ஆகக் கடவாய் என்று சொன்னான்.

(க - ரை) "வாகு குறைந்தமையால் உன் பெயர் வாகுகனென்றாகுக; நீ அயோத்தியை யடைந்து மாரத சாரதியாய்ச் சிறந்திருக்கக் கடவாய்" என்றான் கார்க்கோடகன்.

(வி - ரை) வாகு-வடமொழிப் பாஹு;பாஹுக-குறைந்த தோள்-குறைந்த கை;பாஹு-வாகு-தோள் அல்லது கை;வாகுகன்-குட்டைக் கையன். ஆக-ஆகுக-வியங்கோள்; ஆகுக என்பதே ஆகுவென்று கடை குறைந்ததெனினுமாம். மாகனகத்தேர்-மாரதம்-குதிரை பூட்டிய தேரெனினுமாம். தேர்த்தொழிற்கு, பார்த்தொழிற்கு-இரண்டிலும் குவ்வுருபு ஏழனுருபுக்கு மயங்கி வந்த வேற்றுமை மயக்கம். சமன் செய்து சீர்தூக்குங் கோல் போல் அமைந்தொருபாற் கோடாமையே யணியாய்ப் பூண்டானவனென்பது தோன்ற செம்மனத்தால் என்றார். (கஉ)

[கார்க்கோடகன் செய்ந்நன்றி யேற்றுக்கொண்ட நளன் அங்கிருந்து புறப்பட்டுப் போனனெனல்.]

இணையாரு மில்லா னிழைத்த வுதவி
புணையாகச் சூழ்கானிற் போனான்—பணையாகத்
திண்ணாக மோரெட்டுந் தாங்குந் திசையனைத்தும்
எண்ணாக வேந்த னெழுந்து.

(ப - ரை) பணை ஆகம் திண்மை நாகம் ஒன்று எட்டும் தாங்கும் திசை அனைத்தும் எண் ஆக வேந்தன் எழுந்து - பருத்த உடல்வலி யுள்ள இரெட்டு யானைகளும் சுமக்கின்ற (பூமியின்)

எல்லாத் திக்குகளிலும் தன் எண்ணம் செல்லும்படி நளராசன் புறப்பட்டு, இணை யாரும் இல்லான் இழைத்த உதவி புணை ஆக சூழ் கானில் போனான்-(தனக்கு) ஒப் பொருவரு மில்லாதவனாகிய கார்க்கோடகன் செய்த நன்றியே துணையாக்கொண்டு (புதர்கள்) நெருங்கிய காட்டிற் போனான்.

(க - ரை) தன் னொப்பில்லானாகிய கார்க்கோடகன் செய்ந் நன்றியே தனக்குப் பெருந் துணையாக் கொண்ட நளராசன் புறப் பட்டுக் காட்டில் வழிநடந்து போனான்.

(வி - ரை) எங்குப் போகலாம் என்று தனக்குப் பல திக்கு களிலும் எண்ணஞ் செல்லும்படி யெழுந்து நடந்தா னென்பார் திசை யனைத்தும் எண் ஆக என்றார்; திசை யனைத்தும் என்பதை எழுவாயாக்கித் திக்குகளி லுள்ளார் அனைவரும் என்பாரு முளர். அப்போது எண் + ஆகம் + வேந்தன் எனப் பிரித்து எண்ணுகின்ற நன் னெஞ்ச முடையு நள னெனக் கொள்க; எண் + நாக வேந்த னென்று பிரித்துக் கார்க்கோடகனுக்கு அடையாக்கிப் பொருள் கொள்வதூஉம் ஒன்று; எண் நாகவேந்தன் இழைத்த வுதவி புணை யாக, இணை யாரு மில்லானாகிய நள னெழுந்து, திண்ணாகமோ ரெட்டுந் தாங்குந் திசை யனைத்தும் போனானென் றொட்டுக. நளன் உருமாறியிருப்பதால் பகைவர் கண்ணிற் படாமல் திரிவதற் குதவி யாயிருந்த வுதவியே இங்குக் குறித்திருப்பது; இவ்வுதவி யாற்றின தனாலேயே கார்க்கோடகன் இணை யாரு மில்லா னாயினான். (கஎ)

[தமயந்தியை எண்ணித் தவித்தபடியே நளன் கடற் கரையைக் கண்டா னெனல்.]

நினைப்பென்னுங் காற்றசைப்ப நெஞ்சிடையே மூளும்
கனற்புகைய வேகின்றான் கண்டான்—பனிக்கருகு
தண்படா நீழற் றனிப்பேடை பார்த்திரவு
கண்படா வேலைக் கரை.

(ப - ரை) நினைப்பு என்னும் காற்று அசைப்ப - (தமயந் தியை) நினைத்தல் என்னுங் காற்று மோதி யசைப்பதனால், நெஞ்

சிகை மூளும் கனல் புகைய வேகின்றான் - (தன்) மனத்திற் பற்றி யுள்ள (அவளுடைய பிரிவென்னும் துயர) நெருப்புப் புகைக்கெரி வதனால் புழுங்குகின்ற நளமகாராசன், தண்மை படாம் நீழல் புனி குருகு - குளிர்ச்சியாகிய விதானம் போன்ற கொடிகளி னிழலில் (குளிரில்) நடுங்கிக்கொண்டிருக்கும் ஆண் கொக்கா னது, தனிமை பேடை பார்த்து-ஒன்றியாய் (ச் சென்றுள்ள தன்) பெண் கொக்கை யெதிர்நோக்கி, இரவு கண் படாத வேலை கரை கண்டான் - இரவெல்லாம் (உறங்காமல்) விழித்துக் கொண் டிருக்கின்ற கடற் கரையைப் பார்த்தான்.

(க - ரை) தமயந்தியின் பிரிவுத் துன்பம் தன்னை வருத்தின படியே நளமகாராசன் கடற் கரையைக் கண்டான்.

(வி - ரை) இவன் எப்படித் தமயந்தியைப் பிரிந்து வருந்து கிறானோ அப்படியே கடற் கரையி லாண் குருகும் தன் பெண்குரு கைப் பிரிந்து வருந்தி, அதை எதிர்நோக்கி யிருந்த தென்னுங் குறிப்பணியைக் கூர்ந்து தெளிக. கனற் புகைய - எதுகையால் லகரம் றகர மாயிற்று. அசைப்ப, புகைய, செயவெனெச்சங்கள்; காரணப் பொருளன. கண்படா-ஈறு கெட்டது. கரை-ஆகுபெயராய் இடத்தை உணர்த்திற்று - வினைப்பெயர். குளிரால் பேடையை நோக்கிச் செல்லாம லிருந்ததால் பனிக் குருகு என்றார்; பனி + குருகு - வினைத்தொகை-நடுங்கும் குருகு-எதுகை நோக்கி ககரம் இரட்டியது; பனிக் குருகு-அச்சமுள்ள அல்லது நடுக்க முள்ள குருகென்று பொருள்கொண்டு பனியைப் பெயராக்குவாரு முளர்.

["கொம்பிற் குந்தியிருக்குங் கொக்கே! தமயந்தியைப் பிரிந்திருக்கு மெனக்கோர் உறுதி உரைக்கப் படாதா?" என்று நள னெனல்.]

கொம்ப ரிளங்குருகே கூறா திருத்தியால்
அம்புயத்தின் போதை யறுகாலால்—தும்பி
திறக்கத்தே னூறுந் திருநாடன் பொன்னை
உறக்கத்தே நீத்தேனுக் கொன்று.

(ப - ரை) (நளன் அங்கொரு கொக்கை நோக்கி) கொம்பர் இளமை குருகே! - (மரக்) கொம்பிற் (குந்தியிருக்கும்) ஆணிளங் கொக்கே!, தும்பி - வண்டானது, அம் புயத்தின் போதை ஆறு காலால் திறக்க - தாமரை மலரை (த் தன்) ஆறு கால்களினாலும் திறந்ததனால், தேன் ஊறும் திரு நாடன் பொன்னை உறக்கத்தே நீத்தேனுக்கு - தேன் சுரக்கும் (வளமுள்ள) விதர்ப்ப நாட்டரச னுடைய மகளாகிய (தமயந்தியை) நல்ல தூக்கத்திற் பிரிந்தவனாகிய எனக்கு, ஒன்று கூறாது இருத்தி-ஓர் உறுதிமொழியையும் உரையா திருக்கின்றாய்.

(க - ரை) "ஆணிளங் கொக்கே! விதர்ப்பன் மகளைத் தூக் கத்தில் விட்டுப் பிரிந்து வந்து வருந்தும் எனக்கோர் உறுதி மொழி யும் உரையாம லிருக்கின்றாயே! இது என்?" என்றா னளன்.

(வி - ரை) கொம்பர்-செய்த னிலக் கருப்பொருளாகிய புன் னைக் கிளை எனினுமாம். இளங்குருகே என்றதனால் தன்னைப்போல வே அதுவுந் தலைவியை விட்டுத் தனியே தவித்துக்கொண் டிருப்ப தாக எண்ணினா னளனென் றுணர்க. ஆல்-அசை. திறக்க-செயவெ னெச்சம் - காரணப் பொருட்டு. திரு-இங்கே வளத்தைக் காட்டு கிறது. பொன்-தமயந்திக் காகுபெயர். நீத்தேன்-தன்மை யொரு மை வினையாலணையும் பெயர். ஒன்று-உம்மை தொக்கி நின்றது. கொம்பர்-கொம்பு என்பதன் போலி; சுரும்பு சுரும்பர் என்புழிப் போல. இருத்தி - முன்னிலை ஒருமை; இவ்விகுதி கிகழ்காலங்

பொருட்டு. மனையாளைப் பிரிந்த விசனத்தால் நளன் குருகைக் கண்டிங்ஙனங் கூறினு னென்க. தன்னை யறிந் தின்பமுற வெண்ணிலாவே-ஒரு தந்திர நீ சொல்லவேண்டும் வெண்ணிலாவே என்றதூஉ மிதுவே யாம். (௧௬)

[புன்னைப் பூவி லாணிள வண்டு, தன் பெண்ணிள வண்டு தேனுண்ணு மட்டுங் காத்திருப்பதைக் கண்ட நளன் பெருமூச் செறிந்தா னெனல்.]

புன்னை நறுந்தாது கோதிப் பொறிவண்டு [கண் கன்னிப் பெடையுண்ணக் காத்திருக்கும்— இன்னருள் டஞ்சினு னாவி யழிந்தா னறவுயிர்த்து நெஞ்சினு லெல்லா நினைந்து.

(ப - ரை) (நளன்) புன்னை நறு தாது கோதி பொறி வண்டு- புன்னைப் பூவின் மணமுள்ள மகரந்தப் பொடியைக் கிளறிவிட்டுப் புள்ளி வண்டானது, கன்னி பெடை உண்ண காத்திருக்கும் இனிமை அருள் கண்டு - (தன்) இளம் பெண் வண்டு தேனை உண்ணு மட்டும் காத்துக்கொண்டிருக்கின்ற நல்லருளை நோக்கி, அஞ்சினன் - பயந்தான், அற உயிர்த்து நெஞ்சினுல் எல்லாம் நினைந்து ஆவி அழிந்தான் - மிகவும் பெருமூச் செறிந்து தன் மனத்தில் முன் தான் செய்தவைகளை யெல்லாம் எண்ணி யெண்ணி உயிர் வாடினன்.

(க - ரை) தன் பெண் வண்டு தேனுண்ணு மட்டும் காத்திருந்த ஆணிள வண்டின் இன்னருளைக் கண்ட நளன், தான் மனைவியை வஞ்சித்த விதத்தை எண்ணி யெண்ணி ஏங்கினன்.

(வி - ரை) புன்னை-அதன் மலருக் காகுபெயர். கோதுதல்-கிண்டுதல்-தேனூறக் கிளறுதல். குப்பை சிக்குங் கோழி தன் பெட்டைக் கிரையைக் காட்டி விட்டிருப்பது போலவே ஆணின வண்டு தன் பெண்ணின வண்டிக்குத் தேனைக் காட்டிக் காத்திருந்த

தெனக் கொள்க. இவ்வண்டுக் குள்ள இன்னருள் கூட மனித்த னாகிய நமக்கு நம் மனைவி யிடத்தி லில்லாமற் போயிற் றல்லவா! என்று பெருமூச்செறிந்தா னள னென்க. அஞ்சிறை யென்பதை முற்றெச்சமாக் கோடலு மொன்று. ஆவியழிதல் - உயிர்சோருதல்- நிலை தளர்ந் துருகுதல். எல்லாம் என்பது தன் மனைவிக்குத் தா யற்றிய வஞ்சனைகளை யெல்லாம், தன்பால் அவளுக்குள்ள உள் ளன்புகளை யெல்லா மெனினுமாம். (கஎ)

[நண்டை நோக்கி நளன், "மனைவியைப் பிரிந்த பாவியைப் பார்க்கப்படா தென்று ஓடி ஒளிக்கின்றனை" என்று னேனல்.]

காதலியைக் காரிருளிற் கானகத்தே கைவிட்ட
பாதகனைப் பார்க்கப் படாதென்றோ—நாதம்
அளிக்கின்ற வாழிவா யாங்கலவ வோடி
ஒளிக்கின்ற தென்றே வுரை.

(ப - ரை) (நளன்) அலவ - ஓ நண்டே !, நாதம் அளிக்கின்ற ஆழி வாய் ஆங்கு (நீ) ஓடி ஒளிக்கின்றது-ஓசை தரும் (அலைவீசும்) கடற் கரையில் (உன் வளைக்குள்) நீ ஓடி ஒளித்துக்கொள்ளுதல், காதலியை கருமை இருளில் கானகத்தில் கை விட்ட பாதகனை பார்க்கப் படாது என்றோ - மனைவியை நள்ளிருளிற் கடுங் காட் டிற் பிரிந்து வந்த இப்பாவியைக் காண்பது தகா தென்றெண் ணியோ, என்றோ உரை - வேறு என்ன காரணமோ? சொல் (என்றான்).

(க - ரை) "நண்டே! என்னைக் கண்டே ஓடியுன் வளைக் குள் ஒளித்துக்கொள்ளுகிறாயே! இதுவென்ன காரணம்? இரு ண்ட காட்டில் மனைவியை ஒன்றியாய் விட்டு வந்த என்னைப் பார் க்கப் படாதென்றா?" என்றா னளன்.

(வி - ரை) வேறொருத்தியை யாறேனும் சிந்தையில்லை, அன் புள்ள மனைவியை என்பதனால் காதலியை யென்றும், பட்டப்

பகலிலானாலும் பாவா இல்லை, இரவில், அதிலும் நிலவிருந்தாலும் நிர்தை யில்லை, இருளில், அதுவும் மைக் குழம்பு போன்ற கள்ளிருளி லென்பதனால் காரிருளி லென்றும், வேறெந்நாட்டிலானாலும் நலிவில்லை, காட்டில் என்பதனால் கானகத்தே யென்றும் விளங்க வைத்தார். மக்களையேனும் எளிதிற் பெறலாம் கணவனைப் பெறுதல் கற்புடை மனைவிக்கு முடியாத காரிய மென்று தன்னை விடாமற் பின்பற்றின உண்மை அன்புள்ள உத்தம மனைவியைக் கைவிட்டவன், தான் என்பது தோன்றவே பாதகன் என்றானென்றார். நாதம் என்பது அலையோசை. ஆங்கு என்பதை அசையா அகற்று நருமுளர்-இங்கே ஆங் கென்பது தூரத்துள்ள வளையைக் குறிக்கிறது. என்றோ என்பது வினா. எ-பிரிநிலை; ஓகாரம்-வினா; இரங்கலெனினுமாம். பாதகனேன் என்பது பாதக னென்று தன்மையிலொருமை வந்தது. ஆழி-கடலுக் காகுபெயர். அலவ-விளி; அலவன்-முதல் வேற்றுமை. கேட்குக போலவும் என்பதனால் குருகை நோக்கிக் கூறியபடி நண்டை நோக்கிக் கூறியதாக் கூறினார். (கஅ)

["ஏ நீல மலரே! நாரையே! சோலையே! இருட்டில் விழித்துக்கொண்டால் தமயந்தி என்ன நினைப்பாள்? சொல்லுங்கள்" என்றுனள னெனல்.]

பானலே சோலைப் பசுந்தென்றல் வந்துலவுங்
கானலே வேலைக் கழிக்குருகே—யானுடைய [கால்
மின்னிமைக்கும் பூணாளவ் வீங்கிருள்வா யாங்குணர்ந்
தென்னினைக்குஞ் சொல்லீ ரெனக்கு.

(ப - ரை) (நளன்) பானலே - நீலோற்பலமே!, பசுமை தென்றல் வந்து உலவும் சோலை கானலே - குளிர்ந்த தென்றற் காற்று வந்து வீசுகின்ற சோலைகளையுடைய கடற்கரையே, வேலை கழி குருகே-கடற்கரையை யடுத்த கழிக்கரையில் வாழும் நாரையே, யான் உடைய மின் இமைக்கும் பூணாள்-நான் (மணந்து) உரிமையாகக் கொண்ட ஒளிவீசும் பணி பூண்ட தமயந்தியானவள், ஆங்கு அவ் வீங்கு இருள்வாய் உணர்ந்தால் - அக்காட்டில் அப்பேரிருளில்

விழித்துக்கொண்டால், என் நினைக்கும் எனக்கு சொல்வீர் என்ன நினைப்பாள் எனக்குச் சொல்லுங்கள்.

(கு - ரை) நளன், "நீல மலரே, கடற் கரையே, நாரையே! என் காதலியாகிய தமயந்தி அந்தக் காட்டில் இருட்டில் விழித்துக் கொண்டால், என்ன நினைத்துக்கொள்வாள்? எனக்குச் சொல்லுங்கள்" என்றான்.

(வி - ரை) சோலைப் பசுந் தென்ற லென்பதற்குச் சோலைகளிற் படிந்து வரும் என்று கொண்டு, கானல் என்பதற்குக் கடற்கரைச் சோலை யென்பாரு முளர். கானல் என்பதற்குக் கடற்கரை யென்றே பெரும்பாலும் பொருள் கொள விருப்பதால், சோலைக் கான லென்றும்; இதை இருபெயரொட் டென்பாரு முளர். தென்றல் வந்து உலவும் - தென்றற்காற்று வீசும் எனினுமாம். வந்து-காற்று; கானல்-கடற்கரை; கடற்கரையைச் சார்ந்த கழிக் கரை யென்று பொருள் படுவதால், இரண்டன் உருபும் பயனு முடன்றொக்க தொகை யென்று கொள்க. யான் + உடைய - எனக்கு உரிமையாகிய, மண முறையால் யான் உரியவளாகக் கொண்ட என்று விரிவது காண்க. மின் + இமைக்கும் - மின்னல் போல் விட்டொளிக்கும் என்பதூஉ மாம். வீங்குதல்-மிகுதல். வீங் கிருள்-வினைத்தொகை. ஆங்கை-அசையாக்குவாரு முளர். சொல்வீர்- முன்னிலை ஏவன் முற்று. (௧௧)

["போகிறாய், வருகிறாய், புரள்கிறாயே, ஓ கடலே! நீயும் என்னைப்போல மனைவியைப் பிரிந்தாயோ?" என்று னள னெனல்.]

போவாய் வருவாய் புரண்டு விழுந்திரங்கி
நாவாய் குழற நடுங்குறுவாய்—தீவாய்
அரவகற்று மென்போல வார்கலியே மாதை
இரவகற்றி வந்தாய்கொ லின்று.

(ப - ரை) (நளன் கடலை நோக்கி) ஆர்கலியே - கடலே, (நீ) விழுந்து போவாய் புரண்டு வருவாய் - விழுகிறாய் போகிறாய், புரள்கிறாய் வருகிறாய், நாவாய் குழற இரங்கி நடுங்குறுவாய்- (உன் மேல்) கப்பல்கள் அலைய ஓ வென்றிரைந்து அசைகிறாய் (இப் போது நானும் என் காதலியைப் பிரிந்ததனால் உன்னைப் போல வே விழுகிறேன் எழுகிறேன் போகிறேன் திரும்பி வருகிறேன்; என் நாக்கும் வாயும் தடுமாறப் புலம்பி நடுங்குகின்றேன் ஆகை யால்) தீ வாய் அரவு அகற்றும் என் போல - நெருப்பி லிருந்த பாம்பை எடுத்துக் காத்த என்னைப் போலவே, மாதை இரவு அகற்றி இன்று வந்தாய் கொல் - மனைவியை இராக் காலத்தில் ஒன்றியாய் விட்டு இன்றைக்கு (இங்கு) வந்தாயோ?

(கு - ரை) நளன் கடலை நோக்கி, "ஓ கடலே! நீயும் என் னைப் போலவே விழுகிறாய், எழுகிறாய், போகிறாய், புரள்கிறாய், வருகிறாய், நாவாய் குழற இரங்கி நடுங்குகிறாய்; ஆகையால், மனைவியைப் பிரிந்து வந்தாயோ? " என்றான்.

(வி - ரை) நளனுக்குங் கடலுக்கும் இருபொருள் படும்படி இயம்பியுள்ள தற்குறிப்பைக் கண்டு தெளிக; இதில் நாவாய் என் பது கடலுக் குரிப்பொரு ளாகுங்கால் ஒரு சொல்லாய்க் கப்பலை யும், நளனுக்குங் காகுங்கால் இரு சொல்லாய் நாவையும் வாயையும் (அல்லது) நாவை யுடைய வாயையும் குறிப்பதைக் கண்டு தெளிக. தீவாய்-தீயின் வாயிலிருந்து எனினுமாம். வந்தாய் கொல் என்ப தற்கு வந்தாய் போலும் என்பாரு முளர். எதிர்நிரனிறையாக விழுந்து என்பதைப் போவாய் என்பதனோடும், புரண்டு என் பதை வருவாய் என்பதனோடும் இயைத்துப் பொரு ளுரைத்தாம். ஆர்கலி - வினைத்தொகையிற் பிறந்த அன்மொழிக் காரண இடு குறியாய்க் கடலுக் காயிற்று; இதுவும் சென்ற செய்யுளைப் போலவே கேட்குமேபோலவும் என்பதின்பாற் படுவதால் சாரணைத் துறைப் பொதுவியற் றிணையாம். (௨௦)

[நளன் மாறு வேடத்தோடு அயோத்தி நகரத்தை அடைந்தா னெனல்.]

முன்னீர் மடவார் முறுவற் றிரள்குவிப்ப
நன்னீ ரயோத்தி நகரடைந்தான் — பொன்னீர்
முருகுடைக்குந் தாமரையின் மொய்ம்மலரைத் தும்பி
அருகுடைக்கு நன்னாட் டரசு.

(ப-ரை) பொன் நீர் முருகு உடைக்கும் தாமரையின் மொய் மலரை - பொன் தன்மையான அழகையும் தோற்கடிக்குந் தாமரையின் இதழ் நெருங்கிய பூவை, தும்பி அருகு உடைக்கும் நன்மை நாடு அரசு - வண்டுகள் அருகிலிருந்து அவிழ்த்து மலர்த்துகின்ற நல்ல நீர்வளமுள்ள நிடத நாட்டரசனாகிய நள மகாராசன், முன் நீர் மடவார் முறுவல் திரள் குவிப்ப - கடலானது பெண்களின் இள நகை போன்ற முத்துக் குவியல்களைக் கரையில் ஒதுக்க, (அதைப் பார்த்தபடியே) நன்மை நீர் அயோத்தி நகர் அடைந்தான் - நல்ல நீர்வளமுள்ள அயோத்திமா நகரத்தை அடைந்தான்.

(க-ரை) நளன் கடற்கரை வழியாகவே அதனழகைப் பார்த்து வியந்துகொண்டு நல்ல நீர்வளமுள்ள அயோத்திமா நகரத்தை அடைந்தான்.

(வி-ரை) முன் + நீர் - முன்னே தோன்றிய நீர் - கடல்; இதையே மூன்று + நீர் - மூந்நீர் எனப் பிரித்து ஆற்று நீர், ஊற்றுநீர், வேற்றுநீராகிய மூன்றுநீரையும் உடைய தென்பாருமுளர்; (அல்லது) ஆக்கல் காக்கல் போக்கலாகிய முத்தொழிலையுமியற்ற வல்ல நீர் எனினுமாம்; முன்னீர் - பண்புத்தொகையிற் பிறந்த அன்மொழித்தொகையாய்க் கடலுக்குக் காரண இடுகுறி யாயிற் றென்பதே யன்றி ஆகுபெய ரென்பாருமுளர். பொன் + நீர் எனப் பிரித்து, அழகான குளிர்ந்த; முருகு - தேன், உடைக்கும் - இழிந்துச் செல்கின்ற என்பாரும், பொன் + நீர் + முருகு +

உடை + குத் + தா + மரை எனப் பிரித்து, பொன் தன்மையான தேனையுடைய படிந்த தாமரை என்பாருமுளர். முன்னீர் மடவார் என்பதைப் பரத குலப் பெண்களெனக் கொண்டு, அவர்கள் நளனுடைய மாறுவேடத்தைக் கண்டு, முறுவல் + திரள் + குவிப்ப - தமது சிரிப் பென்னுங் குவையைக் குவிக்க (அதாவது) பெரிதும் நகைக்க என்பாருமுளர். கடலென்னுங் குறிப்பால் முறுவலென்பது அதன் உவமையாகிய முத்துக்காயிற்று; குவிப்ப என்பதனாலும் அங்ஙன மாயிற்றெனினுமாம். முருகு-பண்பாகு பெயர். மலர்-வினையடிப் பெயர் அன்றி முதனிலைத் தொழிலாகு பெயரெனினுமாம். (உ௬)

["என் பெயர் வாகுகன்; நான் தேரோட்டுவேன், சமைப்பேன். உங்க ளரசற் குரைமி னென்று னள னெனல்.]

மான்றேர்த் தொழிற்கு மடைத்தொழிற்கு மிக்கோனென்
றான்றேயக்கும் வேலா னுயர்நறவத்—தேன்றோய்க்குந்
தார்வேந்தற் கென்வரவு தானுரைமி னென்றுரைத்தான்
தேர்வேந்தன் வாகுகனாய்ச் சென்று.

(ப - ரை) தேர் வேந்தன் வாகுகன் ஆய் சென்று - தேருருமாசனாகிய நள மகாராசன் வாகுக னென்னும் பெயருடையவனாய் அயோத்தியை அடைந்து, (அரச தூதரை நோக்கி) ஊன் தேய்க்கும் வேலான் உயர் நறவம் தேன் தோய்க்கும் தார் வேந்தற்கு - பகையரச ருடலை யழிக்கும் வேலாயுத மேந்தினவனாகிய சிறந்த மணமுள்ள தேன் தோயச் செய்யும் மலர் மாலை யணிந்த (உங்கள் இருதுபன்ன) மன்னனுக்கு, மான்தேர் தொழிற்கும் மடை தொழிற்கும் மிக்கோன் என்று - (நான்) குதிரைகள் பூட்டிய தேரோட்டும் தொழிலிலும் சமையற் றொழிலிலும் சிறந்தவனென்று, என் வரவு உரைமின் என்று உரைத்தான் - என் வருகையைச் சொல்லுங்க ளென்று சொன்னான்.

(க - ரை) நளன் வாகுக னென்னும் பெயர் கொண்டு சென்று அயோத்தியி லரச தூதரைக் கண்டு நின்று, "தூதர்கள்!

உங்களரசற்கு நான் தேரோட்டவும் சமையல் செய்யவும் வல்லே
னென் றறிவியுங்கள்'' என்றான்.

(வி - ரை) தொழிலின் மிக்கோ னெனற்பாலது தொழிற்கு மிக்கோனென வந்தது தமிழ்மொழி யொழுங்கு. பாரதத்திலும் வண்மைக் கிவனே கொடைக் கிவனே திண்மைக் கிவனே உண்மைக் கிவனே யென்று கன்னனைக் குறித்து வந்திருப்பதுங் காண்க. மடை+தொழில்-உணவாக்குந் தொழில். மடு+ஐ-மடை; மடுத்தல்-உண்ணல்-ஊனை நசுக்கும் எனினுமாம். தேனை மிகுதியாகத் தன்னிடத்திற் றேய்த்துவைத்திருக்கு மாலை யெனக் கொள்க. ஊன் தேய்க்கும் வேலா னென்பதை நளனுக்குச் சேர்ப் பினுமாம்-ஊன் தேய்க்கும் வேலானும் உயர்நறவத் தேன் தோய்க் குந் தாரானு மாகிய இருதுபன்ன மன்ன னெனினுமாம். தானை அசையா அகற்றுக. உரைமின்-ஏவற் பன்மையில் மின் விகுதி வந் திருப்பதறிக, மிக்கோ னென்று சொல்லி என் வரவை உரைமி னென்று கூட்டுக; மிக்கோன் - நான் மிக்கேன் என்னுந் தன் மையிற் படர்க்கை வந்த வழுவமைதி - நான் மிக்கவனா யிருக்கிறே னென்பது பொருள்; ஓரிடம் பிறவிடந் தழுவியது, வேலா கிய என்று பொருள் கொண்டதால் இதை வேந்தனோடு இரு பெயரொட் டாக்குக. (உஉ

[அயோத்தி அரசன் அழைக்க, நளன் சென்று அவ
னைக் கண்டா னெனல்.]

அம்மொழியைத் தூத ரரசற் கறிவிக்கச் [க்கு
செம்மொழியாத் கேர்க்கதனைச் சிந்தித்தே—இம்மொழி
தக்கானை யிங்கே தருமி னெனவுரைக்க
மிக்கானுஞ் சென்றான் விரைந்து.

(ப - ரை) அ மொழியை தூதர் அரசன்கு அறிவிக்க - அ
னனுரையைத் தூதர் சென்று அப்படியே தங்களரசனுக்குத் தெ
வித்ததனல், அதனை (க்கேட்டவன்) சிந்தித்து செம்மை மொ

ஆக தேர்ந்து - அதையவன் கேட்டு எண்ணி உண்மை உரையா கத் தெளிந்து, இ மொழிக்கு தக்கானை இங்கே தருமின் என்ன உரைக்க - இவ்வுரைக்குத் தகுதியான அவ்வொருவனை இங்கழைத்து வாருங்க ளென்று சொன்னதனால், (அப்படியே அவர்களும் அழைத்துச் செல்ல) மிக்கோனும் விரைந்து சென்றான் - உத்தமனாகிய நளனும் விரைந்து (உள்ளே) போனான்.

(க - ரை) நளனுடையத் தூதர் தம்மரசற் கறிவித்தார்கள். அது கேட் டவன் நளனை அழைத்துக் கொண்டு வரச் சொன்னானாகையால் அவன் விரைவாய் அரச னெதிரிற் சென்றான்.

(வி - ரை) தூதர் அறிவிக்க (அவ்வுரையை) அரசன் கேட்டு, சிந்தித்து தெளிந்தா னென்க - இம்மொழிக் குகந்த வுத்தமனை எனினுமாம். தருமின்-ஏவற் பன்மை; தா-பகுதி, மின்-விகுதி. தா தவ்வானது குறுக்கல், ருவ் வந்தது விரித்தல். உம்மை. எச்சம். உரைக்க-செயவென் இறந்தகால வெச்சம். மிக்கான் - மிகு+ஆன் - பகுதி இரட்டிக் காலங் காட்டிற்று-இறந்தகால வினையாலணையும் பெயர். மொழி-முதனிலைத் தொழிலாகுபெயர்; பழியும் இப்படியேயாம். அரசன் தருமி னென வுரைக்க, அப்படியே தூதர் வந்தழைக்க, மிக்கானுஞ் சென்றான் விரைந்து என்று கூட்டுக. (௨௩)

[அயோத்தி யரசன் நளனை நோக்கி, "ஐயா, உன்பெயரென்ன? உனக்கு என்ன வேலை தெரியும்?" என்று கேட்டா னெனல்.]

பொய்யடையாச் சிந்தைப் புரவலனை நோக்கித்தன்
செய்ய முகமலர்ந்து தேர்வேந்தன்—ஐயாநீ
எத்தொழிற்கு மிக்கானி யாதுன் பெயரென்றான்
கைத்தொழிற்கு மிக்கானைக் கண்டு.

(ப - ரை) தேர் வேந்தன் - தேரூரும் அரசனாகிய இருது பன்னன், பொய் அடையாத சிந்தை புரவலனை நோக்கி - பொய் சேராத மனமுடையவனாகிய நளராசனைப் பார்த்து, கை தொழிற்கு மிக்கானை கண்டு - (தேரோட்டுதல் சமைத்தல் முதலிய:)

கைத்தொழில்களிற் சிறந்தவ னென்று சொன்ன அவனை (உள்ளபடி அப்படியே யாவானென்று முகக் குறியால்) அறிந்துகொண்டு, செய்ய முகம் மலர்ந்து - தன்னழகான முக மலர்ச்சியாய், ஐயா நீ எ தொழிற்கு மிக்கான் உன் பெயர் யாது என்றான் - ஐயனே, நீ எவ் வேலையில் வல்லவன், உன் பேரென்ன? என்று கேட்டான்.

(க - ரை) இருதுபன்னன் நளனைக் கண்டும் அவன் உரு மாற்றத்தால், அவனை அவனென் றறிந்து கொள்ளாமல், அவன் சொல்லிக் கொண்ட படியே அவனைக் கைத் தொழிலில் வல்லவனென்று கண்டு, "ஐயா, உனக் கென்ன வேலை தெரியும், உன் பேரென்ன?" வென்று கேட்டான்.

(வி - ரை) பொய்யுடையாச் சிந்தை புரவலனென்றதனால், நளன் உண்மை யுரைப்போ னென்ப தாயிற்று; அவனை மெய்யனென் றெண்பிக்கவே, அவனை நோக்கி இருதுபன்னன் யாதுன்னூர் என்று னென்றுமல் யாதுன் பே ரென்று னென்றார் புகழேந்தியார். அப் பெயரையும் அதற்காகவே வாகுக னென்று முந்தியே மாற்றியும் வைத்தார். இல்லையேல், அவன் தன்னை நிடத நாட னென்றும் நளனென்றும் சொல்லியே தீரவேண்டும். அங்ஙனஞ் சொல்லானேல் அவன் மெய்ய னென்று நில்லான். மானங் காத்தற் பொருட்டுப் பேரையும் ஊரையும் மாற்றினாலும் அது பொய்யேயா மென்றுணர்ந்த கவிஞர்கதைகளைத் தம் வல்லமையால் மாற்றுதல் வழக்கென் றறிக. இதனானே பாட்டுடைத் தலைவனை மெய்யனாக்க வந்த கவிகள் தாம் பொய்ய ராகின்றன ரென்று தெளிக. தங்குறை தீர்வுள்ளாமல் பிறர்க்குறூஉம் வெங்குறை தீர்க்கும் விழுமியோர் அவர்களேயா மென்க. இருதுபன்னன் பார்த்தது நளனையே யானாலும், உரு மாற்றத்தால் அவனை அவனென் றறிந்துகொள்ளாமல், அவன் சொல்லிக்கொண்டபடி அவனைக் கைத்தொழிற்கு மிக்கா னெனவே முகக் குறியால் தெரிந்து கொண்டா னென்பது தோன்றவே 'புரவலனை நோக்கி, மிக்கானைக் கண்டு என்று கூறினார். இருதுபன்னன் உண்மையிற்

பார்த்தது நளனை; அவன் உரு மாற்றத்தால் தெரிந்துகொண்டது கைத்தொழிற்கு மிக்கானை யெனக் கூட்டுக. அவன் கொண்ட வேடம் சமயத்துக் குகந்ததா யிருந்தது. 'மிக்கானைக் கண்டு' என்பர் பரயமோரார்; கைத்தொழிற்கு மிக்கானை என்பதை இருதுபன்னற் காக்கி அடுத்த செய்யுளிற் குளகமா முடிப்பர் சிலர். (உச)

[நளன் இருதுபன்னனை நோக்கி, "ஐயா, நான் மடைத் தொழிலிலுந் தேர்த் தொழிலிலும் வல்லவன்" என்றானெனல்.]

அன்ன மிதிப்ப வலர்வழியுந் தேறல்போய்ச்
செந்நெல் விளைக்குந் திருநாடர்—மன்ன [னென்
மடைத்தொழிலுந் தேர்த்தொழிலும் வல்லன்யா
கொடைத்தொழிலின் மிக்கான் குறித்து.

(ப - ரை) கொடை தொழிலில் மிக்கான் — ஈகையிற் சிறந்தவனாகிய நளன், அன்னம் மிதிப்ப அலர் வழியும் தேறல் போய் செம்மை நெல் விளைக்கும் திரு நாடர் மன்ன - அன்னப் பறவைகள் மிதிப்பதனால் மலர்களினின்று வழிந்தோடுந் தேன் பாய்ந்து செந்நெற் பயிரை விளைக்கும் வயல்வள முள்ள கோசல நாட்டார்க் கரசனே !, யான் மடை தொழிலும் தேர் தொழிலும் வல்லன் என்றான் குறித்து - நான் சமையற் றொழிலிலும் தேரோட்டுந் தொழிலிலும் வல்லே னென்று (அவைகளைக்) குறிப்பிட்டுக் கூறினான்.

(க - ரை) "ஐயா, செந்நெல் விளையுந் திருவயோத்தி நாட்டரசனே ! நான் மடைத் தொழிலிலும் மாத் தேர்த் தொழிலிலும் வல்லேன்" என்றான் நளன்.

(வி - ரை) அன்ன மிதிப்பது நீர்ப் பூவை; அவைகளிற் றேன் அந் நீரோ டோடிச் செந்நெற் பயிரைச் செழிப்பிக்கின்ற தென்று கொள்க. செம்மை + நெல் - செந்நெல்-பண்புத் தொகைநிலைவிதி பெற்றது. விளைக்கும்-விளையச்செய்யும் - பிறவினை. திரு-வளப்பத்தைக்

குறிக்கிறது. நாடர்+மன்ன - நான்கன் தகுதிப் பொருட்டு - நாடரது மன்னன் என ஆறன்றொகை யெனினுமாம். மடு+ஐ-மடை; உணவு-உணவாக்குந் தொழில்-உண்டி சமைக்குந் தொழில். தேர் தொழில்-தேரோட்டும் பாகன் தொழில்-சாரதி வேலை. வல்லன்-தன்மை யொருமைக் குறிப்பு முற்று; அன்-ஈற்றது; அன்றிக் குறிப்பு வினையாலணையும் பெயரெனக் கொண்டு வல்லவன்-வல்லவனுயிருக்கிறே னெனினுமாம் - இங்ஙனங் கொள்ளின் தன்மையிற் படர்க்கை ஓரிடம் பிறவிடந் தழுவலா வந்த வழுவமைதி. நளன் வரையா நீயும் வள்ளல்களில் ஒருவ னென்பது தோன்றவே அவனைக் கொடைத் தொழிலின் மிக்கா னென்றார். தேற லாகுபெயராய்த் தேனைக் குறித்தது. விளக்கும்-பிறவினை, விளையும்-தன்வினை. கொடைத் தொழில்-இருபெயரொட்டு. மன்னன்-எல்லாச் செல்வங்களும் பொருந்தியவன் என்பதனால் இடையடிக் காரண விடுகுறி ஆண்பாற் பெயர். (உரு)

[அயோத்தியி னளன் பாகனுய மர்ந்திருக்கையில், குண்டின புரியிற் றமயந்தி அவனை யெண்ணி வாடினு ளெனல்.]

குறித்துரைத்த வாறக் குலவேந்த னென்று
மறித்துரையா னங்கவனும் வைக—வெறித்தவிள
மான்போல் விழியாண் மகிழ்நனிலை யேதெனவே
ஊன்போ லுயங்குவா ளோர்ந்து.

(ப - ரை) குறித்து உரைத்த ஆறு - வாகுகனுகிய நளன் தன்னைக் குறித்துச் சொன்னபடியே, அ குலம் வேந்தன் மறித்து உரையான் என்று - அவ்வாசரிற் சிறந்தோனுகிய இருதுபன்னன் தடுத்துச் சொல்லாமல் ஒப்புக்கொண்டதனால், ஆங்கு அவனும் வைக - அவ் வயோத்தியில் அவ்வாகுகன் தங்கியிருக்க, வெறித்த இளமை மான் போல் விழியாள் - மருண்ட இளமையாகிய மானைப் போன்ற பார்வையை யுடையாளாகிய தமயந்தி, மகிழ்நன் நிலை ஏது என்ன - தன்னாயகனுகிய நளனுடைய இருப்பு எப்படிப்பட்ட தென்று, ஓர்ந்து ஊன் போல் உயங்குவாள்-

எண்ணி யெண்ணி உயிரற்ற உடலே போல வாடி வதங்குவா ளாயினாள்.

(க - ரை) நளன் அயோத்தி யரசனிடத்தில் வாகுக னென் னும் பெயரோடு தேர்ப்பாகனாய்த் தங்கி யிருக்கையில், குண்டின புரியில் தமயந்தி அவனிலை யென்னவோ வென் றெண்ணி வாடினாள்.

(வி - ரை) தன்னை மடைய னென்று நளன் சொன்னபடி யே இருதுபன்ன னொப்புக்கொண்டு அவனைத் தன்னிடத்திற் சேவகத்தில் அமர்த்திக் கொண்டதனால், அவன் அங்கேயே தங்கியிருந்தான். குலவேந்தன் தடுத்துரையாமல் என்றதனால் என்று கூட்டுக. வெறித்த - ஓசை கேட்டு மருண்ட. மானின் சாதாரணப் பார்வையினும் மருண்ட பார்வையே வெகு அழகா மென்பார் வெறித்த மான் என்றும், கிழ மான் பார்வையி னும் இள மான் பார்வை யேற்ற மென்பார் இள வென்று மியம் பினார். மகிழ்நன் - தொழிலடிப் பெயர்ப் பகுபதம்; மகிழ + ந் + அன்; ந்-பெயரிடைநிலை. மகிழ்வோ னென்பதனாற் காரணக்குறி. வாழ்நன் வாணன் என்பது போல இதுவும் மகிண னெனவும் வரும். உயங்குவா ளென்பதை உயங்குவாளாகி யென் றெச்சமாக் கிப் பின்வரும் பாட்டில் உணர்ந்து என்பதனோடு ஒட்டுவாரு முளர்; இங்கிது எதிர்காலத்ததேனும் தமிழ் ஒழுங்கின்படி உயங் குகிறாள் உயங்குவாளா யினா ளென்று கோடலே தகுதியாம். (உக)

[தமயந்தி, தங்கள் புரோகிதனை நோக்கி, "ஐயரே, என்னைப் பிரிந்துபோன அரசனைத் தேடிக் கண்டுவாரும்" என்றா ளெனல்.]

என்னை யிருங்கானி னீத்த விகல்வேந்தன்
தன்னைநீ நாடுகெனத் தண்கோதை—பின்னைப்
புரைகதிர்வேல் வேந்தன் புரோகிதனுக் கிந்த
உரைபகர்வ தானா ளுணர்ந்து.

(ப - ரை) தண்மை கோதை - குளிர்ச்சியாகிய மலர் மாலையணிந்த தமயந்தி, உணர்ந்து - (இவனே நாடி அறிய வல்லவனென்று) துணிந்து, மின்னை புரை கதிர் வேல் வேந்தன் புரோகிதனுக்கு - மின்னலைப் போன்ற கிரணங்களை யுடைய வேலைத் தாங்கிய (தன் தந்தையாகிய வீம) ராசனுடைய புரோகிதனுக்கு, என்னை இரு கானில் நீத்த இகல் வேந்தன் தன்னை - என்னைப் பெரிய வனத்தில் (ஒன்றியாய்) விட்டுச் சென்ற போராசனாகிய நள மகா ராசனை, நீ நாடுக என்ன - நீ தேடக் கடவா யென்று, இந்த உரை பகர்வதானாள் - பின்வரும் இச்சொல்லைச் சொல்லத் தொடங்கினாள்.

(க - ரை) தமயந்தி தங்கள் புரோகிதனாகிய சுவேதனென்பவன்தான் நாடி யறியத் தக்கவனென்றுணர்ந்து, "ஐயரே! வனத்திலென்னை ஒன்றியாய் விட்டுப் போன மன்னனை நீர் தேடிவாரும்" என்றாள்.

(வி - ரை) நாடுக + என்ன - நாடுகென - வியங்கோ ளகரந் தொக்கது. தண்கோதை-பண்படி அன்மொழித் தொகையாய்த் தமயந்தியைக் குறிப்பது காண்க. இகல் + வேந்தன்—இகலில் வல்ல அரசன் - ஏழன்றொகை, இகலையுடைய வேந்தன் :- இரண்டன்றொகை, இகலும் வேந்தன் -வினைத்தொகை, இகலுள்ள வேந்தன்- எழுவாய்த் தொடர் ஆக நான்கு பொருளில் மயங்குவது காண்க. பகர்வது + ஆனாள் - பகர்வதில் மனமுடையாளானாள்; பகர்வது- பகர்தல்; பகர்வது - எதிர்கால வினைப்பெயர். புரோகிதன் - அரசற்கு வருங் காரிய முரைப்போன் - அந்தணன்; புரோகிதனுக்கு- நான்கன்கோடற் பொருட்டு.

(உஎ)

["பாழ் மண்டபத்தில் மனைவியை யொன்றியாய் விட்டுப்பிரி தல் மன்னர்க்குத் துணிவல்லவா என்று லெதிருரைப் பாரை யறிந்துவா" என்று புரோகிதனை யனுப்பினு ளெனல்.]

*காரிருளிற் பாழ்மண்ட பத்தேதங் காதலியைச்*
*சோர்துயிலி னீத்த றுணிவன்றோ—தேர்வேந்தர்க்*
*கென்றுரைத்தா லேனோர்நின் றெதிர்மாற்றந் தந்தாரைச்*
*சென்றறிந்து வாவென்றாள் தேர்ந்து.*

(ப - ரை) கருமை இருளில் பாழ்மண்டபத்து - (மைக்குழம்பு போலக்) கறுத்த இருட்டில் (பாதி இரவில்) பாழான மண்டபத்தில், தம் காதலியை சோர் துயிலில் நீத்தல் - தாம் கொண்ட மனைவியை (அவளுடைய) அயர்ந்த தூக்கத்தில் (நல்ல தூக்கத்தில்) விட்டுப் போதல், தேர் வேந்தர்க்கு துணிவு அன்றோ என்று அறைந்தால் - தேரூரும் மன்னர்க்கு மன மொப்பின காரிய மல்லவோ என்று (நீ) சொன்னால், எதிர் மாற்றம் தந்தாரை - (அதற்கு) மறுமொழி சொன்னவர் (யாராயிருப்பினும்) அவரை, சென்று அறிந்து வா என்றாள் தேர்ந்து - (நீ) போயறிந்து கொண்டு வா என்று ஆராய்ந்து சொன்னாள் (தமயந்தி).

(க - ரை) "கொண்ட மனைவியை நடு ராத்திரியில் நல்ல தூக்கத்தில் ஒன்றியாய் விட்டுப் போதல் மன்னர்க்கு மனத் துணிவல்லவோ என்று நீ சொன்னால், எதிர் மொழி கூறுவாரை யறிந்துகொண்டு வா" என்றாள் தமயந்தி.

(வி - ரை) புரோகிதன்தான் நள னிருப்பைக் கண்டறிந்து வர வல்லவனெனத் துணிந்த தமயந்தி, "ஐயரே, நீர் போய் நான் சொன்னபடி சொன்னால் எதிர் மொழி யியம்பினரை அறிந்து வாரும்" என்று தேர்ந்து சொல்லிப் புரோகிதனை அனுப்பினாள் என்று கூட்டுக. காரிருள்-கருமை + இருள் - மிகுந்த இருளெனினுமாம். பாழ் மண்டபம்-இடிந்து ஒரு புறம் பாழாய்ப் போன மண்

டபம். ஏகாரம் அசை யல்லது பிரிநிலை யென்பாரு முளர். தம்+ காதலி, தம் என்று பன்மையி லிருப்பதால் பொதுப் பன்மை யாக் கொள்க - உலகத்தாரை உளப்படுத்திய பன்மை யெனினு மமையும்; தெரியாதார் இதை மரியாதைப் பன்மை யென்பர். சோர் துயில்-வினைத்தொகை. துணிவு-தைரியம்- மன மொவ்வுதல். அன்றோ-எதிர்மறை வினா. ஈ றெதிர்மறை உடன்பாட்டுப் பொரு ளன. தந்தாரை - இது ஒருவ னெனின் மரியாதைப் பன்மை யெனலாம். தன் காதலியை...தேர் வேந்தற்கு என் றொருமையிற் பாட பேதங் கொள்வாரு முளர். துயில் - முதனிலை வினைப் பெயர். பாழ் மண்டப விளைவு தனக்கு நளனுக்குமே தெரிந்த உள வாகையால் குத்துப்பாடாக அங்ஙனங் கூறினால் வீறுப்போ டவன் வெளிப்படுவா னென் றிங்ஙன மியம்பினாள் தமயந்தி. (உஅ)

[நளனைப் புரோகிதன் எங்கெங்குந் தேடிப்போய் அயோத்தி யடைந்தா னெனல்.]

மின்னாடு மால்வரையும் வேலையும் வேலைசூழ்
நன்னாடுங் கானகமு நாடினான் — மன்னு
கடந்தாழ் களியானைக் காவலனைத் தேடி
அடைந்தா னயோத்தி நகர்.

(ப - ரை) (புரோகிதன்) மின் ஆடும் மால் வரையும் - மின் னல் ஒளி வீசும் மேகங்கள் தவழ்கின்ற மலைகளிலும், வேலையும் வேலை சூழ் நன்மை நாடும் கானகமும் நாடினான் - கடலிலும் கடல் சூழ்ந்த வளமுள்ள நாடுகளிலும் காடுகளிலும் விரும்பிச் சென்று, மன்னு கடம் தாழ் களி யானை காவலனை தேடி - மாறாத மத நீர் ஒழுகும் மயக்கத்தை யுடைய யானை யேறும் அரசனாகிய நளனைத் தேடி (க்காணாமல்) அயோத்திநகர் அடைந்தான்-(கடைசி யாக) அயோத்தி நகரத்தைச் சேர்ந்தான்.

(க - ரை) நளனைப் புரோகிதன் குறிஞ்சியிலும் நெய்தலி லும் முல்லையிலுந் தேடிவிட்டுப் பிறகு மருதத்திலுள்ள அயோத்தி நகரத்தைச் சேர்ந்தான்.

(வி - ரை) மின்+நாடு எனக் கொண்டு மின்னல்கள் பொருந்திய என்பதூஉ மொன்று; மின் என்பதையே மேகத்துக் காகுபெயராக்கி, மேகங்கள் தவழ்கின்ற, மால்-பெரிய, வரை-மலை யெனினுமாம். வரை யென்பதைத் தானி யாகுபெயராக்கி அதைச் சூழ்ந்த நிலத்துக்குங் கொள்க. வரை யென்னும் மூங்கிற் பெயர் மலைக்கும், அதுவே அதைச் சூழ்ந்த நிலத்துக்கும் இருமடித் தானியாகுபெயரா மென்க. நாடினன் ; நாடி யென்று பொருள் படுவதால் முற்றெச்சம் - காவலனை நாடினன் ; காணமல் (அவ னைத்) தேடி அயோத்தி நகரடைந்தான் எனினுமாம்; நாடினன் என்பதை நளனுக் காக்கிக் காவலனை யென்பதனோடு ஒட்டுவர் சிலர். தாழ் களி யானை-வினைத்தொகை; களியானை-இரண்டன்உரு பும் பயனும் உடன்தொக்க தொகை; இதுவே களிக்கும் யானையெ னின் வினைத்தொகை. காவலன்-காப்பு வல்லவன். கடம் - யானைக் கன்னம்; அதில் ஒழுகும் நீர்க்கு ஆகு பெயர். வேலை கடலுக்கும், அதுவே அதிலுள்ள தீவுக்கும் இருமடியாகு பெயராம். (உ௧)

[அயோத்தியிற் புரோகிதன், "வனத்தில் மனைவியை ஒன் றியாய் விடுதல் மன்னர்க்கடுக் குமோ?" என்ன, அது கேட்டு வந்தா னள னெனல்.]

கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டுப்
போனதுவும் வேந்தர்க்குப் போதுமோ—தானென்று
சாற்றினு னந்தவுரை தார்வேந்தன் தன்செவியில்
ஏற்றினன் வந்தா னெதிர்.

(ப - ரை) (புரோகிதன்) கானகத்து - காட்டில், காத லியை - மனைவியை, கருமை இருளில் கைவிட்டு - பேரிருளில் நீக்கிவிட்டு, போனதுவும் வேந்தர்க்கு போதுமோ - பிரிந்து போனதும் அரசர்க்கு அடுக்குமோ, என்று சாற்றினன் - என்று விளம்பரப் படுத்தினன்; அந்த உரை தன் செவியில் ஏற்றினன் - அந்த விளம்பர மொழியை (நளன்) தன் காதில் ஏற்று, (உடனே) எதிர் வந்தான் - (அவனுக்கு) எதிரில் வந்து தோன்றினன்.

(க - ரை) 'காட்டிற் றம் மனைவியை ஒன்றியாய் விட்டுப் போதல் அரசர்க் கடுக்குமோ?' என்று புரோகிதன் விளம்பரப் படுத்தினதைக் கேட்ட உடனே நளன் அவனெதிரிற் றோன்றினான்.

(வி - ரை) போதுமோ - அமையுமோ, தகுமோ, கூடுமோ எனினுமாம். வேந்தர்க்கு-நான்கன் தகுதிப் பொருட்டு-தான் என்ப தசைநிலை. சாற்றினான்-பறை சாற்றினான் எனினுமாம். "புரோகிதன் (பறை) சாற்றினான், (சாற்றி) அந்த வுரையைத் தார் வேந்தன் தன் செவியில் ஏற்றினான்" என்று கூட்டுவாரு முளர். கூட்டிச் சாற்றினான் என்பதற்கும் ஏற்றினானென்பதற்கும் புரோகிதனையே எழுவாயாக்கி இடரெய்துவர்; சாற்றுவதுதான் புரோகிதன் வேலை; இன்னான்தான் நளனென்று தெரியாத புரோகிதன் எல்லார் செவியிலும் ஏற்றினபடி நளன் செவியிலும் ஏற்றினானேயன்றி, அவன் செவியில் மட்டும் தெரிந்து சென்று நேரா யேற்றினானில்லை: புரோகிதன் விளம்பரப் படுத்தினான்; அதுகேட்டு நளன் அவனெதிரே வந்தான் என்பதே ஒழுங்கு. செவியில் ஏற்றினான்-கேட்டான். ஏற்றினான்-முற்றெச்சம், ஆகையால் ஏற்று - கேட்டு என்று பொருள் கொண்டாம். ஓகாரம் உடன்பாட்டு வினை எதிர்மறைப் பொருட்டு. போதுமோ என்பதற்குப் போதாது போதாது இன்னும் பல கொடுமைகள் இயற்றவேண்டு மென்று பொருள் தந்து நிற்பதால் போனதுவும் என்பதில் உள்ள உம்மை எச்சவும்மை என்பர். (௩௦)

[புரோகிதனை நோக்கி நளன், ஐயரே, 'ஐயப்படவேண்டா, எல்லாம் வினைப்பயனாய் முடிந்தது" என்றுரைனெனல்.]

ஒண்டொடி தன்னை யுறக்கத்தே நீத்ததுவும்
பண்டை விதியின் பயனேகாண்—தண்டாளப்
பூத்தாம வெண்குடையான் பொன்மகளை வெவ்வனத்தே
நீத்தானென் றையுறே னீ.

(ப - ரை) (வாகுகனாகிய நளன் புரோகிதனை நோக்கி) ஒண்மைதொடி தன்னை உறக்கத்து நீத்ததுவும் - ஒளி வளை யணிந்தா

ளாகிய தமயந்தியை நல்ல தூக்கத்தில் (அவள் கணவன்) விட்டுப் பிரிந்ததும், பண்டை விதியின் பயனே காண் - முன் செய் தீவினையின் பயனே யாகும், (ஆகையால்) தண்மை தாளம் பூ தாமம் வெண்மை குடையான் பொன் மகளை - குளிர்ச்சியாகிய முத்துக்கள் கோத்த அழகான மாலைகள் சூழ்ந்த வெண் கொற்றக் குடையையுடைய வீமராசனது திருமகள் போன்ற ஒருமகளாகிய தமயந்தியை, வெம்மை வனத்து நீத்தான் என்று நீ ஐயுறேல்- கடுங் காட்டில் (அவன் ஒரு காரணமு மின்றிக்) கைவிட்டானென்று நீ மலேக்காதே.

(க - ரை) "எல்லாம் வினைப் பயனாய் முடிந்தது. ஆகையால் தமயந்தியை அவள் கணவன் காரண மின்றிக் கைவிட்டானென்று மலேக்காதே" என்றான் வாகுகனாகிய நளன்.

(வி - ரை) ஒண்டொடி-பண்புத்தொகையிற் பிறந்த அன்மொழியாய்த் தமயந்தியைக் குறித்தது. உறக்கத்தே, வனத்தே என்பவைகளில் ஏகாரங்களை அசைக ளென்பதினும், பயனே என்பதில் ஏகாரந் தேற்றமாமாறு, அவ் விரண்டும் பிரிநிலைக ளெனினுமாம். முத்து மாலை குடையிற் றொங்குகின்றனவாம். பொன்மகள்-உவமைத்தொகை. காண் என்பத தசை யென்று தள்ளலும், நீ காணக் கடவா யென்று பொருள் கொள்ளலுமாம். நீ காண் - நீ எண்ணித் துணி. ஐயுறேல் - ஐயுறு + எல்; ஐயுறு - பகுதி, எல் - எதிர்மறை ஏவலொருமை விகுதி; இயல்வது கரவேல் என்புழிப் போல். எல் விகுதி எதிர்மறைக்கே உரியதாகையால் இதில் எதிர்மறை ஆகாரம் இடையிற் புணர்ந்து கெட்ட தென்பது கூடாதென்க. உம்மை எச்சம். (நக)

[வாகுகனாகிய நளன் சொற் கேட்ட புரோகிதன் ஐயுற்றுக் குண்டினபுரத்துக்குத் திருமிச் சென்றானெனல்.]

அம்மொழிகேட் டந்தணனு மையுற் றருநோக்கி
விம்ம கருங்குழலை மீண்டடைந்தான்—தெம்மன்னர்
ஊன்றோய் வடிவேல் விதர்ப்ப னொண்ணகர்க்கே
வான்றோய்பொற் கோயிலிடை வந்து.

(ப - ரை) அ மொழி கேட்டு அந்தணனும் உரு நோக்கி ஐயுற்று - அந்த (வாகுகன் சொன்ன) சொல்லை உற்றுக் கேட்டு (அந்தச் சுவேதன் என்னும்)புரோகிதனும் (அவனுடைய) வடிவு தை (க்கூர்ந்து) பார்த்து மலைத்து, தெவ் மன்னர் ஊன் தோய் வடி வேல் விதர்ப்பன் ஒண்மை நகர்க்கு மீண்டு - பகையரசருடலிற் பாயும் கூர் வேலேந்திய விதர்ப்ப ராசனுடைய அழகான குண்டினபுரத்துக்குத் திரும்பி, வான் தோய் பொன் கோயிலை வந்து - விண்ணளாவிய அழகான மாளிகையில் வந்து, விம்மு கருமை குழலை அடைந்தான் - (கணவனை யெண்ணி யெண்ணிப் பொருமிக் கொண்டிருக்குங் கருங் கூந்தலை யுடைய தமயந்தியை நெருங்கிக் கண்டான்.

(க - ரை) வாகுகன வாய் மொழியைக் கேட்ட புரோகிதன் மலைத்து ஒன்றும் பேசாமல் குண்டினபுரத்துக்குத் திருமி வந்து தமயந்தியைக் கண்டான்.

(வி - ரை) அந்தண ரெஸ்போ ரறவோ ரென்பதனால், அது செந்தண்மை பூண்டொழுகுவார்க்கே காரண இடுகுறிச் சிறப்பா மன்றி ஏனையோர்க்குப் பொருந்தாமை யறிக. அந்தணரென்பது நஞ் செந்தமிழ் மொழியாகலான் புரோகிதனுக்குப் பொருந்தா தேனும், புகழேந்தியார் இதை வேதியன் என்பதற் கீடாக ஒருவாறு இலயத்துள்ளா ரென்றறிக. ஐயுறுதல் - மலைத்தல்- இதுவோ அதுவோ, ஆமோ அன்றோ என்றையுறுதல். விம்மு+ கருங் குழல் - வினைத்தொகை ; கருங்குழல், ஒண்டொடி என்பு ழிப் போன்ற அன்மொழி-தமயந்திக்குக் காரணக்குறி யாயிற்று. தெவ் + மன்னர் - தெம்மன்னர் - விலமொழி யீற்று வகரம் மகர மாதல் தமிழ்மொழி யொழுங்கு. ஊன் + தோய் - ஏழன்றொகை. வடிவேல் - வடித்த வேல்-என்புழி வினைத்தொகை; கூர்மையா கிய வே லென்புழி பண்புத்தொகை; கூரிய வே லென்புழி பெய ரெச்சத்தொடர். குழலை அடைந்தான் என்பதற்குக் கண்டா னென்பதே சரியான பொருளாம்; சேர்ந்தா னென்பர் தெரி யார்.

(௩உ)

[புரோகிதனை நோக்கித் தமயந்தி "ஐயரே, எங்குப் போய்த் தேடினீர்? கண்டீரா மன்னவனை?" என்று வினவிற்றெனல்.]

எங்க ணுறைந்தனைகொ லெத்திசைபோய் நாடினைகொல்
கங்கைவள நாட்டார்தங் காவலனை—அங்குத்
தலைப்பட்ட வாறுண்டோ சாற்றென்றாள் கண்ணீர்
அலைப்பட்ட வாகத்தா ளாங்கு.

(ப - ரை) கண் நீர் அலைபட்ட ஆகத்தாள் ஆங்கு - தன் கண்களின் நீர் அலைகளைப் போலப் பாய்ந்து கொண்டிருக்கின்ற மார்புடையாளாகிய தமயந்தி (சுதேவனைக் கண்ட) போது, எ கண் உறைந்தனை-எந்தெந்த விடங்களிற் றங்கினை?, கங்கை வளம் நாட்டார்தம் காவலனை எ திசை போய் நாடினை - கங்கை பாயும் வளமுடைய நிடத நாட்டாரசனாகிய என் னாயகனை எந்தெந்தத் திக்கிற் போய்த் தேடி வந்தனை?, அங்கு (அவன்) தலைப்பட்ட ஆறு உண்டோ சாற்று என்றாள் - அந்த இடங்களி லெங்கேனும் (அவன் உன் கண்ணில்) தென்பட்ட வகை ஏதேனும் உண்டோ (நீ) சொல்லென்று கேட்டாள்.

(க - ரை) "ஐயரே, நீர் எங்கெங்குத் தங்கினீர், எங்கள் மன்னனை எங்கெங்குத் தேடினீர்? அங்கெங்கேனும் அவரை நீர் கண்டு வந்ததுண்டோ? சொல்லும்" என்றாள் தமயந்தி.

(வி - ரை) எ + கண்-எங்கண்; ககரத்துக் கினமாகிய ஙகரந் தோன்றல் தமிழ்மொழி யொழுக்கு அ + கண்-அங்கண் என்புழிப்போல. கொல்க ளிரண்டு மிசைநிறை யசை நிலைகள். தலைப்படுதல்-நேர்படுதல் - தென்படுதல் - கண்கூடாதல் முதலிய பொருள்களை இடத்துக் குகந்தவா றேற்கும். அலைப்படுதல்-அலை போல மாறுமாறப் பாய்தல். ஆகம்-மார்பு - இது இடவாகுபெயராய்க் கொங்கைகளையுங் குறிக்கும். அகம் கேட்டும்வழி நீண்டு ஆகமென் றாயிற்று. கணவனைக் காணமல் அவன் நினைவே பெரு நினைவா யெண்ணி யெண்ணி யேங்கிக் கண்ணீர் வடித்தபடியே யிருந்தாள்

தமயந்தி யென்றறிக. ஆங்கு என்பதையும் அசை யென அகற்று வாரு முளர். உறைந்தனை நாடினை என்பவைகளில் ஐகாரம் முன்னிலை யொருமைப் பொருட்டு. (ந.ந)

["அம்மணி! நீ சொன்னபடி அயோத்தியிற் பாகனைப் பார்த்தேன்பேச்சு; ஒத்திருக்கிறது, உருவம் வேறுபடுகிறது" என்றான் சுவேத னெனல்.]

வாக்கினான் மன்னவனை ஒப்பான் மறித்தொருகால்
ஆக்கையே நோக்கி னவனல்லன்—பூக்கமழும்
கூந்தலாய் மற்றக் குலப்பாக னென்றுரைத்தான்
ஏந்துநூன் மார்ப னெடுத்து.

(ப - ரை) ஏந்து நூல் மார்பன் - பூணூலைத் தாங்கிய மார்புடையோனாகிய சுவேதன், பூ கமழும் கூந்தலாய் - பூமணம் வீசுந் தலைமயிருடையாளே !, அ குலம் பாகன் - அவ் வுயர்குலப் பெருந்தகையாகிய தேர்ப்பாகன் (நீ சொன்ன குறிப்பின்படி அயோத்தியில் ஒருவன் இருக்கின்றான்,(அவன்), வாக்கினால் மன்னவனை ஒப்பான் - தன் பேச்சால் நளமகாராசனை ஒத்திருக்கின்றான், மறித்து ஒருகால் ஆக்கையே நோக்கின் அவன் அல்லன் - மறுபடியும் ஒரு முறை அவன் உடலை நன்றாய் உற்றுப் பார்த்தால் அம்மன்னவ னல்லனாயிருக்கிறான், என்று எடுத்து உரைத்தான்- என்று விளங்கக் கூறினான்.

(க - ரை) "அம்மணி ! நீ சொன்ன குறிப்பின்படி அயோத்தியிற் பாகனைப் பார்த்தேன். அவன் பேச்சால் நம் மன்னவனை ஒத்திருக்கின்றான். உருவத்தால் அவ்வாறில்லை" என்றான் புரோகிதன்.

(வி - ரை) வாக்கு - சொல்லுக் காகுபெயர். ஒப்பான் - தொழிலடிப்பெயர். பூ - மணத்துக் காகுபெயர். கூந்தலான் - ஆன் விகுதி ஆய் ஆகி விளிப்பொருள் கொண்டது. மற்று - அசை.

வ-பிரிவிலை. நீ சொன்ன குறிப்பின்படி தேர்ப்பாகன் ஒருவனை அயோத்தியிற் கண்டேன்; அவன் பேச்சால் நம்மரசன் போலவே யிருக்கிறான். ஆனாலும், உருவத்தா லவ னல்லன் என்றுரைத்தா னென்று கூட்டிக்கொள்க. ஆக்கை-யாக்கை யென்பதன் மரூஉ. யா-பகுதி, க்-சந்தி, கை-விகுதி; யா-கட்டு, யாக்கை - கட்டியது-தொழிலாகுபெயருமாம். யாக்கை - இங்கு அதன் தோற்றத்துக் கிருமடி யாகுபெயர். (௩௭)

[அது கேட்ட தமயந்தி, "மீண்டும் நீ போய், எனக்கு இரண்டாம் சுயம்வர மென் றியம்பு" என்று ளெனல்.]

மீண்டோர் சுயம்வரத்தை வீமன் றிருமடந்தை
பூண்டாளென் றந்தணநீ போயுரைத்தால்—நீண்ட
கொடைவேந்தற் கித்தூரந் தேர்க்கோலங் கொள்வான்
படைவேந்த னென்றாள் பரிந்து.

(ப - ரை) (தமயந்தி), அந்தண - வேதியனே, வீமன் திருமடந்தை - வீமராசனுடைய அழகான மகளாகிய தமயந்தி, மீண்டு ஓர் சுயம்வரத்தை - மறுபடியும் ஒரு சுயம்வர மணத்தை, பூண்டாள் என்று - மேற்கொண்டாளென்று, நீ போய் உரைத்தால் - நீ போய் தெரிவித்தால், நீண்ட கொடை வேந்தன்கு - பெருங்கொடையிற் சிறந்தவனாகிய இருதுபன்ன மன்னனுக்கு, படை வேந்தன் - சேனைகளையுடைய நளமகாராசன், இ தூரம் தேர் கோலம் கொள்வான் என்றாள் பரிந்து - இவ்விடத்திற்குத் தேர்ச் சாரதிக் கோலங் கொண்டு வருவான் என்று அன்போடு சொன்னாள்.

(க - ரை) "வேதிய, வீமராசன் மகளாகிய தமயந்திமறுபடியும் ஒரு சுயம்வரத்தை நாடினா ளென்று நீ போயுரைத்தால், இருதுபன்னனுக்கு தேர்ச்சாரதியாய் நளன் இங்கு வருவா" னென்றாள் தமயந்தி.

(வி - ரை) மீண்டு-மீள்+ட்+உ-இறந்தகால வினையெச்சம். திரு வென்பது, இங்கு அழகின் சிறப்பைக் குறிக்கின்றது. திரு

வென்பதற்கு மலர் மகள் என்று பொருள்கொளின் உவமையாம். கொடை வேந்தற்கு நீ போயுரைத்தால், படைவேந்தன் அவனுக்குச் சாரதியாய் வருவா னென்றுங் கொண்டு கூட்டிப் பொருள் கூறினு மாம். இ+தாரம் - இத்தனை தூரம் எனினுமாம். இங்குத் தூரம் ஆகுபெயராய் இடத்தைக் குறித்ததென் றுணர்க. இப்போது ளன் படையற் றிருந்தானாயினும், அவனுக் கது மரபடையாயிற்று. கொடை - ஈகை-தொழிற் பெயர் - செயப்படு பொருண்மைத்து. பரிந்து - அன்பாயெடுத்து எனினுமாம்; என்று அன்பாயெடுத் தியம்பினான் என்று கொள்க; அன்போடு ஆவலாயெடுத்துப் பேசினா னென்பதுமாம். சுயம்வரம்-தன் மனம் போற் கன்னிகை யொருத்தி கணவனைத் தேர்தலுக்கே வடமொழியிற் சுயம்வர மென்று வழங்குகிறது. இது அக்காலத்திய வழக்கமாயிருந்தது. இக்காலத்தும் இருப்பின் இசைவா யிருக்குமென்று கொள்க. (௩௫)

[புரோகிதன் அயோத்திக்குப் போய், "எங்க ளரசன்தன் மகளுக் கிரண்டாஞ் சுயம்வரம்" என்று பறையறைவித்தா னெனல்.]

எங்கோன் மகளுக் கிரண்டாஞ் சுயம்வரமென்
றங்கோர் முரச மறைவித்தான்—செங்கோலாய்
அந்நாளு நாளை யளவென்று னந்தணன்போய்த்
தென்னாளுந் தாரானைச் சேர்ந்து.

(ப - ரை) அந்தணன் போய்—புரோகிதன் அயோத்திக்குப் போய், தென் ஆளும் தாரானை சேர்ந்து - அழகுமிகுந்த மாலையணிந்த இருதுபன் மன்னனை நெருங்கி, செம்மை கோலாய்-அரசனே!, எம் கோன் மகளுக்கு இரண்டாம் சுயம்வரம் என்று - எங்கள் அரசன்தன் மகளாகிய தமயந்திக்கு இரண்டாவது சுயம்வர மண நடக்கப்போகிறதென்று, அங்கு ஓர் முரசம் அறைவித்தான் - விதர்ப்ப தேசத்திலொரு பறை யறைவித்து விளம்பரப் படுத்தியுள்ளான்,

அந்நாளும் - அது நடக்கு நாளும், நாளை அளவு என்றான் - (நெடுந்தூரத்தி லில்லை) நாளை யளவிலேயே யிருக்கின்றதென்று சொன்னான்.

(க - ரை) புரோகிதன் போய் அயோத்தி யரசனைக் கண்டு, "அரசனே! எங்கள் வீமராசன் தன் மகளுக் கிரண்டாம் சுயம்வர மென்று விளம்பரப்படுத்தியிருக்கிறான்; அதுவும் நாளையளவிலேயே இருக்கிறது" என்றான்.

(வி - ரை) எம் + கோன் - எம் உளப்பாட்டுப் பன்மை - மகளுக்கு நான்கற்தகுதி. செம்மை + கோல் - நேரான நீதி - இங்குக் கோல் நீதிக் காகுபெயர்; கொடுங்கோல் - கோணலான நீதி. உம்மை - சிறப்பு. நாளை அளவு என்பதற்கு நாளையளவினதாகவே யிருக்கின்றதெனினுமாம் - இரண்டு + ஆகும் + சுயம்வரம் - இரண்டாமுறையில் நடக்கும் சுயம்வர மணம். தென் என்பதைத் தேன் என்பதின் குறுக்கலாக் கொண்டு வண்டு என்பாருமுளர்; தென் என்பதை அழகென்று கோடலே சரியாம். புரோகிதன், இருதுபன்னனை நோக்கி, "எங்கோன் (தன்) மகளுக்கு இரண்டாஞ் சுயம்வர மென்று அங்கு (விதர்ப்பதேசத்தில்) ஓர் முரசம் அறைவித்தான்; அந்நாளும் நாளை யளவு" என்றான் என்று கூட்டித்தெளிக. (நகு)

[அது கேட் டிருதுபன்னன், "தமயந்திக்கு நாளைக் கிரண்டாஞ் சுயம்வரமாமே, என் செய்வேன்!" என்று னெனல்.]

வேத மொழிவாணன் மீண்டுஞ் சுயம்வரத்தைக்
காதலித்தாள் வீமன்றன் காதலியென்—றோதினான்
என்செய்கோ மற்றிதனுக் கென்றா னிகல்சீறும்
மின்செய்த வேலான் வெகுண்டு.

(ப - ரை) இகல் சீறும் மின் செய்த வேலான் - பகைவரைக் கோபிக்கின்ற ஒளி வீசும் வேலேந்திய இருதுபன்னன், மீண்டும் சுயம்வரத்தை காதலித்தாள் வீமன் தன் காதலி என்று வேதம்

மொழி வாணன் விளம்பினன் - மறுபடியும் இரண்டாம் சுயம்வரத்தில் இச்சை கொண்டாள் வீமன் மகளாகிய தமயந்தி யென்று வேதியனாகிய சுதேவ னென்னும் புரோகிதன் சொன்னனே!, இதனுக்கு என் செய்கோ என்றான் விரைந்து - இந்தச் சுயம் வரச் செலவுக்கு நான் என்ன (ஏற்பாடு) செய்வேன்! என்று பரிந்து பேசினன்.

(க - ரை) "வீமன் மகளுக்கு இரண்டாம் சுயம்வரம் நாளைக் கேயா மென்று புரோகிதன் சொன்னனே! அதற்கு அங்குச் செல்வதற்கு நான் என்ன செய்வேன்!" என்று தனக்குள்ளே ஆத்திரமாய்ச் சொல்லிக்கொண்டான் இருதுபன்னன்.

(வி - ரை) 'நாளைக்கேயாம்' என்றதனல் இருதுபன்னற்குப் பரிவுண்டாயிற்று: சுமார் ஐம்பதின் காத வழியை அதற்குள் கடக்க யாராலாகு மென்ப தவனுடைய வியப்பு. வேத மொழிவாண னகையால் பொய் புகலா னென்பது அவனுடைய நம்பிக்கை. இரண்டாம் சுயம்வர மென்பது புதுமையானதாயினும் இருதுபன்னற்குத் தமயந்தியினிடத்திருந்த ஒருதலைக் காமத்தால் அது தோன்றவில்லை. என் செய்கு + ஓ - இதிற் குவ்விகுதி தன்மை யொருமைக்கு வந்தது தமிழ் மொழி யொழுங்கு-பன்மை யாயின் என்செய்கும் என்றாகும். இருதுபன்னன் நளனிடத்திற் றன் னெண்ணத்தைச் சொல்ல வில்லை; தனக்குத் தானே சொல்லிக் கொண்டானேனும் அது அவ னருகி லிருந்த நளன் காதிற் பட்டது. இருதுபன்னன் தன்மேற் கொண்டுள்ள ஒருதலைக் காமந் தமயந்திக்குத் தெரியு மாகையால், அவன் தவறாது வருவான், வந்தால் நளனுஞ் சாரதியாய் வருவா னென்பது தெரிந்தே இங்ஙன மவள் பொய்ச் சேதியைப் புரோகிதன் மூலமாய்ப் போக்கின ளென்க. மற்று-அசைநிலை. இங்குத்தான் முத்தி "பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த நன்மை பயக்கு மெனின்" என்ற நாயனார் குறளின் உண்மை வெளியாவதறிக. (நஅ)

அது கேட்ட நளன் இருதுபன்னனை நோக்கி, "கற்புடையா ளுக்கு இரண்டாம் சுயம்வரம் பொற்புடையதாகுமோ?" என்று னெனல்.]

குறையாத கற்பினுள் கொண்டானுக் கல்லால்
இறவாத வேந்திழையா ளின்று—பறிபீறி
செல்லிற் பருவரா லோடு நெடுநாடா
சொல்லப் படுமோவிச் சொல்.

(ப - ரை) (நளன்) பறி பீறி செல்லில் பருமை வரால் ஓடும் நெடுமை நாடா - பறிப்பையைக் கிழித்துக்கொண்டு நெற்பயிர்க் கழனியிற் பருத்த வரால் மீன் தப்பியோடும் (தண்ணீர் வள முள்ள) பெருங் கோசல நாட்டரசனே, குறையாத கற்பினுள் கொண்டா னுக்கு அல்லால் இறவாத ஏந்திழையாள் - நிறை கற்புடையாளும் தன்னைக் கொண்ட கணவனிடத்தன்றிப் பிறரிடத்தில் தன் அன்பு செல்லாதவளுமாகிய தமயந்தி, இன்று இ சொல் சொல்லப் படுமோ - (தன்னாயகனை விட்டுத் தனியே யிருக்கும்) இந்நாளில் (இரண்டாம் சுயம்வரமென்னும்) இச்சொல்லையும் (தன் வாயாற்) சொல்லத்தகுமோ (தகாது என்றபடி).

(க - ரை) "நிறை கற்புடையாள்! கொண்டானுக் கால்லால் கண்டானுக் கன்பு செலுத்தாத காரிகை! கணவனைப் பிரிந்து தனியே தவிப்பவள்! அப்பேர்ப்பட்டவள் இரண்டாம் சுயம்வர மென்று தன் வாயாலும் சொல்லலாகா" தென்று னளன்.

(வி - ரை) குறையாத - என்றும் ஒருபடித்தாய் நிறைந்துள்ள எனினுமாம். என்றும்-வாழ்விலுந்தாழ்விலும். கொண்டானுக் கன் றிக்கண்டானுக்கிறவாத அன்புடைய காரிகை யெனினும், இறவாத என்பதற்குச் செலுத்தாத வென்று பிறவினைப் பொருள் கொளினு மாம். பறி-மீன்பிடிப்போர் அதைப்பிடித்துப் போட்டுக் கொள்ளும் பனையோலைப்பை. செல்-ஆகுபெயராய் வயலை உணர்த்திற்று. வயல்-

இருமடியாய் நீரை யுணர்த்திற்று. நெடுமை - பரப்பை யுணர்த்திற்று. அவளால் இச்சொல் சொல்லப்படுமோ என்று செயப்பாட்டிற் கொள்ளுநரு முளர்; செய்வினையாக, அவளுக் கிச் சொல் சொல்லத்தகுமோ என்று நான்கன் தகுதியாக்கோடலே நலந்தருவதா மெனக. ஏந்து + இழையாள் - சுமக்கும் பணி பூண்டாள்-பணி பூண்டு சுமப்பாள் எனினுமாம். (நஙக)

["அந்தக் காலத்தில் என்மே லெறிந்த மாலை நளன்மேல் விழுந்தது; இரண்டாம் சுயம்வரத்தா லிப்படி எண்ணுகிறேன்" என்று னிருதுபன்ன னெனல்.]

என்மே லெறிகின்ற மாலை யெழினளன்றன்
முன்னே விழுந்ததுகாண் முன்னாளில்—அன்னதற்குக்
காரணந்தா னீதன்றோ வென்றான் கடாஞ்சொரியும்
வாரணந்தா னன்னான் மதித்து.

(ப - ரை) கடாம் சொரியும் வாரணம்தான் அன்னான் - மதநீரைப் பொழியும் யானையையே போன்றவனாகிய இருதுபன்னன், மதித்து - (புரோகிதன் சொல்லை) ஆராய்ந்து, முன் நாளில் என்மேல் எறிகின்ற எழில் மாலை நளன்தன் முன்னே விழுந்தது காண் - (வாகுகனே!) முதற் சுயம்வர நடந்த காலத்தில் என்மேல் எறிகிறதா யிருந்த அழகான பூமாலை நளன்மேல் விழுந்தது (இதை நீ நன்றாய்) ஆய்ந்தறி, அன்னதற்கு ஈது காரணம் அன்றோ என்றான் - அப்படி நான் நினைப்பதற்கு இவ்விரண்டாம் சுயம்வரமே காரணமா யிருக்கிறதல்லவா என்று சொன்னான்.

(க - ரை) "முதற் சுயம்வர காலத்தில் என்மேல் எறிகிறதா யிருந்த மாலை, தப்பி நளன்மேல் விழுந்துவிட் டிருக்கவேண்டும்; இந்த இரண்டாம் சுயம்வரம் ஏற்பட்ட காரணத்தால் இப்படி நான் நினைக்கிறேன்" என்று னிருதுபன்னன்.

(வி - ரை) 'வாகுகனே! முன் சுயம்வர மாலை என்மேல் விழுவதற்கு மாறாக நளன்மேல் விழுந்திருக்கவேண்டும்: இரண்டாம்

சுயம்வரத்தால் இப்படி எனக்குத் தோன்றுகிறது. நீயும் நன்றாய் எண்ணிப்பார். உடனே தேர் கொண்டுவா போவோம்' என்று னவனை நோக்கி இருதுபன்னன். கற்புடையா ளென்று தமயந்தியைக் குறித்து வாகுகன் சொன்ன சொற்பொருளைச் சற்றேனும் ஓராமல் பித்தனைப் போலவும் காமங் கொண்ட மத்தனைப் போலவும் பேசினன் இருதுபன்ன னென்பதனாலேயே அவனைக் கடாஞ் சொரியும் வாரணமாகிய விலங்கன்றோ னென்றார். பிடிபடுக்கப் பட்ட களிறு மிவனைப்போலவே முன்பின் எண்ணாமற் படுகுழியில் விழுவது உலகறிந்தது. முன்னே விழுந்தது போன்ம் என்று பாட மோதுவாரு முளர். முதற் றான் அசை, இரண்டாவது தேற்றம். இந்தக் கானையும் அசை யாக்குவாரு முளர். அந்தக் காலத்தில் என்மேல் எறிகிறதா யிருந்த தென்று கொள்ளுங்கால் எறிகிறது காலங் காட்டுந் தொழிற்பெயராம். போலும் என்பது கெட்டுப்போன்ம் என்றுவது தமிழ்மொழி யொழுங்கு. (௬0)

["இது பழ வினைப்பயனோ? என்னைக் காண ஏற்படுத்திய புது வினைப்பயனோ? மரபுக் கோவ்வாது" என்று எண்ணிக் கோண்டா னள னெனல்.]

முன்னை வினையான் முடிந்ததோ மொய்குழலாள்
என்னைத்தான் காண விசைந்ததோ—தன்மரபுக்
கொவ்வாத வார்த்தை யுலகத் துரைப்பட்ட
தெவ்வாறு கொல்லோ விது.

(ப - ரை) தன் மரபுக்கு ஒவ்வாத வார்த்தை உலகத்து உரைப்பட்டது - தமயந்தியின் குலத்துக்குத் தகாத(இம் மறுசுயம் வரமென்னும்) பேச்சு உலகத்தில் வழங்கியது, இது முன்னை வினையால் முடிந்ததோ - இச் சொல் (அக்குலம்) முன் செய் தீவினைப் பயனால் நேரிட்டதோ, மொய் குழலாள் என்னை காணத் தான் இசைத்ததோ - தமயந்தி என்னைக் காணவே செய்ததோ, எ ஆறு ஓ - எந்த விதமோ அறிகிலேன் (என்று தனக்குள் எண்ணி யிரங்கின னனன்).

(க - ரை) "தமயந்தியின் குலப் பழியான மறு சுயம்வர மென்னும் மிந்தப் பேச்சு உலகத்தில் வழங்கியது, பழந் தீவினைப் பயனோ, என்னை அவள் கண்டுபிடிக்க இயற்றிய புது நல்வினைப் பயனோ, எதுவோ, அறியேன்!" என்றானன்.

(வி - ரை) வினையால் - மூன்றாவதன் கருவிப் பொருட்டு. மொய்குழலாள் - வினைத்தொகை. என்னைத்தான் - என்னையே, தான்-பிரிநிலை. ஓகாரங்கள், ஐயவினாக்கள் அன்றி இரக்கப் பொருளன எனினுமாம், தான் என்னைக் காண என்பாருமுளர். தானை அசையாகத் தள்ளுநருமுளர். ஒவ்வாத-ஒ+வ்+வ்+ஆ+த்+அ- எதிர்மறைப் பெயரெச்ச வினை. ஒ-பகுதி. உரைப்பட்டது-உரையிற் பட்டது. சொல்-அசை; அன்றி, ஓகாரத்தை அசையாவகற்றிச் சொல்லை ஐயமாக்குவாருமுளர். உரைப்பட்ட தென்பதை உரைக்கப்பட்ட தென்பாருமுளர். இது எவ்வாறோ-இச் சொல்லுக்குக் காரணம் எப்படியோ? அறியே னென்றானா னென்க. இரண்டாம் சுயம்வரம் மரபுக் கடாத தாகலான், தன் மரபுக் கொவ்வாத வார்த்தை உலகத் துரையிற் பட்டது என்றானென்க. இது, நளன் தனக்குள்ளே எண்ணிக்கொண்ட எண்ணமென் றறிக. (சக)

[அரசன் கட்டளைப்படி செய்து தீர வேண்டு மென்று குதிரைகளைத் தேரிற் பூட்டினா னென்னல்.]

காவலனுக் கேவற் கடன்பூண்டேன் மற்றவன்ற
னேவன் முடிப்பே னினியென்று—மாவைக்
குலத்தேரிற் பூட்டினான் கோதையர்தங் கொங்கை
மலர்த்தேன் றுளிக்குந்தார் மன்.

(ப - ரை) கோதையர்தம் கொங்கை மலர் தேன் துளிக்கும் தார் மன் - பெண்களின் மார்புகளில் தன் மலர்களிற் பொருந்திய தேனொழுகு மாலையை யணிந்த நளன், காவலனுக்கு ஏவல் கடன் பூண்டேன் - இவ்வயோத்தி யரசனாகிய இருதுபன்னனுக்கு நான் பணிசெய்யுங் கடமையை மேற்கொண்டிருக்கின்றேன் (ஆகை

யால் இன்னும் நான் தாமதிப்பது தகாது), இனி அவன்தன் ஏவல் முடிப்பேன் என்று - இதோ போய் அவனுடைய பணியை நிறைவேற்றுவேனென்று துணிந்து, மாவை குலம் தேரில் பூட்டினன்-குதிரைகளை உயர்ந்த தேரிற் கட்டினன்.

(க - ரை) "அரசற்குப் பணி பூண்ட நான் இன்னும் என்னென்னவோ எண்ணித் தாமதிப்பது தகாது. இதோ போய் அவன் றன் ஏவல் முடிப்பே" னென்று குதிரைகளைத் தேரிற் பூட்டிக் கொண்டுவந்தா னனன்.

(வி - ரை) காவலன்-காத்தலில் வல்லவன் - மன்னுயிரைப் புரத்தலிற் பேர்போனவ னெனினுமாம். ஏவல் கடன் - ஏவியதை யியற்றுங் கடப்பாடு. பூண்டிருத்தல் - ஏற்றுக்கொண் டிருத்தல் மற்று-அசை. இனி யென்பது அரைக்கணமுந் தாழ்க்கமல் இப்போதே யென்னுங் காலப்பொருட்டு. மா-விலங்கு, திரு, மாம், சீர், வண்டு, குதிரை முதலிய பல பொரு ளொரு சொல். குலத்தேர்-மாரதம். கொங்கை-எழன்ஞெகை. கொங்கையில் தேனொழுகு மலர்களாலாகிய மாலையணிந்த மன் னென்றுங் கூட்டிக் கொள்ளலாம். கொங்கை தேன் துளிக்கு மலர்தார் மன் என்பதே அதற்குகந்த பதப்பிரிவொழுங்காம். மன்-அரசற் காகுபெயர் - எல்லாச் செல்வங்களு மன்னியவ னென்பது பொருள். இது கவி யிரங்கற் கூற்றெனினுமாம். (சஉ)

[வாகுகனுகிய நளன் இருதுபன்னனை நோக்கி, "ஐயா, இதோ தேர் கோணர்ந்தேன், ஏறுக" என்று னெனல்.]

ஒற்றைத் தனியாழித் தேரென்ன வோடுவதோர்
கொற்ற நெடுந்தேர் கொடுவந்தேன்—மற்றிதற்கே
போந்தேறு கென்றான் பொம்மென் றளிமுரலுந்
தீந்தேறல் வாக்குந்தார்ச் சேய்.

(ப - ரை) அளி பொம் என்று முரல தீ தேறல் வாக்கும் தார் சேய் - வண்டுகள் பொம்மென்று முழங்க (அதற்குப் பரிசிலாகத்)

இத்திப்பான தேனை ஊற்றுகின்ற மலர் மாலை யணிந்த நளன், தனிமை ஒற்றை ஆழி தேர் என்ன ஓடுவது ஓர் கொற்றம் நெடுமை தேர் கொடுவந்தேன் - ஒப்பற்ற ஒரே சக்கரம் பூட்டிய (சூரியன்) தேரைப்போல ஓடவல்லதாகிய வொருவெற்றித்தேரைக் கொண்டு வந்து (நிறுத்தி யிருக்கிறேன்) இதற்கு போந்து ஏறுக என்றான் - இதில் வந்து ஏறிக்கொள்க என்று (இருதுபன்னனை நோக்கி) இயம்பினான்.

(க - ரை) "சூரியன் தேர்போல விரைந் தோடவல்லதாகிய வெற்றித் தேரைக் கொண்டுவந்து வாசலில் நிறுத்தியிருக்கிறேன், இதில் வந்து ஏறிக்கொள்க" என்றானளன்.

(வி - ரை) ஒன்று + ஐ, ஐ-சாரியை, ஒன்று -ஒற்றானது வலித்தல். சூரியன் தேர் ஒரு சக்கரத்திலோடுகிற தென்பது நம்மவர் கொள்கை. சூரியற்குத் தேருள தென்பது ஆரியர்க்குள் தோன்றிய அறியாமை, உண்மையில் சூரியன் ஓடுவதேயில்லை ; பூமியே அதைச் சுற்றி ஓடுவதென்பது புகழேந்தியாரும் ஹர்ஷகவியு மறியார். பூமி யோட்டம் மணிக்கு ஆயிர மென்பர் சிலர்; இந்தத் தேர் மணிக்கு ஐம்பது மயிலேனு மோடியிருக்க வேண்டு மென்பது துணிபு. இல்லையேல் இது ஐம்பதின் காத தூரத்தை மறு நாளைக்குள் கடந்திராது. இதற்கு - உருபுமயக்கம். பொம்மெனல் ஓசைக் குறிப்புவினைப்பெயர், விர் ரென லென்பதூஉ மிப்படியே. கொல் + து + அம் - கொற்றம்-வினைப்பெயர்-வினை முதற்பொருட்டு. ஆழி-சக்கரத்துக் காகுபெயர். (சுந)

[நள னோட்டுந் தேர், தமயந்தியை நாடிய இருதுபன்னன் மனத்தினும் வேகமா யோடிய தெனல்.]

முந்தை வினைகுறுக மூவா மயல்கொண்டான்
சிந்தை யினுங்கடுகச் சென்றதே—சந்தவிரை
தார்குன்று மெல்லோதி தன்செயலைத் தன்மனத்தே
தேர்கின்றா னூர்கின்ற தேர்.

(ப - ரை) சந்தம் விரை தார் குன்றாத மென்மை ஓதி தன் செயலை தன் மனத்தே தேர்கின்றான் ஊர்கின்ற தேர் - அழகும் மணமு நிறைந்த மாலை மாறாத மெல்லிய கூந்தலையுடைய தமயந்தி யின் (இரண்டாம் சுயம்வர நாடிய) செய்கையைத் தன் மனத்தகத் திலேயே எண்ணி யெண்ணி வியக்கின்றவனாகிய நளன் செலுத்து கின்ற தேரானது, மூந்தை வினை குறுக - (நள தமயந்தியர் ஒன்று சேர்வதற்கு) முன் செய்த நல்வினை நெருங்கியதனால், மூவாத மயல் கொண்டான் சிந்தையினும் கடுக சென்றது - தமயந்தியின் மேல் குறையாத காம மயக்கங் கொண்டவனாகிய இருதுபன்ன னுடைய மன வோட்டத்தினும் விரைவாக வோடியது.

(கு - ரை) (தீவினைப் பயனால் பிரிந்த) நள தமயந்தியர் முன் செய் நல்வினைப் பயனால் கூடுங் காலம் நெருங்கியதால், தமயந்தியின் மேல் நீங்காத மையல் கொண்ட இருதுபன்னன் மனத்தைப் பார்க் கிலும் வேகமா யோடியது நளன் செலுத்துந் தேர்.

(வி - ரை) மூந்து — மூந்து + ஐ - பண்டையென்பதுஉங் காண்க. முன்செய் நல்வினைப் பயன் நெருங்கியதனாலேயே இரு வரும் கூடுங்காலம் குறுகிற்று; குறுகினதனாலேயே இருது பன்னற்குத் தமயந்தியின்மேல் மூவாத ஆசை மூடுகிற் றென்க. இதைத் தீவினைப் பயனென்று இருதுபன்னற் காக்குவாரு முளர்; அது பொருள் சிறவாமை காண்க. உம்மை சிறப்பு. சிந்தையின் என்பதி லையுருபு எல்லைப்பொருட்டு. மூவா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்ச வினை. மூத்த-உடன்பாடு. மூந்திய ஏ, அசை; பிந்தி யது பிரிநிலை. சந்தத்தைச் சாந்தத்தின் குறுகலாகக் கொண்டு மயிர்ச்சாந் தென்பர் சிலர். (சஉ)

[இருதுபன்னன், "என்மேலாடை விழுந்த தெடு"என்றான்; அதற்குள் நளனோட்டுந் தேர் பதின் காதம் ஓடிற் றெனல்.]

மேலாடை வீழ்ந்த தெடுவென்றா னவ்வளவில்
நாலாறு காத நடந்ததே—தோலாமை
மேல்கொண்டா னேறிவர வெம்மைக் கலிச்சூதின்
மால்கொண்டான் கோல்கொண்ட மா.

(ப - ரை) மேல் ஆடை விழுந்தது எடு என்றான்-இருதுபன்னன் தன்மேற் போர்வை (கீழே விழுந்ததனால்) 'என் போர்வை விழுந்தது எடு' என்றான், அ அளவில் - அது சொல்லி முடிக்குங் காலத்துக்குள், தோலாமை மேல்கொண்டான் ஏறி வர-வெற்றியை யே மேன்மையாக் கொண்ட அவ் விருதுபன்னன் (தேர்மேல்)ஏறி வந்துகொண்டிருக்க, வெம்மை கலி சூதின் மால் கொண்டான் கோல் கொண்ட மா - கொடுமையாகிய கலி (யின்) வஞ்சனையில் சூதாட் டத்தில் மயக்கங் கொண்ட நளமகாராசன் முட்கோல் கொண்டு முடுக்கிய (அத் தேர்க்) குதிரைகள், நால் ஆறு காதம் நடந்தது - பதின்காதம் பறந்தோடின.

(க - ரை) நள னோட்டுந் தேர்மேலிருந்த இருதுபன்னன், "என் மேற் போர்வை கீழே விழுந்தது எடு" என்றான், அதற்குள் அதிற் பூட்டியிருந்த குதிரைகள் பதின் காதம் பறந்தோடின.

(வி - ரை) மேலாடை-மேல் + ஆடை-அரையாடை - அரை யிற் கட்டிக்கொள்ளும் சோமன்-மேலாடை-மேற் போர்வை. வீழ் ந்தது-விழுந்த தென்பதன் மரூஉ. போழ்து - பொழுது, வீழ்து- விழுது. அ + அளவில்-அது சொல்லி முடிக்குங் கால அளவுக்குள் -அத்தனை விரைவா யென்றபடி. நாலாறு காதம் என்பதை நாலும் ஆறும் சேர்ந்த காதம் என்று கொண்டாம்; இது வ பதின்காதம் நூறு நாழிகை வழியாம். நாற்பது மணியிற் சா ாரண மாந்தர் செய்யு நடைப் பயணத் தூரமாம். இதற்கு மேலும் நாலாறு - இரு பத்தினான்கு காதம் இருநூற்று நாற்பது நாழிகை ழியென்பாரு

மூனர். இன்னும் சிலர் இதற்கு நாலல்லது ஆறு காத வழித் தூர மென்றும் சொல்வர். மா என்பதைப் பன்மையி லொருமை வந்த தாக் கொள்க. அதற்கேற்க நடந்தன வெனற்பாலது நடந்தது என வந்தது. (சரு)

[அதுகண்ட இருதுபன்னன் அதிசயித்து அவ்வித்தையைக் கற்றுக்கோள்ள விரும்பின னெனல்.]

ஆய தறிந்த வயோத்தியர்கோ னாங்கதற்கு
மேயவிறும் பூதினனாய் வேட்கமிகத்—தூயதிறல்
அன்னவன்பா லவ்விஞ்சை யாயுமா றி யாதென்ன
உன் னுவான் றன் னுள்ளே யோர்ந்து.

(ப - ரை) ஆயது அறிந்த அயோத்தியர் கோன் - அப்படிக் குதிரைகள் விரைவா யோடியதைக் கண்ட அயோத்தி யாசனாகிய இருதுபன்னன், ஆங்கு அதற்கு மேய இறும்பூதினன் ஆய் - அப் போ ததனாற் பொருந்திய வியப்புடையவனாய், வேட்கை மிக - அதை அறிந்துகொள்ள வேண்டுமென்னும் விருப்ப மிகுந்ததனால், தூய திறல் அன்னவன்பால் அ விஞ்சை ஆயும் ஆறு யாது என்ன - குற்றமற்ற வல்லமையை யுடைய அந் நளனிடத்தில் அந்த வித்தையைத் தேர்ந்தறியும் விதம் எது வென்று, தன் உள் உன்னி ஓர்வான் - தன் மனதில் எண்ணி ஆராய்வானாயினான்.

(க - ரை) தேர்க் குதிரைகள் ஓடின வேகத்தைக் கண்ட இருதுபன்னன் வியப்படைந்து, அந்த வித்தையை நளனிடத்தி லறிந்துகொள்வது எப்படி யென்று தனக்குள் ஆராய்வானாயினான்.

(வி - ரை) ஆயது - வினையாலணையும் பெயர்; ஆயவன், ஆய வன் எனவும் வரும்; இறந்தகாலம், இரண்டன்றொகை. ஆங்கு - அவ்விடத்தில் என்பாருமுளர்; இங்கு ஆங்கு காலத்தைக் காட் டிற்று. ஆங்கை அசையாக்குவாருமுளர். இறும்பூது மேயினனாய் என்று மொழிமாற்றுவாருமுளர். வேள் + கை - தொழிற்பெயர்.

மிக-செயவென்னும் வாய்பாட்டுக் காரணப்பொருட்டு. தூய, மேய பெயரெச்ச வினைகள் - முன்னைய திறந்தகாலத் தெரிநிலைப் பொருட்டு, பின்னையது பண்படிக்குறிப்புப் பொருட்டு. அதற்கு-நான்கன் பொருட்டுப் பொருட்டு; அன்றி மூன்றனிமித்தமுமாம். விஞ்சை - வித்தை - மந்திரமென்பாரு முளர். எல்லாந் தந்திரமே யன்றி மந்திர மொன்று மின்று என்று தற்போது நன்று தெரிகின்றது - அத்தனை விரைவி லவைகள் இரு நாழிகை வழி சென்றனவெனினு மிரும் பூதுடைத்தாம் - அவர்களுக் கதுவே சாலும். (௬௬)

[நளனை நோக்கி இருதுபன்னன் "இதோ பார் இந்தத் தான்றி மரத்திற் காய்கள் பத்தாயிரங்கோடி" என்று னெனல்.]

இத்தாழ் பணையி லிருந்தான்றிக் காயெண்ணிற்
பத்தா யிரங்கோடி பாரென்ன—உய்த்ததனில்
தேர்நிறுத்தி யெண்ணினான் தேவர் சவைநடுவே
தார்நிறுத்துந் தோள்வேந்தன் றான்.

(ப — ரை) (இருதுபன்னன் நளனை நோக்கி) இ தாழ் பணையில் இரு தான்றி காய் எண்ணில் - இந்தப் பள்ள வயல் வரப்பிலுள்ள பெரிய தான்றிமரக் காயை எண்ணினால், பத்து ஆயிரம் கோடி பார் என்ன-பதினாயிரங் கோடி (10,00,00,00,00,00-ஆவதை நீயும் எண்ணித்) தெரிந்துகொள் என்று சொல்ல, தேவர் சவை நடு தார் நிறுத்தும் தேர் வேந்தன் - தேவர்கள் முதலியோர் கூடியிருந்த அவை நடுவில் தமயந்தியின் சுயம்வர மண மாலையைப் (பிறர் பெற வொட்டாமல் தன்மேல்) நிலைக்கச் செய்த தேருரும் அரசனாகிய நளமகாராசன், அதனில் தேர் உய்த்து நிறுத்தி எண்ணினான் - அந்த மரத் தருகில் தேரைச் செலுத்தி நிறுத்திக் காய்களை எண்ணிக் கணக்கிட்டுப் பார்த்தான்.

(க - ரை) இருதுபன்னன், "ஏ, வாகுக! இதோ பார், இந்தத் தான்றி மரத்திற் காய்கள் பதினாயிரங் கோடி யிருக்கின்றன" என்றான். நளனும் வியந்து தேரை நிறுத்தி யதை எண்ணிப் பார்த்தான்.

(வி - ரை) பதினுயிரங் கோடி காய்கள் ஒரு மரத்திலிருந்தன வென்றால் இது பெரும் புளுகாம். பதினுயிரமா யிருக்கலா மென்று தோன்றுகிறது. கம்பருங்கூட இப்படியே புளுகி, இராமாயணத் தில் தம் பெயரைக் கெடுத்துக் கொண்டார். பத்தாயிரங்கோடி யென்று இருதுபன்னன்தான் மந்திர பலத்தால் சொன்னான். நளன் எப்படி யதை யெண்ணி யொத்திட்டுப் பார்த்தா னென்பது தான் வியப்பினும் வியப்புப் பெரு வியப்பா யிருக்கிறது. மந்திரத் தில் மாங்காய் விழாது தந்திரத்தில் தேங்காயும் விழு மென்பதனால், ஒருவேளை இருதுபன்னன் பழக்கத்தால் அங்ஙனம் பகர்ந்தா னென் பதூஉம் நளனும் அப்படியே ஒத்திட்டுப் பார்த்தா னென்பதூஉம் ஒப்புச் தரத்தனவா மென்க. தேரோட்டும் வித்தையை நளனிடத்தி லிருந்து கற்பதற்காகவே, இவ்வித்தையைக் காட்டினு னிருது பன்ன னென்பது அடுத்த செய்யுளில் விளங்கும். மந்திர மொன்று மில்லை எல்லாந் தந்திர மென்பதே தக்கோர் மதிப்பு. கோடி என்பதைக் கொள் + தி எனப் பிரித்து, நீ தெரிந்துகொள் என் றுரைத்தா னென்பதே இயைந்ததாம். பத்தாயிரங் காய்க ளிருக் கின்றன பார்த்துக்கொள் என்று னென்பதாம். கொள் + தி-கோடி யென முதனீண்டதெனக் கொள்க. (சுஎ)

["இந்த வித்தையும் உன் தேரோட்டும் வித்தையையும் மாற்றிக்கொள்ளுகிருயா?" என்றான் இருதுபன்ன னெனல்.]

ஏரடிப்பார் கோலெடுப்ப வின்றேன் றொடைபீறிக்
காரடுத்த சோலைக் கடனாடன்—நீதொடுத்த
மாத்தொழிலு மித்தொழிலு மாற்றுதியோ
[வென் றுரைத்தான்
தேர்த்தொழிலின் மிக்கானைத் தேர்ந்து.

(ப - ரை) ஏர் அடிப்பார் கோல் எடுப்ப இனிமை தேன் தொடை பீறி கார் அடுத்த சோலை கடல் நாடன் - உழவு மாடுக

ளைத் தூரத்தும் உழவர் தங்கையிலுள்ள தாற்றுக் கோலை ஓச்சுவ தனால் தித்திப்பான தேனடை கிழிந்து மேகத்தைச் சேர வளர்ந்த மரச் சோலைகள் சூழ்ந்த கடற்கரை நாட்டரசனாகிய இருது பன்னன், தேர் தொழிலின் மிக்கானை தேர்ந்து - தேரோட்டுந் தொழிலிற் சிறந்தவனாகிய நளனை மதித்து, தேர் அடுத்த மா தொழிலும் இ தொழிலும் மாற்றுதியோ என்று உரைத்தான். தேரிற் பூட்டிய குதிரை செலுத்துந் தொழிலையும் இந்த மரத்திற் கா யெண்ணுந் தொழிலையும் மாற்றிக்கொள்வையோ என்று கேட்டான்.

(க - ரை) "தேர்க் குதிரைகளை இப்படி விரைவாய் நடத்தும் உன் தொழிலையும் மரக் காயெண்ணிக் கடக்கிடும் என் தொழிலையும் மாற்றிக்கொள்வாயா?" என்றான் இருதுபன்னன்.

(வி - ரை) ஏர் - ஆகுபெயராய் மாடுகளை உணர்த்திற்று. தொடை பீறி என்பதைப் பூங்கொத்துக் காக்குநரு முளர். பூங் கொத்துக் கிழியுமா றெங்ஙனம்? தேன் தொடை - தேன் கூடு கிழிந்து அல்லது அழிந்து அதிலுள்ள தேன் அங்கு தவழு மேகத்திற் சேரு மெனக் கொள்க. இதை அசாத்தியாதிசய நவிற்சி யணி யென்பர் வடநூலார்; தமிழ் நூலாரும் ஒப்புவர், அப்படியே செப்புவர். கடல் நாட னென்பதனால், கோலசல நாடு கடற்கரை யளவில் நீண்டிருந்த தென்க. மாத் தொழிலு மித் தொழிலு மாற் றுதுமால் என்று பாடங் கற்பிப்பாரு முளர். மரக் கா யெண்ணும் என் றொழிலை உனக்குக் கற்பிக்கிறேன்; மாவோட்டுமுன் றொழிலை எனக் கறிவி யென்றா னிருதுபன்ன னென்பதாம். (௪அ)

[அப்படியே நளன் மாத் தொழிலைக் கற்பித்து மரக் கா யெண்ணுந் தொழிலைக் கற்றுக்கொண்டான்; கலியு நீங்கிற் றெனல்.]

வண்டார் வளவயல்சூழ் மள்ளுவநாட் டெங்கோமான்
தண்டார் புனைசந் திரன்சுவர்க்கி — கொண்டாடும்
பாவலன்பா னின்ற பசிபோல நீங்கிற்றே
காவலன்பா னின்ற கலி.

(ப - ரை) (தன் வித்தையைக் கற்பித்துத் தான் அவன் வித்தையைக் கற்றுக்கொண்டதும்) காவலன்பால் நின்ற கலி - நளராசனிடத்துப் பொருந்தியிருந்த கலிப் பகையானது, வண்டு ஆர் வளம் வயல் சூழ் மள்ளுவம் நாடு எம் கோமான் தண்மை தார் புனை சந்திரன் சுவர்க்கி - வண்டுகள் மொய்க்கும் நீர்வளம் பொருந்திய நெல் வயல்கள் சூழ்ந்த மள்ளுவ நாட்டை யாளும் எமது தலைவனாகிய குளிர்ந்த மலர் மாலை யணிந்த சந்திரன் சுவர்க்கி யென்னும் அரசனை, கொண்டாடும் பாவலன்பால் நின்ற பசி போல நீங்கிற்று - புகழ்ந்து பாடும் பாவாணனிடத்திற் பொருந்திய பசி தீர்வது போலத்தீர்ந்தது.

(க - ரை) நளன் தன் வித்தையை இருதுபன்னற்குக் கற்பித்து, அவன் வித்தையைத் தான் கற்றுக்கொண்டவுடன் கலிப் பகை கழிந்தது.

(வி - ரை) இருதுபன்னனிடத்து நளன் கற்றுக்கொண்ட மரக்கா யென்னும் வித்தையால், அவனுக்குச் சூதுதன்னி வெல்லும் வித்தையும் விளக்கமாயிற்றாம்; அதனால் அதுமுதல் அவனுக்குக் கலிப்பகையும் அற்றதாம். இனி நளனுக் குறுவ தெல்லாம் நன்மையேயா மென் றுணர்க. என் கோமான் என்று ஒருமையிற் கூறாமல் எங்கோமானென்று பன்மையிற் பகர்ந்தது இப் புலவர் பிற புலவரையும் உளப்படுத்தியதனா லென்க. பாவலன்பா லென்றதை இயும் இன வொருமை யாக்கிப் பாவலர்பா லென்றுங் கோடலாம். சந்திரன் சுவர்க்கி + கொண்டாடும்-இரண்டன்றொகை. பசி இங்கு வறுமைக் காகுபெயர். கலியைக் கலிபுருடனென்பார் சிலர். நீங்கிற்றே யென்னும் பாடத்தை நீங்குற்றா னென்று மாற்றுவர். பசுமை + இ - பாசி இதுவே முற்குறுகி பசி யென்றாயிற் றென்பர். இது வறட்சிக்குக் காராட்டை வெள்ளா டென்பதுபோல் மாங்கல மென்பர். (௪௧)

[இருதுபன்னன் கோசலை நாடு கடந்து விதர்ப்ப நாட்டில் வீம னகரத்தை அடைந்தா னெனல்.]

ஆமை முதுகி லலவன் றுயில்கொள்ளும்
காமர் நெடுநாடு கைவிட்டு—வீமன்றன் [கூற்றம்
பொன்னகரி சென்றடைந்தான் போர்வேட் டெழுங்
அன்னகரி யொன்றுடையா னாங்கு.

(ப - ரை) போர் வேட்டு எழும் கூற்றம் அன்ன கரி ஒன்று உடையான் ஆங்கு - சண்டையை விரும்பிக் கோபித்தெழும் இயமனைப் போன்ற பட்டத்தியானை ஒன்றுடையானாகிய இருது பன்னன், ஆமை முதுகில் அலவன் துயில் கொள்ளும் காமர் நெடுமை நாடு கை விட்டு - ஆமையின் முதுகின்மேல் நண்டுறங்கும் நீர்வள முள்ள அழகான பெரிய கோசல நாட்டை நீங்கி, வீமன் தன் பொன் நகரி சென்று அடைந்தான் - வீமராசனுடைய விதர்ப்ப நாட்டின் அழகான தலை நகராகிய குண்டினபுரத்தைப் போய்ச் சேர்ந்தான்.

(க - ரை) கூற்றுக்குச் சமானமான யானை யேறும் வல்லரச னாகிய இருதுபன்னன் கோசல நாடு கடந்துபோய், வீமன் தலை நகராகிய குண்டினபுரியைச் சேர்ந்தான்.

(வி - ரை) கைவிட்டுச் சென்று பொன்னகரி யடைந்தானெ னக் கூட்டுவது மொன்று. நாடு கைவிட்டு என்பதற்கு விதர்ப்பநாடு கைவிட்டு என்று வீண் பொரு ளுரைப்பாரு முளர். வீமன்றன் என்பதனானேயே வீமனாடாகிய விதர்ப்ப நாட்டின் என்று பொரு டாலால் வீமன்றன் பொன்னகரி யென்பதற்கு விதர்ப்ப நாட்டின் தலைநகராகிய குண்டினபுரி யெனப் பொருளுரைத்தாம். ஆகை யால் நாடு கைவிட்டு என்பதற்கு இருதுபன்ன னாடாகிய கோசல நாட்டை நீங்கி யென்பதே பொருந்து பொருளாம். கூற்றம் ஒன்று என்பதற்கு யானைச் சேனை குதிரைச் சேனை யென்று

பொருந்தாப் பொருளைப் புகுத்துவாரு முளர். ஆங்கை - அசை யென அகற்றினுமாம். கைவிட்டு-கைவிடு-பகுதி. வேட்டு-வேள் + ட் + உ. (௫0)

[இருதுபன்னன் வீம னரண்மனை முற்றத்தில் தேரை விட்டு, உட்சென்றனெனல்.]

வெற்றித் தனித்தேரை வீமன் பெருங்கோயில்
முற்றத் திருத்தி முறைசெய்யுங்—கொற்றவற்குத்
தன்வரவு கூறப் பணித்துத் தனிப்புக்கான்
மன்விரவு தாரான் மகிழ்ந்து.

(ப - ரை) மன் விரவு தாரான் — ஆட்சியின் மாட்சி பொருந்திய மலர் மாலை யணிந்த இருதுபன்னன், தனி வெற்றி தேரை வீமன் பெருமைகோயில் முற்றத்து இருத்தி - தன்னொப்பில்லாத வெற்றி தரவல்ல தேரை வீமராசனுடைய பெருமை பொருந்திய அரண்மனை முன்னிடத்தில் நிறுத்தி, முறை செய்யு கொற்றவன்கு தன் வரவு கூற பணித்து - நடுநிலை தவறாமல் ஆட்சி புரியும் அவ்வீமராசனுக்குத் தன் வருகையைத் தெரிவிக்கும்படி (வாயில் காவலனுக்குக்) கட்டளையிட் டனுப்பி, மகிழ்ந்து தனி புக்கான்— (தான் மட்டும்) களிப்போடு ஒன்றியாய் உள்ளே நுழைந்தான்.

(க - ரை) இருதுபன்னன், தான் வந்த தேரை நளனோடு வெளியே நிறுத்திவிட்டு, தன் வரவை ஆள் மூலமா யறிவித்துப் பிறகு வீம னரண்மனைக்குள் மகிழ்ச்சியோடு ஒன்றியாய்ப் போனான்.

(வி - ரை) வெற்றித் தனித்தேர் என்றதனால் சண்டையில் முதுகு காட்டி யறியாத ஒப்பற்ற தேர் என்பது பெற்றும். தேரை நிறுத்தி யென்றதனால் அதன் பாகனாகிய வாகுகனென்னும் நளனையும் நிறுத்தினன் என்று கொள்வதற்குத் தனிப்புக்கான் என்பதே சான்று பகர்கின்றது. தமயந்தியைப் பெறுதல் சரதம் என்றவன்

எண்ணி யிருந்தான் என்பதனுலேனைய மகிழ்ந்து புக்கா னென்றூர். வாகுகனை விடுத்துத் தனிப் புக்கது மரபாயினும், அவனை அகற்றி யதும் ஆண் காய்ச்சலேயா மென்றறிக. கோ + இல்-கோவில் என்பது கோயில் என இலக்கணப்போலியாய் வந்தது. மன் விரவு என்பதற்கு மலர்கள் நெருங்கிப் பொருந்திய என்பாரு முளர். அக முன்று என்பது முன்றகம், முற்றம் என்றூயதும் இலக்கணப் போலியேயா மென்க. (ருக)

[வீம ராச னிருதுபன்னனை நோக்கி, "இங்கு நீ என்ன விரும்பி வந்தாய்?" என்று னேனல்.]

கன்னி நறுந்தேறன் மாந்திக் கமலத்தின்
மன்னித் துயின்ற வரிவண்டு—பின்னையும்போய்
நெய்தற் கவாவு நெடுநாட நீயென்பால்
எய்தற் கவாவியவா றென்.

(ப - ரை) (வீமராசன்) கமலத்தில் மன்னி கன்னி நறு தேறல் மாந்தி - தாமரை மலரிற் பொருந்தி யதன் புது மண மருத தேனையுண்டு, துயின்ற வரிவண்டு - உறங்கிக் கிடந்த கீற்றுவண்டானது, பின்னையும் போய் நெய்தற்கு அவாவும் நெடுமை நாட - அதன் பிறகும் (நெய்த னிலத்துக்குப்) போய் (அங்குள்ள) கருநெய்தற் பூத்தேனை இச்சிக்கின்ற பெரிய கோசல நாட்டரசனே, நீ என்பால் எய்தற்கு அவாவிய ஆறு என் - நீ என்னிடத்தில் வருவதற்கு விரும்பிய விதம் என்ன? (என்று கேட்டான்).

(க - ரை) "மருத நிலத் தாமரைத் தேனுண்டு களித்த வண்டு நெய்த னிலக் கருநெய்தற் பூத் தேனை யுண்ண விரும்புங் கோசல நாட, என்னிடத்தில் நீ வர விரும்பிய வித மென்ன?" என்றான் வீமன்.

(வி - ரை) கன்னி - புதுமை. மருதநிலக் கமலத்திற் படிந்து தன் தேனை யுண்டு மகிழ்ந்துறங்கிக்கிடந்த கீற்றுவண்டு, அதனால் மனநிறைவெய்தாமல் கருநெய்தற் பூத்தேனை விரும்பி, அங்கிருந்து

பறந்து செய்த விலத்துக்குப் போகிறபடி, தன் மனைவியிருந்தும் மனநிறை வடையாமல் பிறன் மனை நயந்து பெருமிதத்தோடு தன் கோசல நாட்டை விட்டு விதர்ப்ப நாட்டை யடைந்தான் இருது பன்ன னென்னும் குறிப்புப் பொருள் தோன்றவே, அந்நாட்டை இங்ஙனம் விதர்ப்பன் வாயால் வன்னிப்பித்தார் புகழேந்தியார். தமயந்தியின் சூழ்ச்சியை விதர்ப்ப னுணர்ந்திருந்தா னென்பதூஉம் இதனால் விளங்குவது காண்க. செய்தற்கு நான்கன் தகுதிப் பொருட் டென்க. செய்தற்பொருட்டு - செய்தலுக்காக விருப்பங் கொண்டுமென்று பொருட்டுட் பொருட்டெனினுமாம். எய்தற்கு என்பதூஉம் நான்கன் பொருட்டுப் பொருளேயாம், இதையும் சிலர் நான்கன் தகுதிப் பொருட்டே யென்று சாதிப்பர். (ருஉ)

[இன்றுன்னைக் காணவேண்டு மென்னு மாசையால் இங்கு வந்தே னென்றான்" இருதுபன்ன னெனல்.]

இன்றுன்னைக் காண்பதோ ராதரவால் யானிங்ஙன்
மன்றன் மலர்த்தாராய் வந்தடைந்தேன்—என்றான்
ஒளிடார்வேற் கண்ணாண்மே லுள்ளந் துரப்பத்
தெளியாது முன்போந்த சேய்.

(ப - ரை) ஒளி ஆர் வேல் கண்ணாள்மேல் உள்ளம் துரப்பமுன் தெளியாது போந்த சேய் - கதிர் சேர் வேல் போன்ற கண்களை யுடைய தமயந்தியினிடத்தில் தன் மனமானது தன்னைச் செலுத்திய தனால் முன்னாராய்ச்சி யின்றி வந்த இருதுபன்ன மன்னன், மன் றல் மலர் தாராய் இன்று உன்னை யான் காண்பது ஓர் ஆதரவால் இங்ஙன் வந்து அடைந்தேன் என்றான் - மணங் கமழும் பூமாலை யணிந்த பூ மானே! இன்றைக் குன்னை நான் காணவேண்டும் என்னும் ஓராசையால் இவ்விடம் வந்து சேர்ந்தே னென்றான்.

(க - ரை) முன்னாராய்ச்சி யின்றி வந்த இருதுபன்னன், "பூமாலை யணிந்த பூமானே! வேறொன்று மின்று. இன்றுன்னைக்

காணவேண்டு மென்று மன்பாலேயே இங்கு நான் வந்தேன்"
என்றான்.

(வி - ரை) ஆதரவு - ஆசை, அன்பெனினுமாம். மன்றல்
மணம், மங்கலம். ஒளி-கதிர்-காந்தி. தூரப்ப-தூரத்த. தெளிதல்—தே
தல், துணிதல், ஆராய்தல். முன் என்பதைப் போந்த என்பத
னோடு கூட்டுவாரு முளர்; முன் தெளியாது எனக் கூட்டுவதனா
லேயே பொருள் சிறப்பது தெரிக. சேய் - இருதுபன்னற் காகு
பெயர். இன்று, இங்ஙன் இரண்டையு மிடைச்சொற்க ளென்பர்;
இரண்டும் பெயர்ச் சொற்களே யாம். இ + ஙனம்-இங்ஙனம் எனக்
கடை குறைந்து இங்ஙன் என்றாயிற்று; இதற்கு இப்படி யென்றும்
இடநோக்கிப் பொருள்கோளுண்டு. மலர்த்தார்-மூன்றும் வேற்றுமை
உருபும் பயனுமுடன் தொக்கன; மலராகிய தா ரென விரியும்.

[குதிரைகளைக் கட்டவிழ்த்து விட்ட நளன் சமைப்பதற்கு
மடைப்பள்ளியிற் புகுந்தா னெனல்.]

ஆதி நெடுந்தேர்ப் பரிவிட் டவையாற்றிக்
கோதி லடிசிற் குறைமுடிப்பான் —மேதிக்
கடைவாயிற் கார்நீலங் கண்விழிக்கு நாடன்
மடைவாயிற் புக்கான் மதித்து.

(ப - ரை) மேதி கடை வாயில் கருமை நீலம் கண் விழிக்கு
நாடன் - எருமையின் வாய்க் கடையில் (மேய்ந்து குதட்டுகிற)கரு
நெய்தல் மொட்டானது (அந் நில மகளிருடைய) கண்களைப்போல
மலர்கின்ற நிடத நாட்டரசனாகிய நளன், ஆதி நெடுமை தேர் பரி
விட்டு அவை ஆற்றி - முதற்றரமான தேரிற் பூட்டியிருந்த குதி
ரைகளை அவிழ்த்து விட்டு அவைகளை இளைப்பாற்றி, கோதில் அடி
சில் குறை முடிப்பான் மதித்து-குற்றமற்ற சமையல் செய்தலென்
னுங் குறையை முடிக்க எண்ணி, மடை வாயில் புக்கான் - மடைப்
பள்ளியிற் புகுந்தான்.

(க - ரை) வாகுகனாகிய நளன் தேர்க் குதிரைகளை அவிழ்த்து இளைப்பாற்றி, நல்ல சமையல் செய்ய நாடி மடைப்பள்ளிக்குள் நுழைந்தான்.

(வி - ரை) ஆதி-தொன்றுதொட்டு ஆட்சியாய் வரூஉம் எனினுமாம். தேர்ப்பரி-ஏழனுருபும்பயனும் தொக்க தொகை. கட்டியோட்டின குதிரைகளை விட்டு ஆற்றினான் என்க; அவிழ்த்து விட்டு இளைப்பாறச் செய்தானென்பதாம். நல்ல சமையல் செய்து உண்ண வேண்டிய குறையை முடிக்கப் புகுந்தானென்பதுமொன்று. முடிப்பான்-முடிக்க-வினையெச்சம். இது மதித்து என்பதையும், அது புக்கான் என்பதையும் கொண்டு முடிந்தன. முடிப்பான் மதித்துப் புக்கானென்று கூட்டுக. கருநெய்தலைக் காரொருமைகள் கொடியோடு மிலையோடும் மொட்டோடும் மலரோடும் மேய்ந்தனவாதலால் அவைகளின் கடைவாயில் மொட்டு மலர்ந்த தென்க. கண்விழிக்கும் - உவமைத் தொகை. கடைவாய் - வாய்க்கடை; புறநகர் நகர்ப்புறமென்பது போல இலக்கணப் போலி என்க. (௩௪)

[நீதி நெறியாளர் நெஞ்சம் போல, நளன் புகுந்த மடைப் பள்ளியிற் சோறு கறிகள் நிறம்பின வெனல்.]

ஆதி மறைநூ லனைத்துந் தெரிந்துணர்ந்த
நீதி நெறியாளர் நெஞ்சம்போல்—யாதும்
நிரப்பாம லெல்லா நிரம்பிற்றே பொற்றேர்
வரப்பாகன் புக்க மனை.

(ப - ரை) பொன்தேர் வரம் பாகன் புக்க மனை - அழகான தேரோட்டுவதிற் சிறந்த பாகனாகிய வாகுகனென்னும் நளன் புகுந்த மடைப்பள்ளி, ஆதி மறை நூல் அனைத்தும் தெரிந்து உணர்ந்த நீதிநெறியாளர் நெஞ்சம்போல் - பழமையாகிய வேத நூல்களெல்லாவற்றையுந் தேர்ந்து தெளிந்த நல்வழியிற் செல்லும் பெரியோர் மனம் (நற்குணங்களால் நிரம்பியிருப்பது) போல, யாதும் நிரப்பா

மல் எல்லாம் நிரம்பிற்று - (நெருப்பு நீர் விறகு முதலிய) எதுவும் (பிறர் கொண்டுவந்து) நிறைக்காமலே எல்லாப் பண்டங்களும் நிறைந்தது.

(க - ரை) தேர்ப்பாகனாகிய வாகுகனென்னு நளன் புகுந்த மடைப்பள்ளி, நீதி நெறியிற் படரும் பெரியோர் மனம்போல நெருப்பு நீர் விற கரிசி முதலியவைக ளில்லாமலே சோறு கறிக ளால்நிரம் பிற்று.

(வி - ரை) ஆதி யென்பதற்கு முத லென்று மொழிவர்; முதன்மையாகிய மறை நூ லென்க; எல்லா நூல்களுக்கு முதலி லுண்டான எனினுமாம். தெரிந்துணர்ந்த-உறுதிதருவன வென்று தெரிந்து கற்ற வெனினுமாம். நீதிநெறியாளர்-நல்வழியிற் படர்வோர் நெஞ்சம் பலநற்குணங்களும் நிரம்பியிருப்பதுபோல வெனக் கொள்க. நெருப்பு முதலிய எந்தப் பொருளையும் பிறர் கொணர்ந்து உதவாமலே, எல்லாம் நிரம்பிற்று-எல்லாப் பண்டமும் நிரம்பிற்று. 'அரிசி முதலிய பொருள்கள் நீ தொட்டவுடனே சமையலாம்' என்று நளனுக்கு அக்கினிதேவன் கொடுத்திருந்த வர பலத்தால், அவன் புகுந்த சமையல் வீட்டில் நெருப்பு நீரும் பருப்பும் அரிசியு மின்றியே சோறு கறி முதலியவை சமையலாயின என்க. அனைத்து நிரம்பிற்று—பன்மையி லொருமை. (ருரு)

["வாகுகன் மடைப்பள்ளியிற் சமைக்கும் வகையைத்தெரிந்து வா வென்று" தோழியைப் போக்கினாள் தமயந்தி யெனல்.]

இடைச்சுரத்திற் றன்னை யிடையிருளி னீத்த
கொடைத்தொழிலா னென்றயிர்த்தகோமான்—மடைத் [தொழில்கள்
செய்கின்ற தெல்லாந் தெரிந்துணர்ந்து வாவென்றாள்
நைகின்ற நெஞ்சா ணயந்து.

(ப - ரை) நைகின்ற நெஞ்சாள் - நாயகன் பிரிவால் வருந்துகின்ற தமயந்தி, நயந்து - விரும்பி, இடை சுரத்தில் இடை இரு

ளில் தன்னை நீத்த - வன நடுவில் அரை யிரவில் தன்னை(த்தனியே) விட்டுப் போன, கொடை தொழிலான் என்று அயிர்த்த கோமான்— ஈகைத் தொழிலிற் சிறந்தவனாகிய நளனென்று (தான்) ஐயுற்ற (வாகுகனென்னும்) தலைவன், செய்கின்றது மடைத் தொழில்கள் எல்லாம் - செய்கின்றதாகிய சமையல் முறைகளை யெல்லாம், தெரிந்து உணர்ந்து வா என்றாள் - கண்டறிந்து வா வென்று (தன் தோழி யொருத்திக்குச்) சொல்லி (யனுப்பி)னாள்.

(க - ரை) வன நடுவிற் றன்னை அரை யிரவில் தனியே விட்டுச் சென்ற நள னென்று (தான்) ஐயுற்ற தேர்ப்பாகனாகிய வாகு கன் செய்கின்ற சமையல் முறைகளை யெல்லாங் கண்டறிந்துவா வென்று தமயந்தி தன் தோழியை அனுப்பினாள்.

(வி - ரை) இடைச் சுரம், இடை யிருள் இரண்டும் சுரத் திடை, இருளிடை என்பவைகளின் இலக்கணப் போலிகள். நளன் முதலெழு வள்ளல்களி லொருவனாதலான் கொடைத் தொழிலா னென்றார் - கொடைத்தொழிலா னென்று (தன்னால்) அயிர்க் கப்பட்ட கோமானென்று சிலர் பொருள் கொள்வர்; கொடைத் தொழிலானென்று (தான்) அயிர்த்த கோமா னென்பதே தமிழ் மொழி யொழுங்குக்கும் செய்யுள் நடைக்குந் திருத்தமும் பொருத் தமு மாவது தேர்க. அயிர்க்கப்பட்ட வென்னும் செயப்பாட்டு வினையே(பொதுவியல்-௬-௭௧)படி அயிர்த்த வென்றாயிற் றென்பர் சிலர். நான் ஐயுற்ற கோமானை அறிந்துவா என்று தோழியி னிடத்திற் சொல்லி யிருப்பாளே யன்றி, என்னால் ஐயுறப்பட்ட கோமானை அறிந்துவா என்று தமயந்தி சொல்லி யிராள். செய் கின்றது காலங்காட்டும் வினைப்பெயர் ஆகலான் செய்கின்றதாகிய சமையற் றொழில்களை யெல்லா மென்று ஒட்டிப் பொருளுரைத் தாம். செய்கின்றது மடைத்தொழில்க ளெல்லாம் - ஒருமையிற் பன்மை மயக்கம். (௯௬)

[“மக்களைக் கொண்டுபோய் வாகுக னெதிரில் விளையாட விட்டுப் பிற கவன் செய்கையைத் தெரிந்து வா” வென்று மற்றொருத்தியைப் போக்கினள் தமயந்தி யெனல்.]

கோதை நெடுவேற் குமாரனையுந் தங்கையையும்
ஆதி யரச னருகாகப்—போத
விளையாட விட்டவன்றன் மேற்செய னாடென்றாள்
வளையாடுங் கையாண் மதித்து.

(ப - ரை) வளை ஆடும் கையாள் மதித்து - வளையல்களாடிக் கொண்டிருக்குங் கைகளை யுடைய தமயந்தி (நன்றாய்) எண்ணித் துணிந்து, (மற்றொரு தோழியை நோக்கி) கோதை நெடுமை வேல் குமரனையும் தங்கையையும் - மலர் மாலை யணிந்த நீண்ட வேலாயுத மேந்திய (என்) மகன் (இந்திரசேனனையும்) (அவன்) தங்கை (இந்திரசேனையையும்), ஆதி அரசன் அருகு ஆக போத விளையாட விட்டு-நளனென்று (நான் ஐயுற்றிருக்கும்) அரசனருகிற் போகவும் விளையாடவும் விட்டு, மேல் அவன் தன் செயல் நாடு என்றாள் - அதற்குமேல் அவனுடைய செய்கைகளைக் கண்டறிந்து வா என்று சொல்லி அனுப்பினாள்.

(கு - ரை) “இந்திரசேனனு மென் மகனையும் அவன் தங்கையாம் இந்திரசேனையையும் நளனென்று நான் ஐயுற்றுள்ள அரசனருகிற் போய் விளையாட விட்டுப் பிற கவன் செயல்களைக் கண்டறிந்து வா” என்று மற்றொருத்தியை அனுப்பினாள் தமயந்தி.

(வி - ரை) கோதை நெடு வேல்-மாலை சூடிய வேல் - வெற்றி மாலை சூடிய வீர வேல். ஆதி அரசன்-பழமையாகிய அரசகுலத்திற் றோன்றிய நள னெனினுமாம். போத-புகுத வென்பதன் மரூஉ, விளையாட - செயவெ னெச்சங்கள். தங்கை-பொருளடி முறைப் பெயர்; தாம்+கை யெனப் பிரிக்க. வளை-கை வளையலுக் காகு பெயர். நாடு-கண்டறிந்துவா என்னும் தன் வினைப்பொருளுக் குரியதாகி நின்றது. “ஏ தோழி! இப்போதே நீ என் மக்க ளிருவரையும்

கூட்டிக்கொண்டு மடைப்பள்ளிக்குப் போய் வாகுக னருகில் விளை யாட விட்டு, அதற்குப் பிறகு அவன் செயல்களைக் கண்டறிந்துவா" என்றாள் தமயந்தி யென்று கூட்டி யறிந்துகொள்க. (௫எ)

[மக்களைக் கண்ட நளன் மன நடுங்கி, "மக்காள்நீர் யார் மக்கள்?" என்றெடுத் தணைத்துக்கொண்டா னெனல்.]

மக்களைமுன் காணு மனநடுங்கா வெய்துயிராப்
புக்கெடுத்து வீரப் புயத்தணையா—மக்காணீர்
என்மக்கள் போல்கின்றீர் யார்மக்க ளென்றுரைத்தான்
வன்மக் களியானை மன்.

(ப - ரை) வன்மம் களி யானை மன் - பகைக்கு மியல்புள்ள மத யானை யேறும் வீரனாகிய வாகுக னென்னு நளன், மக்களை முன் காணு மனம் நடுங்கா வெய்து உயிரா புக்கு எடுத்து வீரம் புயத்து அணையா - அப்பிள்ளைகளை (த்தன்) எதிரிற் கண்டு மனம் பதைத்து நெருப்பெழ மூச்செறிந்து (அவர்களிடத்தில் விரைந்து) போ யெடுத்து (த்தன்) வீரஞ்செறிந்த தோள்களில் அணைத்துக்கொண்டு, மக்காள் நீர் என் மக்கள் போல்கின்றீர் யார் மக்கள் என்று உரைத்தான் — பிள்ளைகளே, நீங்கள் என் பிள்ளை களைப் போலிருக்கின்றீர்கள்; யார் பெற்ற பிள்ளைகள்? என்று கேட்டான்.

(கு - ரை) தன் மக்களைக் கண்டவுடனே நளன், மன நடுங் கிப் பெருமூச் செறிந்து விரைந்தோடி யெடுத்து, "பிள்ளைகளே! நீங்கள் யார் பெற்ற பிள்ளைகளோ! என் பிள்ளைகளைப்போ லிருக்கி றீர்கள்" என்று அணைத்துக்கொண்டான்.

(வி - ரை) அந்தோ! இப்படிப்பட்ட சிறு பிள்ளைகளையும் பிரிந்துவிட நேர்ந்ததன்றே என்று மனந்தடுமாறினு னென்பதனுல் மன நடுங்கா என்றார்; அதனுல் மனம் புழுங்கினு னென்பார் வெய்துயிரா என்றார். இங்குப் புகுதல் விரைந் தெதிர்கொண்டு

சேறலை-மக்கட் டோற்றமயக்கியதால் அவன் தன்னையுமறியாமல் வல்விரைந்து சென்று, அவர்களை யெடுத்துத் தழுவினா னென்பார் புக்கொடுத்து வீரப் புயத்தணையா என்றார். நளன் அவர்களைத் தன் மக்களென் றுணர்ந்தும் யார் மக்க ளென்றா னென்றது கவி யின் அவிசயம்போலும். அல்லது தன்னை யவன் அந்நிலையில் வெளிப் படுத்திக்கொள்ள லாகாதென நடித்தா னெனினுமாம்; மானங் கருதி மறைத்தா னெனினுமாம். காணா முதலியவை செய்யா வென்னும் வாய்ப்பாட் டெச்சங்கள். (கஅ)

[நளனை நோக்கிப் பிள்ளைகள், "நாங்கள் நளன் மக்கள்; அவன் அன்னையை விட்டுப் போனதனால், நாங்கள் மூவரும் இங்கிருக்கின்றோம்" என்று ரேனல்.]

மன்ன னிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள்யாம்
அன்ன தனைக் கான்விட் டவனேக—இந்நகர்க்கே
வாழ்கின்றோ மெங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றா னென்றா ரழுது.

(ப - ரை) (பிள்ளைகள் நளனை நோக்கி) மன்னன் நிடதத் தார் வாழ் வேந்தன் மக்கள் யாம் - பேரரசனும் நிடத நாட்டாரு டைய இன்ப வாழ்க்கைக்குக் காரணனான தலைவனுமாகிய நளனு டைய பிள்ளைகள் நாங்கள், அவன் அன்னதனை கான் விட்டு ஏக - அவன் எங்கள் தாயை வனத்தில் தனியே விட்டுப் பிரிந்து போனத னால், இ நகர்க்கே (நாங்கள்) வாழ்கின்றோம் - இந்தக் குண்டின புரியிலேயே(நாங்கள் எங்கள் அன்னையோடு) வாழ்ந்துகொண்டிருக் கிறோம், எங்கள் வளம் நாடும் மற்று ஒருவன் ஆள்கின்றான் - எங்க ளுடைய நீர் வளமுள்ள நிடத நாட்டையும் வேறோரரசன் ஆண்டு கொண் டிருக்கின்றான், என்றார் அழுது - என்று அழுதபடியே சொன்னார்கள்.

(க - ரை) "பேரரசனும் நிடத நாட்டார் தலைவனுமாகிய நளன் மக்கள் நாங்கள். எங்கள் அன்னையை அவன் வனத்தில் ஒன்

றியாய் விட்டுப் போனதனால், அவனோடு நாங்கள் இந்த வாழ் விரோம்" என்று அழுதுகொண்டே சொன்னார்கள் பிள்ளைகள்.

(வி- ரை) அப்பனை நினைத்தபோதோ மக்களுக்குத் துக்கம் பெருகிய தென்பார், என்றூ ரழுது என்றார். மன்னனாகிய நிடதத்தார் வாழ் வேந்த னென்பாரு முளர்; பொருள் சிறவாமை காண்க. யாம் மக்கள் என மாற்றி யுரைப்பினுமாம். எக-செய வென்னும் வாய்ப்பாட்டுக் காரணப் பொருட்டு. இந்நகர்க்கே - நான்கனுருபு ஏழனிடப் பொருட்டு. ஏகாரம் பிரிநிலை. வளநாடும் எனக் கொண்டு உம்மையை எச்சமாப் போற்றுவதே பொருணயமாம். அவன் காட்சியின்றி நாங்கள் வருந்துவதன்றி அவன் ஆட்சியின்றி மற்றொருவ னாட்சியால் நாடும் வருந்துகிறது என்று கூறினானெனக் கொள்வதே தேறினார் வழக்கு. சக்கரவர்த்தி யென்பார் மன்னனென்று பொதுவாகவும் நிடத நாட்டு நள சக்கிரவர்த்தி யென்பார் நிடதத்தார் வாழ்வேந்த னென்று சிறப்பாகவும் கூறினார்கள்.

[பிள்ளைகள் பேச்சைக் கேட்ட நளன் மனமகிழ்ந்து,
கல கல வென்று கண்ணீ ருகுத்தா னெனல்.]

ஆங்கவர் சொன்ன வுரைகேட் டழிவெய்தி
நீங்கா வுயிரோடு நின்றிட்டான்—பூங்காவில்
வள்ளம்போற் கோங்கு மலருந் திருநாடன்
உள்ளம்போற் கண்ணீ ருகுத்து.

(ப - ரை) பூ காவில் வள்ளம் போல கோங்கு மலரும் திருநாடன் - பூஞ்சோலைகளிற் கிண்ணம்போலக் கோங் கரும்புகள் பூக்கின்ற வளஞ்சிறந்த நிடதநாட்டரசனாகிய நளன், ஆங்கு அவர் சொன்ன உரை கேட்டு அழிவு எய்தி - அப்படி (அழுதபடியே) அப்பிள்ளைகள் சொன்ன பேச்சைக் கேட்டு மனச் சோர்வடைந்து, உள்ளம்போல் கண்ணீர் உகுத்து - மனமுருகிப் பாய்வதுபோலக் கண்ணீர் கலகலவென்று சொரிந்து, நீங்காத உயிரோடு நின்றிட்

டான் - ஓடாமல் (ஊசலாடிக்கொண்டிருக்கும்) உயிரோடு (ஒன்றுந் தோன்றாமல் அந்நின்றது நின்றபடியே) அசைவற்றிருந்தான்.

(க - ரை) பிள்ளைகள் அழுதபடியே பேசின பேச்சைக் கேட்ட நளன், மனமுருகிக் கண்ணீர் சொரிந்து ஊசலாடிக் கொண்டிருக்கும் உயிரோடு அசைவற்று நின்றுகொண்டிருந்தான்.

(வி - ரை) ஆங்கு என்பதற்கு அவ்விடத்தி லென்பாருமுளர். அழிவெய்தி என்பதற்கு மனங்குன்றி யென்பதுஉமொன்று. அவனுடைய உயிர் இனியு மவன் உடலிற் பொருந்தியிராதென்னு நிலையில் நின்றுளன ளென்பது தோன்றவே நீங்காவுயிரோடு நின்றிட்டா னென்றார்; உடலில் உயிர் ஊசலாடிற் றென்பதாம். நின்றிடு + ஆன் - நின்றிட்டான் - நின்றுவிட்டான் - அப்படியே அசைவற நின்று விட்டான் என்க. நின்றிடு என்பதில் இடு பகுதிப்பொருட்டு என்பாருமுளர். போல் - போல-செயவெனெச்சம், அகரம் தொகுத்தல். கோங்கு - அதன் மலருக் காகுபெயர். பூங்கா - இரண்டன் தொகை. நீங்கா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். 'அன்பிற்கு முண்டோ அடைக்குந்தாழார்வலர் புன்கணீர் பூ சறரும்.' என்றபடி நளன் தன் மனமுருகி நீராய் வெளியிற் பாய்வதுபோற் கண்ணீர் உகுத்தான் எனினுமாம். இதுபற்றியே சிவஞானமுனிவரும்'தோன்று வகைகாந்துந் தோன்றலைக் கண்டுண் ணெகிழ்ந்து, தோன்ற நின்றான் முன்புநளன் சோமேசா' என்றார்.

(கூ0)

[இளவரசனை நோக்கிவாகுகன், "உங்களரசை வேறொருவனள நீங்க ளிங்கிருப்ப திழிவல்லவா?" என்று னெனல்.]

உங்க ளரசொருவ னாளநீ ரோடிப்போந்
திங்க ணுறைத லிழுக்கன்றோ—செங்கை
வளவரசே யென்றுரைத்தான் மாதவத்தாற் பெற்ற
இளவரசை நோக்கி யெடுத்து.

(ப - ரை) (நளன், தான்) மாதவத்தால் பெற்ற இளமை அரசை நோக்கி - அருந்தவத்தாற் பெற்ற (தன் மகனாகிய இந்திர சேனனென்னும் இளவரசனைப் பார்த்து, செம்மை கை வளமை அரசே-சிவந்த கைவளமுள்ள இளவரசனே, உங்கள் அரசு ஒருவன் ஆள - உங்களுக் குரிமையாகிய அரசை மற்றொருவன் ஆண்டு கொண்டிருக்க, நீர் ஓடிப்போந்து இங்கண் உறைதல் இழுக்கு அன்றோ - நீங்கள் (அவனுக்குப் பயந்து) ஓடிவந்து (உந்தாயக மாகிய) இவ்விடத்தில் வாழ்வது மானக்கேடல்லவா, என்று உரைத் தான் - என்றெடுத்துக் கேட்டான்.

(கு - ரை) இளவரசனை நோக்கி நளன், "தம்பி, உங்க ளரசை மற்றொருவன் ஆளவிட்டு, இங்கு உந் தாயகத்தில் ஓடிவந்து நீங்கள் வாழ்வது நிந்தை யல்லவா?" என்று கேட்டான்.

(வி - ரை) உங்கள்-நளன் தன்னையும் கூட்டிப் பன்மையிற் கூறினனென்க. அரசு - உரிமைக் காகுபெயர். நீர் என்பது இள வரசன் முதலிய மூவரையுஞ் சுட்டியதாதலால் நீங்களென்னும் பன்மைப்பொருட்டு - மரியாதைப் பன்மையாகிய பால்வழுவமைதி யன்று. இழுக்கு-வினைப்பெயர். அன்றோ-ஈ றெதிர்மறை, இழுக்கா மென்னு மோ ருடன்பாட்டுப் பொருட்டு. செங் கை வளவரசே என்பதற்குச் செங்கையிற் கோல்கொண்டாளு மாட்சியுள்ள இளவர சனே எனினுமாம். உரைத்தான் என்பது வினவினான் என்னும் பொருட்டு. நெடுநாள் பிள்ளையின்றி நோன்பாற்றிப் பெற்ற பிள்ளை யென்பதனால் மா தவத்தாற் பெற்ற என்றார் இளமை + அரசு - இளவரசு - நளனுக்குப் பின் பட்டத்துக்கு வரவேண்டியவ னிவனா கையால் இளவரசு என்றார். அரசுகளிரண்டும் அவைகளை யுடையா னுக் காகுபெயர். (சுக)

[வாகுகனை நோக்கி இளவரசன், "ஏ, மடையா! உன் மடை மதியே காட்டினை! எமக்கு வாய்மையே வலி" என்றனனெனல்.]

நெஞ்சாலிம் மாற்ற நினைந்துரைக்க நீயல்லா
தஞ்சாரோ மன்ன ரடுமடையா—எஞ்சாது
தீமையே கொண்ட சிறுதொழிலா யெங்கோமான்
வாய்மையே கண்டாய் வலி.

(ப - ரை) (இளவரசன் வாகுகனை நோக்கி) அடு மடையா - ஏ சமைக்கும் தொழில் செய்யும் மடைப்பள்ளியானே, எஞ்சாது தீமை ஏ கொண்ட சிறுமை தொழிலாய் - எப்போதும் தவறாமல் இழிவையே கொண்டுள்ள (தேரோட்டுதலாகிய) தாழ்வான தொழிலைச் செய்பவனே, இ மாற்றம் நெஞ்சால் நினைந்து உரைக்க நீ அல்லால் மன்னர் அஞ்சாரோ - (நீங்கள் ஓடிவந்து இவ்விடத்தில் வாழ்தல் இழுக்கு என்னும்) இச் சொல்லை மனத்தால் எண்ணி வாக்கால் சொல்ல (உன் தாழ்மதியால்) நீ (துணிந்தனை) யன்றி அரசர்களும் (இது சொல்லக்) கூசமாட்டார்களா, எம் கோமான் வாய்மையே வலி - (எங்கோமகனாகிய நளராசனை நீ என்ன எண்ணி இம்மாற்றம் இயம்பினை?) அவனுக்கு (ச்சொற் றவறாமை யென்னும்) உண்மையே உறுதி யென்பது (மற்றவைகளை யவன் இறுதி யென்று ஒரு அரும்பளவு மதியான்).

(கு - ரை) "ஏ, மடையனே, தேரோட்டுஞ் சிறு தொழிலாளியே! இப்படியும் நீ இயம்புவையா? எங்கோமகனை யஞ்சாமல் மன்னரும் இம்மாற்றம் மொழியாரே! அவற்கு உண்மையே உறுதி யென்பது இதை நீ தெரிந்துகொள்" என்றான் இளவரசன்.

(வி - ரை) "எங்கோமான் தனக்கு ஆற்றலில்லாததனால், தன்னரசை மற்றொருவற்கு விட்டுச் சென்றானென் றெண்ணாதே. உண்மை பிறழாத உறுதியுடைமையால் அங்ஙனஞ் செய் தகன்றானென்றெண்ணி உண்மையைக் கண்டறி" என்றானிளவரசனென்று

_ட்டுக. காண்டாய் என்பதை அசையாக அகற்றினும்; ஆயினும் ண்டாயா என்னும் வினாப்பொருட் டென்பாருமுளர். ஓ-எதிர் ரை வினா, உடன்பாட்டுப் பொருட்டு. அடுமடையா - வினைத் தொகை. வாய்மை - வாயிற் பிறக்கும் உண்மைக் காகுபெயர். மடைத் தொழிலைப் போலவே தேரோட்டுந் தொழிலும் சிறு தொழி லென்றான். ஏகாரங்க ளிரண்டில், முன்னையது தேற்றம் பின்னையது பிரிநிலை. மடைத்தொழிலும் தேர்த்தொழிலு மென் னும் சிறு தொழில்களுக்கேற்ற மதியுடையா னாகையால் நீ இங்ங னம் இழித்துரைத்தனை, ஆட்சித் தொழிலின் மாட்சியுடையாரா கிய மன்னரும் இப்படி இயம்ப அஞ்சுவரே! மன்னரு மென்பதில், உம்மை உயர்வு சிறப்புத் தொக்க தென்க. (௬௨)

["எந்தையாகிய நள மகாராச னடிகளில் மன்னர் முடிகள் தேய்ந்த வடுக்களைக் காணலாம்" என்றி ளவரச னெனல்.]

எந்தை கழலிணையி லெம்மருங்குங் காணலாங்
கந்து சுளியுங் கடாக்களிற்றின்—வந்து
பணிமுடியிற் பார்காக்கும் பார்வேந்தர் தாழும்
மணிமுடியிற் றேய்ந்த வடு.

(ப - ரை) (இளவரசன், "ஏ வாகுகா, இன்னும் இயம்புகின் றேன் கேள்:) எந்தை கழல் இணையில் - எங்கள் தந்தையாகிய நள ராசனீரடிகளிலும், பணி முடியில் பார் காக்கும் பார் வேந்தர்-ஆதி சேடப் பாம்பின் முடியிற் றாங்கியுள்ள பூமியை ஆளும் பல நாட்டர சரும், கந்து சுளியும் கடாம் களிற்றின் வந்து - கட்டுத் தறியைக் கோபிக்கு மியல்புடைய மத யானைகளின்மேல் ஏறிவந்து, தாழும் மணி முடியின் தேய்ந்த வடு எங்கும் காணல் ஆம் - வணங்குகிற கல்லிழைத்த முடிகளினால் தேய்ந்ததனால் உண்டாகிய அடையா ளங்களை எல்லாப் பக்கங்களிலும் பார்க்கலாம்.

(க - ரை) "ஏ, வாகுகனே! எந்தையாகிய நளராச னீரடிக ளிலும்" ஆனையேறி வந்து வணங்கும் பல நாட்டரசருடைய மணி

முடியால் தேய்ந்த அடையாளங்களைக் காணலாம்'' என்றானிளவரசன்.

(வி - ரை) இணைகழல்-கழலிணை-இலக்கணப் போலி, தாழா அத்தொடர். எ+மருங்கும்-எல்லாப் பக்கங்களிலும். காணல்ஆம்-காணுதல் ஆகும் - எழுவாய்த் தொடர். கந்து சுளியும் என்றதனோ கந்து முறிக்கு மென்பாருமுளர். பூமியை ஆதிசேடனென்னும் பெரும் பாம்பு தாங்கி நிற்கிற தென்னும் புராணக் கூற்றை முன்னிட்டே பணிமுடியிற் பார் என்றார். முந்திய பார். பூமிக் காகுபெயர்; பிந்திய பார் நாட்டுக் கிருமடி யாகுபெயர். இதைப் பருமை யென்னும் பண்பின் விகாரமென் றெண்ணி யப் பெரிய வென்று விகாரப் பொருளுரைப்பாருமுளர். எம்மருங்கும் என்பதில் உம்மை முற்று. முடிதலை - கலசத்துக் கிடவாகுபெயர். எங்கள் தந்தையாகிய நளராசன் பெருமையை இன்னுஞ்சொல்கின்றேன் கேள் அவன் ஈரடிகளி லெங்கெங்கும் நாட்டரசர் தாழ்வதனால் அவர்கள் மணிமுடிகள் தேய்ந்து தேய்ந்து உண்டாகிய வடுக்களைக் கண்கூடாகக் காணலாம், இன்னும் என்ன வேண்டும் அவர் பெருமை! அப்பேர்ப்பட்டவரை நீ என்னவோ எண்ணமற் பேசினாயே!'' என்றான் இந்திரசேனன். பார்வேந்தர் தங்கள் என்று பாடமோதுவாருமுளர். (சஅ)

["மன்னர் பெருமை என்போன்ற மடையர்க்குத் தெரியுமோ? கோபிக்காதே'' என்று வணங்கி நின்றானள னெனல்.]

மன்னர் பெருமை மடைய ரறிவரோ
உன்னை யறியா துரைசெய்த—என்னை
முனிந்தருள லென்று முடிசாய்த்து நின்றான்
கனிந்துருகி நீர்வாரக் கண்.

(ப - ரை) (இளவரசனை நோக்கி நளன்) மன்னர் பெருமை மடையர் அறிவரோ - அரசருடைய (அருமை) பெருமை அடு

மடையர் அறிவார்களா?, உன்னை அறியாது உரை செய்த என்னை முனிந்தருளல் என்று - உன்னருமை பெருமை யறியாமற் பேசின என்னைக் கோபிக்க வேண்டா என்று சொல்லி, கனிந்து உருகி கண் நீர் வார முடி சாய்த்து நின்றான் - மனந் தளர்ந்து கரைந்து கண்களினின்று நீர் (தாரை தாரையாய்) ஒழுக நின்றான்.

(கு - ரை) "ஐயனே! மன்னர் பெருமை மடையர்க்குத் தெரியுமா? உன்னருமை அறியாமல் நான் என்னென்னவோ வுளறி விட்டேன். கோபிக்கவேண்டா" என்று கூறிக்கொண்டே மனங்கரைந்து கண்ணீர் ஒழுக நின்றனன்.

(வி - ரை) மன்னர், மடையர் - மரபுப் பன்மைகள். பெருமை யென்றதனால் அருமையுங் கொள்க. ஓகாரம் எதிர் மறைப் பொருட்டு; உடன்பாட்டு வினை எதிர்மறைப் பொரு டால் காண்க. உன்னை - அருமை பெருமைக் காகுபெயர். முனிந்தருளல் - அல்லீற் றெதிர்மறை ஏவலொருமை முற்று. 'மகனெனல் மக்கட் பதடியெனல்' என்புழிப்போல. முனிந்தருள், பகுதி. 'மறந்தல் வெகுளியை யார்மாட்டு' மென்பதிலுள்ள உடன் பாட்டு வியங்கோளைப் போலவே முனிந்தருளல் என்பதையும் எதிர்மறை வியங்கோ ளென் றிடரெய்துவர் சிலர். முனிந்தருளே லென்றும் பாடபேதங் கொள்வாரு முளர். எல் விகுதியாயின் எதிர் மறை யேவலொருமை யென்பதற்கு யாரைக் கேட்கவேண்டும்? அருளென்பது உயர்ந்தாரைக் குறிக்கும் சொற்குறி, முடிசாய்த் தல் கண்ணீருகுத்தல் மனமுருகல் முதலியவை இரங்கற் குறிகள். "ஆஹா! இத்தனை அன்புடை மக்களையும் பிரிந்தே மல்லவா!" என்று எழுந்த ஆருமைக் கடையாளங்கள் எனினுமாம் (௬௭)

[மக்களை வாகுகன் கண்டு பேசின வாய் மொழிகளைத் தோழியரா லுணர்ந்த தமயந்தி மன மழிந்தா ளெனல்.]

கொற்றக் குமரனையுங் கோதையையுந் தான்கண்டு
மற்றவன்றா னங்குரைத்த வாசகத்தை—முற்றும்
மொழிந்தாரம் மாற்ற மொழியாத முன்னே
அழிந்தாள் விழுந்தா ளழுது.

(ப - ரை) (தோழியர் தமயந்தி யிடத்தில்) கொற்றம் குமரனையும் கோதையையும் அவன் கண்டு - வெற்றிக் குறியுள்ள இந்திரசேனனையும் (அவன் தங்கை) இந்திரசேனையையும் அவ்வாகுகன் பார்த்து, ஆங்கு உரைத்த வாசகத்தை முற்றும் மொழிந்தார் - அம் மடப்பள்ளியிற் பேசின பேச்சை முழுதும் விடாமற் சொன்னார்கள், அ மாற்றம் மொழியாத முன்னே - அப்பேச்சை (அவர்கள்) பேசி முடியாத முன்பே, அழிந்தாள் அழுது விழுந்தாள் - (அவள்) மனமழிந் தழுதபடியே விழுந்தாள்.

(க - ரை) வாகுகன் மக்களைக் கண்டு பேசின பேச்சை ஒன்றும் விடாமல் தோழியர் சென்று தமயந்திக் கறிவித்தார்கள். அது கேட் டவள் மனமழிந் தழுதபடியே கீழே விழுந்தாள்.

(வி - ரை) தான்களிரண்டும் மற்றொன்று மசைநிலைகள். பேசி முடிக்கு முந்தியே எனினுமாம். ஏகாரம் தேற்றம். கொற்றம்-வீரம். புகழ், மனத்தூய்மை முதலிய அரச வடையாளங்கள். வாசகத்தையும் என்று உம்மை கொடுத்து உரையைக் கெடுத்த மகிழெய்துவர் தேற்றார். மொழியாத முன்னே யென்பதற்கு மொழிந்தது மொழியாதனுமா யிருக்கும்போதே யெனினுமாம் ஆங்கு என்பதற்கு மக்களைக் கண்டபோது என்பதூஉ மொன்று அழிந்தாள் விழுந்தழுதாள் என்று கூட்டியும் கொள்ளலாம். வாசகத்தைச் சொன்னவர்கள் வாகுகனுடைய கண்ணீர் உகுத்தல் மக்களைத் தழுவல் முதலிய உணர்ச்சி புணர்ச்சிகளாலாகிய செய்கைகளையும் தமயந்திக் கறிவித்தார்க ளென்பதைஇயும் குறிப்பி கொள்க. உம்மை முற்றுப் பொருட்டு. (ஊ)

"''மண மனைந் தேன் கூந்தலைத் திருத்துங் கைகள் சமையற் புகையாற் கருகுங் காலமாயிற்றே!'' என் றிரங்கினாள் தமயந்தி யெனல்.]

கொங்கை யளைந்து குழறிருத்திக் கோலஞ்செய்
அங்கை யிரண்டு மடுபுகையால்—இங்ஙன்
கருகியவோ வென் றழுதாள் காதலனை முன்னாள்
பருகியவேற் கண்ணாள் பதைத்து.

(ப - ரை) முன் நாள் காதலனை பருகிய வேல் கண்ணாள் - தாழ்வு காலத்துக்கு முந்திய வாழ்வு காலத்தில் (தன்) கணவனுகிய நளனழகைக் கண்டு நுகர்ந்த வேல்போலுங் கண்களையுடைய தமயந்தி, கொங்கை அளைந்து குழல் திருத்தி கோலம்செய் அம் கை இரண்டும்-மண மூட்டும் பொருள்களைத் தொட்டு (என்) கூந்தலிற் றடவி ஒழுங்குபடுத்தி அழகு செய்யும் (உன்) உள்ளங் கைக ளிரண்டும், அடு புகையால் இங்ஙனம் கருகியவோ என்று பதைத்து அழுதாள் - சமைக்கும் புகையால் இப்படிக் கறுத்தனவோ என்று மனந் துடித்து புலம்பினள்.

(க - ரை) "வாழ்வு காலத்தில் வாசனைப்பொருளைத் தொட்டுத் தடவி என் கூந்தலைத் திருத்திய கைக ளிரண்டும் சமையற் புகையால் இப்படிக் கறுத்தனவோ !'' என்று மனம் பதைத் தழுதாள் தமயந்தி.

(வி - ரை) அகம் + கை - அங்கை. கொங்கு - மணம்; கொங்கை — இரண்டன்விரி. அளைதல் - தொடுதல். குழல் திருத்தல்-கூந்தலுக்கு மணமூட்டிக் கோதுதல்; படுக்கையறையிற் கணவன் மனைவியர் மனவொற்றுமையாற் செய்யுந் தொழில். அடு + புகை - வினைத்தொகை. இ + ஙனம். ஙனம் கடை குறைந்து இங்ஙன் என்றாயிற்று. ஓ - இரக்கற்பொருட்டு. கையகம் அகங்கை - இலக்கணப் போலி. 'கொங்கை யணைத்துக் குழறிருத்தி' யென்றும் 'கொங்கை

வருடிக் குழறிருத்தி' யென்றும் 'சொக்குலவு கூந்தற் குழைதிருத்தி' யென்றும் பல்வேறு பாடம் படிப்பாரு முளர். பருகல் - உண்ணல்; கண்ணாற் பருகல்-இன்பாகவும் அன்பாகவுங் காணல் செவியாற் பருகல்-அன்பாகவும் இன்பாகவுங் கேட்டல்; இதையே செவிக்குண வில்லாத போது என்றார் நாயனார்-காதலனை யென்பது அவனழகுக்கு ஆகுபெயராயிற்று. (௬௬)

[தமயந்தி தன் தந்தையை நோக்கி, "இருதுபன்னற்குத் தேரோட்டி வந்த வாகுகனே நளமகாராசன்" என்றுரைனனல்.]

மற்றித் திருநகர்க்கே வந்தடைந்த மன்னவற்குக்
கொற்றத் தனித்தேருங் கொண்டணைந்து—மற்றும்
மடைத்தொழிலே செய்கின்ற மன்னவன்கா ணெங்கள்
கொடைத்தொழிலா னென்றாள் குறித்து.

(ப - ரை) (தமயந்தி தன் தந்தையை நோக்கி) இ திரு நகர்க்கு வந்து அடைந்த மன்னவன்கு - இந்தச் சிறந்த பட்டணமாகிய குண்டினபுரத்துக்கு வந்து சேர்ந்த இருதுபன்ன மன்னனுக்கு, கொற்றம் தனி தேரும் கொண்டு அணைந்து - வெற்றி தருமொப் பற்ற தேரையும் ஓட்டிக்கொண்டு வந்து, மற்றும் மடைத் தொழிலே செய்கின்ற மன்னவன் - (அதற்கு) மேலும் சமையல் வேலையையுஞ் செய்துகொண்டிருக்கிற அரசனே, எங்கள் கொடைத் தொழிலான் என்றாள் குறித்து - ஈகையிற் சிறந்த வள்ளலாகிய எங்கள் நளமகாராசன் என்று எண்பித்துச் சொன்னாள்.

(க - ரை) "இருதுபன்னர்க்குத் தேரோட்டிக்கொண்டு இந் நகர்க்கு வந்ததன்றியும் சமையல் வேலையுஞ் செய்துகொண்டிருக்கிற மன்னவனே எங்கள் வள்ளலாகிய நளமகாராசன்" என்றாள் தமயந்தி.

(வி - ரை) மற்றும் காணும் அசைகள்; காண் என்பதைக் கண்டறி யென்று பொருட் படுத்திக் கூட்டுவாரு முளர். திரு- அழகு எனினுமாம். நகர்க்கே என்பதில் ஏகாரம் அசை. இரண் டாமற்று வினைமாற்று. தேரும் என்பதில் உம்மை எச்சம். மற் றும் என்பதிலும் அது-அதைத் தொழிலோடும், தொழிலே யென் பதில் ஏகாரத்தை மன்னனோடும் சேர்ப்பினுமாம்; தொழிலே யென்பதி லேகாரம் பிரிநிலைப் பொருட்டு தேற்றமெனினுமாம்; எண்ணுப்பொருட்டென்பாரு முளர். எங்கள் என்பது மரபுப் பன்மை. கொடைத் தொழிலா னென்றது நளன் ஈகையிற் சிறந்தா னென்பதனாலா மென்க. என்று எண்ணித்துக் காட்டினு னென்ப தனால் என்றான் குறித்து என்றார். (கஎ)

[வீமன், மடைப்பள்ளியிற் நளனைக் காணச் சென்று, அடையாளந் தெரியாமல் மயங்கினு னெனல்.]

போதலருங் கண்ணியான் போர்வேந்தர் சூழப்போய்க்
காதலிதன் காதலனைக் கண்ணுற்றான்—ஓதம்
வரிவளைகொண் டேறும் வளநாடன் றன்னைத்
தெரிவரிதா நின்றான் றிகைத்து.

(ப - ரை) போது அலரும் கண்ணியான் போர் வேந்தர் சூழ போய் - பூ மொட்டுகள் மலர்ந்து கொண்டிருக்கின்ற மாலை யணிந்த வீமராசன் சண்டையிற் சிறந்த பல மன்னரும் தன்னைச் சூழ்ந்துவரச் சென்று, காதலிதன் காதலனை கண்ணுற்றான் - தன் மகளாகிய தமயந்தியின் கணவனைப் பார்த்தான் (பார்த்து), ஓதம் வரி வளை கொண்டு ஏறும் வளம் நாடன் தன்னை தெரிவு அரிது ஆக திகைத்து நின்றான் - கடலானது (தன் அலைக் கரங்களால்) இற் றுச் சங்குகளை யேந்திக்கொண்டு கரையேறிப் பாய்கின்ற வள முள்ள அந் நிடதநாட்டரசனாகிய தன் மருமகனை அடையாளம் அறிந்துகொள்ளல் ஆகாமல் மயங்கி நின்றான்.

(க - ரை) பல மன்னர் புடைசூழச் சென்ற வீமன் தன் மருமகனை மடைப்பள்ளியிற் கண்டு அடையாளந் தெரியாமல் மயங்கினான்.

(வி - ரை) போது-மலரும் பருவத்ததாகிய மொட்டு; இதையே நாளரும்பென நவில்வார்கள். 'காலையரும்பிப் பகலெல்லாம் போதாகி மாலைமலரு மிந்நோய்' என்ற குறளும் இச்சொற்குச் சான்றுபகர்கின்றது. அலரும்-இங்கிது நிகழ்காலப் பொருட்டு. போது என்னும் காலப்பெயர் அதில் விரியும் மொட்டுக் காகு பெயர். போது செறியும் போது விரியும் பூவை மருவும் பூவை மருவும் என்ற எல்லப்ப நாவலர் வாக்கையு நோக்குக. போர்வேந்தர்-ஏழன் உருபும்பயனு முடன்தொக்க தொகை. வண்மை + அம் - வளம். ஓதம்-கடலுக் காகுபெயர். வளம்-பண்புப்பெயர். கொண்டு என்றதனால் அலக்காரங்கள் தந்துரைக்க லாயின. தெரிவு என்பதற்கு வளநாடன்றன்னை யென்பதைச் செயப்படுபொருளாகவும் அரிது என்பதைப் பயனிலையாகவும் சேர்த்துத் தெளிக. (௬௮)

[வீமன் வாகுக னுருவைக் கண்டு மலைத்தானாயினும், அவன் பேச்சால் அவனே நள னென்று தெளிந்தா னெனல்.]

செவ்வாய் மொழிக்குஞ் செயலுக்குஞ் சிந்தைக்கும்
ஒவ்வாது கொண்ட வுருவென்று—எவ்வாயும்
நோக்கினா னோக்கித் தெளிந்தா னுணங்கியதோர்
வாக்கினான் றன்னை மதித்து.

(ப - ரை) (வீமன் வாகுகனை நெருங்கி) கொண்ட உரு செம்மைவாய் மொழிக்கும் செயலுக்கும் சிந்தைக்கும் ஒவ்வாது என்று-(இவன்) கொண்டுள்ள உருவமானது இவனுடைய ஒழுங்கான வாயிற் பிறக்கும் சொற்களுக்கும் செய் தொழிலுக்கும் எண்ணத்துக்கும் ஒத்திருக்கவில்லை யென்று, எ வாயும் நோக்கினான்-எல்லா விதத்தாலும் ஆராய்ந்தான், நோக்கி நுணங்கியது ஓர் வாக்கினான் தன்னை மதித்து தெளிந்தான் ஆராய்ந்து (அதனால்) அந்நுட்பமா

பறியத்தக்க வாய்மொழி யுடையானாகிய வாகுகனை (நளனே
யென) எண்ணித் துணிந்தான்.

(கா. ரை) வீமன், "ஆஹா! இவ்வாகுக னுரு இவன் மனமொழி மெய்களுக்கு ஒவ்வாமல் வேறென்னவோ ஆதா இருக்கிறது!" என்று கூர்ந்து நோக்கினான்; நோக்கி அவனே நளனென எண்ணித் துணிந்தான்.

(வி - ரை) செம்மை + வாய் - செவ்வாய் - இங்குச் செம்மையை மொழிக்கு அடையாக்கி ஒழுக்கமுடைய அல்லது ஒழுங்கான என்று பொருள் கொள்க. உரு-எழுவாய்; ஒவ்வாது - பயனிலை. அன்றி, ஒவ்வா தென்பதை எதிர்மறை யெச்சமாக்கி ஒவ்வாமல் எனப் பொருள் கொண்டு (இவ்வுருவம்) என்று வேறொரெழுவாயை வரவழைத்து இவ்வுருவம் உருவாகு மென்று வீண் பொருள் விளம்பி மயக்குநரு முளர். ஒவ்வாமல் கொண்ட வுருவாகும் (இவ்வுரு) என்று மயக்குவதினும், 'கொண்டவுரு மொழிக்கும் செயலுக்கும் சிந்தைக்கும் ஒவ்வாது' என்பதே தெளிக்கும் பொருளாம். என்று - இடையடி வினையெச்சம். ஒவ்வா தென்பது ஒக்கு மென்பத னெதிர்மறை முற்று. மனம் வாக்கு காய மென்னும் மும்மை வழியானும் வாகுகனை வீமன் கூர்ந்து நோக்கினான்; மனத்தா லெண்ணத்தையும் வாக்காற் பேச்சையும் காயத்தாற் செய்கையையும் சீர்தூக்கினு னென்க. வாக்கின் சிறப்பால் அவன் வாகுகன் அல்லன் நளனே யென்று வீமன் தெளிந்தா னென்க.

[வாகுகனை நோக்கி வீமன், "நிடத நாட்டரசனே! உன் உருவை ஒளியாமற் காட்டு" என்று னெனல்.]

பைந்தலைய நாக பணமென்று பூகத்தின்
ஐந்தலையின் பாளைதனை யையுற்று—மந்தி
தெளியா திருக்குந் திருநாடா உன்னை
தொளியாது காட்டுன் னுரு.

(ப - ரை) (வீமன் மனந்துணிந்து வாகுகனை நோக்கி) பூகத்தின் ஐ தலையின் பாளை தன்னை பசுமை தலைய நாகம் பணம் என்று ஐயுற்று - பாக்கு மரத்தின் அழகான தலையிலுள்ள பாளையைப் பசும் பொன் னிறமான தலையையுடைய பாம்பின் படமென்று மயங்கி, மந்தி தெளியாது இருக்கும் திருநாடா - குரங்கானது மனத் துணிவில்லாம லிருக்குஞ் சோலை வளமுள்ள நிடத நாட்டரசனே, உன்னை ஒளியாது உன் உரு காட்டு-உன்னை (இன்னும்) மறைத்திராமல் உன் (மெய்யின் மெய்) உருவத்தைக் காட்டுவாய் (என்றான்).

(க - ரை) "ஏ, நிடத நாட்டரசனே! இன்னும் நீ இப்படி உருமாறி யிருத்தல் அழகன்று; இப்போதே உன் உண்மை உருவத்தைக் காட்டுக" என்று வீமன் துணிந்து கூறினான்.

(வி - ரை) பைந்தலை யென்பதை ஐந்தலை யென்றும் ஐந்தலை யென்பதைப் பைந்தலை யென்றும் மாற்றி வீண் பொருளுரைப்பாருமுளர். நிடத நாட்டில் ஐந்தலை நாகங்க ளிருந்தன வென்பது வீண் புரளிப் பொருளாம். இப்படி மொழி மாற்றிப் பொருள்கொள்ள ஆதார மின்மையாலும் ஐந்தலை நாகம் அரும்பொருளாய்ப் புராணதாரங் கொண்டதன்றி அனுப வாதாரங் கொண்டுள்ளதன்றாகலானும் மொழிமாற்ற மின்றியே பொருளுரைத்தாம். பசுமை + தலை - பைந்தலை, பசுமை + பொன் - பைம்பொன் என்புழிப்போல. பைந்தலை, ஐந்தலை யிரண்டும் பண்புத்தொகைகள். தலைய-குறிப்புப்பெயரெச்ச வினை. "மந்தி, பெண் குரங்காகையால் மயங்கிற்று; (அதுபோல) தமயந்தியும் பெண்பாலாகையால் உன்னுருவைத் தெரியாமல் மயங்கினாள், அதனால் நாங்களும் மயங்கினோம். இனியு நீ மயக்குவது நன்றன்று; உன் உண்மை உருவை ஒளியாமற் காட்டு" என்றான் வீம னென்க. (௭0)

[உடனே நளன் தனக்குக் கார்க்கோடக னளித்த ஈரா
டைகளி லொன்றைப் போர்த்தான் மற்றொன்றை
யுடுத்தா னெனல்.]

அரவரசன் றான்கொடுத்த வம்பூந் துகிலின்
ஒருதுகிலை வாங்கி யுடுத்தான்—ஒருதுகிலைப் [குங்
போர்த்தான் பொருகலியின் வஞ்சனையாற் பூண்டளிக்
கோத்தாய முன்னிழந்த கோ.

(ப - ரை) பொருகலியின் வஞ்சனையால் பூண்டு அளிக்கும் கோ தாயம் முன் இழந்த கோ - சண்டை செய்வித்துப் பகைமூட்டும் கலிபுருடனது சூதால் (உரிமையாய்) மேற்கொண்டு (மன்னுயிரைக்) காக்கின்ற அரசாட்சியை அக்காலத்தில் (எளிமையாய்) இழந்துவிட்ட நளமகாராசன், அரவு அரசன் தான் கொடுத்த அம் பூ துகிலின் - பாப்பரசனாகிய கார்க்கோடகன் வழங்கிய அழகு மிகுந்த ஆடைகளுள், ஒரு துகிலை வாங்கி உடுத்தான் ஒரு துகிலைப் போர்த்தான் - ஓராடையை எடுத்து (தன் அரையிற்) கட்டிக் கொண்டான் மற்றோராடையை (மேலாடையாக)ப் போர்த்துக் கொண்டான்.

(க - ரை) கலியின் சூதால், தனக் குரிமையாய் விளங்கியிருந்த பேரரசாட்சியை ஒரு சிற்றரசனுக்கு எளிமையாயிழந்த நளன் தனக்குக் கார்க்கோடக னளித்த ஈராடைகளி லொன்றை யுடுத்தான் மற்றொன்றைப் போர்த்தான்.

(வி - ரை) அரவரசன் - கார்க்கோடகன் - இப்பாப்பரசன் பால் நளன் பெற்ற வரத்தை "சாதி மணித்துகிலீ சாற்றினான்" என்னும் செய்யுளிற் காணலாம். அதில் அப்பாம்பு ஓராடை கொடுத்ததாகவே வந்திருக்கிறது. இங்கது ஈராடையான திறம்பூ தடைத்து. ஆயினும் அரையாடையும் மேலாடையும் ஒன்றுக்கு ஒன்று மடித்து மறைத்து வைத்திருக்கலா மென்று கொள்ள

வும் இடங் கொடுக்கின்றது. அகிலின் என்பது மாபொருபை யாகும். பொருகலி-வினைத்தொகை. பொரு - பொருவிக்கு மென்னும் பிறவினைப்பொருட்டு. ஆது பொருவிக்கும் கலியின் மயக்கால் என்றும் பொருள் கொள்ளலாம். அழகான பூவேலை தீர்ந்த ஆடையெனினுமாம். அழகு, பூ என்பதை மீமிசையாக் கொண்டு மிகவும் அழகான என்பாருமுளர். (எக)

[மறைந்து வாழும் வாகுக னுருவம் மாயனடி மறவார் வல்வினை போல் மாறிற் றெனல்.]

மிக்கோ னுலகளந்த மெய்யடியே சார்வாகப்
புக்கோ ரருவினைபோற் போயிற்றே—அக்காலம்
கானகத்தே காதலியை நீத்துக் கரந்துறையும்
மானகத்தேர்ப் பாகன் வடிவு.

(ப - ரை) அ காலம் கானகத்து காதலியை நீத்து கரந்து உறையும் மால் நகம் தேர் பாகன் வடிவு - அந்தக்காலத்தில் வனத்தில் (தன்) மனைவியைக் கைவிட்டு (அதுமுதல்) மறைந்து வாழும் பெரிய மலைபோன்ற தேரோட்டும் வாகுகனெனும் சாரதியின் உருவமானது, மிக்கோன் உலகு அளந்த மெய்மை அடியே சார்வு ஆக புக்கோர் அருமை வினைபோல் போயிற்று - (கடவுளரிற்) சிறந்தவனாகிய திருநெடுமாலின் உலகளந்த உண்மைத் திருவடிகளே துணையாக அடைக்கலம் அடைந்தவர்களுடைய தீராப்பாவம் (தீர்க்துவிடுவது போல (இவ்வாடைகளை யணிந்த இந்தக் காலத்தில்) நீங்கிப் போயிற்று.

(க - ரை) வனவாசஞ் செய்த அந்தக் காலத்தில் தன் மனைவியைக் கைவிட்டு அதுமுதல் மறைந்துவாழும் நளனுடைய வாகுகனென்னும் தேர்ப்பாக வடிவம், திருமாலை நம்பினோர் பாவம் போல இவ்வாடை தரித்த இந்தக் காலத்தில் நீங்கிப்போயிற்று.

(வி - ரை) அக்காலம் என்பதை ஆடை தரித்த அக்காலமென்றே கொள்வாருமுளர். போயிற்றே அக்காலம் என்று அக்

காலத்தைப் போயிற்றே என்பதனோடும் ஒட்டுவர், அக்காலம் போயிற்றே யென்று மாற்றுவர். கவியின் கருத்து அதுவாயின் (இவ்வாடை யணிந்த) இக்கால மென்றே இயம்பி யிருப்பார். கதை யொழுங்கில் இக்கால மென்றே வந்திருக்க வேண்டும். இக்காலத்தை அக்கால மென்று கொள்வதினும், அக்காலத்தை அக்கால மென்னலே ஏற்ற மெனக் கொண்டு அதைக் கானகத்தே என்பதனோடு கூட்டி, இக்கால மென்பதைத் தந்துரைத்துக்கொண்டாம்-திருமாலுக் கடிமை செய் யென்பதனால் இவ்வாசிரியரும் யிக்கோ னுலகளந்த திருவடியே சார்வாக வென்றார். (௭௨)

[உண்மை யுருவில் நளனைக் கண்டவுடனே அவன்
மக்கள் புலம்பி அவன் காலை அலம்பினா
ரெனல்.]

தாதையைமுன் காண்டலுமே தாமரைக்க ணீரரும்பப்
போதலருங் குஞ்சியான் புக்கணைந்து—கோதிலாப்
பொன்னடியைக் கண்ணிற் புனலாற் கழுவினான்
மின்னிடையா ளோடும் விழுந்து.

(ப - ரை) போது அலரும் குஞ்சியான் தாதையை முன் காண்டலுமே - நாளரும்புகள் மலர்கின்ற சிகையையுடைய இந்திர சேனன் (தன்) தந்தையாகிய நளனுருவைத் தன்னெதிரிற் கண்ட வுடனே, தாமரை கண் நீர் அரும்ப மின் இடையாளோடும் புக்கு அணைந்து விழுந்து - செந்தாமரை மலர் போன்ற தன் கண்களி னீர் பெருக மின்போன்ற இடையுடையாளாகிய தன் தங்கையோடு போய்க் கட்டித் தழுவி விழுந்து (வணங்கி), கோது இல்லாத பொன் அடியை கண்ணின் புனலால் கழுவினான் - குற்றமற்ற பொன்போலும் அருமையான (அவன்) திருவடிகளைத் தன் கண்ணீ ரால் அலம்பினான்.

(கு - ரை) தந்தையை உண்மை யுருவிற் கண்ட இந்திரசேனன் தன் தங்கையோடு போய்க் கட்டித் தழுவி முத்தமிட்டு விழுந்து, அவன் திருவடிகளைத் தன் கண்ணீரா லலம்பினான்.

(வி - ரை) காண்டலும் - வினையெச்சம், இறந்த காலப் பொட்டு. தாமரை - மலருக் காகுபெயர். அரும்ப - அரும்ப, துளிக்க. போதலரும்-எழுவாய்த்தொடர். குஞ்சி-ஆண்மயிர். அணைந்து புக்கு என்று மாற்றலாம்-நெருங்கிச் சென்று என்று பொருள் கொள்க. கோதிலா—எழுவாய்த்தொடர். இல்லாத என்னும் குறிப்புப் பெயரெச்சம் இன்மை என்னும் பண்படியாகப் பிறந்ததெனின் பண்புத்தொகையாம். பொன்னடி, மின்னிடை - உவமைத் தொகைகள். கண்ணின் புனல்-கண்ணினின் றொழுகும் புனல் - ஐந்த னீங்கற் பொருட்டு. (எ௩)

[தமயந்தி தன் னரை யாடையோடும் அழுத கண்ணீரோடும் நள னடியில் விழுந்தா ளெனல்.]

பாதித் துகிலொடு பாய்ந் திழியுங் கண்ணீரும்
சீதக் களபதனஞ் சேர்மாசும்—போத
மலர்ந்ததார் வேந்தன் மலரடியில் வீழ்ந்தாள்
அலர்ந்ததே கண்ணீ ரவற்கு.

(ப - ரை) (தமயந்தி தன்) பாதி துகிலொடு இழியும் கண்ணீரும் சீதம் களபம் தனம் சேர் மாசும் போத - (நளன் கிழித்து விட்டுப் போன) அரை யாடையோடு பெருகி யொழுகுங் கண்ணீரும் குளிர்ந்த கலவைச் சாந்து பூசுதற்குரிய கொங்கைகளிற் படிந்துள்ள அழுக்கு(ந்தன்னுடலிற் பொருந்தி) வர, (இவைகளோடு சென்று) மலர்ந்த தார் வேந்தன் மலர் அடியில் வீழ்ந்தாள்-மலர்ந்த மலர் மாலை யணிந்த நளராசனுடைய தாமரை மலர் போன்ற பாதத்தில் விழுந்து வணங்கினாள், அவன்கு கண்ணீர் அலர்ந்தது - (அப்போது) அந் நளராசனுக்குக் (கண்களிலிருந்து தாரை தாரையாய்க்) கண்ணீர் பெருகிற்று.

(க - ரை) தமயந்தி தன் பாதி ஆடையோடு கண்ணீருங்கம் பலையுமாய்ச் சென்று நளமகாராசன் திருவடிகளில் விழுந்து வணங்கினாள். அது கண் டவன் கண்களிலிருந்து தாரை தாரையாய்க் கண்ணீர் பெருகிற்று.

(வி - ரை) வனத்தில் நளன் தமயந்தியின் ஆடையைச் சரி
பாதியாய்க் கிழித்துக்கொண்டு போய்விட்டானென்பது தோன்
றவே பாதித் துகிலோடு என்றார். 'அந்தோ! இத்தனை நாள் பிரிந்
திருக்க நேர்ந்ததே' யென்னும் ஆற்றாமையால் அழுதாள் என்பது
விளங்கவே பாய்ந்திழியுங் கண்ணீரும் என்றார். அதுமுதல் அவன்
கண்ணீரிற் குளிப்பதும் யார் கண்ணுக்கும் அகப்படாமல் ஒளிப்
பதும் அன்றித் தண்ணீரிற் குளிப்பதும் களபமணிந்து களிப்பது
மற்றாள் என்பது தெரியவே சிதக்களபதனஞ் சேர் மாசும்
என்றார். மாராப்பு கச்சு முதலிய மூடிக்குள் மறைந்திருக்
குந் தனமே மாசு சேர்ந்திருந்த தெனில் மற்றை அங்கங்கள்
அது மூடியிருந்தன வென்பது சொல்லாமலே அமையும். போத-
புகுத வென்பதன் மரூஉ. ஏ-அசை. கண்ணீருங் கம்பலையுமாய் என்
பது போல, கண்ணீரும் மாசும் போத என்றது தமிழ் மொழி
ஒழுங்கு. (௭௬)

[தூக்கத்தில் ஒன்றியாய் விட்டுப் போனவரை நீ பார்க்கப் படாதென்பது போலத் தமயந்தியின் கண்கள் நீரால் மறைத்தன வெனல்.]

வெவ்விடத்தோ டொக்கும் விழியிரண்டும் வீழ்துயில்
அவ்விடத்தே நீத்த வவரென்றே—இவ்விடத்தே [கொள்
வாரார் முலையாளம் மன்னவனைக் காணாமல்
நீரான் மறைத்தனவே நின்று.

(ப - ரை) வெம்மை விடத்தோடு ஒக்கும் விழி இரண்டும் -
கொடுமையாகிய நஞ்சோ டொத்திருக்கும் (தமயந்தியின்) கண்க
ளிரண்டும், வீழ் துயில் கொள் அ இடத்து நீத்த அவர் என்றே -
சோர்ந்துறக்கங் கொண்டிருந்த அந்தப் பாழ் மண்டபத்தில் ஒன்றி
யாய் விட்டுப்போன அவரே (இவரென்று), இ இடத்து வார் ஆர்
முலையாள் அ மன்னவனை காணாமல் நின்று நீரால் மறைத்தன -
இந்த வீமன் மாளிகையில் கச்சணிந்த முலையாளாகிய தமயந்தி அந்

நளராசனைக் காணாதபடி (இடையூறாய்) நின்று நீரால் மறைத்து விட்டன.

(க - ரை) தமயந்தியின் விழிகளிரண்டும், நல்ல தூக்கத்தில் அந்தப் பாழ் மண்டபத்தில் தம் மனைவியை ஒன்றியாய் விட்டுப் போன அவரே இவரல்லவா! என்று, இந்த வீமன் மாளிகையில் அந்நளராசனை அவள் காணாதபடி தடுத்து நீரால் மறைத்தன.

(வி - ரை) 'கண்டா ருயிருண்ணுந் தோற்றத்தாற் பெண்டகைப் பேதைக்கமர்த்தன கண்' என்பதனால் வெவ்விடத்தோ டொக்கும் விழி யென்றார். "நல்ல நித்திரையில் தம் மனைவியைத் தனியே தவிக்க விட்டுப் போன தயாளபுருஷர் இவரல்லவா! என்று தமயந்தியின் கண்க ளிரண்டும் நளனை யவள் காணாதபடி மறைத்தன" என்றதனால், பிரிந்த நளனைக் கண்ட தமயந்திக்குத் துக்க மிகுதியால் கண்ணீ ராறாய்ப் பெருகிற் றென்பது வெளிப் படைப் பொருள். இதைப் புகழேந்தியார் தற்குறிப்பணியாக விழி களே நீரால் மறைத்தன வென்று வேடிக்கையாய்ப் பாடுகிறார். நளன் செய்த காரியத்திற்கு வேறொருத்தியானால், அவனைக் கண் ணெடுத்துப் பார்க்கவும் கூசியிருப்பா ளென்பது உண்மைதான். இவ்வுண்மையைப் புகழேந்தியார் தாமே சொல்லாமல் விழிகள் மேல் ஏற்றினா ரென்க. ஏகாரம் நான்கில் தேற்றமாகிய இரண் டாவது தவிர மற்றவை அசைகள். ஒப்புப் பொருளுக்கு ஓடுருபு மயங்கிற்று. (எ௫)

[உத்தமரில் நளனை ஒப்பார் ஒருவருமில்லை யென்று தேவர்கள் பூமாரி பொழிந்தா ரெனல்.]

உத்தமரில் மற்றிவனை யொப்பா ரொருவரில்லை [த்தின்
இத்தலத்தி லென்றிமையோ ரெம்மருங்குங்—கைத்தல
தேமாரி பெய்யுந் திருமலர்த்தார் வேந்தன்மேல்
பூமாரி பெய்தார் புகழ்ந்து.

(ப - ரை) இமையோர்-தேவர்கள், இ தலத்தில் உத்தமரில் இவனை ஒப்பார் ஒருவர் இல்லை என்று புகழ்ந்து - இந்நிலவுலகி லுள்ள மேன்மக்களுக்குள் இந்நளனைப் போன்றவர் யாரும் இல ரென்று கொண்டாடி, தேன் மாரி பெய்யும் திரு மலர்த் தார் வேந்தன் மேல்-தேனை மழையைப் போலப் பொழிகின்ற அழகான பூ மாலையணிந்த அரசனாகிய அந்நளன்மேல், கை தலத்தின் பூ மாரி எ மருங்கும் பெய்தார் - (தத்தம்) கைகளினால் மலர் மழையை எல் லாப் பக்கங்களிலும் பொழிந்தார்கள்.

(க - ரை) தேவர்கள், "இவனே உத்தமன்! இவனை ஒப்பார் இந்நிலவுலகில் எவருமிலர்" என்று நளனைப் புகழ்ந்தபடியே தந் தங் கரங்களினாற் கற்பக மலர் மழை பொழிந்தார்கள்.

(வி - ரை) உத்தமர் - பொய்யா விரதியர்-பொய் பேசா வா சகர் - சத்திரவிரதர் — உயர்ந்தோர் - மேலோர் - மேன் மக்கள் - சான்றோர் - நல்லோர். மற்று-அசைநிலை. இலை-இல்லை யென்பத னிடைக்குறை-தொகுத்தல். ஒருவரும் என்பதில் முற்றுப்பொரு டரும் உம்மை தொகுத்தல். இமையோர் இமையாதவர் என்னும் எதிர் மறையின் உடன்பாட்டு மங்கலவழக்கு. தாலி அறுகிற்று என்பது பெருகிற்று என்று வழங்குவது போல கைத்தலத்தில் என்றும் பாடம் படிப்பாருமுளர். கைத்தலத்தில் என்றும பாடம் படிப்பாருளர். கைத்தலத்தின் மூன்றன் கருவிப் பொருட்டு. தேன் + மாரி - தேமாரி. திரு. அழகு, மேன் மையுமாம். தார்வேந்தன்-இரண்டன்றொகை. பூமாரி-பூவாகியமாரி, பூவாலாகிய மாரி, பூவையுடைய மாரி எனை விரியும். அரிச்சந்திரன் தன் மனைவியை மனமொப்பி வேதியனுக்கு விற்றுப் பிரிந்தான்; நள னப்படியன்று; தன் மன மொவ்வாமலே அவன் உறங்குகையில் புடைவையை கிழித்துக்கொண்டு பிரிந்து போனான் என்பதை ஓர்க. (எக)

[கலிபுருடன், நள னாட்சியையும் தமயந்தியின் மாட்சி யையும் வியந்து, "வரங் கேட்டுக்கொள்க" என்று னெனல்.]

தேவியிவள் கற்புக்குஞ் செங்கோன் முறைமைக்கும்
பூவுலகி லொப்பாயார் போதுவார்—காவலனே
மற்றென்பால் வேண்டும் வரங்கேட்டுக் கொள்ளென்றான்
முற்றன்பாற் பாரளிப்பான் முன்.

(ப - ரை) (கலிபுருடன்) முற்று அன்பால் பார் அளிப்பான் முன் - நிறைந்த தண்ணியால் மன்னுயிரைக் காக்கும் இயல்புள்ள நளராசற் கெதிரில் (தோன்றி), காவலனே - ஏ, அரசனே! தேவி இவள் கற்புக்கும் (உன்) செம்மை கோல் முறைமைக்கும் - உன் மனைவியாகிய இவளுடைய கற்பின் பொற்புக்கும் உனது ஆட்சி யின் ஒழுங்குக்கும், ஒப்பு ஆக பூ உலகில் போதுவார் யார்-ஈடாக இந்நிலவுலகில் இனி வருபவர் எவர்? (ஒருவருமிலர் என்றபடி), என்பால் வேண்டும் வரம் கேட்டுக்கொள் என்றான் - (ஆகையால்) என்னிடத்தில் நீ விரும்பும் வரத்தைக் கேட்டுப் பெற்றுக்கொள் என்றான்.

(க - ரை) கலிபுருடன் நள னெதிரிற் றோன்றி, "அரசனே! உன் மனைவியின் மாட்சிக்கும் உன்னுடைய ஆட்சிக்கும் ஒப்பாவார் எவரு மிலர். ஆகையால் என்பால் நீ வேண்டும் வரங் கேட்டுக் கொள்" என்றான்.

(வி - ரை) தேவியிவள் - இருபெயரொட்டு ; இரண்டா வது சுட்டு. நான்கனுருபு ஒப்புப் பொருட்டு. செம்மை + கோல்- செம்மையாகிய கோல் - பண்புத்தொகை; அன்மொழித்தொகைக் காரணப் பொருட்டு; இருபெயரொட் டாகுபெயரெனினுமாம். செம்மையாகிய கோல் போலக்குடிகளை ஆளும் ஆட்சி. ஒப்பாயார் போதுவார் என்றதை முக்காலத்துங் கொள்க. கேட்டுக் கொள்

என்பதிற் கொள் என்பதைத் தற்பொருட் டென்பாரு முளர். போதுவார்-புகுதுவா ரென்பதன் மரூஉ. காவலன்-காவல் + அன் என்றும், கா + வலன் என்றும் இரு விதமாய் விரியும். ஒப்பு—ஒப்புடையார்க் காகுபெய ரெனினுமாம். ஆக வென்பது ஆ வெனக் கடை குறைந்தது. கேட்டுக் கொள்ளாய் என்பது கேட்டுக்கொள் ளென்றுகடை குறைந்தது. கேட்டுக்கொள்க எனினுமாம். (எஎ)

[கலிபுருடனை நோக்கி நளன், "ஐயனே! கலியுகத்திலும் என் கதையைக் கேட்டாரை நீ யடையற்க" என்று வரங் கேட்டா னெனல்.]

உன்சரிதஞ் செல்ல வுலகாளுங் காலத்தும்
மின்சொரியும் வேலாய் மிகவிரும்பி—என்சரிதங்
கேட்டாரை நீயடையே லென்றான் கிளர்மணிப்பூண்
வாட்டானை மன்னன் மதித்து.

(ப-ரை) கிளர் மணி பூண் வாள் தானை மன்னன் மதித்து- ஒளிவீசும் கற்களிழைத்த கலன்களையும் வாளாயுத மேந்திய சேனையையு முடைய நளமகாராசன் (கலிபுருடன் பேச்சை உயர்வாக) எண்ணி, மின் சொரியும் வேலாய் - ஒளிவீசும் வேலாயுத மேந்திய கலிபுருடனே!, உன் சரிதம் செல்ல உலகு ஆளும் காலத்தும்-உன் ஆட்சி (முட்டின்றி) நடக்க நீ இவ்வுலகை ஆளும் கலிகாலத்திலும், என் சரிதம் மிக விரும்பி கேட்டாரை நீ அடையேல் என்றான்- என் கதையை மிகவும் விருப்பமாய்க் கேட்டவர்களை நீ சேராதே என்று வரங் கேட்டான்.

(க-ரை) நளன் கலிபுருடனை நோக்கி, "ஐயனே, எனக்கு மற்றொரு வரமும் வேண்டா, உன் யுகமாகிய கலியுகத்திலும் என் கதை கேட்டாரை நீ சேர்ந்து வாட்டாதை" என்று வரங் கேட்டான்.

(வி-ரை) சரிதம்-இங்கு ஆட்சிக் காகுபெயர். செல்ல-தவறாது நடக்க. உன் சரிதஞ் சொல்லி யென்று பாடம் படிப்பாரு

மூனர். உன் சரிதம் சொல்ல-உன் ஆட்சியைப் புகழ என்று பொ ருள் கொள்க. சொல்லி யென்பதை இயும் செயவெ னெச்சத்தி லேயே சேர்த்துக்கொள்க. உன் சரிதஞ் செல்ல வுலகாளுங் காலப் கலியுகமாம். -நளன் கதை துவாபரயுகத்தில் நடந்த தென்பது நம் மவர் கொள்கை. ஆனல் ஐயாயிர மாண்டுகளுக் கப்புறத்ததாகி றது. கலிபுருடனையும் கடவுளாகவும் அவன் நளனிடத்திற் பேசி னதாகவு நம்பவேண்டியதாகிறது. எப்படியோ? துவாபரத்தி லன் றிக் கலியிலு மென்பதனுல் உம்மை யெச்சம். கேட்டாரையே கலி பற்று தென்றால் என்னைப்போ லெழுதினுரையும் எழுதுவித் தாரையும் படித்தாரையும் பிடித் தது வருத்தா தென்பது சொல் லாமலே அமைந்தது.

[“கலியுகத்தில் உன் சரிதங் கேட்டாரை நான் வாட்டேன்” என்று வரங்கொடுத்துப் போனுன் கலிபுருட னெனல்.]

என்காலத் துன்சரிதங் கேட்டாரை யானடையேன்
மின்கா லயில்வேலாய் மெய்யென்று—நன்காவி
மட்டிறைக்குஞ் சோலை வளநாடன் முன்னின்று
கட்டுரைத்துப் போனுன் கலி.

(ப - ரை) கலி - கலிபுருடன், நன்மை காவி மட்டு இறைக் கும் சோலை வளம் நாடன் முன் நின்று-நறுமணமுள்ள நீலோற்பல மலர்கள் (தம்மிடத்துள்ள) தேனை (மடைதிறந்து) பாய்ச்சுகின்ற பூங்காவன வள மிருந்த நிடத நாட்டரசனுகிய நளனெதிரில் நின்று, மின் கால் அயில் வேலாய் - ஒளி வீசும் கூரிய வேலாயுத மேந்திய அரசனே, என் காலத்து உன் சரிதம் கேட்டாரை யான் அடை யேன் - என் (ஆட்சி) காலமாகிய கலியுகத்தில் உன்னுடைய (நல்லொழுக்க மிக்க உண்மைக்) கதையை (விரும்பி)க் கேட்டாரை நான் சேர்ந்து வாட்டேன், (இது) மெய் என்று கட்டுரைத்து போனுன் - (இச் சொல்) உண்மையான தென்று உறுதியாகச் சொல்லிப் போனான்.

(க - ரை) "நள மகாராசனே! எனக் குகந்த கலியுகத்திலும் உன்னுடைய உத்தம சரித்திரத்தை விரும்பிக் கேட்டாரை யான் சேர்ந்து வாட்டேன். இது உண்மையாம்" என்று வரங்கொடுத் துப் போனான் கலிபுருடன்.

(வி - ரை) கேட்டாரையே அடையேன் என்றதனால் எழுதி னாரையும் படித்தாரையும் எழுதுவித்தாரையும் அடையாமையைப் பற்றி ஐயமில்லை யென்றறிக. நன்மை + காவி - பண்புத்தொகை. நன்மை-வ்ளமு மணமு மென்க. கட்டுரைத்தல்-உறுதியாய்க்கூறல். கலி போனா னென்றதனால் அவனுக்கு உருவங் கற்பித்தபடி இடமும் கற்பித்தார். எங்கிருந்து வந்தான் எங்குப் போனா னென்பது விளங்காதேனும் நம்மவர்க்கு நம்பிக்கை மட்டும் உண்டு. நன்காவி- நன்கு + ஆவி யெனப் பிரித்துப் பொருளுரைப்பாரு முளர். நீலோற் பலம் நீர்ப்பூ வாகையால் சோலைக் குளத்தன வென்றறிக. (எக)

[மக்களுடன் நள தமயந்தியரை அழைத்துக்கொண்டு போய் விருந்திட்டான் விதர்ப்ப னெனல்.]

வேத நெறிவழுவா வேந்தனையும் பூந்தடங்கட்
கோதையையு மக்களையுங் கொண்டுபோய்த்—தாது
புதையத்தேன் பாய்ந்தொழுகும் பூஞ்சோலை வேலி
விதையக்கோன் செய்தான் விருந்து.

(ப - ரை) தாது புதைய தேன் பாய்ந்து ஒழுகும் பூ சோலை வேலி விதையம் கோன் - மகரந்தப் பொடிகள் மறைந்துபோம்படி தேனானது பெருகி ஓடுகின்ற மலர்ச்சோலைகளாகிய வேலி சூழ்ந்த விதர்ப்ப நாட்டரசனாகிய வீமன், வேதம் நெறி வழுவாத வேந்தனை யும் பூ தடம் கண் கோதையையும் மக்களையும்-வேதவிதியைத் தப்பி நடவாத நளனையும் தாமரைப் பூபோன்ற பெரிய கண்களை யுடைய தமயந்தியையும் (அவ்விருவருடைய) பிள்ளைகளையும், கொண்டுபோய் விருந்து செய்தான்-(மடைப்பள்ளியிலிருந் தரண் மனைக்கு) அழைத்துக்கொண்டுபோய் விருந்து செய்தான்.

(க - ரை) வீமன், நளனையுந் தமயந்தியையு மக்களையும் அரண்மனைக் கழைத்துக் கொண்டுபோய் விருந்து செய்தான்.

(வி - ரை) வேத நெறி வழுவா வேந்த னென்றதனுனே நளன் அரசர்க்குரிய அறு தொழிலையும் அருத்தொழிலாச் செய்து வந்தா னென்பது பெற்ரும். ஓதல் ஓதுவித்தல் வேட்டல் வேட்பித்தல் ஈதல் போர்க்குப் போதல் முதலியவைகளே அரசாறுதொழிலாகும். பூவெனப்படுவது பொறிவாழ் பூவே என்பதனுனு பூவினுக் கருங்கலம் பொங்குதாமரை யென்பதனுனுமே பூவெனறதைத் தாமரை யென்ரும். கமலமலர்வதனீ கட்கமல வல்லீ யென்ருர் பிறரும். விருந்து - புதுமைப் பண்பாகுபெயராய் உணவிடல் முதலிய அன்புக்காயிற்று. மகரந்த மறையும்படி மிகுதியாகத்தேன் பொழியு மென்றதனுல் சோலை வளப்பத்தைக் குறித்தது. விதையம்-விதர்ப்பமென்னும் வடமொழித் திரிபு. விதர்ப்பன் தன் மகிழ்ச்சிக் கடையாளமாய் விருந்தூட்டினு னென்க. பூ-முதனிலைத் தொழிற்பெயர். (அ0)

[இருதுபன்னன் நளனை மன்னிப்புக் கேட்டு, வெறுந் தேரேறித் தன் னுட்டுக்குப் போனு னெனல்.]

உன்னையா னென்று முணரா துரைத்தவெலாம்
பொன்னமரு மார்ப பொறுவென்று—பின்னைத் தன்
மேனீர்மை குன்ற வெறுந்தேர் மிசைக்கொண்டான்
மானீ ரயோத்தியார் மன்.

(ப - ரை) மால் நீர் அயோத்தியார் மன் - சிறந்த நீர்வளமுள்ள அயோத்தி நகரத்தார்க்கரசனுகிய இருதுபன்னன், (நளனை நோக்கி) பொன் அமரும் மார்ப - திருமகள் வாழு மார்பையுடையானே!, யான் ஒன்றும் உணராது உன்னை உரைத்த எல்லாம் பொறு என்று - நான் ஒரு சிறிதும் தெரிந்துகொள்ளாமல் உன்னைப்பற்றிப் பேசின இழி சொற்களை யெல்லாம் பொறுத்துக் கொள்ள வெண்டும் என்று, பின்னை தன் மேல் நீர்மை குன்ற வெறுமை தேர்மிசைக் கொண்டான் - பிறகு (தான் இரண்டாஞ் சுயம்வர மென்று வந்து எய்ப்புண்டமையால்) தன்னுடைய வெளிப் பகட்டுத் தோற்ற மெல்லாம் ஒடுங்கி (த்தமயந்தி யில்லாத தன்னுடைய) வெறுமையாகிய தேர்மே லேறிச் சென்ருன்.

(க - ரை) இருதுபன்னன் நளனை நோக்கி; "ஐயனே! உன்னை இன்னானென் றுணராமல் நான் சொன்ன இழி சொற்களைப் பொறுத்துக்கொள்" என்று (தமயந்தியின்றி) வெறுந் தேரேறிப் போனான்.

(வி - ரை) ஒன்றும் - கொஞ்சமேனும். பொன்னமருந்தாராய் என்றும் பாடம் படிப்பாரு முளர்; திருமகள் பொருந்திய மாலையுடையானே என்பது பொருள். மேல் + நீர்மை - மேன்மை யெனப் பொருள் கோடலுமாம்-மேன்மை யென்பது நளனுக்குத் தலைவனுந் தன்மை. குன்றா என்பதை யெதிர்மறை யெச்சமாக்கி மேன்மைக் குண மாறாமல் எனினுமாம். நளனை வணங்கி மன்னிப்புக் கேட்டுக்கொண்டமையால் இருதுபன்னன் தன் மேன்மைக் குண மாறா னாயினா னென்க. இரண்டாம் சுயம்வரத்தில் தமயந்தியை யெப்படியேனுந் தன் மனைவியாய்ப் பெற்றுக்கொண்டு போகலா மென் றெண்ணி வந்தங்ஙனம் பெறாமையால் இருதுபன்னன் வெறுந்தேர்மிசைக் கொண்டா னென்றார். (௮௧)

[நளன் தன் மனைவி மக்களோடு தேரேறிச் சேனை சூழ நிடத நாட்டுக்குப் போனா னெனல்.]

விற்றானை முன்செல்ல வேல்வேந்தர் பின்செல்லப்
பொற்றேர்மேற் றேவியொடும் போயினான்—முற்றாம்பற்
றேனீ ரளித்தருகு செந்நெற் கதிர்விளைக்கு
மாநீர் நிடதத்தார் மன்.

(ப - ரை) முற்று ஆம்பல் தேன் நீர் அளித்து அருகு செம்மை நெல் பயிர் விளைக்கும் மா நீர் நிடதத்தார் மன்-முறும்பருவ நிரம்பிய ஆம்பற் பூக்களிலிருந் (தொழுகும்) தேனாகிய நீரைப் பாய்ச்சி (த் தன்) அருகிலுள்ள செந்நெற் பயிரை விளைக்கு மிகுதியான நீர்வளம் பொருந்திய நிடத நாட்டாருடைய அரசனாகிய நளன், வில் தானை முன் செல்ல வேல் வேந்தர் பின் செல்ல-வில்லாயுத மேந்திய படைவீரர் முன்னே போகவும் வேலாயுத மேந்திய அரசர்கள் பின்னே வரவும், பொன் தேர் மேல் தேவியொடும் போயினான் - தங்கமுலாம் பூசின அழகான தேர் மேலேறி மனைவியோடு சென்றான்.

(க - ரை) வில் வீரர் முன்னே செல்லவும் வேலரசர் பின்னே வரவும் நளனொரு பொற்றேரேறித் தன் மனைவி மக்களோடு விடத நாட்டுக்குப் போனான்.

(வி - ரை) பொன் + தேர்-பொன்னாற் செய்த தேரென்பாரு முளர். தேரைப் பொன்னாற் செய்தால் உருளையை யெதனாற் செய்வதென்றும் விளங்க வில்லை. அத்தனை பளுவான தேரை வலிக்க எத்தனை பெரிய குதிரைக ளெத்தனை வேண்டும் என்பதும் அத்தனைக்கும் சாரதி ஒருவன் போதுமா என்பதூஉம் இறும்பூதுடையனவா மாகலான் தங்கமுலாம் பூசின தேரென்றும். மூற்றாம்பல் - போதாம்பல்-ஆம்பலின் தேன் மிகுதியால் நீர்வளத் தகுதி வெளியாயிற் றென்க. தேன் + நீர் - இருபெயரொட்டு. மா + நீர் இதை மால் + நீர்-மானீர் என்னும் சென்ற செய்யுட் டொடரோடு பொருத்திக் காண்க. ஆம்பல் + தேன் - ஆம்பலினது தேன் என் றன்மொருகை யாக்கினுமாம். ஆம்பலான தேனைப் பாய்ச்சி யென்று எழுவாய்த் தொடராக்கி யிடரெய்துவாரு முளர். (அஉ)

['இன்னு மெத்தனை தூரம்' என்ற தமயந்திக்கு நளன், "இந்த மலை கடந் தேழு மலைக் கப்புறத்தில் நம் விந்த நகர் இருக்கிறது" என்று னெனல்.]

தானவரை வெல்லத் தரித்தநெடு வைவேலாய்
ஏனைநெறித் தூர மினி யெத்தனையோ—மானேகேள்
இந்த மலைகடந் தேழுமலைக் கப்புறமா
விந்தமெனு நம்பதிதான் மிக்கு.

(ப - ரை) (தமயந்தி நளனை நோக்கி) தானவரை வெல்ல தரித்த நெடுமை கை வேலாய் - அரக்கரை அழிக்க ஏந்திய நீண்ட கூரிய வேலாயுத முடையாய்!, ஏனை நெறி தூரம் இனி எத்தனை ஒ-மற்ற வழியின் தூரம், இன்னும் எத்தனை காதம் இருக்கிறதோ? (என்று கேட்டாள்), (அதற் கவன்) மானே கேள் - மான் போன்ற கண்ணியே கேளாய், இந்த மலை கடந்து ஏழு மலைக்கு அப்புறம் மாவிந்தம் என்னும் நம் பதி மிக்கு (உள்ளது) - இதோ தெரிகிற இந்தப் பெருமலையைத் தாண்டி அதற்கு அப்பாலுள்ள ஏழு மலை

லையுங் கடந்து அந்தப் புறத்தில் நம் மாவிந்த மென்னும் நகரஞ் சிறந்து விளங்குகிறது (என்றான்).

(க - ரை) நளனை நோக்கித் தமயந்தி, "தானவரை வென்று வானவரைக் காக்க வைத்த வேலோய்! இன்னு நமது நகரம் எத்தனை காதம்?" என்றாள்; அதற்கவன், "மானே! இதோ இவ்வொரு மலைக் கப்பால் ஏழு மலைக் கப்புறத்தி லிருக்கிறது நம் மாவிந்த நகர" மென்றான்.

(வி - ரை) நளன் சொன்னதில் சுருக்கச் சொல்லி விளங்க வைத்த விருப்ப தறிக. நளனும் இராமனைப் போலவே தானவ ரைக் கொன்று வானவரையு மானவரையுங் காத்தமை எண்ணற் பாற்று. இப்படி நம்மவர் தானவரை யென்றது தற்போதுள்ளார் எவரைக் குறிக்குமோ அறியேம். இந்தத் தானவரு மானவரைப் போலவே வேதியனிடத்திற் பிறந்தா ரென்பர் வீண் மத விற்பனர். எத்தனை யென்பது காதத்துக் காகுபெயர். தான்-அசைநிலை. தனு என்பவளுடைய புத்திரர் தானவர் தத்திதாந்தம் என்பர். ஒரு தனு என்பவள் எத்தனைதான் தானவ ரென்னு மக்களை ஈன்ற னளோ அறியேம். ஒருத்தி வயிற்றில் ஒரு கோடி பிள்ளைகளா பிறப்பார்கள்! ஓ-வினு வெனினும் வியப்பெனினு மொக்கும். மான் போன்ற கன்னியை மான் என்ற தாகுபெயர். (௮௩)

[நளன் தன்னுட்டிற் றங்குவதைக் காண விரும்பி வரு பவன் போலச் சூரியன் உதயகிரியி லேறினு னெனல்.]

இக்கங்குல் போக விகல்வே னளனெறிநீர்
செய்க்கங்கு பாயுந் திருநாடு—புக்கங்
கிருக்குமா காண்பான்போ லேறினான் குன்றில்
செருக்குமான் றேர்வெய் யோன் சென்று.

(ப - ரை) இகல் வேல் நளன் - வீர வேலேந்திய நளராசன், எறி நீர் செய்க்கு பாயும் திருநாடு புக்கு - அலைவீசும் ஆற்று நீர் முதலியவைகள் கழனிகட்குப் பாயும் வளமுள்ள (தன்) விடநாட் டிற் புகுந்து, அங்கு இ கங்குல் போக இருக்கும் ஆறு காண்பான் போல்-அவ்விடத்தில் இன்றிரவு கழியும்படி தங்கியிருக்குந் தன்

மையைப் பார்க்க வருபவன் போல, செருக்கும் மான் தேர் வெ
யோன் சென்று குன்றில் எறினன் - விரைந்தோடுங் குதிரைக
பூட்டிய ஒற்றை யுருளைத் தேரையுடைய சூரியபகவான் போ
(க்கிழக்கு) மலையில் ஏறினன்.

(க - ரை) நளன் தனது நிடத நாட்டிற் புகுந் தங் கிரா
தங்கி யிருப்பதைக் காண வருபவன் போலச் சூரியபகவான் தன
ஒற்றை யுருளைத் தேரிற் போய்க் கிழக்கு மலையி லேறினன்.

(வி - ரை) சூரியன் தேர்க்கு ஒரே உருளையாம். அது ம
தியரேகை யென்னும் ஒற்றைப் பாதைமேல் அசையா தோடுகி
தாம். அவன் குதிரைகள் பச்சைக் குதிரைகளாம். அருணனெ
போன் அவன் தேர்ச்சாரதியாம். கிழக்கு மலையே அவன் தே
புறப்படும் இடமாம். இவைகளெல்லாம் புராணத்தார் கொள்கை
களாம். இக் கங்குல் என்பது 'அங்கு அக்கங்குல்' என்றிருத்தல்
தக்கது. முதலா மந்த அசை யென வகற்றுக. அதைஇயு
பொருள்கொண்டு சேர்ப்பா ருளர். போல்-தற்குறிப்பு. செய்+
கங்கு எனப் பிரித்து கழனி வரப் பெனினுமாம். கங்கு-கரை. ஆ
என்பது ஆ வெனத் தொக்கது. செருக்கும்-வேகமிகுதியால் இற
மாக்கு மெனினுமாம். வெம்மை + ஒன்-வெய்யோன் - வெம்மை
யாகிய கிரணமுடையோன். எறினீர்-வினைத்தொகை. ஓரிரவு நாட்
டெல்லையிற் றங்கி மறுநாள் நகரத்துக்குள் நுழைந்தானள னென்க.

[நாட்டெல்லையிலிருந்து நளன் தன் மனைவி மக்களோடு தேரே
றிச் சென்று, மாவிந்தஞ் சேர்ந்தா னெனல்.]

மன்றலிளங் கோதையொடு மக்களுந் தானுமொரு
வென்றி மணிநெடுந்தேர் மேலேறிச்—சென்றடைந்தான்
மாவிந்த மென்னும் வளநகரஞ் சூழ்ந்தவொரு
பூவிந்தை வாழும் பொழில்.

(ப - ரை) (நளன் தன்) மன்றல் இளமை கோதையொடு
மக்களும் தானும் ஒரு வென்றி நெடுமை தேர்மேல் ஏறி சென்று-
மணமுள்ள புது மலர் மாலையைச் சூடிய மனைவியாகிய தமயந்தி
யோடு பிள்ளைகளுந் தானும் ஒரு வெற்றி தரூஉம் மணிக ளொலிக்

கும் நீண்ட தேரிலேறிப்போய், மாவிந்தம் என்னும் வளம் நகரம் சூழ்ந்த பூவிந்தை வாழும் ஒரு பொழில் அடைந்தான் - (தன்னுடைய) மாவிந்த மென்னும் பெயரிய வளமுள்ள நகரத்தைச் சூழ்ந்த (சோலைகளில்) தாமரை மலரில் வீற்றிருக்குந் திருமகள் வாழ்கின்ற ஒரு சோலையைச் சேர்ந்தான்.

(க - ரை) நளன் தன் மனைவி மக்களோடு தானும் ஒரு வெற்றித் தேரேறிச் சென்று, தன் மாவிந்த நகரைச் சூழ்ந்த சோலைகளில் திருமகள் வாழும் சிறந்த வொரு சோலையைச் சேர்ந்தான்.

(வி - ரை) இளமை + கோதை-புதுமலர் மாலை. மன்றலிளங் கோதை - தமயந்திக் கன்மொழித்தொகைக் குறிப்பு. நளன் கோதையொடு மக்களுந் தானு மடைந்தான்-வழுவமைதி - தமிழ் ஒழுங்கு. இச்சோலையிருந் திவன் புட்கரனோடு சூதாடி வென்று தன்னுடு நகரைப் பெறுவா னென்பது தோன்றவே பூவிந்தைவாழும் பொழி லென்றார். பூவிலெழுந்தருளிய விந்தை ஏழன்றொகை. விந்தை யென்பதைத் திசை மொழி யாக்கி விஞ்ஞா திசயங்க ளென்பாரு முளர். சூழ்ந்த - சூழ்ந்தனவாகிய சோலைகளி லென்று பொருள்கொள நிற்பதால் வினையாலணையும் பெயர். மன்றல்-கடிமணமுமாம். கடிமணத்தாற் பெற்ற இளமையாகிய கோதை சூடியவ ளெனினுமாம். (அரு)

[தன்னிடத்திற் பந்தயப் போரு ளிருக்கிறதென்று புட்கரனுங் கறிவித் தவனை அழைத்துவரத் தூதரை ஏவினு னளனெனல்.]

மற்றவனுக் கென்வரவு சொல்லி மறுசூதுக்
குற்ற பணைய முளதென்று—கொற்றவனைக்
கொண்டணைவீ ரென்று குலத்தூ தரைவிடுத்தான்
தண்டெரியற் றேர்வேந்தன் றான்.

(ப - ரை) தண்மை தெரியல் தேர் வேந்தன் - குளிர்ச்சியாகிய மலர் மாலை யணிந்த தேரையுடைய நளராசன், கொற்றவனுக்கு என் வரவு சொல்லி மறு சூதுக்கு உற்ற பணையம் உள்ளது என்று - புட்கர ராசனுக்கு நான் வந்திருக்கும் செய்தியைத் தெரி

வித்து என்னிடத்தில் இரண்டாஞ் சூதாட்டத்துக்கு வேண்டிய பந்தயப் பொரு ளிருக்கிறதென்று சொல்லி, அவனை கொண்டு அணைவீர் என்று குலம் தூதரை விடுத்தான - அவனை அழைத்துக் கொண்டு வாருங்க ளென்று பாரம்பரையான தூதரை யனுப்பினான்.

(க - ரை) நளன் தூதரை நோக்கி, "தூதர்காள்! நீங்கள் சென்று புட்கரனைக் கண்டு, என்னிடத்தில் மறு சூதாட்டத்துக்கு வேண்டிய பந்தயப் பொரு ளிருக்கிறதென்று சொல்லி அவனை அழைத்துக் கொண்டு வாருங்கள்" என்று சொல்லி யவர்களை யனுப்பினான்.

(வி - ரை) மற்று - அசை. செய்யுளாகையால், அதற்குள்ள நயங் கருதி அவனுக்கு என்ற சுட்டு முதலில் வந்தது. ஆயினும் கொற்றவனுக்கு என்றே பதவுரையின் முதலி லெடுத்துக் கொண் டோம். இதற் கேற்பக் கொற்றவனை யென்பதை மற்றவனையென்று மாற்றிக்கொண்டாம். வரவு - தொழிற் பெயர் - வருகை. வரவு- செய்திக் காகுபெயர். மறு சூது - மறுமுறை யாடுஞ் சூது - இரண்டாஞ் சூதாட்டம். குலம் + தூதர்-குலமுறையாய்த் தூது செல் லுந் தொழிலி லீடுபட்டவர். தெரியல் - ஆகுபெயராய் மாலையை யுணர்த்திற்று. தெரியலை வேந்தற் காக்குக. தான்-அசை. மற்று என்பதை அசையா அகற்றமல் கூட்டிக்கொள்வாரு முளர். குலத் தூதர் சென்றால்தான் புட்கரனை யிசைவிப்ப ரென்பது நளன் கருத்து. (அசு)

[நளனைச் சூதில் வஞ்சித்த புட்கரன் சோலையில் வந்தவனைக் கண்டா னெனல்.]

மாய நெடுஞ்சூதில் வஞ்சித்த வன்னெஞ்சன்
தூய நறுமலர்ப்பூஞ் சோலைவாய்—ஆய
பெருந்தானை சூழப் பெடைநடையா ளோடும்
இருந்தானைக் கண்டா னெதிர்.

(ப - ரை) மாயம் நெடுமை சூதில் வஞ்சித்த வன்மை நெஞ் சன் - வஞ்சனை மிகுந்த சூதாட்டத்தில் (நளனை மயக்கி அவனு டைய நாடு நகரங்களைக்) கைப்பற்றிக்கொண்ட கன்மனப் பாவி யாகிய புட்கரன், தூய நறு மலர் பூ சோலைவாய் - நல்ல குளிர்மண

முள்ள பூக்களையுடைய அழகான சோலையில், ஆய பெருமைதானை சூழ பெடை நடையாளோடு இருந்தானை எதிர் கண்டான்-(தனக்குப்) பெருமையான படைகள் சூழ்ந்து நிற்கப் பெண்ணன்னம் போன்ற நடையழகுடையா ளாகிய தமயந்தியோடு வீற்றிருந்த நளனை நேர் முகமாகப் பார்த்தான்.

(க - ரை) முதற் சூதில் நளனை வஞ்சனையால் வென்ற புட்கரன், அந்த அழகான நந்தவனத்திற் பெருமையான படை சூழத் தமயந்தியோடு அருமையாய் வீற்றிருந்த நளனைச் சந்தித்தான்.

(வி - ரை) மாயம் + கொடுமை + சூது-கலியின் வஞ்சனையால் ஆடிய சூதாட்டம். வஞ்சித்த-மயக்கி (நாடு நகரங்களைப்) பற்றின. வன்மை + நெஞ்சு - வன்னெஞ்சு - கன்னெஞ்சு - கல்லைப் போல் வலிய மனம். தூய-தூய்மை + அ-பண்படிக் குறிப்பெச்சம். மலர் + பூ + சோலை-மலர்களையுடை பூஞ்சோலை-மலர்களையுடைய அழகான சோலை. சோலைவாய் ஏழன்விரி. ஆய-ஆகிய-பெருமையாகிய.பெருந் தானை-நாற் படை. பெடை-பறவைப் பொதுவாயினும் நடை யென்றதனால் அன்னத்திற் காயிற்று. உம் - அசை. இருந்தானை - இறந்தகால வினையாலணையும் பெயர். பெடை-நடைக் காகுபெயர். வன்னெஞ்ச னிருந்தானைக் கண்டா னென்று கூட்டிக் கொள்க.

[நல்லரசனாகிய நளனை நோக்கிப் புல்லரசனாகிய புட்கரன், "சேமந்தானே!" என்று வினவினா னெனல்]

செங்கோ லரசன் முகநோக்கித் தேர்ச்சியிலா
வெங்கோ லரசன் வினவினான்—அங்கோலக்
காவற் கொடைவேந்தே காதலற்குங் காதலிக்கும்
யாவர்க்குந் தீதிலவே யென்று.

(ப - ரை) தேர்ச்சி இல்லாத வெம்மை கோல் அரசன்-அறிவற்ற கொடுங் கோ லரசனாகிய புட்கரன், செம்மை கோல் அரசன் முகம் நோக்கி - செங்கோலரசனாகிய நளன் முகத்தை எடுத்துப் பார்த்து, அம் கோலம் காவல் கொடை வேந்தே - அழகான வடிவத்தோடு ஊராளுந்தன்மையும் ஈகைத்தன்மையும் பொருந்தியுள்ள அரசனே, காதலன்கும் காதலிக்கும் யாவர்க்கும் தீது இலவே என்று வினவினான் - கணவனாகிய உனக்கும் உன் மனைவியாகிய

தமயந்திக்கும் உன் மக்கள் முதலிய எல்லார்க்கும் தீங்குகளில்லையே என்று கேட்டான்.

(க - ரை) செங்கோலரசனாகிய நளனை நோக்கி வெங்கோலரசனாகிய புட்கரன், "அரசே! உனக்கும் உன் மனைவி மக்கட்கும் தீதொன்று மின்றே!" என்று வினவினான்.

(வி - ரை) செம்மை + கோல் - ஒழுங்காகிய கோல் - நீதி நெறியாட்சி. கோல்-ஆட்சிக் காகுபெயர். காதலன் என்பதை நளனுக் காக்கி ஒருமையாக் கொள்வதினும் காதலர் என்று நளன் மக்கட்குப் பன்மையாக் கொள்வ தேற்றமாம். காதலர்க்குங் காதலிக்கும் என்றும் பாடமோதுவாரு முளர். இதுவே சரியான பாடமாம். நளனை அவன் நகரை விட்டுத் துரத்தியவனாகையால் புட்கரனை வெங்கோலரச னென்றார். இப்போது கொஞ்சமேனும் நாணமின்றி யிவன் தீதிலவே யென்று நளனை வினவுதல் காலத்திக்குத் தக்க கோலமா மென்க. தீது-பன்மையி லொருமைப்பால் பகா வஃறிணை யாதலாற் பன்மை வினை கொண்டது. (அஅ)

[புட்கரன் "பணைய மென்ன?" என்றதற்கு, நளன் தன் கணை யாழியைக் கழற்றி வைத்தா னெனல்.]

தீது தருகலிமுன் செய்ததனை யோராதே
யாது பணைய மெனவியம்பச்—சூதாட
மையாழி யிற்றுயிலு மால்பரவி வண்மைபுனை
கையாழி வைத்தான் கழித்து.

(ப - ரை) (புட்கரன்) தீது தரு கலி முன் செய்ததனை ஓராது (எ) - கேட்டை விளைக்கின்ற சனியனாகிய கலிபுருடன் அந்தக் காலத்தில் தான் வெல்லும்படி செய்த மாயத்தை மனத்தில் எண்ணமலே, (நளனை நோக்கி) சூது ஆட யாது பணையம் என்ன இயம்ப -(நாம் இருவரும்) மறு சூதாடுதற்கு என்ன பந்தயம் என்று கேட்க, (நளன்) ஆழியில் துயிலும் மை மால்பரவி - பாற் கடலில் உறங்கும் (பரந்தாமனாகிய) கரியநிறத் திருமாலை வணங்கி, வண்மை புனை கை ஆழி கழித்து வைத்தான் - ஈகையழகைப் பூண்ட (கொடையிற் சிறந்த) வலக்கை விரன் மோதிரத்தைக் கழற்றி வைத்தான்.

(க - ரை) முன் சூதில் கலிபுருடன் மாய வலியால் தான் வென்றதை மறந்த புட்கரன், "மறு சூதுக்குப் பணயம் என்ன?" என்று நளனைக் கேட்க, அவன் திருமாலை வணங்கித் தன் கைக் கணையாழியைக் கழற்றி வைத்தான்.

(வி - ரை) மையாழியிற் றுயிலு மாலனையா னென்று பாடம் படிப்பாரு முளர். பாற்கடல் வெண்ணிற மாகவேண்டு மாகையால் மை யென்ற வடைமொழியை மாலோடு ஒட்டிப் பொருளுரைத் தாம்; • திருமால் பள்ளி கொண்டிருக்கின்றமையால் வெண்ணிறப் பாற்கடலும் கருநிறமாகத் தோன்று மென்பார் மை யென்பதை அதற்கே அடையாக்கி அரும் பொருளுறைவர். கண்ணுக் கணிகலங் கண்ணோட்டங் காமுற்ற பெண்ணுக் கணிகலங் கற்புடைமை, நண்ணு, மறுமைக் கணிகலலங் கல்வி யென்பது போல ஒருவன் கைக் கணி கலம் ஈகை யென்பார் வண்மை புனை கை யென்று நளன் வலக் கையைப் புகழ்ந்தார் புகழேந்தியர். பாராய் - இறந்தகால வினை யெச்சம், பார-பகுதி. பாராய்-பாவி - பழிச்சி - வணங்கி - துதித்து.

[ஒரே ஆட்டத்தில், தன் னருகிருந்த மன்னர் வியக்கத் தன் ஞடு நகரங்களை வென்று ளள னெனல்.]

அப்பலகை யொன்றி னருகிருந்தார் தாமதிக்கச்
செப்பரிய செல்வத் திருநகரும் — ஒப்பரிய
வன்றானை யோடு வளநாடும் வஞ்சனையால்
வென்றானை வென்றானவ் வேந்து.

(ப - ரை) அ பலகை ஒன்றின் - அந்த (சொற்கேட்டான்) பலகையாட்டம் ஒன்றிலேயே (ஒரே ஆட்டத்தில்), அருகு இருந் தார் மதிக்க-தன் பக்கத்திலிருந்த மன்னர் பலரும் நன்கு மதிக்கும் படி, செப்பு அரிய செல்வம் திரு நகரும் ஒப்பு அரிய வன்மை தானையோடு வளம் நாடும் - புகழ்தற்கருமையான செல்வ மிகுந்த சிறந்த தன் னகரத்தையும் இணை இல்லாத வலி மிக்க சேனையோடு தண்ணீர்வளமுள்ள தன்னாட்டையும், வஞ்சனையால் வென்றானை- (முன்பு)மாயச்சூதால் வென்றவனாகிய புட்கரனை, அ வேந்து வென் றான் - அந்நள மகாராசன் வென்றான்.

(க - ரை) ஒரே ஆட்டத்தில், தன் பக்கத்திருந்த மன்னர் பலரும் வியக்கும்படி, தன் னகரமாகிய மாவிந்தத்தையும் சேனை

யோடு நாடாகிய நிடதத்தையும் முதற் சூதில் வென்ற புட்கரனை நளன் மறு சூதில் வென்றான்,

(வி - ரை) பலகை-ஆட்டத்துக் காகுபெயர். அருகிருந்தார் + தாம் + மதிக்க, எனப் பிரித்துத் தாம் என்பதை அசையாக அகற்று வதினும், தாமதிக்க வென்றே பிரித்து, தாமதித்திருக்க - அங் கிருந்தார் தங்கிப் பார்த்துக்கொண்டிருக்கையிலேயே எப்படியோ ஒரு கண நேரத்தில் ஒரே ஆட்டத்தில் நளன் வென்றானென்றும் பொருள் படுவது காண்க. செப்பு - புகழ் - சொல்-சொல்லுதல். செப்பரிய - சொல்லரிய, சொல்லமுடியாத எனினுமாம். ஒப்பு + அரிய - ஈடில்லாத (வன்மை)-இணையற்ற வல்லமை. தானை - படை. செப்பு - இசை சொல், முதனிலை வினைப்பெயர். செப்ப லரிய எனின் எழுவாய்த் தொடர். செப்பற்கு அரிய எனின் நான் கன்றொகை. செப்பலரும் என்றார் உமாபதி புராண சாரத்தில்.

[நளனுக்கு நாடு நகரங்களைக் கொடுத்துப் புட்கரன், தான் வந்த வழியே திரும்பிப் போய்விட்டானெனல்.]

அந்த வளநாடு மவ்வரசு மாங்கொழிய
வந்த படியே வழிக்கொண்டான்—செந்தமிழோர்
நாவேய்ந்த சொல்லா னளனென்று போற்றிசைக்குங்
கோவேந்தற் கெல்லாங் கொடுத்து.

(ப - ரை) அந்த வளம் நாடும் அ அரசும் ஆங்கு ஒழிய-அந்த நீர்வளமுள்ள நிடதநாடும் அதன் ஆட்சியும் அச்சூதாட்டத்தில் ஒழி ந்துபோகும்படி, செம்மை தமிழோர் நா வய்ந்த சொல்லான் - செந் தமிழ்ப் புலவர்தம் நாவிற் பொருந்திய சொற்சுவை மிகுந்த பாக்க ளால், நளன் என்று போற்று இசைக்கும் - நளராசனென்று வாழ்த் துக் கூறுகின்ற, கோவேந்தற்கு எல்லாம் கொடுத்து — மன்னர் மன்னனாகிய நளனுக்கு எல்லாச் செல்வங்களையும் (மறு சூதிற் றோ ற்று) விட்டு, வந்தபடியே வழிக்கொண்டான் - (புட்கரன் வெறுங் கையோடு) தான் வந்த விதமே திரும்பிப் போய்விட்டான்.

(க - ரை) நிடத நாடு நகர முதலியவற்றை நளனுக்கு மறு சூதில் தோற்ற புட்கரன், தான் வெறுங் கையோடு வந்தபடியே திரும்பித் தன் னூர்க்குப் போய்விட்டான்.

(வி - ரை) அந்த - சுட்டுத்திரிபு. அவ்வளவாம். அரசு - ஆட்சிக் காயிற்று. ஆங்கு-மறுகுதைக் குறித்தது-இதை அசையா அகற்று நருமுளர். தான் எறிவந்த எருதன்றி வேறு பொருளின்றி வெறுங் கையோடு வந்தான் புட்கரனென்பது தோன்றவே வந்த படியே யென்றார். வழிக்கொண்டான்-தான் வந்த வழியைப் பார்த் துக் கொண்டு திரும்பிப் போய் விட்டானெனினுமாம். கா + வேய்ந்த எனப்பிரித்து காவாற் புனைந்த எனினுமாம். சொல்-பாவுக் காகுபெயர். போற்றி + இசைக்கும் என்பது மொன்று. போற்று-முதனிலை வினைப்பெயர். பூட்டு என்புழிப் போல. ஏ-தேற்றம்.

[நளன், மன்னருஞ் சேனையும் சூழத் தன் னகரத்தில் நுழை ந்தானெனல்.]

ஏனை முடிவேந்த ரெத்திசையும் போற்றிசைப்ப
சேனை புடைசூழத் தேரேறி—ஆனபுகழ்ப்
பொன்னகர மெய்தும் புரந்தரனைப் போற்பொலிந்து
நன்னகரம் புக்கா னளன்.

(ப - ரை) ஏனை முடி வேந்தர் எ திசையும் போற்று இசைப்ப புட்கரனொழிந்த மற்றை யரசர் எல்லாப் பக்கங்களிலும் வாழ்த்துக் கூறவும், சேனை புடை சூழ - சேனைகள் ஒருபுறம் சூழ்ந்து வரவும், நளன் தேர் ஏறி - நளமகாராசன் தன் தேர்மே லேறிக்கொண்டு, ஆன புகழ் பொன் நகரம் எய்தும் புரந்தரனை போல் பொலிந்து-மேலான புகழையுடைய (அமராவதி யென்னும்) தேவ நகரத்தை யடையும் இந்திரனைப் போல விளங்கி, நன்மை நகரம் புக்கான்-தன் னன்னகரமாகிய மாவிந்தத்திற் புகுந்தான்.

(க - ரை) மன்னருஞ் சேனையுந் தன்னைப் புடைசூழ மா பெரும் புகழோடு நளன் பொன்னகரத்திற் புகும் இந்திரனைப் போலத் தன்னகரத்திற் புகுந்தான்.

(வி - ரை) ஏனை - பிற - மற்ற. முடிவேந்தர் - இரண்டன் தொகை. எ + திசை-எல்லாப்பக்கம். போற்றி + இசைப்ப என்பதும் ஒன்று. புடைசூழ-அருகிற் சூழ்ந்துவர வெனினுமாம். ஆன + புகழ் - பொருந்தின புகழ் எனினுமாம். புகழ் பொன்னகரம்-இர ண்டன் தொகை. பொன் + நகரம் - விண்ணுலகிற் சிறந்த பட்ட

ணம் (அமராவதி). புரந்தரன் - பகைவருயிரைக் கொல்பவன் என்னுங் காரணப் பொருட்டு. நன்மை + நகரம் - நன்னகரம்-பண்புவிதி பெற்றது. புக்கான்-புகு + ஆன் - புக்கு என்று பகுதி இரட்டித்துக் காலங் காட்டிற்று. நகு என்பது நக்கா னென்றுவது போல.

[மனைவி மக்களோடு நளன் வரக் கண்ட மாவிந்த நகரம், கண் பெற்ற முகம் போலக் களித்த தெனல்.]

கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வாண்முகமோ
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோவுரைப்ப னெதிர்.

(ப - ரை) பார் பெற்று மாதோடு மன்னன் வர கண்ட மா நகருக்கு எதிர் - இழந்த ஆட்சியைப் பெற்றுத் தமயந்தியோடு நளன் திரும்பி வருவதைக் கண்ட பெருமை பொருந்திய அம்மாவிந்த நகர மாக்களுக்கு ஒப்பாக, கார் பெற்ற தோகையோ - (எதிர் பார்த்த) மேகம் வரக் கண்ட மயிலைச் சொல்லுவேனோ, கண் பெற்ற வாள் முகமோ - (இழந்த) கண்களைத் திரும்ப வடைந்த முகத்தைச் சொல்லுவேனோ, நீர் பெற்று உயர்ந்த நிறை புலமோ - (எதிர் பார்த்த) மழை நீரை (நிரம்ப)ப் பெற்று உயர்ந்து (வளர்ந்த பயிர்) நிறைந்த வயலைச் சொல்லுவேனோ, ஏதோ உரைப்பன் - இவற்றுள் எதைத்தான் (நான் துணிந்து) சொல்லுவேன்?

(க - ரை) இழந்த ஆட்சியை மீட்டுக்கொண்ட நளன் தமயந்தியோடு திரும்பி வரக் கண்ட மாவிந்த நகரமாந்தர்க் கிணையாக மேகத்தைக் கண்ட மயில் முதலிவைகளில் எதையுந் துணிந்து சொல்லலாகாது.

(வி - ரை) மேகத்தை யெதிர்நோக்கித் தேடியிருந்த மயிலைப் போலவும், அதையே எதிர்நோக்கி வாடியிருந்த பயிரைப் போலவும், பார்வையை யெதிர் நோக்கி நாடியிருந்த முகத்தைப் போலவும், மாவிந்தத்தார் நள தமயந்தியரை யெதிர்நோக்கிக் கூடி யிருந்தா ரென்று குறிப்பிற் கொள்க. ஓகாரங்கள் நான்கும் ஐயப்பொருளன கடையேகாரத்தைச் சிலர் அசை யென் றகற்றுவர். பார் - அத

னாட்சிக் காகுபெயர். கண் - அதன் பார்வைக்கு மப்படியே. எதிர் இம் மூன்றி லெது வென்று சொல்லுவே னெனினுமாம்: எதிராக, மயிலைச் சொல்லுவேனோ, முகத்தைச் சொல்லுவேனோ, வயலைச் சொல்லுவேனோ, இம் மூன்றி லெதைச் சொல்லுவே னென்று கூட்டுக. (கூ௩)

[வியாச முனிவர், "இதுதான் நளன் கதை; இதனால் நீ தேறி யிரு" என்று தருமனை வாழ்த்திச் சென்றே ரேனல்.]

வென்றி நிடதத்தார் வேந்தன் சரிதையீ
தென்றுரைத்து வேத வியன்முனிவன்—நன்றிபுனை
மன்னை பருவரலை மாற்றுதியென் றாசிமொழி
பன்னை நடந்திட்டான் பண்டு.

(ப - ரை) பண்டு வேத இயல் முனிவன் - முற்காலத்தில் (துவாபர யுகத்தில்) வேத நடையை யொழுங்குபெறச் செய்த வியாச முனிவர், நன்றி புனை மன்னை—நல்லொழுக்க வழக்கினை அணியாகக் கொண்ட தருமராசனை, வென்றி நிடதத்தார் வேந்தன் சரிதை ஈது என்று உரைத்து-நல்லொழுக்கத்தில் வெற்றி பெற்ற நளமகாராசன் கதை இதுதா னென்று சொல்லி, பருவரலை மாற்றுதி என்று ஆசி மொழி பன்னை நடந்திட்டான் - துயரப்படாதே என்று அவனைத் தேற்றி வாழ்த்துரை கூறிச் சென்றான்.

(க - ரை) வியாச முனிவர், "இதுதான் நல்லொழுக்க வெற்றி மிகுந்த நளராசன் கதை; இதனால் நீ தேறியிரு ; துயரப்படாதே" என்று தருமராசனைத் தேற்றி வாழ்த்தி விட்டுப் போனார்.

(வி - ரை) வென்றி-வெற்றி. இயல்-நடை. வேதவொழுக்கந் தவறாத முனிவனெனினுமாம். நன்றி-நன்று-நல்லொழுக்கம், நன்றிக்கு வித்தாகும் நல்லொழுக்க மென்னு நாயனார் வாக்கானு முணர்க. புனை + மன்னன் - வினைத்தொகை. ஈது-குறிப்புமுற்று; இது வின் முதனீண்டது. ஆசியாகிய மொழி இருபெயரொட்டு; தமிழில் வாழ்த்துரை என வரும். மாற்றுதி-முன்னிலை யொருமை, பன்னை. செய்யா வென்னும் வாய்பாட்டது. நடந்திட்டான்-நடந்திடு-பகுதி. பண்டு-முற்காலத்தை உணர்த்துகிறது; அதைத் துவாபரயுக மென்பர்; அது ஐயாயிர மாண்டுகளுக் கப்புறத்தது.

# நளவெண்பா மூலமும்,

[வேதங்கள் வாழி, வேதியர்கள் வாழி, நளன் கதை படிப்போர் வாழி யெனல்.]

வாழி யருமறைகள் வாழிநல் லந்தணர்கள்
வாழிநளன் காதை வழுத்துவோர் — வாழிய
மன்னுவநாட் டாங்கண் வருசந் திரன்சுவர்க்கி
தென்னுறுமெய்க் கீர்த்தி சிறந்து.

(ப - ரை) அருமை மறைகள் வாழி - ஓதற்கருமையாகிய நான்மறைகள் பல்லாண்டு வாழக்கடவன், நன்மை அந்தணர்கள் வாழி - நல்லொழுக்க நடை சிறந்து விளங்கும் வேத முனிவர்கள் (பல்லாண்டு) வாழக் கடவர்கள், நளன் காதை வழுத்துவோர் வாழி - நளன் கதையைச் சொல்லுவோர் (பல்லாண்டு) வாழக்கடவர்கள், மன்னுவ நாடு ஆங்கண்வரும் சந்திரன் சுவர்க்கி தென்னுறும் மெய்மை கீர்த்தி சிறந்து வாழிய - மன்னுவ நாடென்னு மிடத்திற் பிறந்தாளும் சந்திரன் சுவர்க்கி யாசனுடைய குற்றமற்ற உண்மை யாகிய புகழும் நெடுநாள் நிலைத்து வாழக்கடவது.

(க - ரை) வேதங்கள் வாழ்க; வேத முனிவர்கள் வாழ்க; நளன் கதை படிப்போர் வாழ்க ; மன்னுவ நாட்டிற் றோன்றியதி லிருந் தரசாளுஞ் சந்திரன் சுவர்க்கியின் கீர்த்தி வாழ்க.

(வி - ரை) வேத மோதிய வேதியர்க் கோர்மழை யென்ற நம்பிக்கையால் வேதங்களையும் வேதமுனிவர்களையும் வாழ்த்தினார். அந்தண ரென்போ ரறவோர் என்றதனால் வேதமுனிவரென்றாம். இதற்குப் பார்ப்பா ரென்று உரை விரிப்பாரு முளர். நளன் கதை படிப்போர் வாழி யெனவே, கேட்போர் வாழி, எழுதுவோர் வாழி, எழுதுவிப்போர் வாழி, அச்சிடுவோர் வாழி யென்றடங்கலுங் கொள்க. ஒருமொழியொழி தன்னினங் கொளற் குரித்தே என் பது ஓத்து. வாழி - வாழிய-வியங்கோள். புகழேந்தியார் தம்மை யாதரித்த மன்னுவ நாடாளுகிய சந்திரன் சுவர்க்கியை ஆங் காங்கு நன்றி மறவாமைக் கறிகுறியாகப் புகழ்ந்தபடியே இங்கும் புகழ்ந்தமை யறிக.

(கூ)

நளவெண்பா மூலமும், அகல உரையும் முற்றுப் பெற்றன.